# குழந்தை இலக்கிய வளர்ச்சியில் அழ.வள்ளியப்பாவும் செல்லகணபதியும்

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் பட்டத்திற்குப் பகுதிநிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேட்டின் ஆய்வுச்சுருக்கம்

ஆய்வாளர்

பழ.ஜானகி

பதிவு எண்.394

நெறியாளர்

**முனைவர் கே.கண்ணாத்தாள்**

அழகப்பா அரசு கலைக்கல்லூரி

தமிழ்த்துறை

காரைக்குடி.- 630003



அழகப்பா பல்கலைக்கழகம்

(தேசியத் தர மதிப்பீட்டுக் குழுவின் மறுமதிப்பீட்டில் ‘ஏ’ தகுதி பெற்றது)

காரைக்குடி – 630003

பிப்ரவரி 2016

**முனைவர் கே.கண்ணாத்தாள், எம்.ஏ.,எம்.ஃபில்., பி.எட்., பி.எச்.டி., சி.ஜி.டி**
**இணைப்பேராசிரியர், (பணி நிறைவு)**
**தமிழ்த்துறை,**
**அழகப்பா அரசு கலைக்கல்லூரி,**
**காரைக்குடி -630 003.**

நாள் :

## நெறியாளர் சான்றிதழ்

"குழந்தை இலக்கிய வளர்ச்சியில் அழ.வள்ளியப்பாவும் செல்லகணபதியும்" என்னும் தலைப்பில் திருமதி.பழ.ஜானகி அவர்கள் பகுதி நேர முனைவர் (பி.எச்.டி) பட்டத்திற்காகச் செய்த இந்த ஆய்வு அழகப்பா அரசு கலைக்கல்லூரித் தமிழ்த்துறையில் அவர் ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப்பெற்றது என்றும், இந்த ஆய்விற்காக வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப்பெறவில்லை என்றும் சான்றளிக்கின்றேன்.

(முனைவர்.கே.கண்ணாத்தாள்)
**நெறியாளர்**

**பழ.ஜானகி, (பதிவு எண் 394)**
முனைவர்பட்ட ஆய்வாளர் (பகுதிநேரம்),
தமிழ்த்துறை,
அழகப்பா அரசு கலைக்கல்லூரி,
காரைக்குடி-630 003.

**நாள்:**

## ஆய்வாளர் உறுதிமொழி

''குழந்தை இலக்கிய வளர்ச்சியில் அழ.வள்ளியப்பாவும் செல்லகணபதியும்'' என்னும் தலைப்பில் பகுதிநேர முனைவர் (பி.எச்.டி.,) பட்டத்திற்காக எழுதப்பெற்ற இவ்வாய்வு எனது சொந்த முயற்சியில் உருவானது என்றும், இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்ஆய்வேடு அளிக்கப்பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்

(பழ.ஜானகி)
ஆய்வாளர்

**உறுதிக் கையொப்பம்**
முனைவர். கே.கண்ணாத்தாள், எம்.ஏ.,எம்.ஃ.பில்.,பி.எட்,பி.எச்.டி.,சி.ஜி.டி
இணைப் பேராசிரியர், (பணி நிறைவு)
தமிழ்த்துறை,
அழகப்பா அரசு கலைக்கல்லூரி,
காரைக்குடி – 630 003,

**நன்றியுரை**

''குழந்தை இலக்கிய வளர்ச்சியில் அழ.வள்ளியப்பாவும் செல்லகணபதியும்'' என்னும் தலைப்பில் அழகப்பா அரசு கலைக்கல்லூரியில் பகுதிநேர முனைவர்பட்ட ஆய்வினை மேற்கொள்ள அனுமதி வழங்கிய அழகப்பா பல்கலைக்கழகத்திற்கும் அழகப்பா அரசு கலைக்கல்லூரி முதல்வர் மற்றும் தமிழ்த்துறைத் தலைவர் அவர்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வு மேற்கொள்ள எனக்கு அனுமதி வழங்கிய நான் பணியாற்றும் பள்ளத்தூர் சீதாலெட்சுமி ஆச்சி மகளிர் கல்லூரித் தாளாளர் அவர்களுக்கும் மற்றும் முதல்வர் அவர்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுப்பணி செம்மையுறத் தாயாகி, சகோதரியாகி, தோழியாகி என்னை ஊக்குவித்த எனது ஆய்வு நெறியாளர் முனைவர் கே.கண்ணாத்தாள் அவர்களுக்கும், அவரது கணவருக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

அழகப்பா பல்கலைக்கழகப் பொது நூலகத்திற்கும் காரைக்குடி கிளை நூலகத்திற்கும், அழகப்பா அரசு கலைக் கல்லூரி நூலகத்திற்கும், சீதாலெட்சுமி ஆச்சி மகளிர் கல்லூரி நூலகத்திற்கும் நன்றியைத் தெரிவித்து கொள்கிறேன்.

நூலகர்களாகிய திருமதி லலிதா,(காரைக்குடி பொது நூலகம்) முனைவர் பொ.செங்கொடி (சீதாலெட்சுமி ஆச்சி மகளிர் கல்லூரி நூலகம்) திருமதி சத்யா (சீதாலெட்சுமி ஆச்சி மகளிர் கல்லூரி முன்னாள் நூலகர்) ஆகியோருக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

சீதாலெட்சுமி ஆச்சி மகளிர் கல்லூரியின் துறைத் தலைவர்கள் மற்றும் பேராசிரியர்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எனது ஆய்விற்கு நான் தொடர்பு கொள்ளும் எந்நேரத்திலும் ஆய்வு தொடர்பான கருத்துகளை நேரிலும், தொலைபேசியிலும் வழங்கி உதவிய குழந்தைக்கவிஞர் செல்லகணபதி அவர்களுக்கும் பொற்கிழிக்கவிஞர் அரு.சோமசுந்தரன் ஐயா அவர்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வு தொடர்பான ஐயங்களைத் தெளிவுபடுத்திய அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறை இணைப் பேராசிரியர் முனைவர் செந்தமிழ்ப்பாவை அவர்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா மகள் திருமதி முனைவர் தேவி நாச்சியப்பன் அவர்களுக்கும், அவரது கணவருக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எனது ஆய்வு செம்மையுறப் பல்லாற்றானும் உதவிய எனது கணவர் அழ.ருத்ராபதி D.C.E அவர்களுக்கும் எனது மகள் ரு.கோதைநாச்சியாருக்கும் எனது

பெற்றோருக்கும், எனது தோழி பேரா.முனைவர்.மு.பஞ்சவர்ணத்திற்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அச்சிட்டுத் தந்த திருமதி ஜெயஸ்ரீ, ஹைடெக் உரிமையாளர் திரு.சிதம்பரம் அவர்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

நன்றியுடன்
பழ.ஜானகி

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| இவ்விரு கவிஞர் | - | இவ்விருக்குழந்தைக்கவிஞர்கள் (குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா குழந்தைக்கவிஞர் செல்லகணபதி) |
| ப. | - | பக்கம் |
| பக். | - | பக்கங்கள் |
| மு.தொ. | - | முதற்தொகுதி |
| இ.தொ. | - | இரண்டாம் தொகுதி |
| தொ.ஆ. | - | தொகுப்பு ஆசிரியர், தொகுப்பு ஆசிரியர்கள், |
| பா.வ. | - | பாடல் வரி, பாடல் வரிகள் |
| பா. | - | பாடல் எண் |
| நூ. | - | நூற்பா எண் |
| தொ.பா. | - | தொகுப்பாளர் |
| ப.ஆ. | - | பதிப்பு ஆசிரியர், பதிப்பு ஆசிரியர்கள். |
| மேலது | - | மேலே கூறப்பட்டது |
| உ.ஆ. | - | உரை ஆசிரியர். |

# பொருளடக்கம்

## முன்னுரை

உலகம் வளர்ந்த சூழலில் மனிதர்களால் ஒரு புறம் அறிவியலும் ஆன்மீகமும் வளர்கின்றன. மற்றொரு புறம் மனிதநேயமின்மையும், நேர்மையின்மையும், வன்முறையும் சமூகத்தை அழிவிற்கு ஆட்படுத்துகின்றன. இத்தகைய சூழலை மாற்றியமைக்கக் கவிஞர்கள் அன்பு, ஈகை போன்ற பாடுபொருட்களைப் பெரியோர் இலக்கியங்களில் பிரதிபலிக்கச் செய்தனர். இவ்வகையான இலக்கியச் சிந்தனைகள் முற்றிய மூங்கில் போல் வளைக்க முடியாத பெரிய மனிதர்களின் மனதில் பதியாமையைக் குழந்தைக்கவிஞர்கள் உணர்ந்தனர். அதனால் இச்சிந்தனைகளை இளம் தலைமுறையினராகிய குழந்தைகள் மனதில் பதிய வைத்தால் அவர்கள் இச்சமுதாயத்தைத் திருத்துவார்கள் என்ற முனைப்பில் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா, குழந்தைக்கவிஞர் செல்லகணபதி ஆகியோர் குழந்தை இலக்கியங்களைப் படைத்துள்ளனர். எனவே அவர்களின் குழந்தை இலக்கியங்களை ஆய்வதாக இவ்வாய்வு அமைகிறது.

### ஆய்வுத்தலைப்பு

குழந்தை இலக்கியக் கவிஞர்களில் பலர் ஒன்றிரண்டு நூல்களை மட்டும் படைத்துள்ளனர். ஆனால் இவ்விரு குழந்தைக்கவிஞர்களும் குழந்தைகளின் அடிப்படை வாழ்க்கை நெறிமுறைகள் அனைத்தையும் குழந்தை இலக்கியங்களில் படைத்ததால், **‘‘குழந்தை இலக்கிய வளர்ச்சியில் அழ.வள்ளியப்பாவும் செல்லகணபதியும்’’** என்பது ஆய்வுத்தலைப்பாக அமைந்துள்ளது.

### ஆய்வு நோக்கம்

குழந்தைகளைத் திருத்தி வளர்ப்பது பெற்றோர்களின் கடமையாகிறது. ஆனால் சில பெற்றோர்கள் வேலைப்பளுவால் குழந்தைகளைத் திருத்தாத நிலைப்பாட்டை அடைகிறார்கள். அதனால் குடும்பமும் சமுதாயமும் பாதிக்கப்படுகிறது. இந்நிலையில் குழந்தைகளின் உளவியல் அறிந்து படைக்கப்பட்ட குழந்தைப்பாடல்கள் குழந்தைகளுக்கு வழிகாட்டும். எனவே இதை ஆய்வு செய்து வெளிக்கொணரும் ஆர்வத்தின் உந்துதலால் ஆய்வியல் நிறைஞர் பட்டத்திற்குக் **‘‘கவிஞர் செல்லகணபதியின் குழந்தைப்பாடல்கள் ஓர் ஆய்வு’’** என்ற தலைப்பில் ஆய்வாளரால் ஆய்வு செய்யப்பட்டது. இவருடன் முன்னோடிக் குழந்தைக்கவிஞரான அழ.வள்ளியப்பாவையும் ஒப்பிட்டு **‘‘குழந்தை இலக்கிய வளர்ச்சியில் அழ.வள்ளியப்பாவும் செல்லகணபதியும்’** என்னும் தலைப்பில் ஆய்வது ஆய்வின் நோக்கமாகும்.

**முன்னாய்வுகள்**

அம்புஜம் யுவச்சந்திராவின் **“குழந்தை இலக்கியமும் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பாவும்”,** (1989) தேவி.நாச்சியப்பனின் “குழந்தை இலக்கியப் பாடல்களில் உத்திகள்” (2012), போன்ற ஆய்வுகளும் முன்னாய்வுகளாக அமைகின்றன.

**ஆய்வு எல்லை**

குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா குழந்தைக்கவிஞர் செல்லகணபதியின் நூல்கள் ஆய்வெல்லைகளாக அமைகின்றன.

**சான்றாதாரங்கள்**

குழந்தைக் கவிஞர் அழ.வள்ளியப்பா குழந்தைக்கவிஞர் செல்லகணபதி ஆகியோா் இருவரும் நிறையப் பாடல்கள் நூல்களைப் படைத்திருந்தாலும் இவா்கள் படைத்த பெரும்பாலான கவிதைகள் தொகுப்பு நூல்களில் இடம்பெற்றுள்ளதால் தொகுப்பு நூல்கள் மட்டுமே ஆய்வின் முதன்மைச் சான்றாதாரங்களாக (Primary Sources) அமைகின்றன.

ஆய்வுப் பொருண்மையோடு தொடர்புடைய பிற இலக்கிய நூல்களான குழந்தை இலக்கியத் தொகுப்பு நூல்கள், குழந்தை இலக்கிய நூல்கள், அகராதிகள், இலக்கணநூல்கள், திறனாய்வு நூல்கள், கலைக்களஞ்சியங்கள், ஆய்வுக்கோவை போன்றவை துணைமைச் சான்றாதாரங்களாக (Secondary Sources) அமைகின்றன.

**ஆய்வுச் சிக்கல்**

இவ்விரு குழந்தைக்கவிஞர்களின் படைப்புகளில் இடம் பெற்றிருக்கின்ற உத்திகளைக் கண்டறிதல், பயன்பாட்டுச் சிந்தனைகளை ஆய்தல், குழந்தை உளவியலுடன் ஒப்பிட்டு ஆய்தல் ஆகியன இவ்வாய்விற்குரிய சிக்கலாகும்.

**ஆய்வு அணுகுமுறைகள்**

இவ்விருவரும் குழந்தைக்கவிஞர்கள் என்பதால் குழந்தைகளுக்குரிய நடையில் குழந்தை இலக்கிய அணுகுமுறைகள் கையாளப்பட்டுள்ளன. அமைப்பியல் அணுகுமுறை (Structural approach), உளவியல் அணுகுமுறை (Phychology approach), சமூகவியல் அணுகுமுறைகள் (Socialogy approach) முதலிய அணுகுமுறைகள் பின்பற்றப்பட்டுள்ளன.

**ஆய்வுப் பகுப்பு**

**“குழந்தை இலக்கிய வளர்ச்சியில் அழ.வள்ளியப்பாவும் செல்லகணபதியும்”** என்னும் தலைப்பிலான இவ்வாய்வு முன்னுரை, முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களாகப் பகுக்கப்பெற்றுள்ளன. இவை

1. குழந்தை இலக்கிய அறிமுகம்
2. குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா, செல்லகணபதியின் படைப்புகளில் குழந்தை இலக்கிய உத்திகள்.
3. குழந்தை இலக்கியங்களில் பண்பாடு
4. குழந்தை இலக்கியங்களில் சமுதாயச் சிந்தனைகள்
5. உளவியல் அடிப்படையில் உணர்த்தப்படும் செய்திகள் என்பதாகும்.

**இயல் விளக்கங்கள்**

**''குழந்தை இலக்கிய அறிமுகம்''** என்னும் முதல் இயலானது தமிழ்நூல்களில் இடம்பெற்றுள்ள குழந்தையைப் பற்றிய சிந்தனைகள், குழந்தை இலக்கியத்தின் இயல்புகள், குழந்தை இலக்கியத்தின் வளர்ச்சி நிலைகள், அயல் நாடுகளில் குழந்தை இலக்கிய நிலை, குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பாவும் செல்லகணபதியும் குழந்தை இலக்கியத்தில் எத்தகைய இடத்தைப் பெறுகின்றனர் என்பன போன்ற செய்திகளுக்கு விளக்கம் தருவதாக அமைகின்றது.

**''குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா, செல்லகணபதியின் படைப்புகளில் குழந்தை இலக்கிய உத்திகள்''** என்னும் இரண்டாவது இயலானது பெரியவர்க்குரிய இலக்கிய உத்திகளிலிருந்து வேறுபடுதல், குழந்தைகள் படித்து மகிழ்வதற்கு ஏற்ற இறை அறிமுகத்தைத் தருதல், அறிவுரை கூறுதல், குழந்தைகளுக்குப் பிடித்த விலங்கு பறவைகளைப் பாடுபொருளாக்கி, சுறுசுறுப்பு, ஈகை போன்ற பண்புகளை வளர்த்தல், புதிய வடிவங்களில் உத்திகளைக் கையாளுதல், வினாக்களைக் கேட்டுப் பாடல்களில் விடைகளை அறியச் செய்தல், குழந்தைகளுக்கு ஏற்ற எளிய இலக்கணங்களைப் பின்பற்றல், கதைகளிலும் நாவல்களிலும் சிந்தனைகள் பகிர்ந்தளிக்கப்படுதல், பொது அறிவு வளர்ப்பதற்குரிய சிந்தனைகளை வளர்த்தல் போன்ற செய்திகள் ஆராயப் பெற்றுள்ளன.

**''குழந்தை இலக்கியங்களில் பண்பாடு''** என்னும் மூன்றாவது இயலில் பண்பாடு பற்றிய விளக்கங்கள், பண்பாட்டின் அவசியம், பண்பாட்டைப் பின்பற்றுவதின் நோக்கங்கள், உயர்ந்த பழக்கங்களை அறியச் செய்தல், ஆசிரியர் மாணவர் போன்றோரின் பண்பாட்டைக் கூறுதல் போன்ற சிந்தனைகள் விளக்கப்பெற்றுள்ளன.

**''குழந்தை இலக்கியங்களில் சமுதாயச் சிந்தனைகள்''** என்னும் நான்காவது இயலில் சமூக வகைமைகள், சமூகச் சிக்கல்கள், சமூகச் சிக்கலுக்குரிய தீர்வுகள் போன்ற சிந்தனைகள் ஆராயப்பெற்றுள்ளன.

**''உளவியல் அடிப்படையில் உணர்த்தப்படும் செய்திகள்''** என்னும் ஐந்தாவது இயல் உளவியல் விளக்கம், குழந்தை உளவியல், உறவினர்களை மதித்தல், உறவினர்கள் குழந்தைகள் மனதை அறிந்து செயல்படுதல், அன்பு வளர்த்தல், பண்பாடு, சமுதாயம் போன்றவற்றிற்கு உளவியல் முறையில் விளக்கம் தருவதாக அமைகிறது.

இயல்தோறும் பெறப்பட்ட முடிவுகளின் அடிப்படையில் கருத்துகள் முடிவுரையில் தொகுத்துக் கூறப்பெற்றுள்ளன. முடிவுரையை அடுத்து ஆய்விற்குப் பயன்பட்ட முதன்மை நூல்கள் துணை நூல்களின் பட்டியல்கள் தரப்பட்டுள்ளன. பின்னிணைப்பில் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியிடம் ஆய்வாளர் கண்ட பேட்டியும், குழந்தைக்கவிஞர் செல்லகணபதிக்குக் கிடைத்த சாகித்ய அகாடமி விருதுக்கு மனிதத்தேனீ அளித்த பாராட்டும் வாழ்த்தும், கம்பன் அடிப்பொடி விருது வாழ்த்துப்பாவும், குழந்தைகள் தின விழா அழைப்பிதழ்கள் போன்றனவும் இணைக்கப்பட்டுள்ளன.

## இயல் - 1

## குழந்தை இலக்கிய அறிமுகம்

இலக்கியங்கள் சமூகத்தை வெளிப்படுத்துவதோடு, மனிதனை நெறிப்படுத்துகின்ற தன்மையிலும் சிறந்து விளங்குகின்றன. சமூகத்தில் அன்பும், அறமும், வாய்மையும், அமைதியும் தழைக்க இலக்கியங்கள் உதவுகின்றன. இத்தகைய சிறப்புடைய இலக்கியங்கள் குழந்தைகளின் வளர்ச்சியில் முக்கியத்துவம் பெறுகின்ற போது எதிர்காலச் சமூகம் வளமுடையதாகும். காலம் விரைவாக மாறி வருகிற இச்சமுதாயத்தில், உலகம், மக்கள், உயிரினங்கள் அனைத்துமே, மாபெரும் மாற்றங்களைக் கண்டு வருகின்றன. ஐம்பது ஆண்டுகட்கு முன்னர் இருந்த குழந்தைகள் சிறுவர், சிறுமியர் போன்று இக்காலத்தவர் இல்லாத நிலையை உணர்கிறோம். இப்பிராயத்தில் அறிவுத்திறன், அணுகுமுறை, கூர்ந்து நோக்கும் திறன் அனைத்தும் மிகப்பெரிய அளவில் இன்று மாறியிருப்பதைக் காண்கிறோம். இம்மாற்றங்களை மனதில் கொண்டு குழந்தைகளுக்கான கவிதை உலகத்தைப் புதியதாகப் படைக்க வேண்டியது காலத்தின் கட்டாயமாகவும் கவிஞர்களின் பொறுப்பாகவும் அமைகிறது. அதனால் எதிர்காலத் தலைவர்களாகிய இன்றைய குழந்தைகளுக்கு சூழ்நிலைகளுடன் பொருந்தி வாழ்வதற்கு ஏற்றாற்போல். உலகியலை உணர்தற்கேற்ற உளவியல், அழகியல், சமுதாயப் பொருத்தப்பாட்டுடன் குழந்தைகளுக்குரிய படைப்புகளைப் படைப்பது அவசியமாகிறது. இத்தகைய சிந்தனைகள் தமிழிலக்கியங்களில் உள்ளனவா? என்பதையும், குழந்தைக் கவிஞர் அழ.வள்ளியப்பாவும் செல்லகணபதியும் தமிழிலக்கிய வரலாற்றில் 'குழந்தை இலக்கியங்கள்' என்னும் பகுதியில் எத்தகைய இடத்தைப் பெறுகின்றனர் என்பது பற்றிய சிந்தனைகளையும் ஆய்தல் அவசியமாகிறது. பின்வரும் தலைப்புகளின் அடிப்படையில் இவ் ஆய்வு அமைகிறது.

1.1 இலக்கிய வகைப்பாடும் குழந்தைச்சிந்தனைகளும்

1.1.1 குழந்தை – சொல் விளக்கம்.

1.1.2 வாய்மொழி இலக்கியத்தில் குழந்தைச்சிந்தனைகள்

1.1.3 தொல்காப்பியத்தில் குழந்தைச்சிந்தனைகள்

1.1.4 சங்க இலக்கியத்தில் குழந்தைச் சிந்தனைகள்

1.1.4.1 நற்றிணையில் குழந்தைச் சிந்தனைகள்

1.1.4.2 ஐங்குறுநூற்றில் குழந்தைச் சிந்தனைகள்

1.1.4.3 குறுந்தொகையில் குழந்தைச் சிந்தனைகள்

1.1.4.4 அகநானூற்றில் குழந்தைச் சிந்தனைகள்

1.1.4.5 கலித்தொகையில் குழந்தைச் சிந்தனைகள்

1.1.4.6 சிறுபாணாற்றுப்படையில் குழந்தைச் செய்திகள்.

1.1.4.7 புறநானூற்றில் குழந்தைச் சிந்தனைகள்

1.1.4.8 பதிற்றுப்பத்தில் குழந்தைச் சிந்தனைகள்

1.1.5. நீதிநூல்களில் குழந்தைச் சிந்தனைகள்

1.1.6.0 பக்தி இலக்கியத்தில் குழந்தைச் சிந்தனைகள்

1.1.7 காப்பியங்களில் குழந்தைச் சிந்தனைகள்

1.1.8.0 சிற்றிலக்கியத்தில் குழந்தைச் சிந்தனைகள்

1.1.9.0 இதழ்களில் குழந்தைச் சிந்தனைகள்

1.2.0. குழந்தை – உளவியல்

1.3.0. குழந்தை இலக்கியத்தின் இயல்புகள்

1.4. குழந்தை இலக்கியங்கள்

1.4.1. குழந்தை இலக்கியச் சிந்தனையாளர்கள்

1.4.2. குழந்தை இலக்கியப் படைப்பாளர்கள்.

1.5.0. அயல்நாட்டில் குழந்தை இலக்கியநிலை

1.6.0 குழந்தைக் கவிஞர் அழ.வள்ளியப்பா பெறும் இடம்

1.7.0 குழந்தைக்கவிஞர் செல்லகணபதி பெறும் இடம்.

போன்ற தலைப்புகளில் இவ்வியல் சிந்தனைகள் கூறப்பட உள்ளன.

**1.1. இலக்கிய வகைப்பாடும் குழந்தைச்சிந்தனைகளும்**

தமிழ் நூல்களைச் சொல்லுக்கு விளக்கம் அளிக்கும் அகராதிகள், தமிழிலக்கியத்தைப் படிக்காத பாமர மக்களால் உருவான வாய்மொழி இலக்கியங்கள், முதன்மையான இலக்கண நூலான தொல்காப்பியம், சங்கம் வைத்துத் தமிழாய்ந்த சங்க இலக்கியங்கள், சங்கம் மருவிய கால இலக்கியங்கள் என வகைப்படுத்துவர். இவ்வகையான இலக்கியங்கள் தனிநிலைச் செய்யுள்களாலும், தொடர்நிலைச் செய்யுள்களாலும் படைக்கப்பட்டவை. இவற்றில் குழந்தை இலக்கியச் சிந்தனைகள் உள்ளனவா என்பதை ஆய்தல் இன்றியமையாததாகிறது.

**1.1.1.குழந்தை – சொல்விளக்கம்**

'குழந்தை' என்றால் கைப்பிள்ளை; சிறுபிள்ளை; இளமைப்பருவம்'"[1] என்ற பொருட்களைத் தமிழ் - தமிழ் அகராதி குறிப்பிட்டுள்ளது.

"'குழந்தையைக் குழவி'"[2] எனத் தம்பியின் தமிழ் அகராதி குறிப்பிட்டுள்ளது.

"Child (Children) not yet born or newly born human being; young boy or girl; Son or daughter (of any age)"[3] என்று ஏ.எஸ்..ஹானியை இ.சி.பார்ன்வெல் (A.S.Hornby And E.C. Parnwell) என்பவரால் உருவாக்கப்பட்ட (AN-ENGLISH READER'S DICTIONARY) ஏன்.இங்லீஷ் ரீடர்ஸ் டிக்ஸ்னரி என்னும் புத்தகம் வரையறை செய்துள்ளது.

"Child- a Very young human being, babe, குழந்தை"[4] என்று குழந்தைக்குரிய விளக்கத்தை பிரிலியண்ட்ஸ் ஆல் (BRILLIANT'S ALL) அகராதி குறிப்பிட்டுள்ளது.

"Child-a very young human being baby- குழந்தை; One with the qualities of a child- குழந்தைத் தன்மையுள்ள ஒருவர்; descendant; சந்ததி;"[5] என்று குழந்தைக்குரிய சொல் விளக்கத்தை லிப்கோ டிக்ஸ்னரி (Lifco Dictionary) குறிப்பிடுகிறது.

இவ்வாறு பல்வேறு அகராதிகள் வழி ஆயும்போது குழந்தைகளைச் சிறுபிள்ளை, இளம்பருவத்தினர் என்று குறிப்பிடலாம். கைப்பிள்ளை என்பது குழந்தை பிறந்தது முதல் இரண்டு வருடம் உள்ள குழந்தைகளைக் குறிப்பதாகும். குழந்தை என்பது பெண்ணாகவும் இருக்கலாம். ஆணாகவும் இருக்கலாம். முதல் இரண்டு வயது முதல் எட்டு வயது வரை உள்ள குழந்தைகளைச் சிறுபிள்ளை என்று அழைப்பர். பதினொரு வயது முதல் பதினான்கு வயது வரை உள்ளவர்களைக் குழந்தைத் தன்மையுள்ள ஒருவர் எனக் குறிப்பிடலாம் என்கின்ற செய்திகளை இது ஓரளவிற்கு வகைப்படுத்துகிறது. மனித வளர்ச்சிக்குறிய பருவங்களான,

1. குழவிப் பருவம் (1–5 வயது)
2. பிள்ளைப் பருவம் (6-12 வயது)
3. குமரப் பருவம்(Adoloscence) (12-20 வயது)
4. முதிர் பருவம் (20-35 வயது)
5. நடுநிலைப் பருவம் (35-55 வயது)
6. தளர்வுறும் பருவம் (55-70 வயது)
7. கிழப் பருவம் (70-இறக்கும் வரை) என்ற ஏழு பருவங்களை இ.ப.வேனுகோபால் சுட்டியுள்ளார். (கல்விஉளவியல் - ப.115), இவற்றுள் குழவிப்பருவம், பிள்ளைப்பருவம், என்ற இரண்டு பருவங்களும். குழந்தைகளுக்கு உரியதாகும்.

### 1.1.2. வாய்மொழி இலக்கியத்தில் குழந்தைச்சிந்தனைகள்:

உவமை, உருவகம், கற்பனை போன்ற உத்திகளுடன் அமைந்தவை இவ்விலக்கியங்கள். முற்காலத்தில் இவ்விலக்கியங்கள் படிக்காத பட்டறிவுள்ள மக்களால் உருவாக்கப்பட்டவை. குழந்தைகளுக்கு உடல் வளமும் உளவளமும் இன்றியமையாதவை என்பதை அறிந்து இவ்விலக்கியத்தில் இதற்குரிய சிந்தனைகள் உள்ளனவா என ஆய்ந்தபோது,

"வெள்ளிக் கிண்ணத்தில் பால் சோறு
அள்ளி எடுத்து அப்பன் வாயில்
கொஞ்சிக் கொஞ்சி ஊட்டு
குழந்தைக்குச் சிரிப்புக் காட்டு!"[6]

என்ற பாடல் வரிகள் குழந்தைகளுக்கு உணவை உண்பிக்க ஏற்றதாக உள்ளன.

"ஆராரோ ஆரிரரோ
எங்க கண்ணே

ஆரிரரோ ஆராரோ
என பச்ச இலுப்ப வெட்டி-எங்கக் கண்ணே
உனக்குப் பால் வடியத் தொட்டி கட்டி
என் தொட்டி கட்டவந்த மாமா
எங்க அப்பா பட்டினியா போறாங்களோ
என் ஆரிரரோ ஆராரே - எங்கக் கண்ணே
ஆரிரரோ ஆராரோ."[7]

போன்ற வரிகள் குழந்தைகளின் ஆழ்ந்த தூக்கத்திற்கு ஏற்றதாக உள்ளன. மேலும் தன்மனநிலையையும் பகிர்ந்து கொள்ளும் தாயின் மன நிலையையும் காட்டியுள்ளது.

"சாய்ந்தாடம்மா சாய்ந்தாடு
சாயக்கிளியே சாய்ந்தாடு"[8]

போன்ற வரிகள் குழந்தைகளின் உடல் அசைவிற்கு ஏற்றதாக உள்ளன. இதுபோல்,

"கை வீசம்மா கைவீசு
கடைக்குப் போகலாம் கைவீசு
மிட்டாய் வாங்கலாம் கைவீசு
மெதுவாய்த் தின்னலாம் கைவீசு
சொக்காய் வாங்கலாம் கைவீசு
சொகுசாய்ப் போடலாம் கைவீசு
கோவிலுக்குப் போகலாம் கைவீசு
கும்பிட்டு வரலாம் கைவீசு"[9]

போன்ற பாடல் வரிகளும் குழந்தைகளின் உடல் அசைவிற்கு ஏற்றதாக உள்ளன. உடல் அசைவால் தசைகள் வலுவடையும் என்பதைத் தெரிவித்துள்ள பாடல்களாக உள்ளன. இத்துடன் விளையாட்டுச் சிந்தனைகளைக் கூறும் பாடல்களும் உள்ளன.

"என்ன ஊர்? மயிலாப்பூர்
என்ன மயில்? காட்டுமயில்
என்ன காடு? ஆர்க்காடு
என்ன ஆறு? பாலாறு,
என்ன பால்? கள்ளிப்பால்
என்ன கள்ளி? இலைக்கள்ளி
என்ன இலை? மாவிலை
என்ன மா? அம்மா"[10]

போன்ற வரிகள் சிறுவர்களின் விளையாட்டுகளின் மூலம் சொற்களையும் கற்க முடியும் என்பதை உணர்த்தியுள்ளன. இவ்வகையான இலக்கியம் உண்ணுகிற ஆர்வத்தையும் உறக்கத்தையும் வளர்க்கும் பாடல்களாக உள்ளன. கணவனிடத்தில், உறவினர்கள் இடத்தில் கூறமுடியாத கருத்துக்களைக் குழந்தைகளிடத்தில் தாலாட்டுப் பாடல் வழி

கூறுகிறார்கள். எனவே வாய்மொழி இலக்கியச் சிந்தனைகள் இருவகையான குழந்தைப் பாடல்களைக் காட்டியுள்ளன.

1. குழந்தையைப் பற்றி மற்றவர்கள் பாடும் தாலாட்டுப்பாடல்கள் போன்ற பாடல்கள்.
2. தாமாகவே மகிழ்ந்து பாடும் விளையாட்டுப்பாடல்.

இந்த வகையான பாட்டுகளில் தாமாக மகிழ்ந்து பாடும் பாடல்கள் குழந்தைப்பாடல்களாக இருந்தாலும், இவ்விலக்கியத்தைக் கண்டறிந்து படிப்பது குழந்தைகளுக்குச் சிரமத்தை ஏற்படுத்துவதால் இது குழந்தை இலக்கியம் ஆகாது.

**1.1.3. தொல்காப்பியத்தில் குழந்தைச்சிந்தனைகள்**

தொல்காப்பியம் தொன்மையான இலக்கணநூல். மக்களின் வாழ்க்கை நெறிகளை எடுத்துரைக்கும் நூல். இந்நூலில் "குழவி மருங்கினும் கிழவதாகும்"[11] என்னும் நூற்பா உள்ளது. இது காமப்பகுதி குழவிப் பருவத்துக்கும் உரியது என்றும் பிள்ளைத்தமிழ் இலக்கிய வகையைக் குறிக்கிறது என்கின்ற பொருட்களைத் தந்துள்ளதாக ச.வே.சுப்பிரமணியன் உரை எழுதியுள்ளார். இலக்கிய வகையைக் குறிப்பிடும் இந்நூல் குழந்தை இலக்கிய நூலா என எண்ணி ஆராய்கையில்,

"ஒப்பொடு புணர்ந்த உவமத் தானும்
தோன்றுவது கிளந்த துணிவினானும்
என்று இருவகைத்தே பிசிவகை நிலையே"[12]

பறவைக்கு சிறகு முளைத்தால் அது கூட்டை விட்டுச் செல்ல முயற்சி செய்யும். அதுபோல குழந்தைகளும் பெரியவர்களிடமிருந்து கற்றுக்கொள்ள முயற்சிப்பார்கள். நம் செயலை ஒப்பிட்டுப் பார்த்து உணர்வார்கள். எனவே ஒப்பிடும் பண்பு குழந்தைகளுக்கு உண்டு என்பதை இந்நூற்பா விளக்குகிறது.

எந்த ஒரு நிகழ்விலும் அச்சமற்ற தன்மையே செயலை மேன்மைப்படுத்துகிறது என்பதைத் 'தோன்றுவது கிளந்த துணிவினானும்' என்னும் வரி விளக்குகிறது. இந்த இரண்டு சிந்தனைகளும் குழந்தைகளுக்கு இன்றியமையாதவை. ஆனால் இச்சிந்தனைகள் குழந்தைகள் கற்கும் நெறியில் உள்ளதா? என ஆய்வு செய்யும்போது புணர்ந்த, கிளந்த போன்ற சொற்கள் குழந்தை இலக்கியப் படைப்பா என்னும் ஐயத்தை ஏற்படுத்தியுள்ளன.

**1.1.4. சங்க இலக்கியத்தில் குழந்தைச் சிந்தனைகள்**

எட்டுத் தொகை நூல்களும் பத்துப்பாட்டு நூல்களும் சங்க இலக்கிய நூல்களாகும்.

### 1.1.4.1 நற்றிணையில் குழந்தைச்சிந்தனைகள்

எட்டுத்தொகை நூல்களில் நற்றிணை என்னும் நூல் முதலாவது நூலாகும். இந்நூலில் குழந்தை பற்றிய செய்திகள் வந்துள்ளன.

“பாதுகாப்பான மனையில் பிறந்த புதல்வன் செவிலித் தாயுடன் உறங்கும் நேரத்தில் தந்தை குழந்தைக்குப் பெயர் சூட்ட விரும்பினான்.”[13] என்பதிலிருந்து தந்தையும் தாயும் குழந்தைகளுக்கு எதையும் செய்ய நினைப்பவர்கள் என்ற சிந்தனையை நற்றிணைப் பாடல் கூறியுள்ளது. மேலும் “குழந்தைகளின் உடல் உறுப்புகள் வளர்ச்சியடைவதைக் கண்டு தாய் தந்தையர் இன்புறுவர்”[14] குழந்தைகள் நோயில்லாமல் வாழ்வதையே பெற்றோர்கள் விரும்புவர் என்ற சிந்தனையை இந்நூல் கூறியுள்ளது.

“சிறுவர்கள் பறைஇசைப்பதில் வல்லவர்கள். இந்தப் பறையை இசைத்து தினைப்பயிரைக் காப்பார்கள்.”[15] சிறுவர்களுக்கு இசை பிடித்தமானது. இந்த இசையால் பெற்றோர்களின் தொழிலையும் இவர்கள் காப்பார்கள் என்ற சிந்தனையையும் இந்நூல் கூறியுள்ளது.

“சிறுவர்கள் கடலுள் சென்ற சுறா மீன்களையும், வலிமையுடைய பிற மீன்களையும் அறுத்துத் துண்டாக்குவர்.”[16] என்பதின் மூலம் இவ்வாறு சிறுவர் எதையும் செய்யும் வலிமையுடையவர்கள் என்பதைக் காட்டுகிறது.

புதல்வனுக்குத் தாய்ப்பால் கொடுக்க வேண்டும்”[17] என்ற செய்தியை நற்றிணைப்பாடல் நினைவூட்டுகிறது.

“தந்தை தன் தொழிலுக்கு அழைத்துச் செல்லாத வருத்தத்திலும் குழந்தைகள் முயற்சி செய்து பனைநுங்கை உண்டு மகிழ்வதில் விருப்பமுடையவர்கள்”[18] குழந்தைகள் முயற்சி செய்வதில் வல்லவர்கள் என்ற செய்தியை நற்றிணைப்பாடல் தெரிவிக்கிறது.

### 1.1.4.2. ஐங்குறுநூற்றில் குழந்தைச் சிந்தனைகள்

எட்டுத்தொகை நூல்களில் ஒன்றான ஐங்குறுநூற்றையும் ஆய்தல் அவசியமாகிறது.

“தந்தையர்க்குப் பரத்தையர் இன்பத்தை விடக் குழந்தைகள் இனிமையானவர்கள்”[19] என்பதை ஐங்குநுறூற்றுப் பாடல் கூறியுள்ளது.

தலைவனின் இன்பத்தைத் தலைவி பெறுவதைவிட குழந்தைகளைப் பெற்றதே இனிமையானது”[20] என்ற செய்தியை இந்நூல் தெரிவித்துள்ளது.

### 1.1.4.3.குறுந்தொகையில் குழந்தைச் சிந்தனைகள்

“தச்சனால் செய்யப்பட்ட சிறுகுதிரை பூட்டிய வண்டியை இழுத்துச் செல்லும் இயல்புடையவர்கள் சிறுவர்கள். அவர்கள் அதில் ஏறிச் செல்ல நினைத்தாலும் செல்ல முடியாது.”[21] சிறுவர்கள் விளையாட்டுப் பொருட்கள் மீது விருப்பமுடையவர்கள். ஆனால் விளையாட்டுப்பொருட்களை அவர்கள் நினைத்தாற்போல் பயன்படுத்தமுடியாது. என்ற சிந்தனையைக் குறுந்தொகை உணர்த்தியுள்ளது.

### 1.1.4.4. அகநானூற்றில் குழந்தைச்சிந்தனைகள்

எட்டுத்தொகை நூல்களில் ஒன்றான அகநானூற்றில், “புதல்வர்கள் தந்தையின் தேவையற்ற பிற ஆசைகளையும் நீக்கும் திறமுடையவர்கள்”[22] புதல்வர்கள் தந்தையைப் பரத்தையரிடமிருந்து காப்பவர்கள் என்ற செய்தி இடம்பெற்றுள்ளது.

“கணவன் மனைவியின் ஊடல் சமாதானமாக மாறுவதற்குக் குழந்தைகள் இன்றியமையாதவர்கள்”[23] இது தாய் தந்தையரின் ஊடலைக் குழந்தைகள் தீர்க்க உதவுவார்கள் என்ற செய்தியைத் தெரிவித்துள்ளது.

### 1.1.4.5. கலித்தொகையில் குழந்தைச் சிந்தனைகள்

எட்டுத்தொகை நூல்களில் ஒன்றான கலித்தொகையில்,

“ஒரு குழந்தைக்குப் பால் கொடுத்து வளர்ப்பது தாயின் கடமைகளாகும்”[24] என்ற இச்சிந்தனை குழந்தைகளுக்குத் தாய்ப்பால் இன்றியமையாதது என்பதை உணர்த்தியுள்ளது.

### 1.1.4.6. சிறுபாணாற்றுப்படையில் குழந்தைச்செய்திகள்

“உமணர்கள் உப்பு விற்கச் செல்லும்போது குழந்தைகளுடன் மந்திகளையும் அழைத்துச் செல்வர்”[25] குழந்தைகள் மந்திகளுடன் விளையாடுவார்கள் என்றதால் குழந்தைகளோடு மந்திகளையும் அழைத்துச் சென்றதாகச் சிறுபாணாற்றுப்படை கூறியுள்ளது.

### 1.1.4.7.புறநானூற்றில் குழந்தைச்சிந்தனைகள்

எட்டுத்தொகை நூல்களில் புறப்பொருள் நூலான புறநானூற்றில்,

“அறிவறிந்த மக்களைப் பெற்றால் மகிழ்ச்சி உண்டாகும்”[26] என்ற செய்தி இடம்பெற்றுள்ளது.

"சிறுமிகள் பாவை செய்து அதற்குப் பூச்சூடி விளையாடும் இயல்புடையவர்கள்."[27] சிறுமிகள் மணலில் பாவை செய்து விளையாடுவார்கள் என்ற செய்தியைப் புறநானூற்றால் அறிகிறோம்.

"சங்க இலக்கியத் தாய்மார் தன் மகனை வீரன் என்று சொல்லிக் கொள்வதிலேயே பெருமையுடையவர்கள்".[28] ஒவ்வொரு தாயும் தன் மகனை வீரனாக்குவதிலேயே மகிழ்வார்கள் என்ற செய்தியைப் புறநானூற்றுப்பாடல் தெரிவிக்கிறது.

"போருக்காகத் தன் குடும்பத்தையே இழந்தாலும் சிறுவனாக உள்ள தன் ஒரு மகனையும் போருக்கு அனுப்புகிற தாய்மாரும் உள்ளனர்."[29]

தாய்மார்கள் எத்தகைய சூழ்நிலையிலும் தன் மகனை வீரனாக்குவதிலேயே பெருமிதம் கொள்வார்கள் என்ற செய்தியைப் புறநானூற்றுப்பாடல் தெரிவிக்கிறது. மேலும் குழந்தைகளின் இயல்புகளை,

"படைப்புப்பல படைத்துப் பலரோடு உண்ணும்
உடைப்பெருஞ் செல்வர் ஆயினும் இடைப்படக்
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
இட்டும் தொட்டும் கவ்வியும் துழந்தும்
நெய்யுடைஅடிசில் மெய்பட விதிர்த்தும்
மயக்குறு மக்களை இல்லோர்க்குப்
பயக்குறை இல்லை- தாம்வாழும் நாளே"[30]

எத்தகைய செல்வந்தராக இருந்தாலும் குழந்தைகளின் இயல்பான நிலையில் தோன்றும் நிகழ்வுகளைக் கண்டு மகிழ்வர்.

"கையது வேலே காலன புனைகழல்
மெய்யது வியரே மிடற்றது பசும்புண்
வட்கர் போகிய வளரிளம் போந்தை
உச்சிக் கொண்ட ஊசி வெண்தோட்டு
வெட்சி மாமலர் வேங்கையொடு விரைஇச்
சுரிஇரும் பித்தை பொலியச் சூடி
வரிவயம் பொருத வயக்களிறு போல
இன்னும் மாறாது சினனே அன்னோ
உய்ந்தனர் அல்லர் இவன் உடற்றி யோரே
செறுவர் நோக்கிய கண்தன்
சிறுவனை நோக்கியும் சிவப்பு ஆனாவே"[31].

என்னும் பாடலில் சிறுவன் போர்க்கோலத்தில் இருந்த காட்சியை ஔவையார் எழுதியுள்ளார்.

### 1.1.4.8.பதிற்றுப்பத்தில் குழந்தைச்சிந்தனைகள்

எட்டுத்தொகை நூல்களில் ஒன்றான பதிற்றுப்பத்து என்னும் நூலிலும் குழந்தைச் சிந்தனைகள் உள்ளதா? என எண்ணி ஆராய்ந்தபோது, "நாரைகள் அயிரை மீனைப் பிடித்துண்ணும் இயல்புடையவை. அந்நாரைகளின் மேய்ப்பாளர்களாகச் சிறுமிகள் விளங்கினர்."[32] குழந்தைகள் விலங்கு பறவைகள் மீது விருப்பமுடையவர்கள் என்ற செய்தியைப் பதிற்றுப்பத்து தெரிவித்துள்ளது.

இவ்வாறு சங்க இலக்கியச் சிந்தனைகள் தாய் தந்தையர்க்கு சிறுவர் அளிக்கும் இன்பத்தையும் குழந்தைகளின் அவசியத்தையும் உணர்த்தியுள்ளன. குழந்தைகள் விலங்கு பறவைகளை விரும்புவார்கள் என்ற சிந்தனையைக் கூறியுள்ளன. குழந்தைகளை வீரனாக்க வேண்டும் என்று எண்ணம் கொண்ட வீரத்தாய்மார்களும் தேவை என்கின்ற சிந்தனைகளை விதைத்துள்ளன.

### 1.1.5. நீதிநூல்களில் குழந்தை இலக்கியச் சிந்தனைகள்

களப்பிரர் காலமாகிய இருண்ட காலத்தில் மக்களின் தீய பழக்கங்களை அழிக்கத் தோன்றிய திருக்குறள், ஆசாரக்கோவை, சிறுபஞ்சமூலம் போன்ற நூல்கள் நீதி நூல்களாகும்.

### 1.1.5.1. திறக்குறளில் குழந்தைச்சிந்தனைகள்

உலகப் பொதுமறை என அழைக்கப்பட்ட நூல் திருக்குறள் ஆகும். இதில் மக்கட்பேறு என்னும் அதிகாரம் குழந்தைகளின் இன்றியாமையைத் தெளிவாக விளக்கியுள்ளது.

"பெருமவற்றுள் யாம்அறிவது இல்லை அறிவுஅறிந்த
மக்கட்பேறு அல்ல பிற"[33]

இல்லறத்தான் அடைய வேண்டிய பேறுகளில் சிறந்தது மக்கட்பேறு ஆகும்.

"எழுபிறப்பும் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கள் பெறின்"[34]

பழி இல்லாத மக்களைப் பெற்றிருந்தால் ஏழு பிறவிகளிலும் துன்பங்கள் நெருங்காது.

"தம்பொருள் என்பதம் மக்கள் அவர்பொருள்
தம்தம் வினையான் வரும்"[35]

பெற்றோர்கள் குழந்தைகளையே தம் பொருட்களாகக் கருதுவர் மற்ற பொருட்கள் அனைத்தும் அவர்கள் செய்கின்ற செயல்களாலேயே அமைகின்றன.

"அமிழ்தினும் ஆற்ற இனிதேதம் மக்கள்
சிறுகை அளாவிய கூழ்"[36]

தம் குழந்தைகள் தங்களது கைகளால் பிசைந்த உணவு பெற்றோருக்கு அமிழ்தத்தைவிட இனியதாகும்.

"மக்கள்மெய் தீண்டல் உடற்கின்பம் மற்றுஅவர்
சொற்கேட்டல் இன்பம் செவிக்கு"[37]

பெற்றோர்கள் குழந்தைகளின் மென்மையான உடலால் மெய்மறப்பார்கள். மென்மையான குரலால் செவியை இன்பம் அடையச் செய்வர் என்ற சிந்தனை அமைந்துள்ளது.

"குழல்இனிது யாழ்இனிது என்பதம் மக்கள்
மழலைச்சொல் கேளா தவர்."[38]

குழந்தைகளது மழலை ஒலியைக் கேட்காதவர்களே யாழ் இனியது என்று கூறுவார்கள். இவ்வாறு அரிதெனப் பிறந்த மனிதர்களுக்கு மக்கட்பேற்றின் அவசியத்தைத் திருக்குறள் உணர்த்தியுள்ளது.

### 1.1.5.2. சிறுபஞ்சமூலமும் குழந்தைச்சிந்தனைகளும்

சங்கம் மருவிய கால நூல்களில் சிறுபஞ்சமூலமும் ஒன்றாகும்.

"நெய்தல் முகிழ்த்துணையாம் குடுமி நேர்மயிர்
உய்தல் ஒருதிங்கள் நாளாகும்- செய்தல்
நுணங்குநூல் ஓதுதல் கேட்டல் மாணாக்கர்
வணங்கி வலம்கொண்டு வந்து."[39]

என்ற இப்பாடல் வரிகளில் குருகுலக்கல்வி மாணவர்கள் குடுமி வைத்துக் கொள்ளுதலின் அவசியத்தையும், மாதம் ஒரு முறை குடுமியைச் சுத்தம் செய்தல், ஆசிரியரை வணங்கிக் கற்றலும், கேட்டலும் போன்ற செயல்பாடுகள் மாணவர்கள் கடமையாகும் என்பதைச் சிறுபஞ்சமூலம் கூறியுள்ளது.

"சூலாமை சூலில் படுந்துன்பம் ஈன்றபின்
ஏலாமை ஏற்றால் வளர்ப்புஅருமை-சால்பவை
வல்லாமை வாய்ப்ப அறிபவர் உண்ணாமை
கொல்லாமை நன்றால் கொழித்து."[40]

குழந்தைகளைப் பெற்றெடுத்து பேணி வளர்த்தவர்களுக்கு பிற உயிர்களைக் கொல்லும் எண்ணம் வராது என்ற சிந்தனையைச் சிறுபஞ்சமூலம் கூறியுள்ளது.

இவ்வாறு குருகுலக் கல்வி பயிலும் மாணவனின் நிலையைச் சிறுபஞ்சமூலம் விளக்கியுள்ளது.

### 1.1.5.3. ஆசாரக்கோவையில் குழந்தைச் சிந்தனைகள்:

"நன்றிஅறிதல் பொறை உடைமை இன்சொல்லோடு
இன்னாத எவ்வுயிர்க்கும் செய்யாமை கல்வியோடு

ஒப்புரவு ஆற்ற அறிதல் அறிவுடைமை
நல்லினத் தாரோடு நட்டல் இவைஎட்டும்
சொல்லிய ஆசார வித்து”[41]

என்னும் பாடல்வரிகளில் நன்றி மறவாப் பண்பாட்டைக் கடைப்பிடித்தலும், இனிய சொற்களைப் பேசுதலும், கற்றறிதலும், உலகத்தோடு ஒத்து வாழ்தலும் ஆகிய எட்டு வகையான குணங்களும் சிறந்த ஒழுக்க நெறிகள் ஆகும் என்பதைக் குறிப்பிட்டுள்ளது. இவ்வாறு பண்பாட்டின் சிறப்புகளை ஆசாரக் கோவை கூறியுள்ளது.

இவை தவிர ஔவையின் ஆத்திச்சூடி, கொன்றைவேந்தன், மூதுரை போன்ற நூல்களும் குழந்தைகளுக்காக எழுதப்பட்டவை.

### 1.1.5.4. மூதுரையில் குழந்தைச் சிந்தனைகள்

நீதி நூல்களில் ஒன்று மூதுரை ஆகும். இதை எழுதியவர் ஔவையார் என்ற பெண்பாற் புலவர் ஆவார். இவரே முதல் பெண் குழந்தைக்கவிஞர். இவர் எழுதிய,

“நல்லாரைக் காண்பதுவும் நன்றே; நலமிக்க
நல்லார்சொல் கேட்பதுவும் நன்றே நல்லார்
குணங்கள் உரைப்பதுவும் நன்றே; அவரோடு
இணங்கி இருப்பதுவும் நன்று.”[42]

என்ற பாடல் வரிகள் நல்லவருடைய சொற்களைக் கேட்டு நடத்தலே இன்பமாகும் என்பதை உணர்த்தியுள்ளன. இவை குழந்தை வளர்ப்பில் முக்கியமாக இடம்பெறும் கருத்துகளாகும்.

### 1.1.5.5. வெற்றிவேற்கையில் குழந்தைச் சிந்தனைகள்

கல்விக்கு அழகு குற்றமில்லாமல் கற்பதாகும் என்பதை,

“கல்விக்கு அழகு கசடு அற மொழிதல்”[43]

என்னும் பாடல்வரிகள் கல்வியைக் குற்றமறக் கற்பதே சிறந்ததாகும் என்பதை உணர்த்தியுள்ளன.

### 1.1.5.6. உலகநீதியில் குழந்தைச்சிந்தனைகள்

உலகநீதி மொத்தம் பதின்மூன்று பாடல்களைக் கொண்ட நூலாகும்.

“ஓதாமல் ஒருநாளும் இருக்க வேண்டாம்
ஒருவரையும் பொல்லாங்கு சொல்ல வேண்டாம்
மாதாவை ஒருநாளும் மறக்க வேண்டாம்
வஞ்சனைகள் செய்வாரோடு இணங்க வேண்டாம்
போகாத இடந்தனிலே போக வேண்டாம்.

போகவிட்டுப் புறஞ்சொல்லித் திரிய வேண்டாம்
வாகாரும் குறவருடை வள்ளி பங்கன்
''மயிலேறும் பெருமாளை வாழ்த்தாய் நெஞ்சே''[44] என்னும் பாடல் குறிப்பிடத்தக்கதாக உள்ளது. எளிமையான அறிவுரைகள் குழந்தைகளுக்குப் பயன்படும் வகையில் உணர்த்தப்பட்டுள்ளன.

இவ்வாறு நீதி இலக்கியங்களில் கூறப்பட்டுள்ள கருத்துகள் ஒரு தம்பதியர்க்கு குழந்தைகள் அவசியமானவர்கள். இவர்களே இன்பத்தைத் தருபவர்கள் என்ற சிந்தனைகளைத் தருகின்றன. சிறுபஞ்சமூலம், ஆசாரக்கோவை, உலகநீதி, மூதுரை போன்ற நூல்களில் கூறப்பட்டுள்ள கருத்துகள் மட்டும் குழந்தைகளின் கல்விக்குப் பொருத்தமானவையாக உள்ளன. ஆனால் இப்பாடலில் உள்ள சில சொற்களுக்குப் பொருள் அறிந்து படிப்பது கடினத்தன்மையை ஏற்படுத்துவதால் இவை குழந்தைப்பாடல்கள் ஆகா.

### 1.1.6.0 பக்தி இலக்கியத்தில் குழந்தைச் சிந்தனைகள்

திருஞானசம்பந்தர் குழந்தையாகவே இருந்து தேவாரத்தைப் பாடியவர். திருமூலர் திருமந்திரத்தை மூவாயிரம் பாடல்களில் பாடியுள்ளார். இத்தகைய திருமந்திரத்தை ஆய்ந்தபோது,

"ஒரு தாயின் கருவில் எழும் உயிரணுக்களின் தன்மைகளை வைத்தே ஆணாகவும், பெண்ணாகவும் பிறக்கின்றன. ஆணின் உயிரணுவின் ஈர்ப்பு சூரியனின் பார்வையில் படும்போது அது ஆண் குழந்தையாகிறது. உயிரணுக்களின் ஈர்ப்பு சந்திரனின் பார்வையில் படும்போது அது பெண் குழந்தையாகப் பிறக்கிறது. மேலும் சுக்கிலத்தைச் செலுத்தும் பிராண வாயுடன் அபானன் எனப்படும் மலக்காற்று எதிர்த்தால் சுக்கிலம் சிதைந்து இரட்டைக் குழந்தையாகப் பிறக்கிறது. உயிரணுக்களின் ஈர்ப்பு சூரியனையும் சந்திரனையும் ஒத்துப் பொருந்தினால் அது அலியாகப்பிறக்கிறது."[45] என்ற செய்திகளை அறிய இயலுகிறது.

"கோல்வளை உந்தியில் கொண்ட குழவியும்
தால்வளை யுள்ளே தயங்கிய சோதியாம்
பால்வளர்ந்து உள்ளே பகலவன் பொன்உருப்
போல்வளர்ந்து உள்ளே பொருந்துஉரு ஆமே."[46]

என்ற பாடல்வரிகள் தாயின் கருவிலேயே குழந்தைகள் வளர்ந்து ஆணாகவும், பெண்ணாகவும் பிறக்கின்றது என்பதை உணர்த்தியுள்ளன.

"வண்டல் பயில் வனஎல்லாம் வளர்மதியம் புனைந்த
சடை
அண்டர்பிரான் திருவார்த்தை அணையவரு வன
பயின்று

தொண்டர்வரில் தொழுதா தியர் போற்றத் துணை

முலைகள்

கொண்டநுசுப் பொதுங்குபதங் கொள்கையினிற்

குறுகினார்''[47].

என்னும் வரிகள் வண்டல் என்னும் விளையாட்டை அக்காலச் சிறுமியர் விளையாடும் இயல்புடையவர்கள் என்பதைக் காரைக்கால் அம்மையார் புராணம் குறிப்பிட்டுள்ளது.

"குழந்தை பிறந்தவுடன் செய்கின்ற நற்சடங்குகளை வைதீக நியமப்படி செய்யும் மங்கலவிழாவைச் செய்தனர்."[48] ஒரு குழந்தை பிறந்தவுடன் விழா மேற்கொள்ளுதல் அவசியமாகும். பெரியவர்களில் ஒருவர் சிறு குழந்தைகளுடன் சேர்ந்து விளையாடுதல் வேண்டும்."[49] இதற்கு எடுத்துக்காட்டாக திருவிளையாடற் புராணம் தடாதகைப் பிராட்டியார் திருத்தம் இல்லாத மழலைபேசும் சிறுமிகளுடன் சேர்ந்து விளையாடியதை எடுத்துரைத்துள்ளது. இவ்வாறு பக்தி இலக்கியங்கள் குழந்தைகளின் தன்மைகளை, குழந்தைகளுடன் விளையாடுவதன் அவசியத்தை, குழந்தை பிறப்பதன் தன்மைகளை உணர்த்தியுள்ளன.

### 1.1.7. காப்பியங்களில் குழந்தைச் சிந்தனைகள்

ஈண்டு ஐம்பெருங்காப்பியங்களாகிய சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவகசிந்தாமணி வளையாபதி, குண்டலகேசி என்னும் ஐந்து பெருங்காப்பியங்களிலும் இடம்பெறும் குழந்தைச்சிந்தனைகள் கூறப்பட்டுள்ளன.

#### 1.1.7.1. சிலப்பதிகாரத்தில் குழந்தைச்சிந்தனைகள்

சிலப்பதிகாரம் தமிழில் தோன்றிய முதல் காப்பியம். இது குடிமக்கள் காப்பியம் என்று அழைக்கப்படுகிறது. புதல்வர்களே வருங்காலக்குடிமக்கள் என்ற நோக்கில் ஆய்ந்தபோது, கீழ்க்கண்ட செய்தியைப் பெறமுடிகின்றது.

"பெரியவர்களைப் போல் தாய்ப்பால் மணம் மாறாத சிறுவர்களும் பெரியவர்கள் ஓதுதலை உணர்ந்து ஓதுவார்கள்."[50] இதற்கு எடுத்துக்காட்டாகச் சிலப்பதிகாரத்தில் வார்த்திகன் என்னும் சிறுவன் விளங்கினான்.

#### .1.7.2. மணிமேகலையில் குழந்தைச்சிந்தனைகள்

ஐம்பெருங்காப்பியங்களில் ஒன்றான மணிமேகலை "ஒரு குழந்தையை வளர்ப்பவர் தாய் தந்தையர். அதனால் தாய்தந்தையரின் கற்பொழுக்கம் சிறந்ததாக இருக்க வேண்டும்."[51] இல்லையெனில் அக்குழந்தைக்கு என்ன நிலை நேரிடும் என்பதைத் தெரிவிக்கிறது.

### 1.1.7.3. சீவகசிந்தாமணியில் குழந்தைச்சிந்தனைகள்

''சீவகன் இடுகாட்டில் குழந்தையாக உள்ளான். அவனைக் கந்துக்கடன் என்னும் வணிகன் வளர்க்கிறான்.''[52] என்கிறது சீவகசிந்தாமணி. எனவே குழந்தைகளை வளர்க்க நல்ல பெற்றோர்கள் தேவை என்ற சிந்தனையை சிந்தாமணி விதைத்துள்ளது.

### 1.1.7.4. வளையாபதியில் குழந்தைச்சிந்தனைகள்

பிள்ளைச் செல்வத்தைப் பெறாத ஒருவனின் வாழ்வில் எத்தகைய துயரங்கள் நேரும் என்பதை வளையாபதி கூறியுள்ளது.

"பொறை இலா அறிவு போகப்
புணர்விலா இளமை மேவ."[53]

### 1.1.7.5 குண்டலகேசியில் குழந்தைச்சிந்தனைகள்

ஐம்பெருங் காப்பியங்களில் ஒன்றான குண்டலகேசியையும் ஆராய்ந்தபோது, "நம் பருவநிலைகள் குழந்தைப்பருவம், பிள்ளைப்பருவமாகக் கழிகிறது."[54] என்ற செய்தியைப் பெறமுடிகிறது.

### 1.1.7.6. இதிகாசத்தில் குழந்தைச்சிந்தனைகள்

இதிகாசங்களான கம்பராமாயணத்தையும் மகாபாரதத்தையும் ஆய்ந்தபோது,

"தசரதன் குழந்தைப் பேறுக்காகக் காத்திருந்தான்."[55] என்ற செய்தி கிடைக்கிறது. அரசனாக இருந்தாலும் குழந்தைப்பேறு அவசியமாகும் என்ற சிந்தனையைக் கம்பராமாயணம் உணர்த்தியுள்ளது.

### 1.1.8.0 சிற்றிலக்கியத்தில் குழந்தைச் சிந்தனைகள்

குழந்தையைப் பற்றி மட்டுமே எழுதப்பட்ட இலக்கியம் பிள்ளைத்தமிழ்; இதில் காப்பு செங்கீரை, தால், சப்பாணி போன்ற பத்துப்பருவங்களும் குழந்தையைப் பற்றியதாக அமைந்துள்ளன.

கடமையை நினைவூட்டும் காப்புப்பருவப்பாடல்களாக அமரப் பயிற்சியளிக்கும் பாடல்களாக, பேச்சுப்பயிற்சிப் பாடல்களாக குழந்தைச் செயலில் மகிழ்ச்சியை வெளிப்படுத்தும் பாடல்களாக குழந்தைக்கு நடையைப் பயிற்றுவிக்கும் பாடல்களாக இவை உள்ளன. இதனை,

"சென்றெழுத் தன்பொடுங் கொஞ்சவரு தங்கமே
செங்கீரை யாடியருளே"[56]

இப்பாடல் வரிகள் குழந்தைகளின் உடல் அசைவால் உடல் வளம் பெறுகிறது என்பதை அறியச் செய்துள்ளது. ''பேச்சு என்பது கரு சொற்களை ஒலித்தலாகும். குழவிகள் பேசத்துவங்குமுன் போலச் செய்தலையும் தவறி ஒலித்தலையும்

காண்கிறோம்''[57] என்ற பாஞ்.இராமலிங்கத்தின் கூற்றிற்கேற்ப நாவை அசைத்துப் பாடும் ஒலியால் பேச்சுப்பயிற்சியளிக்கும் தாலப்பருவப் பாடல்களும் உள்ளன. குழந்தையின் மகிழ்வை வெளிப்படுத்தும் அம்புலிப்பருவப் பாடல்களும் உள்ளன.

"நடைப்பயிற்சிக்கு குழந்தைகளுக்கு ஆர்வமளிக்கும் விளையாட்டுப் பொருட்களைக் கொடுத்து நடக்கச் செய்யலாம்."[58] இவ்வாறு நடைபயில உதவும் விளையாட்டுப் பொருட்களைக் கொண்டு விளையாடும் ஆர்வத்தை வளர்க்கும் பாடல்களும் உள்ளன, இதனை,

தேன்றிறச் சொற்சுவைத் தேருடைச் செல்வமே
சிறுதே ருருட்டியருளே
திருக்கழுக் குன்றத்துச் சிவனருள் பெற்றவன்
சிறுதே ருருட்டியருளே"[59]

போன்ற பாடல் வரிகள் குழந்தையின் நடைப்பயிற்சிக்கு ஏற்றதாக உள்ளன.

இவ்வாறு காப்பியச் சிந்தனைகளும், பக்தி இலக்கியச் சிந்தனைகளும், சிற்றிலக்கியச் சிந்தனைகளும் உடல் வளத்துடன் அறிவு வளத்தை வளர்க்கும் குழந்தைப்பாடல்கள் தேவை என்பதைப் பதிவு செய்துள்ளன. குழந்தைகள் விளையாட சக குழந்தைகளும் தேவை. அவர்கள் இல்லாத நேரத்தில் பெரியவர்களும் சேர்ந்து விளையாடலாம் என்ற சிந்தனையை வலியுறுத்தியுள்ளன. குழந்தைகளின் இன்றியமையாமையையும் குழந்தைகளை வளர்க்கும் முறைகளையும் இவ்விலக்கியங்கள் கூறியுள்ளன.

### 1.1.9.0 இதழ்களில் குழந்தைச் சிந்தனைகள்

ஆனந்த விகடன், கல்கி, கலைமகள் போன்ற பெரியோர் இதழ்களில் சிறுவர் இலக்கியங்கள் வளர்ந்து வந்துள்ளன. கோகுலம், சுட்டிவிகடன் போன்ற குழந்தைகளுக்கான இதழ்களும் உள்ளன.

இவ்வாறு தமிழ் இலக்கியங்களில் குழந்தை இலக்கியத்தை ஆய்வதற்கு குழந்தை உளவியல் நெறிமுறைகளும், குழந்தை இலக்கிய இயல்புகளும் அவசியமானதாகும்.

### 1.2.0 குழந்தை உளவியல் நெறிமுறைகள்

ஒரு வயது முதல் பதினான்கு வயது வரை உள்ள குழந்தைகளைக் குழந்தைப்பருவத்தினர் என அழைக்கிறோம். இப்பருவத்தில் குழந்தையிடம் காணப்படும் வளர்ச்சிகளையும் முதிர்ச்சிகளையும் ஒழுங்கு முறைப்படி ஆராய்ந்து கூறுகிற ஒரு துறையைக் குழந்தை உளவியல் துறை என அழைக்கின்றனர்.

குழந்தையினது ஆற்றல், கற்றல் போன்றவை குழந்தை உளவியலின் கருப்பொருளாகும்.

குழந்தையினது உடல் வளர்ச்சியைப் போன்று அதன் அனுபவமும் வளர வேண்டும். குழந்தையினது வளர்ச்சி ஒரு சுறுசுறுப்பான இயக்கச் செயல்முறையாகும். இது மாற்றத்தை உள்ளடக்கியது என்பதையும் உளவியலார் கூறுகின்றனர். மேலும் ஒரு குழந்தையினது வளர்ச்சிக்கு சூழ்நிலை, உட்சுரப்பிகள், உடல்நலம், முதிர்ச்சி, கல்வி முதலிய பல காரணிகள் இன்றியமையாதவை எனக் குழந்தை உளவியலில் வரையறை செய்துள்ளனர். மேலும் குழந்தைகளின் வளர்ச்சி மெதுவாக நடைபெறும். ஆனால் அவ்வளர்ச்சி ஒரு தொடர்ச்சியாக அமையும். மேலும் அதன் வளர்ச்சி அனுபவங்களால் அமையும். ஆதலால் குழந்தைகளின் வாழ்வில் நிகழும் வாழ்க்கை அனுபவங்கள் அதன் வளர்ச்சிக்கு ஏற்றதாகும் என்பதை உளவியல் மூலம் அறிகிறோம்.

ஒவ்வொரு நிலையிலும் குழந்தைகளின் வளர்ச்சியானது உடல், உள்ளம், உளக்கிளர்ச்சி, அறநெறி போன்ற ஐந்து செயற்பாடுகளால் நிகழ்வதாக உளவியலார் குறிப்பிடுகின்றனர். மேலும் குழந்தைப் பருவத்தின் வகைகளையும் உளவியலார் வகைப்படுத்தியுள்ளனர். ஒரு குழந்தையின் ஆளுமையும் வளர்ச்சியும் அதன் குடும்ப உறுப்பினர்களின் பண்பாடற்ற பேச்சுக்களாலும் அண்டை அயலாரின் செயல்களாலும் பள்ளியில் உடன்பயிலும் தீங்கான மாணவர்களாலும் பாதிப்பு அடையக்கூடும். இத்தகைய பாதிப்பு சமூகத்தையே தீங்கடையச் செய்யும். அதனால் இத்தகைய பாதிப்பிலிருந்து குழந்தைகளைக் காக்க குழந்தை உளவியல் நெறிமுறைகள் அவசியமானதாகும். இச்செய்திகள் அனைத்தையும் அறிய, ‘‘குழந்தைகளின் உளச்செயல்கள் பெரியவர்களிடமிருந்து வேறுபடுகின்றன. எனவே குழந்தையின் புலனுணர்வு, சிந்தனை, கற்றல், இசைவு, ஆளுமை, பிற உளவியற்செயல்கள், அவற்றின்மீது சூழலுக்கு உள்ள ஆதிக்கம், அதன் பயனாக விளையும் தனியாள் வேற்றுமை ஆகியவற்றையெல்லாம் குழந்தை உளவியல் நுட்பமாக ஆராய்கிறது.’’[60] இதை கி.இராசேந்திரனின் கூற்றால் அறிகிறோம்.

### 1.3.0. குழந்தை இலக்கியத்தின் இயல்புகள்

‘‘குழந்தைகளுக்காகப் பாடும் பாடல்களில் ஆழ்ந்த உணர்ச்சிகள் வேண்டியதில்லை; அறிவு நுட்பமும் தேவையில்லை. வியப்பான உணர்ச்சிகளை, அல்லது எளிய உணர்ச்சிகளையே இனிய முறையில் எதுகை மோனை நிரம்பிய செய்யுள்களில் உணர்த்தினால் குழந்தைகள் விருப்பத்தோடு பாடுவார்கள்.’’[61]எனவே குழந்தைகளுக்குப் பாடும் பாடல்களில் அறிந்த பொருட்களை எளிய சொற்களில் எதுகை மோனை நயத்துடன் விளக்கினால் குழந்தைகள் தாமே உணர்ந்து பாடி மகிழ்வார்கள் என்பதை மு.வ. உணர வைத்துள்ளார்.

‘‘பறவை விலங்குகளிடம் குழந்தை மனம் மிகுதியாக ஈடுபடும். தீராத ஆசை கொண்டு பறவை விலங்குகளைக் குழந்தைகள் கண்டு மகிழ்வார்கள். அவர்களின் கற்பனையுள்ளத்தில் பதியும் வகையில் பறவை விலங்குகளைப் பாடிய பாடல்களையும் குழந்தைகள் போற்றி வருகிறார்கள்.’’[62] என்ற மு.வ.வின் கூற்று குழந்தைகளின் விருப்பத்திற்கேற்ப பறவை, விலங்குகளை உவமையாகக் கூறி குழந்தை

இலக்கியத்தைப் படைக்கவேண்டும் என்கிறது. மேலும் குழந்தை இலக்கியங்கள் குழந்தையின் மன ஈடுபாட்டுடனும் தொடர்புடையதாக இருக்க வேண்டும்.

இவ்வாறு மேற்கண்ட நெறிமுறைகளைக் கொண்ட இலக்கியங்களே குழந்தை இலக்கியங்கள் ஆகும்.

### 1.4. குழந்தை இலக்கியங்கள்

தமிழிலக்கியங்களில் இருபது இருபத்தோராம் நூற்றாண்டில் தோன்றிய இலக்கியங்களை 'இக்கால இலக்கியங்கள்' என வரையறை செய்கின்றனர். இவ்வாறு தோன்றிய இக்கால இலக்கியத்தில் காலவாரியாக உருவாகும் இலக்கிய வரலாற்றை அறிமுகப்படுத்துவது இலக்கிய வரலாற்று நூல்கள் ஆகும். இத்தகைய இலக்கிய வரலாற்று நூல்களைப் படைத்த மு.வ. மது.ச. விமலானந்தம் போன்றோர் இலக்கிய வரலாற்று நூலில் சங்க இலக்கியங்கள், காப்பிய இலக்கியங்கள் போல் குழந்தை இலக்கியங்கள் என்ற ஒரு பகுதியை உருவாக்கி அதில் குழந்தை இலக்கியத்தைப் படைத்த பாரதியார், கவிமணி, அழ.வள்ளியப்பா போன்றோரின் குழந்தை இலக்கியப் பணிகளை அறிமுகம் செய்துள்ளனர். மேலும் இக்காலக் குழந்தை இலக்கியப் படைப்பாளர்கள் பலர் தோன்றியிருந்தாலும் அவர்களது குழந்தை இலக்கியப் பணிகளையும் இனிமேல் உருவாகும் இலக்கிய வரலாற்று நூலில் இடம்பெறச் செய்வது அவசியமானதாகும். ஏனென்றால் இவர்கள் இலக்கணத்தை, இதிகாசங்களை, காப்பியங்களை குழந்தைகளுக்கேற்றாற்போல் எளிய முறையில் அமைத்துள்ளனர். எனவே இப்பகுதியில் குழந்தை இலக்கியச் சிந்தனையாளர்களையும், குழந்தை இலக்கியப் படைப்பாளர்களையும் ஆய்வது அவசியமாகிறது.

#### 1.4.1 குழந்தை இலக்கியச் சிந்தனையாளர்கள்

எந்த ஒரு செயலும் வளர உறுதுணையானவர்கள் சான்றோர்கள். அந்த வகையில் எழுத்தாளர்களையும் அறிஞர்களையும் சான்றோராகக் குறிப்பிடலாம். ஏனென்றால் நாட்டிற்குத் தேவையான நல்ல சிந்தனைகளை இவர்கள் நினைவு கூறுபவர்கள். இவர்களாலேயே நாட்டின் எதிர்கால வளர்ச்சிகள் சிறப்பாக அமையும். அதிலும் குறிப்பாக 'குழந்தை இலக்கியம்' என்பது எதிர்காலத் தலைவர்களாகிய குழந்தைகளுக்காகப் படைக்கப்படுவது. ஏனென்றால் குழந்தைகளுக்காக எளிய நடையில் அருமையான செய்திகளை உள்ளடக்கி எழுதப்பட்டவை குழந்தை இலக்கியங்கள் ஆகும். அதனால் குழந்தைகள் எத்தகைய தன்மையுடையவர்கள். அவர்களுக்கு எநத மாதிரியான சிந்தனைகள் தேவை என்று கூறிய கல்வி அமைச்சர் சி.சுப்பிரமணியம், மு.வ, தி.ஜ.ர. போன்றோரின் சிந்தனைகள் பின்வருமாறு தரப்பட்டுள்ளன.

“குழந்தைச் செல்வந்தான் சிறந்த செல்வம் நல்ல குழந்தைகள் இருந்துவிட்டால் நமக்கு வேறு செல்வம் வேண்டா. குழந்தைகள் நல்ல சூழ்நிலையில் பண்பாட்டுடன் வளர நன்னூல்கள் நிறையவேண்டும் என்றார் கல்வி அமைச்சராயிருந்த சி.சுப்பிரமணியம்.”[63] எனவே ஒரு மனிதனின் செல்வம் குழந்தைகளே. அதனால் குழந்தைகளுக்குப் பண்பாட்டுணர்வையும் கல்வியையும் கற்றுணர நூல்களின் அவசியம் அதிகமாகின்றன என்ற சிந்தனையை உணர்த்தியுள்ளார்.

“குழந்தையின் அறிவுப்பசிக்குப் போதிய உணவளிக்கப்பட்ட வேண்டும். இல்லையெனில், குழந்தையின் மனம் சரியான வழியில் செல்லாமல் கோணல் வழியில் செல்லும். அப்போது வருந்திக் கவலைப்படுவது, நோய் வந்த பிறகு கவலைப்படுவது போன்றது”[64] என்ற மு.வ.வின் கூற்று பெற்றோர்கள் குழந்தைகளைத் தவறான பழக்கங்களிலிருந்து காக்க அவர்களின் மனதிற்குப் பிடித்தாற்போல அறிவுரைகளைக் கூறவேண்டும் இல்லையென்றால் நோய் வந்த பின் கவலைப்படுவது போன்றதாகும் என்ற சிந்தனையை வலியுறுத்தியுள்ளது.

“மனித வாழ்க்கைக்குப் பயன்படும் அஸ்திவார இலக்கியம் என்றே குழந்தை இலக்கியத்தைப் பாவிக்க வேண்டும்.”[65] எனவே ஒரு மனிதன் மனிதனாக வேண்டுமென்றால் குழந்தையாக இருக்கும்பொழுதே பண்பாட்டுச் சிந்தனைகளைக் கற்றிருக்கவேண்டும். அதனால் குழந்தை இலக்கியத்தைத் திறம்பட அமைப்பது குழந்தை இலக்கிய ஆசிரியர்களின் கடமையாகும் என்ற சிந்தனையைக் கூறியுள்ளார்.

“Child is the Father of the Man” என்றார் வோர்ட்ஸ்வொர்த் ‘குட்டே காலு குட்டை கை’ யுடைய நம்மின் சின்னஞ்சிறு வடிவே (Miniature Size of the man). குழந்தை புலி மனிதன் என்றால் பூனைதான் (Cat-the miniature size of the Tiger) பிள்ளை என்பதுணரவேணும். எனவே பிள்ளையைப் பேணி வளர்ப்பின், பெரியவனாக உருவிலும் உள்ளத்திலும், அறிவிலும் சிறப்பது உறுதி: இன்றேல் இறுதி”[66] என்ற வேர்ட்ஸ்வொர்த்தின் கூற்றுப்படி குட்டிக்காலும் குட்டிக்கையும் உடைய சிறிய மனிதனே குழந்தை. அதனால் இத்தகைய குழந்தைகளுக்குச் சின்னஞ்சிறு வயதிலேயே நற்கருத்துகளைக் கூறி வளர்த்தால் அவர்கள் கொடுமைக்காரப் புலியாக மாறாமல், வீட்டில் அன்புடன் வளரும் பூனைபோல் அன்புள்ளவர்களாக, அறிவுள்ளவர்களாக மாறுவார்கள் என்ற சிந்தனையை உணர்த்தியுள்ளார்.

“குழந்தைகளின் உள்ளத்திலே நல்ல எண்ணங்கள், சிறந்த கருத்துகள் பதிய வேண்டும்; நம் நாட்டின் பண்பாட்டினை வலியுறுத்தும் காவியங்களை, இதிகாசங்களை அவர்கள் படித்து அறிய வேண்டும் என்னும் ஆசையுடன் இது போன்ற நூல்கள் இன்னும் சிலவேனும் படைக்க விரும்புகிறேன்”[67]. என்ற கருத்து நோக்கத்தக்கது

இதிகாசங்களில் அந்த நல்ல கருத்துகள் கூறப்படும்போது மாந்தர்களின் செயல்பாடுகள் அனைத்தும் குழந்தைகள் மனத்தில் பதிந்து அவர்கள் நல்லவர்களாக மாறுவார்கள்.

''யாருக்கு இந்நூலைப் படைப்பது? யாருக்கு இந்நூலை உரித்தாக்குவது என்று எண்ணிப்பார்த்த வேளையில் ஒரு குறிப்பிட்ட பெருமகனுக்கு இதனைப் படைப்பதைவிட நீதித்துறைக்குத் தங்களின் நல்ல தீர்ப்புகளால் பெருமை சேர்த்த நேற்றைய நீதியரசர்களுக்கும், இன்று இவ்வுலகில் நம்மிடையே வாழுகின்ற நீதியரசர்களுக்கும், நாளைய நீதியை நிலைநாட்டும் பணியில் நெஞ்சுரம் மிக்கவர்களாகவும், நேர்மையாளர்களாகவும், விளங்கப் போகிற எதிர்கால நீதியரசர்களுக்கும் இந்நூலைப் படைக்கிறேன்''.[68] என வி.கலைமணி கூறியுள்ள கருத்தின்படி நாளைய நீதி அரசர்களாக விளங்குபவர்கள் குழந்தைகள். அதனால் குழந்தைகளுக்கு குழந்தை இலக்கியத்தைப் படைப்பது அவசியமானது என்பதை இவர் கூற்றும் உறுதிப்படுத்துகிறது.

''குழந்தைகள் மட்டும் இல்லையானால் இந்த உலகத்தால் நமக்குப் பலன் எதுவும் இல்லை. வானுக்கு வெண்ணிலாவும், வளர்பயிருக்கு வான்மழையும், கவிதைக்குக் கற்பனையும் எத்துணை முக்கியமோ அத்துணை முக்கியம் இந்த வையகத்திற்குக் குழந்தைகள் சுருங்கக் கூறினால், குழந்தை இல்லாத இடம் சூனியமே''[69] குழந்தைகள் நாட்டை மேன்மைப்படுத்துபவர்கள். குழந்தைகள் இருக்குமிடம் எந்தத்தீய சிந்தனைகளின் பாதிப்பிலிருந்தும் தடுக்கப்பட்டுப் பாதுகாப்பைப் பெறும் என்பதை சாமி.பழனியப்பன் மேற்கண்டவாறு கூறியுள்ளார்.

''குழந்தையின் உள்ளம் மிக மென்மை வாய்ந்தது. அதில் உணர்ச்சிகளெல்லாம் ஆழ்ந்து பதிகின்றன. அதேபோல்தான் அதன் மறைவுள்ளத்திலும் உணர்ச்சிகள் வேரூன்றுகின்றன. அதில் ஏற்படும் பலவிதக் கோளாறுகளால் பிற்கால வாழ்க்கை பெரிதும் பாதிக்கப்படுகிறது.''[70] என்ற சிந்தனையை பெ.தூரன் என்பவர் விராய்ட் , ஆட்லர், கெஸல் போன்றோரின் கருத்துகள் வழி விளக்கியுள்ளார். அதன் கூற்றுக்கள் பின்வருமாறு தரப்பட்டுள்ளன.

''மறைவுள்ளத்தைப் பற்றி விரிவாக ஆராய்ந்த விராய்ட் நான்கு அல்லது ஐந்தாம் பிராயத்திலே, மனிதனின் பூரண அமைப்பு, பெரும்பான்மையும் முடிந்து விடுகிறது.''[71] என விராய்ட் என்பவர் கூறியுள்ளார். அதனால் குழந்தைப்பருவத்திலேயே மனிதன் மனிதனாக மாறும் சிந்தனைகளை விதைக்க வேண்டும் என்பது இவருடைய கருத்தாக அமைகிறது.

''குழந்தைப்பருவம் அநேகமாக வாழ்க்கைத்திட்டத்தை தீர்மானித்து விடுகிறது''[72] என்ற சிந்தனையை ஆட்லர் (Adler) குறிப்பிட்டுள்ளார். எனவே குழந்தைப் பருவத்திலேயே குழந்தைகளை முன்னேற்றும் ஒழுக்கச் சிந்தனைகளை விதைக்க வேண்டும் என்பது இவருடைய கருத்தாக அமைகிறது.

இவ்வாறு எழுத்தாளர்கள் அறிஞர்களின் கருத்துக்கள் மனிதனின் வாழ்விற்கு குழந்தைகள் அவசியமானவர்கள். ஆதலால் அவர்களை நெறிப்படுத்தும் குழந்தை இலக்கியப் படைப்பாளர்கள் தேவை என்பதை வலியுறுத்தி அமைந்துள்ளன.

### 1.4.2 குழந்தை இலக்கியப் படைப்பாளர்கள்

இறைவனையோ (அல்லது) தலைவரையோ (அல்லது) ஏதேனும் ஒரு பாத்திரத்தை மையமாக வைத்து எழுதப்பட்ட இலக்கியத்தைத் தொடர்நிலைச் செய்யுள்கள் (அ) காப்பியங்கள் என்பர். இவ்விலக்கியங்கள் தனி ஒரு மனிதனை ஒழுக்கம், ஈகை, மூடநம்பிக்கையை அகற்றுதல் போன்ற நற்பழக்கங்களைப் பின்பற்றச் செய்யும். அதனால் தனிநபரைத் திருத்த தனிநபர்க்கவிஞர்கள் தேவை என்ற அளவில் இருபதாம் நூற்றாண்டில் பாரதியார், கவிமணி, பாரதிதாசன் போன்றோர் தனிநபர்க்கான கவிதைகளை உருவாக்கினர். இவர்கள் பெரியோர்க்கு மட்டும் கருத்துகளைக் கூறுதல் சிறந்ததல்ல என்பதைக் கருதி சிறியோர் சிந்தனைகளையும் பெரியோர் கவிதைகளுக்குள் எழுத முயன்றனர். இதன் விளைவால் கவிமணி 1901 ஆம் ஆண்டில் குழந்தைப்பாடல்களை எழுதினார். 1915 ஆம் ஆண்டில் பாப்பா பாட்டைப் பாரதியார் எழுதினார். இவ்வாறு கவிமணி போன்ற மற்றைய குழந்தைக் கவிஞர்களின் அறிமுகம் அவர்கள் குழந்தை இலக்கியத்தைப் படைத்த முறை ஆகியன காலவரிசைப்படி கீழே தரப்பட்டுள்ளன.

#### 1.4.2.1 கவிமணி

கவிமணி ‘மலரும் மாலையும்’ என்னும் நூலை எழுதியுள்ளார். இதில் கூறப்பட்டுள்ள பாடல்கள் குழந்தைகள் படிப்பதற்கேற்ற எளிமையுடையவை. குழந்தைகள் ஒருமுறை படித்த உடனேயே மனதில் நிற்கும் தன்மையுடையவை. மேலும் ஆசிய ஜோதி, உமர்கய்யாம், மருமக்கள்வழி மான்மியம், தேவியின் கீர்த்தனைகள், குழந்தைச் செல்வம் எனப் பல்வேறு நூல்களில் பாடல்களைப் பாடியுள்ளார். இதனைக் குழந்தைகளுடன் தானும் ஒரு குழந்தையாகிப் பழகி எளிமைக்கும் இனிமைக்கும் இலக்கணமான பாடல்களைப் பாடியுள்ளார். இவர் எழுதிய பாடல்கள் இலக்கண வரம்புக்கு உட்பட்டவையாகும்.

“தோட்டத்தில் மேயுது
வெள்ளைப் பசு – அங்கே
துள்ளிக் குதிக்குது
கன்றுக் குட்டி”[73]

என்னும் பாடல் வரிகள் குறிப்பிடத்தக்கவையாகும். இவ்வரிகளே குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா போன்றோர் குழந்தைப்பாடல்களை எழுதியதற்கு உறுதுணையான வரிகளாகும்.

#### 1.4.2.2 பாரதியார்

அன்பு தழைக்க, அறம் செழிக்க, விடுதலைபெற முன் வந்தவர்களுள் பாரதியாரும் ஒருவர். இவர் புதிய ஆத்திச்சூடி படைத்துள்ளார். இந்த ஆத்திச்சூடியில் நூற்றிப்பத்து சிந்தனைகளைக் குறிப்பிட்டுள்ளார். நாம் வாழ்க்கையில் நேரம் அறிந்து செயல்பட, துணிந்து செயல்புரிய, நீதியறிய, புதியன படைக்க, பொய்ம்மை அகற்ற, மானம் காக்க என்ன செய்ய வேண்டும் என்பதைக் கீழ்க்காணுமாறு கூறுகிறார்.

'நீதி நூல் பயில்
நுனியளவு செல்
நூலினைப் பகுத்துணர்
நெற்றி சுருக்கிடேல்
நேர்படப் பேசு
நையப் புடை''[74]

இது தவிர 'முரசு' என்னும் பாடலை சாதிவேற்றுமையைத் தகர்த்தெறியும் வண்ணம் பாடியுள்ளார். பாப்பா பாட்டை ஒற்றுமையை வலியுறுத்தப் பாடியுள்ளார். இவ்வாறு பதினாறாம் நூற்றாண்டில் படுத்துத் தூங்கிய குழந்தை இலக்கியத்தை தட்டியெழுப்பி தழைக்கச் செய்த பாங்கு பாரதியைச் சேருகிறது. இதனை டாக்டர் பூவண்ணன்,

''பதினாறாம் நூற்றாண்டிற்குப் பிறகு குழந்தைஇலக்கியம் படுத்துத் தூங்கி விட்டது. அந்தத் தூக்கம் நீடு தூக்கம், நீண்ட தூக்கம்! அந்தத் தூக்கத்தை நீக்கப் பாடிவந்த நிலாவானார் பாரதியார்!''[75] என்று இவர் குறிப்பிடுவதிலிருந்து குழந்தை இலக்கியம் தழைக்க முயற்சி செய்தவருள் இவரும் ஒருவர் என்பதை அறிய இயலுகிறது.

#### 1.4.2.3 பாரதிதாசன்

'மயில்', 'சிரித்த முல்லை' உதயசூரியன்' காடு, 'மக்கள் நிலை', 'அணில்', 'வானும் முல்லையும்' 'காட்சிஇன்பம்' 'இயற்கை' போன்ற பாடல்களைப் பாரதிதாசன் எழுதியுள்ளார். இவை குழந்தைகளுக்காக குழந்தைகளுக்கேற்ற நடையில் உள்ளன. இவரின் குழந்தை இலக்கியப் படைப்புகளுக்குச் சான்றாக,

''கீச்சென்று கத்தி – அணில்
கிளையொன்றில் ஓடிப்-பின்
வீச்சென்று பாய்ந்துதன் காதலன் வாலை
வெடுக்கென்று தான்கடிக்கும்.''[76]

என்னும் இவ்வரிகள் உள்ளன. இதில் குழந்தைகளுக்குப் பிடித்த அணிலின் இயல்பினை உணர்த்தியுள்ளார். இவ்வாறு 'அணில்' என்னும் பாடல் போல 'வானும் முல்லையும்',

மனிதர், ‘காட்சி இன்பம்’ போன்ற பாடல்களை எழுதியுள்ளார். ஆனால் இதற்குப்பின் ‘பெரியவர்களுக்கேற்ற காதல்’, காதற்கடிதங்கள்’ போன்ற பாடல்களை அமைத்துள்ளார்.

கவிமணி, பாரதியார், பாரதிதாசன் போன்ற கவிஞர்களின் உந்துதலால் மணி திருநாவுக்கரசர், மயிலை சிவமுத்து, பி.ஆர்.ராஜசூடாமணி, தமிழ் ஒளி, பெரியசாமித்தூரன், ர.அய்யாசாமி, அழ.வள்ளியப்பா, ராஜம் சீதாராமன், காமாட்சி சீனிவாசன், ஜ்வாலா ஜெயராம், பெ.நா.அப்புஸ்வாமி, செல்லகணபதி, அழகனார், இன்ப வண்ணன், சே.கனகசபை, குயிலன், வ.கோவிந்தராசன், கிருஷ்ணன்நம்பி, வே.ரா.சிவஞான வள்ளல், வ.சிவசங்கரன், சுப்பு ஆறுமுகம், அரு.சோமசுந்தரம், தணிகை உலகநாதன், தமிழழகன், தமிழ்முடி, திருச்சி பாரதன், திருச்சி வாசுதேவன், வி.நடேசன், நாக முத்தையா, நாரா.நாச்சியப்பன், நாஞ்சில் ஈ.பாலப்பன், அ.கி.பரந்தாமனார், தே.ப.பெருமாள், ரா.பொன்ராசன், பஷீர், மகிழ்ச்சிக்கண்ணன், மணி, பு.ஆ.முத்துக்கிருஷ்ணன், வாணிதாசன், ஆ.வீரராகவன், கே.எஸ்.லட்சுமணன், சோமசுந்தரப்புலவர், சி.வேலுசுவாமி, முரசு நெடுமாறன், எ.சோதி, பாவலர் துரைக்கண்ணன், பூவண்ணன் போன்ற குழந்தைக்கவிஞர்கள் குழந்தை இலக்கியத்திற்கு வித்திட்டுள்ளனர்.

### 1.4.2.4. நமச்சிவாய முதலியார்

இவர் தம் தமிழ்ப்புலமையால் சின்னஞ் சிறுவர்க்குத் தொண்டு செய்தவர். உரை நடையைப் பாட்டுப் போல் எழுதும் ஆற்றல் பெற்றவர்.

“அ இதுவோர் அத்திப்பழம்
ஆ என்பவன் ஆசைப் பட்டான்.
இ என்பவன் இ என்றான்.
ஈ என்பவன் ஈ என்றான்.
உ என்பவன் உரி என்றான்.
ஊ என்பவன் ஊதென்றான்.”[77]

போன்ற வரிகள் ‘அ’, ‘ஆ’ வை எளிமையுடன் கற்கும் முறைக்கு ஏற்றதாக உள்ளன.

### 1.4.2.5. மணி திருநாவுக்கரசர்

நமச்சிவாயர் வாழ்ந்த காலத்தில் வாழ்ந்தவர். இவரைப் போலவே பேராசிரியராக இருந்து குழந்தை இலக்கியம் வளரத் துணை புரிந்தவர் மணிமங்கலம் திருநாவுக்கரசர் ஆவார். இவரை மணியரசர் என்று அன்புடன் போற்றுவர். இவர் சிறந்த சிறுவர் பாடல்களை எழுதியுள்ளார்.

### 1.4.2.6.மயிலை சிவமுத்து

சிறுவர்களுக்காகக் கதை கட்டுரைகளுடன் பாடல்களையும் எழுதியவர். இவரது தங்க நாணயம், நாராயணன் முதலிய சிறுவர் கதை நூல்கள் புகழ் பெற்றவை.

#### 1.4.2.7. பி.ஆர்.ராஜசூடாமணி

ஏறத்தாழ இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னர் வானொலி நிலையத்தில் சிறுவர் நிகழ்ச்சித் தயாரிப்பாளராகப் பணியாற்றியவர். இவர் குழந்தைகளுடன் குழந்தைகளாகப் பழகியவர். குழந்தைகளுக்காக வெளிவந்த பொக்கிஷப்பரணி என்னும் இதழின் ஆசிரியராகப் பணியாற்றியவர். இவர் குழந்தைகளுக்காகப் பல்வேறு பாடல்களையும் பாடியுள்ளார்.

"வாழ்க நிரந்தரம் வாழ்க சிறுவரும்
வாழிய வாழியவே
வானமிருக்குந் தனையு மிருந்திவர்
வளர்ச்சியும் வாழியவே!"[78]

என சிறுவர்கள் நிரந்தரமாக வாழவேண்டும் எனப் பாடியுள்ளார்.

#### 1.4.2.8. தமிழ் ஒளி

பாரதியாரைப் பின்பற்றி எழுதியவர்களுள் தமிழ்ஒளியும் ஒருவர். இவர் பெரியவருக்கும் சிறுவர்க்கும் கவிதை எழுதியுள்ளார். இவர் சந்தப்பாடல் பாடுவதில் வல்லவர்.

#### 1.4.2.9. பெரியசாமித் தூரன்

குழந்தைகளுக்காக குழந்தைகளுடன் ஒன்றிப் பாடல்களை எழுதியுள்ளார். 1931 ஆம் ஆண்டு முதல் குழந்தைப்பாடல்களை எழுதியவர். பெரியசாமித்தூரன், இதழியல் பணியாலும் குழந்தை இலக்கிய வளர்ச்சிக்கு வித்திட்டுள்ளார். 'ஆனையும் பூனையும்', நல்ல நல்ல பாட்டு போன்ற பாடல்கள் குறிப்பிடத்தக்கன.

#### 1.4.2.10. ர.அய்யாசாமி

ர.அய்யசாமி தந்தையின் கண்டிப்பால் பக்திச் சுரங்கமான திவ்வியப் பிரபந்தம் முழுவதையும் கற்றவர். அவர் படித்த திண்ணைப்பள்ளியில் சூடாமணி நிகண்டு என்னும் அந்தக் காலத்து அகராதியையும், கம்பராமாயணத்தில் பெரும்பகுதியையும் நளவெண்பா முதலிய இலக்கியங்களையும் கற்றவர். இவர் ஒரு சமுதாயத் தொண்டர். நாட்டு விடுதலைப் போரில் ஈடுபட்டவர். சமூகத்தில் கீழ்நிலையில் உள்ளவரின் நலத்திற்காக உழைத்தவர். தம்மையும் வீட்டையும் தூய்மையாக வைத்துக்கொள்ளும் பழக்கத்தை சேரிச்சிறுவர்கள் கற்றுக்கொள்ளும் வண்ணம் எழுதியுள்ளார். இதனை,

"கண்ணனைக் கும்பிடுவோம் - அவன்
காலில் விழுந்திடுவோம்.
வெண்ணெய் தயிர் தருவான்- நல்ல
மேன்மையும் தந்திடுவான்

பச்சை நிறம் உடையான் - கையில்
பாடும் குழல் உடையான்

அச்சம் அழித்திடுவான் - நமது
ஆசைப் பொருள் தருவான்

பாதையில் முள் இருந்தால் - அவன்
பாதத்தில் குத்துமடா
வீதியில் சேறிருந்தால் - அவன்
மீது தெறிக்குமடா." [79]

போன்ற பாடல் வரிகள் வழியாக உணர்த்துகிறார்.

இவர்க்கு அடுத்த படியாக சிறந்து விளங்கியவர் குழந்தைக் கவிஞர் அழ.வள்ளியப்பா. இவரைப்பற்றிய செய்திகள் 'குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா பெறும் இடம்' என்னும் தலைப்பில் தரப்பட உள்ளன.

### 1.4.2.11. ராஜம் சீதாராமன்

ஔவையாரைப் போல் இவரும் பெண் குழந்தைக்கவிஞர் ஆவார். இவர் எழுதிய பாடல்களில் சில வரிகள்,

"பூஞ்செடிக்குத் தண்ணீர் வேண்டும்
மழையே மழையே வா
மாஞ்செடியும் வளர வேண்டும்
மழையே மழையே வா"[80]

செடி கொடிகள் செழிப்புற மழை இன்றியமையாதவை என்பதை உணர்த்தியுள்ளார்.

### 1.4.2.12. காமாட்சி சீனிவாசன்

இவர் ஒரு தமிழ் விரிவுரையாளர். தமிழுக்குத் தொண்டு செய்வது போல் தமிழ்ச் சிறுவர்களுக்குத் தொண்டாற்றியவர். இவர் எழுதிய சிறுவர் பாடல்கள் 'குழந்தைப்பாடல்கள்' என்ற பெயரில் 1958 ஆம் ஆண்டு வெளியாயின.

### 1.4.2.13. ஜ்வாலா ஜெயராம்

ஜ்வாலா ஜெயராம் 1959 ஆம் ஆண்டு குழந்தை எழுத்தாளர் சங்கம் நடத்திய சிறுவர் கவிதைப்போட்டியில் கலந்துகொண்டு முதற்பரிசு பெற்ற மாணவி.

### 1.4.2.14 பெ.நா.அப்புஸ்வாமி

அப்புஸ்வாமி ஒரு வழக்கறிஞர். இலக்கிய வழக்குகளில் தேர்ந்தவர். 1947 ஆம் ஆண்டில் சிறுவர்க்காக எழுதத் தொடங்கினார். 'தமிழர் நேசன்' என்ற பத்திரிகையில் இவர் கதைகள் இடம்பெற்றன.

இவர்க்கு அடுத்தபடியாக குழந்தைக் கவிஞர் செல்லகணபதி இலக்கியத்துறை வளர்ச்சிக்கு வித்திட்டவர். இவரைப் பற்றிய செய்திகள் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி பெறும் இடம் என்னும் தலைப்பில் தரப்பட உள்ளன.

### 1.4.2.15 அழகனார்

அழகனார் கோவையைச் சேர்ந்தவர். குழந்தை இலக்கியம் மேன்மையடைய ஏராளமான பத்திரிகைகளில் எழுதியவர். அவற்றுள் நாற்பத்திரண்டு பாடல்கள் ‘கொக்கரக்கோ’ என்னும் நூலில் வெளிவந்துள்ளன.

### 1.4.2.16. இன்பவண்ணன்

இன்பவண்ணனின் இயற்பெயர் முருகானந்தம். இவர் ‘சிறுவர் சோலை’ ‘பொம்மை வீடு’ என்ற இரு நூல்களை எழுதியுள்ளார்.

### 1.4.2.17.சே.கனகசபை

சே.கனகசபை உவமை, உயர்ந்த கருத்து, எளிமை, இனிமை, ஆகியவற்றை அமைத்துச் சிறுவர் பாடல்கள் எழுதும் திறமை வாய்ந்தவர். ‘நாளைய உலகம்’ என்னும் நூலில் நாற்பத்தாறு சிறுவர் பாடல்களை எழுதியுள்ளார்.

### 1.4.2.18. குயில்

குயில் சிறுவர்களுக்குத் தொண்டாற்றுவதைக் கடமையாகக் கொண்டவர். ‘குயிலின் குழந்தைப்பாடல்கள்’ என்னும் நூல் குறிப்பிடத்தக்கதாக உள்ளது.

### 1.4.2.19 வ.கோவிந்தராசன்

கோவிந்தராசன் முப்பது சிறுவர் பாடல்களைப் பாடியுள்ளார். இப்பாடல்கள் அடங்கிய தொகுதிக்குப் ‘பாடுங்குயில்’ என்று பெயர்.

### 1.4.2.20 கிருஷ்ணன் நம்பி

சிறுவர்களுக்கு நகைச்சுவையாகக் கவிதை எழுதியவர்களுள் கிருஷ்ணன் நம்பியும் ஒருவராவார்.

### 1.4.2.21 வே.ராசிவஞானவள்ளல்

வே.ரா.சிவஞான வள்ளல் வேலூரில் ஆசிரியப் பணி புரிந்து வருபவர். பள்ளிச் சிறுவர்கள் பாடி மகிழ்வதற்கு முன்னூறு சிறுவர் பாடல்களை எழுதியுள்ளார். மழலைச் செல்வம், அரும்பு, சிட்டு, பாப்பா, கதைப்பாட்டு போன்ற சிறுவர் பாடல்களை எழுதியுள்ளார்.

### 1.4.2.22 அரு.சோமசுந்தரம்

அரு.சோமசுந்தரம் பெரியவர்களுக்கான கவிதை, கட்டுரை, நாடகம், முதலிய பல்வேறு துறைகளில் சுமார் முப்பது நூல்கள் எழுதியுள்ளார். குழந்தைகளுக்காக ஒரு புதுமையான கவிதை நூலை எழுதியுள்ளார். அதன் பெயர் ‘சிறுவர்க்கு விஞ்ஞானம் என்னும் நூலாகும்.

"மின்சா ரத்தின் சக்தியினால் - நாம்
மிக்க பயன்கள் துய்க்கின்றோம்
என்சா ணுடம்பு பெற்றிடவே - இனி
இந்திரன் கூடத் தவம்செய்வான்" [81].

இவ்வரிகள் மின்சாரத்தின் வளர்ச்சியைப் பெற்ற மக்கள் தேவராவதற்குத் தவம் செய்வார்கள். ஆனால் தேவலோகத்தில் பிறந்த இந்திரன் மின்சாரத்தின் பயனை எண்ணி இவ்வுலகில் பிறக்கத் தவம் செய்வான் என்பதை நகைச்சுவை உணர்வுடன் வெளிப்படுத்தியுள்ளார்.

**1.4.2.23. தணிகை உலகநாதன்**

தணிகை உலகநாதன் 1945 ஆம் ஆண்டிலிருந்து குழந்தை இலக்கியத்திற்குத் தொண்டாற்றி வருபவர். இவர் குழந்தை இலக்கியத்துறைக்கு வரக் காரணமாக அமைந்தது குருவிக்குடில் என்னும் மன்றமாகும். மேலும் இவர் மாணவர் மன்றம், குழந்தை எழுத்தாளர் சங்கம் ஆகியவற்றுடன் நெருங்கிய தொடர்புடையவர். எப்பொழுதும் சிரித்த முகத்துடன் காட்சி தருபவர்.

**1.4.2.24 தமிழழகன்**

தமிழழகன் 'அமுதம்' 'பூ', மத்தாப்பூ போன்ற நூல்களை எழுதியுள்ளார்.

**1.4.2.25. தமிழ்முடி**

தமிழ்முடி பன்னிரண்டு வயதில் கவிதை எழுதியவர். இவரது இயற்பெயர் அருச்சுனன். இவரது புனைப்பெயர் தமிழ்முடி ஆகும். இருபதாண்டுகளுக்கு மேலாகச் சிறுவர்களுக்கான பாடல்களை எழுதி வருபவர். 'பிள்ளைக் கனியமுது', 'பிள்ளையார்சிலை' என்ற நூல்களை எழுதியுள்ளார்.

**1.4.2.26 திருச்சி பாரதன்**

திருச்சி பாரதன் நாடகங்கள் பல படைத்தவர். இவருடைய பாடல்கள் அழகு நிலா, பாலர் நூல்கள் போன்றவை ஆகும்.

**1.4.2.27 திருச்சி வாசுதேவன்**

திருச்சி வாசுதேவன் இலக்கணப்பிழையின்றி சிறுவர் பாடல்கள் எழுதும் திறமை வாய்ந்தவர். இருபத்திரண்டு ஆண்டுகளாக ஆர்வத்துடன் சிறுவர் பாடல்களை எழுதியவர். 'கறுப்பு வைரம்' 'பட்டுக்குடை', 'பாலர் பாடல்கள்', கதைப்பாடல்கள் ஆகியவை இவருடைய சிறுவர் பாடல் நூல்களாகும்.

**1.4.2.28. வி.நடேசன்**

வி.நடேசன் தமிழாசிரியாகப் பணி புரிந்தவர். பல்லாண்டுகளாகப் பாடல் எழுதியவர். அறுபத்தாறு பாடல்களைக் கொண்ட 'மலர்மணம்' என்னும் நூலை எழுதியுள்ளார்.

**1.4.2.29 நாக முத்தையா**

நாக முத்தையா இருபத்தைந்து ஆண்டுகளாக எழுதுபவர். சிறுவர் இலக்கியம், குழந்தைப்பாடல்கள் குழந்தைக் கவிதைகள், மழலை இன்பம், மழலைச் செல்வம், பச்சை விளக்கு, பாட்டும் கதையும் போன்ற நூல்களை எழுதியுள்ளார்.

''பாடம் படிக்க வேண்டும் - வீட்டுப்
பாடம் படிக்க வேண்டும்.
காலை மாலை இரண்டு வேளை
கணக்காய்ப் பாடம் படித்து வந்தால்
மேலும் மேலும் நன்மை கூடும்
மேன்மைக் கல்வி ஒன்றாய்க் கூடும்.''[82]

என்ற வரிகள் மூலம் வீட்டுப்பாடத்தைத் தவறாமல் படிக்கவேண்டும் என எச்சரித்துள்ளார்.

**1.4.2.30 நாரா.நாச்சியப்பன்**

நாரா நாச்சியப்பன் அறிஞர் அண்ணா, பாவேந்தர் பாரதிதாசன், அப்பாதுரை ஆகியோரின் எழுத்தோவியங்கள் வெளிவந்த சிறுவர் இதழின் ஆசிரியர். இவர் சிறுவர்களுக்குச் 'சிறுவர் பாட்டு' என்னும் நூலை எழுதியுள்ளார். மழலைப்பூங்கா, 'மழலைச் சோலை'', சான்றோர் செம்மை நலம், கல்வி நெறி ஆகிய நூல்களை எழுதியுள்ளார்.

''அன்பு ஒரு செல்வம்
அறிவு ஒரு செல்வம்
இன்பமாகப் பேசும்
இயல்பும் ஒரு செல்வம்''[83]

இன்முகத்துடன் பேசுதலே சிறந்தது என்பதை இப்பாடல்வரிகளில் குறிப்பிட்டுள்ளார்.

**1.4.2.31. நாஞ்சில் ஈ.பாலப்பன்**

நாஞ்சில் ஈ.பாலப்பன் நாகர் கோயிலைச் சேர்ந்தவர். குழந்தைகளுக்குத் தொண்டாற்றும் பேராற்றல் வாய்ந்தவர். 'பூவும் தேனும்' என்னும் தொகுதியில் முப்பத்தாறு சிறுவர் பாடல்களை எழுதியுள்ளார்.

**1.4.2.32.அ.கி.பரந்தாமனார்**

அ.கி.பரந்தாமனார் குழந்தை இலக்கியத்திற்குப் பெருமை சேர்த்தவர்களுள் ஒருவர். இவரின் எங்கள் தோட்டம் என்னும் நூல் குறிப்பிடத்தக்கதாக உள்ளது.

**1.4.2.33 தே.ப.பெருமாள்**

தே.ப.பெருமாள் கவிமணியின் தூண்டுதலால் சிறுவர் பாடல்கள் எழுத முன்வந்தவர். 1944 ஆம் ஆண்டு முதல் சிறுவர்க்காக எழுதி வருபவர். இவர் 1948 ஆம் ஆண்டு குழந்தையரங்கு என்னும் நூலில் சிறுவர் பாடல்களை எழுதியுள்ளார்.

**1.4.2.34 ரா.பொன்ராசன்**

ரா.பொன்ராசன் இராமநாதபுர மாவட்டத்தைச் சேர்ந்தவர். குழந்தைகள் உலகத்தோடு பாடுவதற்கு ஏற்ற சந்தப் பெருமையும் சொல்லின் பெருமை மிக்க பாடல்களையும் எழுதியவர்.

**1.4.2.35 பஷீர்**

பஷீர் தமிழ்ப்புலமை மிக்கவர். இவர் நேர்வழிப் பிரகாசம் என்னும் சிறுவர் நூலை எழுதியுள்ளார். சிறுவர் இலக்கியப் பணியில் தம்மை ஈடுபடுத்திய இவர் ‘சிரித்த முல்லை’ என்னும் நூலில் தம் பாடல்கள் சிலவற்றை எழுதியுள்ளார்.

**1.4.2.36 மகிழ்ச்சிக் கண்ணன்**

மகிழ்ச்சிக் கண்ணனின் இயற்பெயர் இல.ஆனந்தகிருஷ்ணன். இவர் தன் தவறிய தம்பிக்காகக் குழந்தை இலக்கியத்துறைக்கு வந்தவர். தன் தம்பியை இழந்தாலும் இக்குழந்தை இலக்கியப் பணியில் தம்மை ஈடுபடுத்திப் பிற குழந்தைகள் மூலம் தன் தம்பியை அடையலாம் என எண்ணி எழுதியுள்ளார். இவர் தமிழார்வத்தினால் தன் பெயரை ‘மகிழ்ச்சிக்கண்ணன்’ என மாற்றிக் கொண்டுள்ளார். சிறுவர்களுக்குச் சேவை செய்ய ‘சிறுவர் குடில்’ என்ற சங்கத்தை நடத்தியவர். இப்போது ‘மத்தாப்பு’ என்னும் சிறுவர் இதழின் ஆசிரியராக உள்ளார்.

**1.4.2.37. மணி**

மணி ஒரு வில்லுப்பாட்டுக் கலைஞர். இவர் சிறுவர் பாடல்களை எழுதியுள்ளார்.

**1.4.2.38 பு.ஆ. முத்துக்கிருஷ்ணன்**

பு.ஆ.முத்துக்கிருஷ்ணன் கல்விப் பணியுடன் குழந்தை இலக்கியப் பணி புரிபவர். இவருடைய சிறுவர் பாடல்கள் ‘அறிவுக்கதிர்’, குழந்தைப்பாக்கள்’ என்னும் தலைப்புகளில் நூல்களாக வெளிவந்துள்ளன. சிறுவர் உலகம் என்னும் புதுமையான சிறுவர் பாடல் நூலை எழுதியவர். கொச்சி, வங்காளம் போன்ற பகுதிகளில் வாழ்கின்ற சிறுவர்களை மையமாக வைத்துக் கொச்சிச்சிறுவன், வங்காளச் சிறுவன், ஆர்டிக் சிறுவன், பாலஸ்தீன சிறுமி, நீக்ரோ சிறுவன் முதலிய இருபது உள்நாட்டு வெளிநாட்டு சிறுவர்களைப் பற்றிக் கூறியுள்ளார். மேலும் அவர்தம் நாடு வீடு பழக்கவழக்கங்கள்

போன்றவற்றையும் எளிய பாடல்களில் கூறியுள்ளார். ‘நில நூல்’ என்ற சிறுவர் பாடல் நூல்களையும் படைத்துள்ளார். இது போற்றத்தக்க பெருமையும் புதுமையும் நிறைந்தது.

#### 1.4.2.39 வாணிதாசன்

வாணிதாசனின் இயற்பெயர் அரங்கசாமி. குழந்தை இலக்கியம், இனிக்கும் பாட்டு போன்ற சிறுவர் நூல்களை இயற்றியுள்ளார்.

#### 1.4.2.40 கே.எஸ்.லட்சுமணன்

பெரியோர் நூல்களுடன் குழந்தைகளுக்கும் எழுதியவர். பாப்பாவுக்கு மிருகங்கள், பாப்பாவுக்கும் பறவைகள் ஆகிய இரண்டும் இவர் எழுதிய சிறுவர் நூல்களாகும்.

#### 1.4.2.41. நாவலியூர் க.சோமசுந்தரப்புலவர்

நாவலியூர் க.சோமசுந்தரப்புலவர் இலங்கை சென்று எழுதிய குழந்தைக் கவிஞர்களில் சிறந்தவர். இவர் சந்த நயத்துடன் சிறுவர்கள் மனம் கவரும் வண்ணம் பாடல்களை எழுதியுள்ளார். இவரைப் பின்பற்றிப் பாடல் எழுதிய சிலரையும் இவ்வாய்வு பின்வருமாறு அறிமுகம் செய்துள்ளது. அவர்களுள் குறிப்பிடத்தகுந்தவர்களாக எம்.ஸி.எம்.ஸீபைர், கோசுதா, சாரனாகையூம், சி.வேலுசுவாமி, முரசு நெடுமாறன் போன்றோர் உள்ளனர்.

#### 1.4.2.42. எம்.ஸி.எம்.ஸுபைர்

எம்.ஸி.எம்.ஸுபைர் மலரும் மனம் என்ற தலைப்பில் பாடல் எழுதியுள்ளார். இப்பாடல்களை ‘மணிக்குரல்’ என்ற பத்திரிக்கையில் எழுதியுள்ளார்.

#### 1.4.2.43 கோசுதா

கோசுதா பாலர் பாடல் என்னும் ஒரு நூலை வெளியிட்டுள்ளார். அந்த நூலில் ஐம்பத்தி ஐந்து (55) பாடல்கள் உள்ளன. இவை மேனாட்டு அறிஞர்களின் வாழ்க்கை வரலாற்றைக் கூறும் பாடல்களாக உள்ளன.

#### 1.4.2.44 சாரனா கையூம்

சாரனாகையூம் இலங்கையில் தோன்றிய இன்னொரு குழந்தைக்கவிஞர். இவர் குழந்தை இலக்கியம் என்னும் சிறுவர் பாடல் நூல்களை எழுதியுள்ளார்.

#### 1.4.2.45 வேலுசுவாமி

அகராதியுடன் குழந்தை இலக்கிய நூல்களையும் எழுதியவர்,

“கணக்குப் பாடம் செய்து வைத்தேன்
கண்டித் ததாலே
காலை முதலே மழை பொழியுது
கவலை இதாலே”[84]

என்ற பாடல் வரிகளில் வீட்டுக்கணக்குப் போட்டு வைத்தும் மழை பெய்த காரணத்தினால் பள்ளிக்குச் செல்ல இயலாத ஒரு குழந்தையின் வருத்தத்தை உணர்த்தியுள்ளார்.

### 1.4.2.46 முரசு நெடுமாறன்

முரசு நெடுமாறனின் சிறுவர் பாடல்கள் மலேசிய வானொலியில் வெளிவந்து புகழ் பெற்றவையாகும். ‘வெற்றியின் ரகசியம்’ என்னும் பாடல் குறிப்பிடத்தக்கதாக உள்ளது.

### 1.4.2.47 பூவண்ணன்

பூவண்ணனின் இயற்பெயர் வே.தா.கோபாலகிருஷ்ணன். இவர் நாம் மேற்கண்ட ஆய்வில் கண்ட குழந்தைக் கவிஞர்களை ‘குழந்தைக் கவிஞர்கள்’ என்ற நூலில் அறிமுகப்படுத்தியவர். இவர் சிறுகதை, நாடகம், பாடல் போன்ற இலக்கியங்களில் குழந்தைச் சிந்தனைகளைக் கூறியுள்ளார்.

இவர்களைப் போல் அயல்நாட்டில் குழந்தைக் கவிஞர்கள் உள்ளனரா? என்பதற்கு விடைகாணும் நிலையில் ‘அயல்நாட்டில் குழந்தை இலக்கிய நிலை’ குறித்த சிந்தனைகள் ஆயப்பட உள்ளன. இதற்குரிய கருத்துகள் இணைய தளத்திலிருந்து சேகரிக்கப்பட்டவை என்பது குறிப்பிடத்தக்கது.

## 1.5. அயல்நாட்டில் குழந்தைஇலக்கிய நிலை

சீசஸ், ராபர்ட் லூயிஸ், ஷெல் சில்வெர்ஸ்டீன், ஜேக் பரீலூட்ஸ்கி போன்றோர் பிற நாடுகளில் உள்ள குழந்தை இலக்கிய நிலையை உயர்த்திய குழந்தைக்கவிஞர்கள் ஆவார்கள்.

### 1.5.1. *சீசஸ்* (Seuss)

சீசஸ் என்பவர் சில குழந்தை இலக்கிய நூல்களை எழுதியுள்ளார். அவர் எழுதிய நூல்களில் குறிப்பிடத்தக்கனவாக (The cat in the Hat) க்ரீன் எக்ஸ் அன்ட் ஹாம் (Green Eggs and Ham) ஹவ் க்ரின்ச் ஸ்டோல் கிறிஸ்துமஸ் (How the Grinch stole Gristmas!) போன்ற நூல்கள் உள்ளன.

இவர் ஒரு அமெரிக்க எழுத்தாளர், நகைச்சுவைச் சித்திரம் வரைபவர். இவருடைய முழுப்பெயர் தா ஆப்ரஸ்டஸ் சீசஸ் (The ophrastus seuss) ஆகும். இவர் நாற்பத்தாறுக்கும் மேற்பட்ட குழந்தை இலக்கிய நூல்களை எழுதியுள்ளார். கற்பனை, தொடக்கநிலைக் கவிதைகளை குழந்தைகளின் வசதிக்கேற்ப கற்பனைக் கதாப்பாத்திரங்களுடன் தொடக்கநிலைக் கவிதைகளை எழுதியுள்ளார்.

### 1.5.2. ராபர்ட் லூயிஸ் ஸ்டீவன்சன் (Robert Louis stevenson)

இவர் சில குழந்தை நூல்களை எழுதியுள்ளார். அதில் குறிப்பிடத்தக்கது. வேர் த சைடு வாக் என்ட்ஸ் & ஏ லைட் இன் த அட்டிக் (where the side walk ends and a light in the Attic) த கிவ்விங் ட்ரீ (The Giving Tree) போன்ற நூல்களும் உள்ளன.

### 1.5.3. ஜேக் ப்ரீலூட்ஸ்கி (Jack pretustsky)

ஜேக் ப்ரீலூட்ஸ்கி என்பவர் 1940ல் பிறந்தவர். இவர் குழந்தைப் பருவத் தொடக்கநிலைக் கவிதைகளை எழுதியுள்ளார். 'ஏ.கா.ஃபர் இன் த கார்டன் அன்டு அதர் அனிமல்' (A Gopher in the Garden and other Animal poems) போன்ற கவிதைகளை எழுதி வெற்றி பெற்றவர். 2006 ஆம் ஆண்டிற்கான ஆஸ்தான கவி (Poet Laureato) என்ற விருது பெற்றவர்.

### 1.5.4. மைக்கேல் ரோசன் (Michael Rosen)

வானொலி தொலைக்காட்சி நிலைய இயக்குநராக இருந்தவர். இது தவிர குழந்தைகளின் முன்னேற்றத்தைக் கருதி கவிதைகளுடன் நூற்றிநாற்பது (140) நாவல்களை எழுதியுள்ளார். 2007-ல் ஆஸ்தான கவி என்ற நியமனத்தைப் பெற்றவர்.

### 1.5.5.ரோல்டு டால் Roald Dahl

ரோல்டு டால் என்பவர் மிகச் சிறந்த குழந்தை இலக்கிய நூல்களை எழுதியுள்ளார். ஸ்காட் லேண்ட், அயர்லேண்ட், இங்லேண்டு (Scot land, Ire land, England) போன்ற நாடுகளில் முப்பது (30) மில்லியன் புத்தகங்கள் விற்பனை ஆகும் அளவிற்கு சிறந்த நூல்களை எழுதியுள்ளார்.

### 1.5.6 வேலரி புளும் (Valerie Bloom)

வேலரி புளும் என்பவர் 1956 ஆம் ஆண்டு இங்கிலாந்தில் பிறந்தவர். தற்சமயம் கென்ட் என்னுமிடத்தில் தங்கியுள்ளார். யு.கே.(U.K) போன்ற பிற நாடுகளில் உள்ள பள்ளிகளுக்குச் சென்று வருகிறார். கற்றறிந்த இலக்கியச் சம்பந்தமான நூல்களைப் படித்தறிவதில் ஆர்வம் உள்ளவர். இவர் ஒரு புத்தகத்தை ஒரு வருட காலம் எழுதி குற்றமற்ற புத்தகமாக உருவாக்கியவர்.

### 1.5.7. ப்ரெயன் மோசஸ் (Brain Moses)

இவர் 1950-ல் பிறந்தவர். பிரிட்டனிலேயே குழந்தைகளுக்குப் பிடித்தமான கவிதைகளை எழுதியுள்ளார். குழந்தைக் கவிதைகளின் தொகுப்பு நூலை எழுதியவர். யு.கே (U.K).யிலும் ஈரோப்பிலும் உள்ள குழந்தைகளுக்கு எடுத்துச் சொன்னவர். சிறப்பு வாய்ந்த இலக்கியச் சம்பந்தமான நூல்களைக் கற்றறிந்தவர்.

### 1.5.8. ரோகர் ஸ்டீவன்ஸ் (Roger Stevens)

இவர் ஒரு கவிஞர்; சிறந்த ஓவியர்; கலை உணர்வுடன் எழுதுபவர்; கருத்துகளைக் கூறுவதிலும் வல்லவர். நூற்றுக்கும் மேற்பட்ட தொகுப்புகளில் இவருடைய கவிதைகள் உள்ளன.

### 1.5.9. ஜெஸ் வால்ஸ் (Ges Walsh)

இவர் பாரம்பரியமிக்க குழந்தைக்கவிஞர். இவர் எழுதிய குழந்தைக் கவிதை நூல் 'த ஸ்பாட் ஆன் மை பர்ம்' (The spot on my Bum)

**1.5.10. ஆலன் ஆல்பர்க் (Allan Ahlberg)**

இவர் 1938-ல் பிறந்தவர். குழந்தைகள் விரும்பும் எழுத்தாளர். நூற்றுக்கும் மேற்பட்ட படைப்புகளை இயற்றியுள்ளார்.

**1.5.11 ப்ராக்லேன்டு (Jean sprack land)**

ஆங்கிலப் புலமை வாய்ந்தவர். இவர் 1962-ல் பிறந்தவர். இவர் ஆங்கிலத்தில் கவிதை எழுதியவர் 1997-ல் மூன்று கவிதைகளை எழுதி வெளியிட்டுள்ளார்.

**1.5.12 பென்னி பெல்லா மசினா (Benny Bella macina)**

பென்னி பெல்லா மசினா கவிஞர். குழந்தைப்பாடல்களை எழுதியவர்; இசைக்கலைஞர். மான்செஸ்டரில் பிறந்து லண்டனில் வசித்துக்கொண்டிருக்கிறார்.

**1.5.13 ஜேம்ஸ் எம்.சி.டோனால்டு**

ஜேம்ஸ் எம்.சி.டோனால்டு இவர் 1972-ல் பிறந்தவர். நிறையக் குழந்தைப்புத்தக நூல்களை எழுதியவர். மில்க் வே ஆன் பி.பி.ஜே (Milky way on a pb & J) என்ற நூலில் குழந்தைகளுக்குப் பிடித்த குதிரைகளைப் பற்றியும் மழையைப் பற்றியும் எழுதியுள்ளார்.

**1.5.14 ஜாய்லி வொய்ட் ஹைடு**

ஜாய்லி வொய்ட் ஹைடு இவர் புகழ்வாய்ந்த பெண்பால் குழந்தைக் கவிஞர். எல்லா வயதுக் குழந்தைகளுக்கும் குழந்தை இலக்கியங்களைப் படைத்துள்ளார். உலகிலேயே நூற்றி எண்பத்தெட்டு நாடுகளில் வீடுகளிலும், பள்ளிகளிலும் உள்ள குழந்தைகள் பின்பற்றும் வண்ணம் இவர் இணையதளத்தில் பதிவு செய்துள்ளார். பல வயதுக் குழந்தைகளுக்கும் பயன்படும் வண்ணம் ஆயிரத்துநூறு கவிதைகளை எழுதியுள்ளார்.

இவ்வாறு மேலை நாடுகளில் உள்ள குழந்தைக் கவிஞர்களின் குழந்தை இலக்கிய நூல்களை ஆயும்போது குழந்தைகளுக்குப் பிடித்த தோட்டம், பறவை, விலங்குகள் போன்றவற்றைப் பாடுபொருளாக்கியுள்ளனர்.

குழந்தைகளின் உளப்பான்மையைக் கருத்தில்கொண்டு ரோகர் ஸ்டீவன்ஸ், சீசஸ் போன்றோர் கேலிச்சித்திரங்கள் வரைந்தும் கருத்துக்களை வெளிப்படுத்தியுள்ளனர். இவர்களில் வேலரி புளும் பள்ளிகளுக்குச் சென்று குழந்தைகள் அறியவேண்டிய கருத்துகளை உணர்த்தியுள்ளார். மேலும் இவர் குற்றமற்ற கருத்துகளே குழந்தைகள் மனதில் பதியத் தகுந்தன என்பதைக் கருத்தில்கொண்டு ஒரு புத்தகத்தினை எழுத ஒரு வருடகாலம் எடுத்துக்கொண்டு எழுதி வெளியிட்டுள்ளார்.

இவர்களில் ப்ரெய்ன் மோசஸ் என்பவர் குழந்தைகளுக்குப் பிடித்தப் பாடுபொருட்களைப் பாடல்களாக்கியுள்ளனர். இதைத் தொகுப்பு நூலாகவும் வெளிவருவதற்குரிய வாய்ப்பினைத் தந்துள்ளார். இவர் குழந்தை நூல்கள் எழுதும் பணியுடன் யு.கே.யிலும் (U.K.), ஈரோப்பிலும் உள்ள குழந்தைகளுக்கு குழந்தைப் பாடல்களில் உள்ள கருத்துகளை எடுத்துக் கூறியுள்ளார்.

இவர்கள் குழந்தை இலக்கிய நூல்களை கவிதை, நாவல் என்பன போன்ற வகைகளில் அமைத்துள்ளனர். ஜாய்லி வொய்ட் ஹைடு என்பவர் குழந்தைகளுக்குப்

பிடித்தாற்போல் கூறிய கருத்துகளை தன் நாட்டுக் குழந்தைகள் மட்டுமல்லாமல் பிறநாட்டுக் குழந்தைகளும் கற்கும் வண்ணம் உலக இணையதளத்தில் பதிவு செய்துள்ளார். மேலும் பல வயதுள்ள குழந்தைகளை ஆயிரத்தைந்நூறு கவிதைகளால் ஈர்க்கச் செய்துள்ளார்.

இவ்வாறு மேலை நாடுகளில் உள்ள குழந்தைக் கவிஞர்கள் குழந்தைகளுக்கான பாடல்களைப் படைத்துள்ளனர்.

இவர்களுள் குழந்தைக் கவிஞர் அழ.வள்ளியப்பாவும் செல்ல கணபதியும் தமிழ்நாடு, அயல் நாட்டுக் குழந்தைக் கவிஞர்களை விட அதிக அளவில் நூல்களை எழுதியுள்ளனர். குழந்தைகளுடன் தானும் ஒரு குழந்தையாகப் பழகி குழந்தை , தாய் போன்ற பல்வேறு உறவுகளின் உணர்வுகளின் மூலம் குழந்தைகளின் வாழ்க்கைக்கு இன்றியமையாத அன்பு, கல்வி, ஈகை போன்ற அனைத்தையும் கற்கும் வண்ணம் பல்வேறு உத்திகளில் வெளிப்படுத்தியுள்ளனர். இனி அழ.வள்ளியப்பாவின் குழந்தை இலக்கியப் படைப்புகளைப் பற்றி அறியலாம்.

### 1.6.0 குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா பெறும் இடம்

குழந்தைக் கவிஞர் அழ.வள்ளியப்பா புதுக்கோட்டை மாவட்டத்தில் உள்ள இராயவரத்தில் பிறந்தவர். இவரது காலகட்டம் 07.11.1922லிருந்து 06.03.1989 ஆகும். இவர் அழகப்பச் செட்டியார் உமையாள் ஆச்சியின் புதல்வன். இராயவரத்தில் உள்ள சு.கதி.காந்தி பாடசாலையில் தொடக்கக் கல்வியையும், ஸ்ரீபூமீஸ்வரா ஸ்வாமி உயர்நிலைப்பள்ளியில் உயர்கல்வியையும் கற்றவர். கு.மதுரை முதலியார், இளவழகனார், டாக்டர்.இராசமாணிக்கனார் போன்ற பேராசிரியர்களிடம் தமிழ் பயின்றார். இவர்களது தமிழ்ப்பயிற்சியால் பதின்மூன்றாம் வயதிலேயே கவிதை எழுதத் தொடங்கினார். இக்காலக்கட்டத்திலிருந்து குழந்தை இலக்கியம் சிறப்பாக வளரத் தொடங்கியது. மேலும் இவர் குடும்பத்தைக் காக்கும் வங்கிப் பணியுடன் குழந்தை இலக்கியப் பணியையும் தொடங்கினார். பின் இந்திய வங்கியின் அனுமதியுடனே தென்மொழி டிரஸ்டின் புத்தக அலுவலராக உயர்ந்தார். இதழியலால் சமூகத்தை வளர்ச்சியடையச் செய்ய முடியும் என்னும் நோக்குடன் பாலர் மலர், டமாரம், சங்கு, டிங்டாங், பூஞ்சோலை ஆகிய பத்திரிகைகள் மூலம் பதின்மூன்று வயதில் தான் ஆர்வம் கொண்ட கவிதைப்பணியை வளர்த்தவர். இதனை, ‘‘முன்னே குறிப்பிட்டவர்களுக்கு இயலாத ஒரு அரிய வாய்ப்பு வள்ளியப்பாவுக்குக் கிடைத்தது. அதுதான் பாலர் மலர், டமாரம், சங்கு டிங்டாங், பூஞ்சோலை ஆகிய பத்திரிகைகள் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பாவின் நேரடி மேற்பார்வையில் வெளியாயின.’’[85]இவ்வரிகள் மூலம் தமிழிலக்கியத்தில் குழந்தை இலக்கியத்தைப் பத்திரிக்கைத் துறையிலும் வளர்த்த குழந்தைக்கவிஞராகவும், இதழ் ஆசிரியராகவும் விளங்கியுள்ளார் என்பதை அறியலாம்.

‘‘பாலர்களை அடையப் பாடப்புத்தகத்தைக் காட்டிலும் பத்திரிகை சிறந்த சாதனம் அல்லவா? அதனால் வள்ளியப்பா உற்சாகமாக எழுதினார். அவற்றைக் குழந்தைகள் உவகையோடு ஏற்று மகிழ்ந்தனர்.’’[86] என்ற இக்கருத்திற்கு ஏற்பவே

குழந்தைக் கவிஞர் அழ.வள்ளியப்பா பத்திரிகைத்துறையிலும் குழந்தை இலக்கியத்தை அறிமுகம் செய்துள்ளார். இவ்வாறு குழந்தைகளுடன் ஒன்றி உணர்ந்த குழந்தைகளுக்குரிய கருத்துகளைச் சமூகம் திருந்துவதற்கு ஏற்றாற்போல் படைத்த சமூகக்கவிஞராக இவர் விளங்குகிறார். மேலும் மேலே கண்ட பல்வேறு எழுத்தாளர்களை உருவாக்கியவர். இதற்கு எடுத்துக்காட்டாக யார் எவர் என்னும் விவரத் தொகுப்பு நூல்களும், ஹீஸ் கூ ஆப் தமிழ் ரைட்டர்ஸ் ஆர் சில்ரன் ('Who's who of Tamil Writers of or Children') என்னும் நூலும் குறிப்பிடத்தக்கன. குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா குழந்தை எழுத்தாளர் சங்கத்தை உருவாக்கியவர். இச்சங்கத்தில் 1950 முதல் 1955 வரை பொதுச்செயலாளராகவும், 1956 முதல் 1961 வரை தலைவராகவும், 1961 முதல் 1977 வரை ஆலோசராகிப் பின்னர் மீண்டும் தலைவராகவும் செயல்பட்டு வந்தவர். 1979-ல் வளர்ந்து வரும் குழந்தை இலக்கியம் என்னும் தலைப்பில் சொற்பொழியாற்றியவர். மூன்று நாட்கள் சென்னைப் பல்கலைக்கழகத்தில் உரையாற்றியவர். பின்னர் இந்த உரை புத்தகமாக வெளிவருவதற்குக் காரணம் இவரது ஆழ்ந்த குழந்தை இலக்கியப்பணியே ஆகும் என்பதனை,

குழந்தை எழுத்தாளர் - சங்கம்
கூட்டி வளர்த்தவனாம்
சிறப்புள எழுத்தாளர் பலர்
தோன்றிட வழிசெய்தோன்.[87]

என நாமக்கல் கவிஞர் பாராட்டியுள்ளார்.

மதுரையில் ஐந்தாம் உலகத்தமிழ் மாநாட்டில் கருத்தரங்கு அமைப்புக் குழு உறுப்பினராக இருந்து அதில் குழந்தை இலக்கியம் என்னும் ஆய்வுக்கட்டுரை படிக்கவும் உதவியவர். முதல் ஆறு குழந்தை இலக்கிய மாநாடுகளை சென்னையிலும், ஏழாவது மாநாட்டை 1931இல் காரைக்குடியிலும், எட்டாவது மாநாட்டை 1987-ல் கோவையிலும் நடத்தியவர்.

1956-ல் டில்லியில் சாதித்திய அக்காதெமி நடத்திய அகில இந்தியப் புத்தகக் கண்காட்சியின் தமிழ்ப்பகுதி அமைப்பாளராகப் பணிபுரிந்தவர். 1961-ல் கொழும்பு நகரில் இலங்கைக் குழந்தை எழுத்தாளர் சங்கம் நடத்திய சர்வதேசப் புத்தகக் கண்காட்சியைத் தொடங்கியவர். 1962-ல் கொழும்பு நகரில் நடந்த யுனெஸ்கோ கருத்தரங்கில் இந்திய நூலாசிரியர்களின் பிரதிநிதியாகக் கலந்து கொண்டவர். சிம்லா, புவனேஸ்வர், பெங்களூர், மைசூர், டில்லி போன்ற இடங்களில் நடைபெற்ற கருத்தரங்குகளில் பங்கு பெற்றவர்.

இவ்வாறு தமிழிலக்கியத்தில் குழந்தைக் கவிஞர் அழ.வள்ளியப்பா 'குழந்தை இலக்கியம்' என்ற துறை உருவாவதற்குப் பாடுபட்டவர்; குழந்தைப் படைப்புகளை இதழியல் துறையாலும் வளர்த்தவர்; குழந்தை இலக்கிய நூல்களை குழந்தைகளுக்குப்

பிடித்தாற்போல் படைத்தவர்; குழந்தை இலக்கிய ஆசிரியரை உருவாக்கியவர்; குழந்தை இலக்கிய முன்னோடிக் கவிஞரும் ஆவார் என்பதை,

“வள்ளியப்பா- பாப்பள்ளியப்பா-அதில்
வாசித்தவன் ஒரு புள்ளியப்பா
பிள்ளைக் கெல்லாம் விடி வெள்ளியப்பா- அது
பெத்தவங் களுக்குத் தங்கமப்பா”[88]

என்னும் பாடல் வரிகள் உறுதி செய்துள்ளன. மேலும் இவரது குழந்தை இலக்கிய உத்திகள் பிற குழந்தைக்கவிஞர்களுக்கும் வழிகாட்டியாக அமைந்துள்ளன.

**இவரது நூல்கள்:**

**பாடல்கள்** :

1. மலரும் உள்ளம் முதல் இரு தொகுதிகள்.
2. குழந்தைக் குரல்
3. சிட்டுக்குருவி
4. ஈசாப் கதைப்பாடல்கள் 1, 2 தொகுதிகள்
5. மல்லிகை
6. கதைப்பாடல்கள் (முதல் தொகுதி)
7. கதைப்பாடல்கள் (இரண்டாம் தொகுதி)
8. பாப்பாவுக்குப் பாட்டு
9. இனிக்கும் பாடல்கள்
10. பாட்டுப் பாடுவோம்.
11. சுதந்திரம் பிறந்த கதை
12. பாட்டிலே காந்தி கதை
13. சிரிக்கும் பூக்கள்
14. நேரு தந்த பொம்மை
15. பாடிப் பணிவோம்
16. சிறுவர் கதைப்பாடல்கள்
17. வேடிக்கைப்பாடல்கள் -1
18. வேடிக்கைப் பாடல்கள் - 2.

**கதைகள்:**

1. வேட்டை நாய்
2. ரோஜாச் செடி

**நாவல்கள்:**

1. உமாவின் பூனைக்குட்டி
2. அம்மாவும் அக்காவும்
3. மணிக்கு மணி
4. குதிரைச் சவாரி
5. ரோகந்தாவும் தந்திரியாவும்
6. சோனாவின் பயணம்

7. பாலர் கதைகள்
8. நிமிஷக் கதைகள்
9. நீலா மாலா.

**பிறநூல்கள்:**

1. வாழ்க்கை விநோதம்
2. பெரியோர் வாழ்விலே
   சுவையான நிகழ்ச்சிகள்-1
3. பெரியோர் வாழ்விலே
   சுவையான நிகழ்ச்சிகள்-2
4. கதை சொன்னவர் கதை – 1
5. கதை சொன்னவர் கதை-2
6. கதை சொன்னவர் கதை -3
7. சின்னஞ்சிறு வயதில்
8. எங்கள் கதையைக் கேளுங்கள்
9. வெளிநாட்டு விடுகதைகள்
10. மிருகங்களுடன் மூன்று மணி
11. பிள்ளைப் பருவத்திலே
12. நேருவும் குழந்தைகளும்
13. நம் நதிகள்
14. வளர்ந்து வரும் குழந்தை இலக்கியம்
15. வெற்றிக்கு வழி
16. தென்னிந்திய ஆறுகள்
17. விடுகதை விளையாட்டு
18. கேள்வி நேரம்
19. பாமர மக்களின் பரம்பரைப் பாடல்கள், போன்ற நூல்களை எழுதியுள்ளார்.

### 1.7.0 குழந்தைக் கவிஞர் செல்ல கணபதி பெறும் இடம்

10.02.1941ம் ஆண்டு புதுக்கோட்டைக்கு அருகில் உள்ள அரிமளத்தில் பிறந்தவர். இவ்வூரில் உள்ள உயர்நிலைப்பள்ளியில் எஸ்.எஸ்.எல்.சி.படித்தவர். இலயோலாக் கல்லூரியில் புகுமுக வகுப்பு (பி.யூ.சி.)படித்தவர். பச்சையப்பன் கல்லூரியில் முதுகலைத் தமிழ்ப்படிப்புப் படித்தவர். சீட்டுநிதித் தொழில், புத்தக விற்பனை, இயந்திரத்தில் சுழலப் பயன்படும் உறுப்புகள் விற்பனை (பேரிங் விற்பனை) போன்ற தொழில்களைச் செய்தவர். இத்தொழிலைச் செய்யும் போதே குழந்தைகளுக்குக் கவிதை எழுதும் பணியையும் ஆர்வத்துடன் தொடங்கியவர்.

பள்ளியில் இவருக்கு ஆர்வமூட்டிய தமிழாசிரியர் ஆறுமுகனார், கல்லூரியில் படிக்கும்பொழுது பயிற்றுவித்த முத்துக்கண்ணப்பர், போன்றோரால் ஊக்குவிக்கப்பட்டதால் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பாவைப் போல் இவரும் பாடல்

எழுதத் தூண்டப்பட்டார் என்பது குறிப்பிடத்தக்கது. குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பாவைப் போல் குழந்தைகளுடன் பழகி, குழந்தைகள் மனத்தால் அறியும் வண்ணம் பல உத்திகளில் குழந்தை இலக்கிய நூல்களைப் படைத்து வருகிறார்.சிங்கப்பூர் போன்ற வெளிநாடுகளுக்குச் சென்று குழந்தை இலக்கியத்தை வளரச்செய்தவர்.

''கனவிலும் கற்பனையிலும் மிக அதிகமாக மிதக்கும் பருவம், குழந்தைப்பருவம். அவர்கள் ஆசையை-ஆற்றலை- நெறிப்படுத்தி வளர்க்கும் விதத்தில் குழந்தை இலக்கியம் படைப்பது குழந்தை எழுத்தாளர்களின் தலையாய கடமை''[89] என்று செல்லகணபதியே 'பட்டுச்சிறகு' என்னும் நூலின் என்னுரையில் குறிப்பிட்டதற்கு ஏற்றாற்போல் படைத்து வருகிறவர் என்பதை,

''இது இன்டர்நெட்' காலம் வள்ளியப்பாவின் வாரிசு என இயம்பப்படும் கவிஞர் திரு.செல்லகணபதி கால மாறுபாட்டுக்கேற்ப, புதுமைகளைத் தொட்டிருக்கிறார். அது அவசியமுங்கூட''[90] என்ற வாலியின் கூற்று உறுதி செய்துள்ளது. பல்வேறு வடிவங்களில் பல்வேறு உத்திகளில் படைக்கப்பட்ட பாடல்கள் ஆய்வுசெய்யப்பட உள்ளன.

இன்றைய சூழ்நிலைக்கிணங்க குழந்தைகளுடன் பழகிய அனுபவத்தால் அவர்களின் குணங்களை ஆராய்ந்து எழுதி அன்றைய குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பாவின் சிந்தனைகளில் சில இடங்களில் ஒன்றியும் சில இடங்களில் வேறுபட்டும் எழுதியுள்ளார்.

**சான்று:**

| | | |
|---|---|---|
| மலரும் மொட்டுகள் | - | மூன்று முதல் எட்டு வயதுக் குழந்தைகளுக்கு எழுதப்பட்டவை. |
| வளரும் பூக்கள் | - | 9 முதல் 11 வயது வரை உள்ள குழந்தைகளுக்கு எழுதப்பட்டவை. |
| மணக்கும்பூக்கள் | - | 12 முதல் 14 வயது வரை உள்ள குழந்தைகளுக்குப் படைக்கப்பட்டவை. |

மேலும் சிறந்த குழந்தை இலக்கிய நூல்களை எழுதியமைக்கான விருதுகளையும் பெற்றுள்ளார். கோவை பாரதி இலக்கியப் பேரவை வழங்கிய 'பாரதி விருது', கோவை வடக்கு அரிமா சங்கத்தின் சார்பாக டாக்டர் பூவண்ணன் வழங்கிய 'சிறுவர் இலக்கிய மாமணி விருது', காரைக்குடி ரோட்டரி கிளப் வழங்கிய குழந்தை இலக்கியப் பணி விருது போன்ற விருதுகளைப் பெற்றவர். 'பாப்பா பாட்டுப் பாடுவோம்' என்னும் நூலுக்காகக் குழந்தை எழுத்தாளர் சங்கப்பரிசினைப் பெற்றவர். 'பிறந்தநாள்' என்னும் நூலுக்காகப் பாரத ஸ்டேட் வங்கிப் பரிசினைப் பெற்றவர். '**தேடல்வேட்டை**' என்னும் நூலுக்காக 2015-ஆம் ஆண்டிற்குரிய சாகித்திய அகாடமி விருதைப் பெற்றவர் என்பதும் குறிப்பிடத்தக்கது.

குருநாதர் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பாவிற்காக நடத்தப்படும் இலக்கியப் பெருவிழாவின் அமைப்பாளராகவும் செயல்பட்டு குழந்தைகளைப் பின்பற்றத் தூண்டி வருகிறார். இப்பணியைத் தோழமை உணர்வுடன் பூவண்ணனுடன் இணைந்து செயலாற்றி வருகிறார்.

குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா குருநாதர் என்றால் குழந்தைக் கவிஞர் செல்லகணபதி சிஷ்யன் ஆவார். சதையும் அதன் மேலுள்ள நகமும் விரலுக்குப் பலம் என்பது போல குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பாவைத் தன் குருவாகக் கொண்டு குழந்தை இலக்கிய வளர்ச்சிக்கு ஊக்கமளித்ததால் இந்த ஆண்டிற்குரிய சாகித்திய அகாடமி விருதைப் பெற்ற இவரைப் போல இவரின் நூல்களைப் படித்தறியும் குழந்தைகளும் இவரால் உயர்வார்கள். இதற்குச் சான்றாக இவரது நூல்கள் உள்ளன. இவ்வாறு இவர் தமிழ் இலக்கியத்தில் குழந்தை இலக்கியத்தை வளர்ச்சியடைச் செய்து வருகிறார்.

“குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா அவர்கள் மிகச்சிறந்த குழந்தைக் கவிஞராக வளர்ந்தார். இப்பொழுது கவிஞர் செல்லகணபதி அந்த முகட்டை நோக்கிச் செல்கிறார்.”[91] என்ற அ.ச.ஞானசம்பந்தன் கூற்றின்படி இவ்விரு கவிஞர்களுடைய படைப்புகளை ஆய்வு செய்தால் குழந்தை இலக்கியத்துறை மேன்மேலும் வளரும் என்பதை நோக்கமாகக் கொண்டு ஆய்வு செய்யப்பட உள்ளன.

**நூல்கள்**

**பாடல் நூல்கள்**

1 பாட்டுப் பாடவா?
2 வண்டுகளே! உங்களைத்தான்!
3 ஆடிப் பாடுவோம்
4 பாப்பா! பாட்டுப் பாடுவோம்
5 சின்ன சின்ன பாட்டு
6 பட்டுச்சிறகு
7 அழகு மயில்
8 பிறந்த நாள்
9 ஆடும் ஊஞ்சல்
10 சித்திரச்சோலை
11 விரிந்த வானம்
12 அம்மா! அம்மா!
13 நேற்று இன்று நாளை
14 தேடல் வேட்டை
15 பிள்ளைப்பாடல்கள்
16 மலரும் மொட்டுகள்
17 வளரும் பூக்கள்
18 மணக்கும் பூக்கள்

**பெரியோர் கவிதைகள்**

1 மனக்கோவில் வாழும் உமையே!

2 உறவைத் தேடும் ராகங்கள்

3 நினைவில் பூத்த கவிதை மலர்

4 நெஞ்சில் பூத்த பக்தி மலர்.

**கதை & நாவல்**

1 ஓநாய்ப்பையன்

2. மிளகாய்ப் பழச் சாமியாரும் வாழைப்பழச் சாமியாரும்

## தொகுப்புரை

- ❖ இலக்கியங்கள் என்பது சமுதாயத்தின் பிரதிபலிப்பாகும். அன்பு, ஈகை போன்ற அறச்செயல்களைச் சிறுவர்கள் பின்பற்றும் வண்ணம் குழந்தை இலக்கியத்தைப் படைத்தால் எதிர்காலச் சமுதாயம் சிறப்புறும் என்றறியப்பெற்றது.
- ❖ குழந்தை என்றால் கைப்பிள்ளை, குழவி, குழந்தைத் தன்மையுள்ள ஒருவர் என்ற சொல் விளக்கத்தை அகராதிகள் வழி அறிமுகம் செய்யப்பெற்றுள்ளது.
- ❖ வாய்மொழி இலக்கியத்தின் வழி குழந்தை உண்ணுதல் உறங்குதல், தசைகள் வலுவடைதல் போன்ற செய்திகள் அறியப்பெறுகின்றன. இப்பாடல்கள் தாய் மற்றும் பிறர்பாடல்களாக உள்ளன.
- ❖ மேலும் வாய்மொழி இலக்கியத்தில் வினாகேட்டு சிந்தனை வளர்த்தல் உத்தியில் குழந்தைகள் தாமே உணர்ந்து பாடும் பாடல்களும் உள்ளன.
- ❖ தொல்காப்பியம் குழந்தைகளுக்கு ஒப்பிடும் பண்பு உண்டு என்பதை அறிவிக்கிறது.
- ❖ சங்க இலக்கியங்களான நற்றிணை போன்ற அகஇலக்கியங்களால், குழந்தைகளுக்குத் தாய்ப்பால் அவசியமானது; சிறுவர்கள் விலங்கு பறவைகள் மீது விருப்பமுடையவர்கள்; சிறுவர்கள் தந்தையரைத் திருத்துபவர்கள்; விளையாட்டுப் பொருட்களின் மீது ஆர்வம் உடையர்கள்; தாய் தந்தையரின் ஊடலைத் தீரப்பவர்கள்; குழந்தைகளால் இல்லம் மகிழ்ச்சியடையும் போன்ற செய்திகளை அறிகிறோம்.
- ❖ சங்க இலக்கிய நூல்களான புற நூல்களால் குழந்தைகளின் மென்மைத் தன்மையை உணர்கிறோம். குழந்தைகளை வீரனாக்க வேண்டும் என்று எண்ணம் கொண்ட தாய்மார்களைத் தெரிந்து கொள்கிறோம்.
- ❖ திருக்குறள், சிறுபஞ்சமூலம் போன்ற நூல்கள் நீதி நூல்களாகும்.
- ❖ திருக்குறளின் மூலம் குழந்தை பெறுதல், குழந்தையின் முக்கியத்துவம் குழந்தைகளால் இன்பம் அடைதல் போன்ற சிந்தனைகளை அறிகிறோம்.
- ❖ ஆசாரக்கோவை குழந்தையின் முக்கியத்துவம், குழந்தைகளால் இன்பம் அடைதல் போன்ற சிந்தனைகளை அறிவிக்கிறது.
- ❖ மூதுரை நல்லவருடன் நட்புக்கொள்ளுதல் சிறந்ததாகும் என்ற சிந்தனையை விதைத்துள்ளது. இது குழந்தைகளுக்கு வேண்டிய முக்கியமான சிந்தனையாகும்.
- ❖ வெற்றிவேற்கை கல்வியைக் குற்றமறக் கற்பதே சிறந்ததாகும் என உரைக்கிறது.
- ❖ உலகநீதி, கற்காமல் இருக்கக்கூடாது: தாயைமறக்கக் கூடாது: வஞ்சனைகள் செய்பவருடன் இணங்கக்கூடாது; போகாத இடத்திற்குப் போகக்கூடாது; புறங்கூறுதல் தீயது போன்ற கருத்துகளை குழந்தைகளுக்கு ஏற்றாற்போல் பகர்ந்துள்ளது.
- ❖ திருஞானசம்பந்தர் குழந்தையாக இருந்து தேவாரம் பாடியவர் என்ற செய்தியை அறிகிறோம்.

- திருமூலரின் திருமந்திரம் ஒரு தாய் கருவில் எழும் உயிரணுக்களின் தன்மைகளின் மூலமே ஆணாகவோ (அல்லது) பெண்ணாகவோ பிறக்கின்றது என்ற கருத்தினைத் தெரிவிக்கிறது.
- சிறுமியர் விளையாடும் இயல்புடையவர்கள் என்பதைக் காரைக்கால் அம்மையார் புராணம் குறிப்பிட்டுள்ளது.
- பெரியவர்களின் ஓதுதலைப் பார்த்துச் சிறியவர்களும் ஓதுவார்கள் என்பதைச் சிலப்பதிகாரம் உரைக்கிறது.
- ஒரு குழந்தையைப் பெற்றெடுக்கும் தாய்தந்தையரின் கற்பொழுக்கம் சிறந்திருத்தல் வேண்டும் என்பதை மணிமேகலை உணர்த்துகிறது.
- குழந்தைகளை வளர்க்க நல்ல பெற்றோர்கள் இன்றியமையாதவர்கள் என்பதை சீவகசிந்தாமணி அறிவிக்கிறது.
- குழந்தையைப் பெறாத ஒருவனின் நிலையை வளையாபதி கூறியுள்ளது.மனிதர்களின் வாழ்நாட்கள் குழந்தைப்பருவம், பிள்ளைப்பருவம் போன்ற பருவங்களாகக் கழிகின்றன என்பதைக் குண்டலகேசி உணர்த்தியுள்ளது. தசரதன் குழந்தைப்பேறுக்காகக் காத்திருந்த சிந்தனையைக் கம்பராமாயணம் காட்டுகிறது.
- சிற்றிலக்கியங்களில் உள்ள பிள்ளைத்தமிழ் நூல் குழந்தைகளுக்குக் காப்பிடுதல், குழந்தைகளுக்காகத் தாலாட்டுப் பாடல்களைக் கற்றல், உடல் அசைவு பெறச் செய்தல், நடைப்பயிற்சி அளித்தல், போன்ற செயல்பாடுகளைத் தெளிய வைக்கிறது.
- கோகுலம், சுட்டிவிகடன் போன்ற இதழ்களிலும் சிறுவர் சிந்தனைகள் வெளியிடப்படுகின்றன என்பது அறியப்பெற்றுள்ளது.
- உளவியல் துறை குழந்தைகளின் வளர்ச்சிகளையும் முதிர்ச்சிகளையும் ஆராய்கிறது.
- குழந்தைகளின் வளர்ச்சிக்குச் சூழ்நிலை, உட்சுரப்பிகள், உடல்நலம் போன்ற காரணிகள் தேவை என்பதை உணர்த்துகிறது. குழந்தைகளைப் பாதிக்கும் செயல்பாடுகளை அறிகிறோம்.
- எளிய கருத்துகளில், குழநதைகளுக்குப் பிடித்த பறவை விலங்குகளை உவமை கூறிப் பாடிய குழந்தைப்பாடல்களே குழந்தைகளைக் கவர்ந்தவை என்பதை உணர்கிறோம்.
- தமிழ் நூல்களில் 'குழந்தை இலக்கியங்கள்' என்ற ஒரு பகுதி வளர்ந்து வருகிறது. இதில் கவிமணி முதல் பூவண்ணன் வரை உள்ள குழந்தைக்கவிஞர்கள் பற்றிய அறிமுக விளக்கங்கள் தரப்பெற்றுள்ளன.
- சீசஸ், ராபர்ட் லூயிஸ் போன்ற அயல்நாட்டுக் குழந்தை இலக்கிய ஆசிரியர்களைப் பற்றி உணர்த்தப்பெற்றுள்ளது.
- இவர்கள் குழந்தைகளுக்குப் பிடித்த தோட்டம் போன்ற பொருட்களைப் பாடுபொருளாக்கியுள்ளனர். கேலிச்சித்திரங்கள் வரைந்து கருத்துகளை

வெளிப்படுத்தியுள்ளனர். இவர்களில் வேலரிபுளும் என்பவர் குழந்தைகளுக்குத் தவறானவற்றைக் கற்பிக்கக்கூடாது என்பதைக் கருத்தில் கொண்டு ஒரு புத்தகத்தை ஒரு வருடகாலம் எழுதி வெளியிட்டுள்ளார். மேலும் இவர் பள்ளிக்குச் சென்றும் கற்பித்துள்ளார் என்று அறியப்பெறுகிறது.

❖ மேற்கண்ட ஆய்வின்படி குழந்தைக்கவிஞர்களில் அழ.வள்ளியப்பா பதின்மூன்றாம் வயதிலேயே குழந்தைக் கவிதைகளை எழுதியவர். வங்கிப் பணியுடன் குழந்தை இலக்கியப்பணியையும் மேற்கொண்டவர்:: இதழியல் ஆசிரியர்: குழந்தை இலக்கிய ஆசிரியர்: குழந்தை எழுத்தாளர் சங்கத்தை உருவாக்கியவர்; குழந்தை இலக்கியச் சொற்பொழிவாளர்; குழந்தை இலக்கியச் சங்கத் தலைவர் எனப் பலபணிகளைக் குழந்தை இலக்கியம் மேன்மையடைவதற்காக ஏற்றவர் என்கிற செய்திகளைச் சான்றுகளுடன் இவ்வியல் அறியச் செய்துள்ளது.

❖ இவரைப்போல் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும் தொழிற்பணியுடன் குழந்தை இலக்கியப் பணியையும் மேற்கொண்டுவருகிறார். இவர் கனவு காணும் பருவமுடைய குழந்தைகளுக்குப் புதியதாய்ப் படைக்கவேண்டியது காலத்தின் கடமை என உணரந்தவர். பல்வேறு குழந்தை இலக்கிய உத்திகளை இணையத்தில் (இன்டர்நெட்) காலத்திற்கேற்றவாறு படைத்துவருகிறவர்; குழந்தைகள் அறிய வேண்டிய அடிப்படையான பாடுபொருட்களைப் பாடல்களிலும், கதைகளிலும், நாவல்களிலும் எழுதி வருகிறார். மூன்று முதல் எட்டு வயது (3-8) வரை உள்ள குழந்தைகளுக்கு மலரும் மொட்டுகள் என்னும் நூலையும், ஒன்பது முதல் பதினொரு வயது (9-11) வரை உள்ள குழந்தைகளுக்கு 'வளரும் பூக்கள்' என்னும் நூலையும், பன்னிரண்டு முதல் பதினான்கு (12-14) வயது வரை உள்ள குழந்தைகளுக்கு மணக்கும்பூக்கள் என்னும் நூலையும் எழுதிக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பாவிலிருந்து வேறுபடுகிறார்.

**இயல்-1**

**அடிக்குறிப்புகள்**

1. மு.நிலாமணி, கலா கே.தாக்கர். (தொ.ஆ.), தமிழ்-தமிழ் அகராதி, ப.400.
2. அ.ராஜ்மோகன், (தொ.பா.), தம்பியின் தமிழ் அகராதி, ப.121.
3. எ.எஸ்.ஹார்ன்பை அன்ட், ஈ.சி.பார்ன்வெல் (A.S.HORNBY AND E.C. PARNWELL),
   ஏன் இங்கிலீஷ் ரீடர்ஸ் டிக்ஸ்னரி (AN ENGLISH-READER'S DICTIONARY), ப.86.
4. பிரிலியன்டஸ் ஆல் ( BRILLIANI'S ALL.), ப.39.
5. லிப்கோ டிக்ஸ்னரி (LIFCO DICTIONARY), இங்லீஷ் - இங்லீஷ் - தமிழ் (ENGLISH –ENGLISH – TAMIL) ப.178.
6. எ.மு.ராஜன் (தொ.ஆ.), கிராமத்துச் சிறுவர் பாடல்கள், ப.16
7. தாயம்மாள் அறவாணன், கண்ணகி மண்ணில், ப.72.
8. இரா.சுரேந்திரன், நாட்டுப்புற இலக்கியம் நலந்தரு விளக்கம், ப.47.
9. மேலது ப.48.
10. மேலது ப.40.
11. ச.வே.சுப்பிரமணியன் (உ.ஆ.), தொல்காப்பியம் தெளிவுரை, புறத்திணையியல், நூ.1030. ப.397.
12. மேலது நூ. 1432. (செய்யுளியல்)
13. நா.இராமையா பிள்ளை, (உ.ஆ.), சங்க இலக்கியங்கள் தொகுதி-1, நற்றிணை, பா.40, ப.82.

    வெறி உற விரிந்த அறுவை எமல் அணைப்
    புனிறு நாறு செவிலியோடு புதல்வன் துஞ்ச,
    ஐயவி அணிந்த நெய்யாட்டு ஈரணிப்
    பசுநெய் கூர்த்த மென்மை யாக்கைச்
    சீர்கெழு மடந்தை ஈர்-இலை பொருந்த,
    நள்ளென் கங்குல், கள்வன் போல,
    அகன் துறை ஊரனும் வந்தனன்-
    சிறந்தோன் பெயரன் பிறந்தமாறே"

14. மேலது, பா.166 பக். 306-307.

    "பொலந்தொடிப் புதல்வனும் பொய்தல் கற்றனன்;
    வினையும் வேறு புலத்து இலெனே; நினையின்,
    யாதனின் பிரிகோ? மடந்தை
    காதல்காணும் கடலினும் பெரிதே!

15. மேலது, பா - 104. ப.197.

"துறுகல் மீமிசை, உறுகண் அஞ்சாக்
குறக் குறுமாக்கள் புகற்சியின் எறிந்த
தொண்டகச் சிறு பறைப் பாணி அயலது
பைந் தாட் செந்தினைப் படு கிளி ஓப்பும்,
ஆர்கலிவெற்பன் மார்பு நயந்து உறையும்
யானே அன்றியும், உளர்கொல்- பானாள்,"

16. மேலது பா- 111, ப.209.

"அத்த இருப்பைப் பூவின் அன்ன
துய்த் தலை இறவொடு தொகை மீன் பெறீஇயர்,
வரி வலைப் பர தவர் கரு வினைச் சிறாஅர்,
மரல் மேற்கொண்டு மான் கணம் தகைமார்
வெந் திறல் இளையவள் வேட்டு எழுந்தாங்கு,
திமில் மேற்கொண்டு, திரைச் சுரம் நீந்தி,
வாள் வாய்ச் சுறவொடு வய மீன் கெண்டி,
நிணம் பெய் தோணியர் இகுமணல் இழிதரும்
பெருங் கழிப் பாக்கம் கல்லென
வருமே-தோழி! – கொண்கன் தேரே."

17. மேலது, பா- 355, ப.609.

புதல்வன் ஈன்ற பூங் கண் மடந்தை
முலை வாய் உறுக்கும் கை போல், காந்தட்
குலைவாய் தோயும் கொழு மடல் வாழை
அம் மடல் பட்ட அருவித் தீம் நீர்
செம் முக மந்தி ஆரும் நாட!

18. மேலது, பா.392, பக்.670 – 671.

"கடுஞ் சுறா எறிந்த கொடுந் தாட் தந்தை
புள் இமிழ் பெருங் கடல் கொள்ளான் சென்றென,
மனை அழுது ஒழிந்து புன் தலைச் சிறா அர்
துணையதின் முயன்ற தீம் கண் நுங்கின்
பனை கொள் வெம் முலை பாடு பெற்று உவக்கும்
பெண்ணை வேலி உழை கண் சீறூர்
நன் மனை அறியின் நன்றுமன்தில்ல;"

19. அ.மாணிக்கம் (உ.ஆ.), சங்க இலக்கியங்கள் தொகுதி -3
ஐங்குறு நூறு முதல் பகுதி, பா - 66, ப.152.
“உடலினென் அல்லேன்; பொய்யா துரைமோ;
யாரவள் மகிழ்ந! தானே- தேரொடு
தளர்நடைப் புதல்வனை உள்ளி, நின்
வளமனை வருதலும், வெளவியோளே?”

20. மேலது பா- 65, ப.151
“கரும்பு நடுபாத்தியில் கலித்த ஆம்பல்
சுரும்பு பசிகளையும் பெரும்புனல் ஊர!
புதல்வனை ஈன்ற எம்மேனி
முயங்கன்மோ தெய்யநின் மார்பு சிதைப்பதுவே.”

21. இரா.பிரேமா (உ.ஆ) சங்க இலக்கியங்கள் தொகுதி-2
குறுந்தொகை பா.61. ப.83.
“தச்சன் செய்த சிறு மா வையம்,
ஊர்ந்து இன்புறாஅர் ஆயினும், கையின்
ஈர்த்து இன்புறூஉம் இளையோர் போல.”

22. அ.மாணிக்கம் (உ.ஆ.) சங்க இலக்கியங்கள் தொகுதி -9
அகநானூறு, பா - 66, ப.340.
“காண்டல் விருப்பொடு தளர்பு தளர்பு ஓடும்
பூங் கண் புதல்வனை நோக்கி, ‘நெடுந் தேர்
தாங்குமதி, வலவ!’ என்று இழிந்தனன், தாங்காது
மணி புரை செவ் வாய் மார்பகம் சிவணப்
புல்லி, ‘பெரும! செல் இனி, அகத்து’

23. மேலது பா - 6, ப.78
“நெருநல் ஆடினை, புனலே; இன்று வந்து
‘ஆக வன முலை அரும்பிய சுணங்கின்
மாசு இல் கற்பின், புதல்வன் தாய்!’ என
மாயப் பொய்ம்மொழி சாயினை பயிற்றி, எம்
முதுமை எள்ளல்; அ∴து அமைகும்தில்ல!

24. அ.மாணிக்கம், (உ.ஆ.), சங்க இலக்கியங்கள் தொகுதி -7 கலித்தொகை, பா.99 ப.593.
“குழவியைப் பார்த்து உறூஉம் தாய்போல், உலகத்து
மழை சுரந்து அளித்து ஓம்பும் நல் ஊழி யாவர்க்கும்
பிழையாது வருதல் நின் செம்மையின் தர, வாய்ந்த
இழை அணி கொடித் திண் தேர், இன மணி யானையாய்”

25. அ.மாணிக்கம் (உ.ஆ.), சங்க இலக்கியங்கள் தொகுதி-14 பத்துப்பாட்டு முதல் பகுதி, பா.வ. 55 - 60 , ப.299.

"நோன் பகட்டு உமணர் ஒழுகையொடு வந்த
மகாஅர் அன்ன, மந்தி, மடவோர்
நகாஅர் அன்ன, நளி நீர் முத்தம்
வாள் வாய் எருந்தின் வயிற்றகத்து அடக்கி
தோள் புறம் மறைக்கும் நல் கூர் நுசுப்பின்
உளர் இயல் ஐம்பால் உமட்டியர் ஈன்ற"

26. அ.மாணிக்கம் (உ.ஆ), சங்க இலக்கியங்கள் தொகுதி-13, புறநானூறு இரண்டாம் பகுதி, பா- 222, ப.45.

"அழல்அவிர் வயங்கிழைப் பொலிந்த மேனி
நிழலினும் போகா நின் வெய்யோள் பயந்த
புகழ்சால் புதல்வன் பிறந்தபின் வாஎன
என்இவண் ஒழித்த அன்பி லாள
எண்ணாது இருக்குவை அல்லை
என்னிடம் யாது மற்று இசைவெய்யோயே".

27. மேலது, பா -243, ப.83.

"இனிநினைந்து இரக்கம் ஆகின்று திணிமணல்
செய்வுறு பாவைக்குக் கொய்பூத் தைஇத்
தண்கயம் ஆடும் மகளிரொடு கைபிணைந்து
தழுவுவழித் தழீஇத் தூங்குவழித் தூங்கி"

28. மேலது பா - 278, ப.139.

"நரம்புஎழுந்து உலறிய நிரம்பா மென்தோள்
முளரி மருங்கின் முதியோள் சிறுவன்
படைஅழிந்து மாறினன் என்று பலர்கூற
மண்டுஅமர்க்கு உடைந்தனன் ஆயின் உண்டஎன்
முலைஅறுத் திடுவென் யான் எனச் சினை இக்
கொண்ட வாளொடு படுபிணம் பெயராச்
செங்களம் துழவுவோள் சிதைந்துவே றாகிய
படுமகன் கிடக்கை காணூஉ
ஈன்ற ஞான்றினும் பெரிதுஉவந் தனனே."

29. மேலது பா - 279, ப.141.

"கெடுக சிந்தை கடிதுஇவள் துணிவே
மூதின் மகளிர் ஆதல் தகுமே

மேல்நாள் உற்ற செருவிற்கு இவள்தன்னை
யானை எறிந்து களத்துஒழிந் தனனே
நெருநல் உற்ற செருவிற்கு இவள்கொழுநன்
பெருநிரை விலக்கி ஆண்டுப்பட் டனனே
இன்றும் செருப்பறை கேட்டு விருப்புற்று மயங்கி
வேல்கைக் கொடுத்து வெளிதுவிரித்து உடீஇப்
பாறுமயிர்க் குடுமி எண்ணெய் நீவி
ஒருமகன் அல்லது இல்லோன்
செருமுக நோக்கிச் செல்க என விடுமே.''

30. அ.மாணிக்கம் (உ.ஆ), சங்க இலக்கியங்கள் தொகுதி-12, புறநானூறு முதல் பகுதி, பா.188, ப.363.
31. மேலது பா.100 , ப.207.
32. அ.மாணிக்கம் (உ.ஆ), சங்க இலக்கியங்கள் தொகுதி – 5, பதிற்றுப்பத்து, பா.29, ப.166.

''அழியா விழவின் இழியாத்திவவின்
வயிரிய மாக்கள் பண்ணமைத் தெழீஇ
மன்றநண்ணி மறுகு சிறைபாடும்
அகன் கண் வைப்பின் நாடு மன் அளிய
விரவுவேறு கூலமொடு குருதிவேட்ட
மயிர்புதை மாக்கண் கடிய கழற
அமர்கோள் நேர் இகந்து ஆர் எயில் கடக்கும்
பெரும்பல் யானைக் குட்டுவன்
வரம்பில் தானை பரவாதெங்கே!''

33. ஆசி.கண்ணம்பிரத்தினம், திருக்குறள் கருத்துரை, அதிகாரம் மக்கள் பேறு, குறள் எண்:61.
34 .மேலது குறள் எண் 62.
35. மேலது குறள் எண் 63.
36. மேலது குறள் எண் 64.
37. மேலது குறள் எண் 65.
38. மேலது குறள் எண் 66.
39. ஞா.மாணிக்க வாசகன் (உ.ஆ.), சிறுபஞ்சமூலம், பா -29, ப.41.
40. மேலது பா - 74, ப.84.
41. ஞா.மாணிக்கவாசகன், (உ.ஆ.), ஆசாரக்கோவை, பா.1
42. பூவண்ணன், குழந்தைக் கவிஞர்கள், ப.16.
43. மேலது ப.20.
44. மேலது ப.22.
45. அ.மாணிக்கம் (உ.ஆ), பன்னிரு திருமுறைகள் தொகுதி-14 திருமூலர் திருமந்திரம்,

பா.482, ப.293.

குழவியும் ஆணாம் வலத்தது வாகில்
குழவியும் பெண்ணாம் இடத்தது வாகில்
குழவியும் இரண்டாம் அபானன் எதிர்க்கில்
குழவி அலிஆகும் கொண்டகால் ஒக்கிலே,

46. மேலது பா - 484. ப.294.
47. அ.மாணிக்கம், (உ.ஆ), பன்னிரு திருமுறைகள், தொகுதி-21, திருத்தொண்டர் புராணம், பா -1721. ப.34.
48. அ.மாணிக்கம் (உ.ஆ), பன்னிரு திருமுறைகள் தொகுதி-22, (திருத்தொண்டர்புராணம்), பா - 2941, ப.330.

“சூத நல்வினை மங்கலத் தொழில்முறை தொடங்கி
வேத நீதியின் விதியுளி வழாவகை விரித்த
சாத கத்தொடு சடங்குகள் தசதினஞ் செல்லக்
காதல் மேவிய சிறப்பினில் கடிவிழா அயர்ந்தார்.

49. வ.ஜோதி, (உ.ஆ.), பரஞ்சோதி முனிவர் திருவிளையாடல் புராணம் (இ.தொ.), பா - 550, ப.44.

“திருந்தாத விளங்குதலை யாயமோடு புறம்போந்து சிறார்க்குச் சிற்றில்
விருந்தாக மணற்சிறுசோ றட்டும்வரை யுரங்கிழித்த வேளும் வாய்வைத்
தருந்தாத விளமுலைவாய் வைத்தருத்தப் பாவைதனக் களித்தும் போதில்
வருந்தாதை யண்டமெலாஞ் சிற்றிலிழைப் பாளாய்க்கு மகிழ்ச்சி செய்தாள்.

50. வே.மணிசங்கர், (உ.ஆ.), எளியஉரையில் சிலப்பதிகாரம், பாகம்-2 (மதுரைக்காண்டம்), பா.வ.90 - 95 - ப.182.

“சீர்த்தகு சிறப்பின் வார்த்திகன் புதல்வன்,
ஆலமர் செல்வன் பெயர் கொண்டு வளர்ந்தோன்.”

51 .ம.மார்க்கபந்து (உ.ஆ), மணிமேகலை ஆபுத்திரன் திறம் அறிவித்த காதை, பா.வ. 5 - 8, 100- 101 , பக்.136-143.

“பார்ப்பனிசாலி காப்புக்கடை கழித்து
கொண்டோற் பிழைத்த தண்டம் அஞ்சித்,
தென்திசைக்குமரியாடிய வருவோள்;
“ஓதல் அந்தணர்க்கு ஒவ்வான்” என்றே
தாதை பூதியும் தன் மனைசுடி தர”-

52. லே.ப.கரு.இராமநாதன் செட்டியார், திருத்தக்கதேவர், ப.32.
53. ஞா.மாணிக்கவாசகன் (உ.ஆ.), வளையாபதி குண்டலகேசி, பா.12, ப.21.

54. மேலது, பா.9, ப.84.

"பாளையாம் தன்மை செத்தும்
பாலனாம் தன்மை செத்தும்
காளையாம் தன்மை செத்தும்
காமுறும் இளமை செத்தும்
மீளும் இவ்வியல்பு இன்னே
மேல்வரு மூப்பும் ஆகி
நாளும் நாள் சாகின்றாமால்
நமக்கு நாம் அழாதது என்னோ!"

55. அ.அறிவொளி (உ.ஆ), கம்பராமாயணம் உரைநடையில் (மு. தொ), பாலகாண்டம் ப.14.
56. சி.அன்பானந்தம், மறைமலையடிகள் பிள்ளைத்தமிழ், ப.16.
57. பாஞ்.இராமலிங்கம், குழவிப்பருவமும் அறிவு வளர்ச்சியும், ப.37.
58. மேலது ப.38.
59. சி.அன்பானந்தம், மறைமலையடிகள் பிள்ளைத்தமிழ் ப.105.
60. வாழ்வியற் களஞ்சியம், தொகுதி ஏழு,ப.735.
61. மு.வரதராசன், தமிழ் இலக்கிய வரலாறு, ப.369.
62. மேலது ப.370.
63. மது.ச.விமலானந்தம், தமிழ் இலக்கிய வரலாற்றுக் களஞ்சியம், ப.1171.
64. மேலது ப.1172.
65 .மேலது ப.1171.
66. மேலது ப.1171.
67. சரஸ்வதி ராம்நாத, இளைஞர் கம்பராமாயணம், முகவுரை.
68. வி.கலைமணி, நல்ல தீர்ப்பு வழங்கிய நீதி அரசர்கள்! ப(iii).
69. சாமிபழனியப்பன், குழந்தையின்பம், ப.14.
70. பெ.தூரன், குழந்தை உள்ளம், ப.3.
71. மேலது ப.3.
72. மேலது ப.3.
73. பூவண்ணன் (கவிமணி), குழந்தைக்கவிஞர்கள், ப.37.
74. சீனிவிசுவநாதன், பாரதியார் கவிதைகள், நீதி நூல்கள், புதிய ஆத்திசூடி, பா.வ.57-62, ப.515.
75. பூவண்ணன், குழந்தைக்கவிஞர்கள், ப.29.
76. பாரதிதாசன், பாரதிதாசன் கவிதைகள் 9. மக்கள்நிலை, அணில் ப.71.
77. பூவண்ணன், குழந்தைக்கவிஞர்கள் ப.45.
78. மேலது ப.62.
79. மேலது ப.81.
80. மேலது ப.99.

81. மேலது ப.149
82. மேலது ப.171
83. மேலது ப.175
84. மேலது ப.225
85. அயல்நாட்டில் குழந்தை இலக்கிய நிலை, (இணையதள எண் https://en.wikipedia.org/wiki/children’s poetry
86. பூவண்ணன், குழந்தைக் கவிஞர்கள், ப.89.
87. கதி.கணேசன், வள்ளியப்பா ஒரு வழிகாட்டி ,ப.161.
88. மேலது ப.161.
89. செல்லகணபதி, பட்டுச்சிறகு, என்னுரை.
90. செல்லகணபதி (வாலி), குருவிக்கூடு, அணிந்துரை.
91. செல்ல கணபதி, வளரும்பூக்கள், அணிந்துரை.

# இயல் இரண்டு



## குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா, செல்லகணபதியின் படைப்புகளில் குழந்தை இலக்கிய உத்திகள்

## இயல்-2

## குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா, செல்லகணபதியின் படைப்புகளில் குழந்தை இலக்கிய உத்திகள்

இன்றையக் குழந்தைதான் நாளைய மனிதன். கதை கூறுதல், பாட்டுப் பாடிக் காட்டுதல் ஆகிய அனைத்துச் செயல்களும் குழந்தை இனத்தைப் பக்குவப்படுத்தும் செயல்களாகும். பெரியோரின் ஆழமான அறிவுடைமையோடு குழந்தை உளவியலறிந்து படைக்கப்பட்ட சிந்தனைகள் குழந்தைகள் மனதில் வேரூன்றும்போது கல்வி, வீரம், ஒற்றுமை போன்ற புறச்செயல்களை அவர்கள் சிறப்பாக வளர்ப்பார்கள். ஆதலால் இன்றையக் குழந்தைகள் விரும்பிப் படிப்பதற்கு ஏற்றாற்போல் குழந்தை இலக்கியங்கள் படைக்கப்பட வேண்டும். இதற்கேற்ற விதி முறைகளையே நாம் உத்திகள் (technic) என்று ஆய்வில் அழைக்கிறோம். மேலும் ஒரு எழுத்தாளன் தன்னுடைய படைப்பை மக்களிடையே கொண்டு செல்வதற்குப் பல்வேறு விதமான வழிமுறைகளைக் கையாளுகிறான். இதையே இலக்கிய ஆய்வாளர்கள் உத்தி என்கிறார்கள். குழந்தைக் கவிஞர்களான அழ.வள்ளியப்பாவும் செல்லகணபதியும் குழந்தை இலக்கியப் படைப்பாளர்கள். அதனால் இவ்விரு கவிஞர்களின் படைப்புகளில் இவ்வுத்திகள், எவ்வாறு வெளிப்படுகின்றன என்பதை ஆய்வதாக இக்கட்டுரை அமைகிறது.

### 2.1.0 உத்திகளும் குழந்தை இலக்கிய உத்திகளும்

உத்தி என்பது வழிமுறையாகும்(Method). இந்த உத்திகள் பற்றிய விளக்கத்தைக் கீழ்க்கண்ட மேற்கோள்கள் வழி ஆய்தல் அவசியமாகிறது.

“உத்தி எனும் சொல் பல் பொருள் நிலையினது. தமிழ்ப்பேரகராதி பல்வகை அடிச்சொல் நிலையில் இதற்குப் பல்வேறு வகைப் பொருள் நிலைகள் காட்டுகின்றது.”[1] உத்தி என்னும் சொல்லிற்கு அறிவு, சேர்தல், இசைவு, இணக்கம், அனுமானம், தந்திர உத்தி, செல்வம் போன்ற பல பொருட்கள் உள்ளன என்பதை மேற்கண்ட மேற்கோள் வரையறை செய்கிறது.

“படைப்பாளனின் தனித்தன்மைக்கு ஏற்பவும் படைப்பாற்றலுக்கு ஏற்பவும் உத்திகள் உருவாகியும் பெருகியும் அமைவதனால் உத்தி பற்றிய கொள்கைகள் கட்டுப்பட்ட வரையறைக்கு அப்பாற்பட்டுச் செல்கின்றன. சிறந்த படைப்பாளன் திட்டமிட்ட உத்திமுறைகட்கு அடங்கி அமைவதில்லை எனவும் இரண்டாம் தரப் படைப்பாளனும் திறனாய்வாளனுமே அதைக் கொள்கின்றனர்.”[2]

“பல பொருளும் வேறுபட்ட தோற்றமும் உடைய உத்தி எனும் இச்சொல் இலக்கியத்தோடும் இலக்கியத் திறனாய்வோடும், இணைந்து வரும்போது தனிப்பொருள் கொள்ளுகின்றது.”[3] இந்த உத்திக்குப் பல பொருள் உண்டு என்பதையும், இது இலக்கியம்,

இலக்கியத்திறனாய்வு என்ற இரு நிலைகளில் வரும்பொழுது தனிப்பொருள் கொள்ளலாம் என்ற சிந்தனையை உணர்த்துகிறது.

‘‘கவிஞன் கவிதைச் சிறப்புக்காகவும் கற்போர் உள்ளத்தை இன்ப வெள்ளத்தில் நீந்தச் செய்யவும், கருத்துத் தெளிவிற்காகவும் உணர்வுக்கடலில் மூழ்கி உவமை, உருவகம், கற்பனை, புலன்மாற்றம் போன்ற முத்துக்களைக் கண்டெடுக்கிறான். அந்த முத்துகள் கவிதைக் கன்னியை அலங்கரிக்கும்போது உத்தி என்ற பெயரால் அழைக்கப்படுகிறது.’’[4] எனவே கவிஞன் தன் கவிதையின் கருத்துகளை உவமை, உருவகம் போன்ற எடுத்துக்காட்டுகளாலும் கருத்துகளை விளக்கலாம். இவ்வாறு கற்பனை உணர்வுடன் படைக்கிற தன்மைகள் உத்திகளாகக் கருதப்படுகிறது என்பதை மேற்கண்ட கூற்று உறுதிப்படுத்துகிறது.

‘‘இருப்பதை அவ்வாறே காட்டாது இயல்வதை அவ்வாறே விளக்காது கலையுணர்வுடன் புத்தாக்கம் செய்து அளித்தலால், உத்திகளின்றி இலக்கியம் இயலாது. சுவைபட மொழிதலும் சோர்வு ஏற்டாது கொண்டு செல்லுதலும் ஆகிய இத்தகு உத்தி ஆட்சியால் கவிஞருக்குக் கைவருகின்றன.’’[5] எனவே கவிஞர்கள் பெரியோர் இலக்கியங்களில் தங்களது குறிக்கோளை வெளிப்படுத்தும் உவமை உருவகங்களைக் கூற உவமைகளில் கூடுதலான உரு ஏற்றி மிகைப்படுத்திக் கூறுகின்றனர். ஆனால் குழந்தைப்பாடல்கள் இத்தகைய விதி முறைகளிலிருந்து வேறுபடுகிறது எனலாம். பெரியோர் இலக்கியத்திலிருந்து சில வரிகளும் பிற இலக்கியத்திலிருந்து சில வரிகளும் சான்றாகின்றன.

‘‘பொன்னின்ஒளி, பூவின்நெறி சாந்து பொதி சீதம்,
மின்னின் எழில், அன்னவள்தன் மேனி ஒளி மான
அன்னமும் அரம்பையரும் ஆர் அமிழ்தும் நாண
மன்சுவை இருந்த மணிமண்டபம் அடைந்தாள்.’’[6]

சீதையின் அழகையும் நடை அழகையும் வருணிக்கக் கூடுதலான உவமைகளை ஏற்றிக் கூறுகின்றனர் என்பதைக் கம்பராமாயணத்தின் மூலம் அறிகிறோம். ஆனால் குழந்தைகள் என்பதால் குழந்தைப்பாடல்களில் உள்ளதை உள்ளவாறே எழுதுகின்றனர்.

‘‘வண்டு இங்கே பாரடா
மலரைத் தேடி வருதடா
உண்டு உண்டு தேனையே
ஒலிக்கும் பாட்டுக் கேளடா.’’[7]

இந்தப் பாடலில் வண்டை அழகிய வண்டு, கரு வண்டு என்றெல்லாம் உவமித்து எழுதலாம். ஆனால் குழந்தையால் ஒரு செய்தியை மட்டுமே நினைவில் கொள்ள முடியும் என்பதைக் கருத்தில் கொண்டு மலரில் உள்ள தேனை உண்பது வண்டாகும் எனக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா கூறியுள்ளார். எனவே ‘‘சுருங்கச் சொல்லி

விளங்கவைத்தல்"[8] என்பது குழந்தைப் பாடல்களின் இயல்புகளாகின்றன. மேலும் குழந்தை இலக்கிய உத்திகள் எது என்பதை,

''குழந்தைகளைப் பற்றிப் பாடுவது குழந்தைப்பாடல் ஆகாது; குழந்தை அறிந்த சொற்களையே கூற வேண்டும். எதுகை மோனை துள்ள வேண்டும்; இயைபுத் தொடை பெருமளவில் ஆளப்பட வேண்டும்; குழந்தை விரும்பும் பொருள்களைப் பற்றியே பாட வேண்டும்; ஒழுக்கப் பண்புகளைக் குழந்தை உணர்ந்திடச் செய்ய வேண்டும்; கவிஞர் குழந்தையாகவே மாறிப் பாடலைப் படைக்க வேண்டும்"[9] குழந்தையைப் பற்றிப்பாடுவது குழந்தைப்பாடல்கள் ஆகாது. எதுகை மோனை நயத்துடன் குழந்தை விரும்புகிற பூனை போன்ற விலங்கு, பறவைகளை உதாரணமாக்கிப் பாடுதலைக் குழந்தைகள் விரும்புவார்கள். மேலும் குழந்தைகளுக்கு ஒழுக்கம் நிறைந்த கருத்துகளையும் காலப் பயன்பாட்டையும் வலியுறுத்தும் சிந்தனைகளை விதைத்தல் அவசியமாகிறது என்பதை மேற்கண்ட கூற்று உறுதிப்படுத்துகிறது. மேலும்,

1. எளிமையுடன் கூறுதல்
2. அறிவுரைப் பயன்பாடு கருதி எழுதுதல்
3. குழந்தைகளுக்குப் பிடித்த விலங்கு பறவைகளை உதாரணமாக்குதல்.
4. விளையாட்டும் பொழுது போக்கும் நிறைந்த பாடல்களை எழுதுதல்.
5. பிற இலக்கியங்களை அறியச் செய்தல்.
6. இலக்கணத்தை எளிமையாக்குதல் குழந்தைஇலக்கியத்தின் இயல்புகளாகும். இதை உணர்ந்து இவ்விரு கவிஞர்களின் சிந்தனைகளை அறிய 'அமைப்பு உத்தி'' என்னும் தலைப்பு அறிமுக வாயிலாக அமைக்கப்பட்டுள்ளது.

**2.2 அமைப்பு உத்தி**

குழந்தைகளின் இயல்பிற்கேற்ற சிந்தனைகள் எத்தகைய தன்மைகளுடன் அமைக்கப்பட்டுள்ளன என்பதை நெறிப்படுத்தும் முறைகளே அமைப்பு உத்தியாகும். அதனால் குழந்தைகளுக்குப் பிடித்த கருத்துகளின் அறிமுக வாயிலாக பூக்களின் இயல்புகளைத் தலைப்புகளாகக் கொடுத்திருப்பது குழந்தைகளுக்குப் பிடித்ததாகும். மேலும் ''கருத்து என்பது ஒரு குறிப்பிட்ட வகையான பொருள்கள் அல்லது எண்ணங்கள் இவற்றிடையே உள்ள தொடர்பினை அல்லது குணங்களைக் குறிப்பிடுவதாக அமைகிறது.''[10] என்ற உளவியலாரின் சிந்தனைக்கேற்றாற்போல் குழந்தைகளின் வாழ்க்கைக்கு அவசியமான செறிவான பாடுபொருட்களை அறிவதற்கு ஏற்றது பாடலின் சிறிய வடிவமாகும். ஏனென்றால் சிறுவர்கள் பொருட்களில் சிறியதை விரும்புவார்கள். சிறிய பொருட்கள் பெரிய பொருட்களைவிட அழகிலும் அமைப்பிலும் சிறந்ததாகும். இது போலவே பாடல்களின் குறைந்த அளவையும் அழகையும் விரும்புவார்கள். அதனால் கருத்துக்களை விளக்க சொல்லால் தொடரால் அணியால் அழகுபடுத்த வேண்டும்; உணர்வால் கற்பனையால் விரும்பச்செய்யவேண்டும்; அடி, சீர் தொடைகளைப் பாடல்களில் அமைக்க வேண்டும். இவ்வாறு பாடல்களின் செறிவான கருத்துக்கள் விரும்பிப்படிப்பதற்கு ஏற்ற தன்மைகளுடன் அமைத்தல் இன்றியமையாததாகும். இதனை,

“உணர்ச்சியைக் கருத்தாக மாற்றுவதற்குக் கவிஞன் சில உத்திகளை மேற்கொள்கிறான். இவ்வுத்திகளே இலக்கிய வடிவங்களாக அமைகின்றன. அவையாவன குறிப்புமொழி (Suggestion), ஒலிநயம் (அல்லது) இசைத்தன்மை (rythm or musical quality), சொற்கள் அமைப்பு முறை, கற்பனையாற்றலை மிகுவிக்கும் வண்ணம் முன்னைய நிகழ்ச்சிகளைச் சான்று காட்டுதல் (analogy), சொற்றொடர்களை மாற்றியமைத்தல் இன்னோரவைகளாகும்.”[11] என்ற தா.ஏ.ஞானமூர்த்தியின் கூற்றிற்கு ஏற்ற சிந்தனைகளின் அடிப்படையில் குழந்தைகளின் புரிதிறனை எளிமைப்படுத்துவதற்காக புதுமை நோக்கில் பல உத்திகளைக் கையாண்டுள்ளனர். இதனை,

“இலக்கிய வடிவ வெளியீட்டின் பெரும்பகுப்பிற்கேற்ப கதை உத்தி, காப்பிய உத்தி, நாடக உத்தி என காணலும் பொருத்தமுடைய இயல்பாகிறது.”[12] என்ற கூற்றின் அடிப்படையில் வகைப்படுத்தப்பட்டுள்ளன.

**2.2.1.** பாடல் உத்தி

2.2.1.1.0. குழந்தை மொழியில் இறைவணக்க உத்தி.

2.2.1.2. அறிவுரைப்பயன்பாட்டு உத்தி.

2.2.1.2.1 ஒழுக்கமும் மேன்மையும்

2.2.1.2.2. காலப் பயன்பாடு

2.2.1.2.3. பெரியோரை அறிதலும் மதித்தலும்

2.2.1.2.4. தன் செயலால் பெரியோர்க்கு மதிப்பளித்தல்.

2.2.1.2.5. பெரியோரின் அன்புணர்தல்

2.2.1.2.5.1. அன்பே அன்னை

2.2.1.2.5.2. அறிவே ஆசான்

2.2.1.2.5.3 தாத்தாவும் பாட்டியும்

2.2.1.3. விருப்பநிலை உத்தி.

2.2.1.3.1.0 சுறுசுறுப்பு உயரச் சேவல்

2.2.1.3.2.0 குருவியும் முயற்சியும்

2.2.1.3.3.0 உழைப்பு உயர எறும்பு நாரை

2.2.1.3.4.0 அணிலும் ஈகையும்

2.2.1.3.5.0 மனிதநேய மாண்பு

2.2.1.3.6.0. பணிவே உயர்வு

2.2.1.3.7.0. தியாகமும் சிறப்பும்

2.2.1.3.8.0 மகிழ்வுணர்வில் இயற்கைப் பொருட்கள்

2.2.1.4. அறிவியல் பயன்பாட்டு உத்தி

2.2.1.4.1.0 இயற்கையின் மகத்துவம்.

2.2.1.4.2.0 செயற்கைக்கு இயற்கைப் பாதுகாப்பு

2.2.1.4.3.0. அறிவியலும் பொருட்களும்

2.2.1.4.4.0.இயற்கைச் சக்திகள்.

2.2.1.5. ஆர்வமூட்டல் உத்தி

2.2.1.5.1. கல்வியில் ஆர்வமூட்டல் உத்தி

2.2.1.5.1.1. நிறமும் கிழமைகளும் அறிதல்

2.2.1.5.1.2 திசைகள் அறிதல்

2.2.1.5.1.3 அடிப்படை அறிதல்

2.2.1.5.1.4. ஆசான் அறிதல்

2.2.1.5.1.5. நூலகமும் பயனும்

2.2.1.5.2.0 விளையாட்டில் ஆர்வமூட்டல் உத்தி.

2.2.1.6. இலக்கிய முதன்மை உத்தி

2.2.1.6.1.0 பழமொழி உத்தி

2.2.1.6.2.0 திருக்குறள் கூறி சிந்தனை வளர்த்தல் உத்தி.

2.2.1.7. இலக்கண முதன்மை உத்தி.

2.2.1.7.1.0 பெயர்ச்சொல் அறிமுக உத்தி.

2.2.1.7.2.0 வினைச்சொல் அறிமுக உத்தி

2.2.1.7.3. விகுதி உத்தி

2.2.1.7.3.1. ஆம் ஆய் விகுதிகளை ஈற்றில் கூறல் உத்தி

2.2.1.7.4.0 கட்டளை அடுக்கு உத்தி

2.2.1.7.5.0 வியப்பு உத்தி.

2.2.1.7.6.0 விளி உத்தி

2.2.1.7.7.0 ஏகார உத்தி

2.2.1.7.8. வினா விடை உத்தி

2.2.1.7.8.1 வினாவின் விடை மறைந்து வருதல் உத்தி

2.2.1.7.8.2. வினா கேட்டு சிந்தனை வளர்த்தல் உத்தி.

2.2.1.8.0. கூற்று உத்தி.

2.2.1.9. பயிற்சி உத்தி

2.2.1.9.1. சொல் திரும்ப வரல் உத்தி.

2.2.1.9.2. தொடர் திரும்ப வரல் உத்தி

2.2.1.10.0. கடித உத்தி

2.2.1.11.0. செயல் உத்தி

2.2.1.12.0 பொது அறிவு வளர்த்தல் உத்தி

2.2.1.13. சொல் நய உத்தி

2.2.1.13.1.0 தொடர் நய உத்தி

2.2.1.13.2.0 பெயர்ச்சொல் அடுக்கு உத்தி

2.2.1.13.3.0 மூன்று முறை அடுக்கி வருதல் உத்தி.

2.2.1.13.4.0 பெயரெச்சச் சொல் அடுக்கு உத்தி

2.2.1.13.5.0 வினையெச்சச் சொல் அடுக்கு உத்தி

2.2.1.13.6.0 அடைமொழி அடுக்கு உத்தி.

2.2.1.14 அணிநய உத்தி

2.2.6.1.0 மறைமுக வினாவும் விடையும்

2.2.6.2.0 அறிதலில் ஆர்வம்

2.2.6.3.0 சிந்தனை சிறக்க முயற்சி

2.2.6.4.0 முயற்சியால் விடை உணர்தல்

2.2.7. வினாடி வினா உத்தி

2.2.7.1.0 வினாக் கேட்டலும் சிந்தித்தலும்

2.2.7.2.0 ஆர்வத்தால் விடை உணர்தல்

2.2.7.3.0 வினாக்களால் பொது அறிவு வளர்த்தல்.

2.2.8. உரை உத்தி

2.2.8.1. கட்டுரை உரை உத்தி

2.2.8.1.1. ஆர்வமூட்டல்

2.2.8.1.2. அறிவுறுத்தல்

2.2.8.2.0. தன் வரலாற்று உரை உத்தி.

**2.2.1. பாடல் உத்தி**

பாடல்கள் உணர்ச்சிகளைப் பெருக்கி உள்ளத்தை மகிழச் செய்யும் இயல்புடையது. பாடலை எத்தனை முறை படித்தாலும் குழந்தைகள் சோர்வு அடைய மாட்டார்கள். எனவே இரு கவிஞர்களும் பாடல்கள் வழி குழந்தைகளுக்கு நல்ல கருத்துகளைக் கூறுகின்றனர்.

இவ்வுலகில் நன்மை தீமைகளை வெல்ல இறையருள் அவசியமானதாகும். எனவே குழந்தைகளுக்கு இறையுணர்வுக் கருத்துகள் கூறப்பட்டுள்ளன.

**2.2.1.1.0 குழந்தை மொழியில் இறைவணக்க உத்தி**

அச்சப்படுத்தும் தோற்றமுடைய நான்முகமுடைய பிரம்மதேவர், பானைவயிற்றுப் பிள்ளையார், வேலுடைய முருகர் போன்ற இறைவர்களால் ஏற்படும் பயத்திலிருந்து விடுபடப் பின்வரும் குழந்தை மொழியில் அமைந்த பாடல்வரிகள் சான்றாகின்றன.

"ஆனை முகத்துடன் வா வா வா
அவசியம் ஒருவரம் தா தா தா
பானை வயிற்றுடன் வா வா வா.
பணிந்தேன்; ஒரு வரம் தா தா தா

எல்லாம் அறிந்த கணபதியே,
எவ்வரம் கேட்பேன், தெரியாதா?
நல்லவன் என்னும் ஒருபெயரை
நான்பெற நீவரம் தா தா தா."[13]

என்ற பாடல் வரிகளில் விநாயகர் ஆனை முகமும் பானை வயிறும் உடையவர். ஆனால் இவரைப் பணிந்து வணங்கியே வரம் பெற வேண்டும் என்ற சிந்தனையைக் குழந்தைமொழியில் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா உணர்த்தியுள்ளார்.

“கள்ளமில்லா உள்ளங் கொண்டால்
எங்கள் பாலமுருகன் - நம்மைக்
காத்தருள்வான், காத்தருள்வான்
எங்கள் பாலமுருகன்”[14]

முருகன் கையில் உள்ள வேல் குற்றமில்லாத மனதுடையவனுக்குத் துயரைத் தராது என்ற சிந்தனையைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா எடுத்துரைத்துள்ளார்.

“அர்ச்சு னர்க்குக் கீதையை
அருளிச் செய்த கண்ணனாம்
நல்ல வர்க்கே அருளுவான்
நாங்கள் போற்றும் கண்ணனாம்”.[15]

மகாபாரதத்தில் நல்லவனாகிய அருச்சுனனுக்கு அருளியதுபோல நல்லவர்களுக்கே அருள்புரிவான் என்ற புராணக்கருத்தைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா நினைவுபடுத்தியுள்ளார். இவரைப்போல் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும் குழந்தைமொழியில் இறைவணக்க உத்தியைப் பின்பற்றியுள்ளார்.

“கையில் அரிவாள்
கருப்பண சாமி!
கடுகடு முகத்துடன்
கருப்பணசாமி!”[16]

கருப்பணசாமி கொடுமையான தோற்றமுடையவர். ஆனால் அவர் தீய செயல்கள் செய்பவரையே தண்டிப்பார் எனக் குழந்தைக் கவிஞர்செல்லகணபதி கூறியுள்ளார்.

“செய்யும் செயலை என்றுமே
செம்மை யாகச் செய்பவர்
தெய்வம் தன்னைக் கோவிலில்
சென்று வணங்க வேண்டுமோ”[17]

நல்ல செயலிலேயே இறைவன் உள்ளதை இப்பாடல் வரிகளில் குழந்தைக் கவிஞர் செல்லகணபதி குறிப்பிட்டுள்ளார்.

#### 2.2.1.2. அறிவுரைப்பயன்பாட்டு உத்தி

அறிவுரை அறியாமையைப் போக்கும். எதிர்காலத் திறமையை வளர்க்கும். இதனை,

“வளரும் குழந்தை தன் இளமைப்பருத்திலேதான் தன் எதிர்கால வாழ்க்கைக்குத் தன்னைத் தயார் செய்து கொள்ளுகிறது. ஏறத்தாழ ஒரு மனிதனின் முதல் இருபது ஆண்டுகள் கண்டும், கேட்டும், உண்டும், உயிர்த்தும் உற்றும் அறிந்து கொள்கிற பருவமாக இருக்கிறது. இப்பருவத்தை ‘அறிநிலைப் பருவம்’ என்று கூறலாம். இது தெளிநிலைப்பருவம் ஆகாது. எனவே இப்பருவத்தினர்க்கு எழுத விரும்புவோர் அவர்களது அறிவுக்கும்

உணர்வுக்கும் ஏற்றவற்றையே வழங்கவேண்டும்.''[18] என ஒன்று முதல் இருபது வயது வரை உள்ள குழந்தைகளுக்கு இத்தகைய அறிவுரை இன்றியமையாததாகும் என்பதை மா.இராமலிங்கத்தின் கூற்று உறுதி செய்கிறது.

### 2.2.1.2.1 ஒழுக்கமும் மேன்மையும்

பண்புகளின் அடித்தளம் ஒழுக்கம் ஆகும். இவ்வொழுக்கத்தால்,

''மகன்தந்தைக்கு ஆற்றும் உதவி இவன்தந்தை
என்னோற்றான் கொல்எனுஞ் சொல்''[19]

என்று இந்த மகனைப் பெறுவதற்கு என்ன தவம் செய்தாரோ என மற்றவர் புகழும் செயலை ஒழுக்கத்தால் பெறச் செய்யமுடியும். எனவே ''ஒரு மனிதனை உயர்ந்தவனாக்குவது அவனது பண்பும் பழக்கவழக்கமுமே அவனது அனுபவங்கள் படிப்பினைகளாக அமைகின்றன.''[20] என்ற நீலம்மதுமயனின் கூற்று உறுதிப்படுத்துகிறது.

''எழுந்து காலைக் கடனையே
இனிது நீயும் முடித்திடு
தொழுது புத்த கத்தினைத்
திறந்து பாடம் கற்றிடு.''[21]

இவ்வரிகள் மூலம் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா அதிகாலையில் காலை நேரப் பழக்கத்தைப் பின்பற்ற எழுந்து, தொழுது போன்ற சொற்களால் வலியுறுத்திக் கூறியுள்ளார். இவரைப்போல் குழந்தைக் கவிஞர் செல்லகணதியும்,

காலை நேரம்
கா கா கா!
காக்கை கத்துது
கண்விழிப்பாய்!

வேலை செய்யும்
முன்னாலே
விளக்கிடு பல்லை
நன்றாக!''[22]

போன்ற பாடல் வரிகள் மூலம் காலை நேரம் காகம் கத்துதலின் இயல்பான செயல் குழந்தைகள் காலை நேரக் கடமைகளைச் செய்வதற்கே எனக் குறிப்பிட்டுள்ளார்.

இவ்வாறு காலை நேரப் பணிகளைப் பட்டியலிட்டு அதைக் கடைப்பிடிக்க அறிவுரை கூறியுள்ளார்.

குழந்தைகள் தங்களது பணிகளைக் காலத்துடன் கடைப்பிடித்தலும் அவசியமானதாகும்.

**2.2.1.2.2.0 காலப் பயன்பாடு**

பொருளை இழந்தால் வாங்கலாம். ஆனால் காலத்தை இழந்தால் வாங்க இயலாது. காலம் உயிரிழப்புக்குச் சமமானது. அதனால் காலப்பயன்பாடு குழந்தைகளுக்கு இன்றியமையாததாகும். ‘‘காலம் விலையற்றது என்பதைப் போலவே காலம் இரக்கமற்றது என்றும் சொல்லலாம். அது யாருக்காகவும் காத்திருப்பதில்லை.’’[23] என்ற ஜே.எஸ்.ஏப்ரகாம் கூற்று காலப்பயன்பாட்டுச் சிந்தனையைத் தருகின்றது.

‘‘தள்ளிப் போடுவது தவறு – எதையும்
தள்ளிப் போடுவது தவறு!

பாடம் கேட்டவற்றைக் கேட்ட நாளினிலே
படித்து முடிப்பதனால் பதியும்!
பாடம் நாளையெனத் தள்ளிப் போடுவதால்
படிக்க முடியாமல் மறக்கும்! (தள்ளி…)

காலைப் பலகாரம் செய்யும் அம்மாவும்
காலம் கடந்துஅதைச் செய்தால்
மாலைப் பலகாரம் தானே தரக்கூடும்
வயிற்றுப் பசியென்ன ஆகும்! (தள்ளி….)

செய்ய வேண்டியதைச் செய்யும் காலத்திலே
செய்யும் பையன்பெயர் தெரியும்!
செய்யும் செயல்மறந்து சோர்ந்து தூங்குபவன்
திறமை வளராமல் மறையும்!’’[24]

எனவே பாடங்களைத் தள்ளிப் போடாமல் அன்றன்று பாடங்களைப் படித்து திறமைகளை வளர்த்துகொள்ள வேண்டும் என்று குழந்தைக்கவிஞர் செல்லகணபதி கூறியுள்ளார்.

**2.2.1.2.3.பெரியோரை அறிதலும் மதித்தலும்**

தாய், தந்தை, தாத்தா, பாட்டி போன்ற உறவினர்கள் மீது அன்பை வளர்ப்பதற்கேற்ற பாடல்களை இவ்விரு கவிஞர்களும் எழுதியுள்ளனர்.

**2.2.1.2.3.1. தன்செயலால் பெரியோர்க்கு மதிப்பளித்தல்**

சில இல்லங்களில் பெற்றோர்கள் சுமை தாங்கிகளாய் உள்ளனர். உணவூட்டுதல், வீட்டுப்பாடம் செய்து தருதல், நடைப்பயணத்தில் தூக்குதல் எனப் பல்வேறு செயல்களுக்குக் குழந்தைகள் பெரியோர்களையே சார்ந்து இருப்பதால் பெரியோர்கள் அன்புத் தொல்லைகளுக்கு ஆளாகிறார்கள். இதிலிருந்து காக்க உதவும் பாடல்களாக இவ்விரு கவிஞர்களின் பாடல்கள் உள்ளன.

“ஆண்டவன் தந்த கை எதற்கு?
அள்ளிச் சோறு தின்பதற்கு.
ஆண்டவன் தந்த கை எதற்கு?
அழுக்குத் தேய்த்துக் குளிப்பதற்கு.”[25]

இப்பாடல் வரிகளில் எதற்கு என்னும் சொல்லை பலமுறைப் பயன்படுத்தி வேலைகளைத் திட்டமிட்டுச் செய்யக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா வழிகாட்டியுள்ளார். இதை இவர் தன் சிறுவயதுப் பேரனுடன் பழகிய அனுபவத்தால் உணர்ந்து எழுதியுள்ளார். இப்பாடலுக்கு இணையான பாடலைக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும் தந்துள்ளார். சில குழந்தைகள் அம்மாவின் சொற்களை மதிக்காத, அழைத்தால் வராதவர்களாக இருப்பர். இந்தக் குழந்தைகள் மாற,

“அம்மா முகத்தைப் பார்ப்பதற்கு
அடடா எனக்கு கண்ணிரண்டு!
அம்மா அழைத்தால் கேட்பதற்கு
அடடா எனக்குக் காதிரண்டு!
அம்மா ஊட்டச் சாப்பிடவே
அடடா எனக்கு வாய்ஒன்று!
அம்மா வைப்போல எப்போதும்
அடடா வேறே யாருமில்லை!”[26]

என்ற பாடலில், அம்மா என்னும் சொல்லை குழந்தைகளுக்கு நினைவுபடுத்தத் தகுந்தாற்போல் பலமுறை எழுதியுள்ளார்.

### 2.2.1.2.4 பெரியோரின் அன்புணர்தல்

தாய் தந்தையர் முதலில் வணங்கத்தக்க பெரியோர்கள். இவர்களால் சில செயல்களைச் செய்து கொள்ள இயலாத குழந்தைகள் தாத்தா பாட்டியின் மூலம் செய்து கொள்வார்கள். அதனால் இவ்வுறவுகளின் அன்பை மிகுதிப்படுத்தும் பாடல்களையும் ஆங்காங்கு பதிவு செய்துள்ளனர்.

### 2.2.1.2.4.1 அன்பே அன்னை

உறவுகளில் முதலில் அறியப்பட வேண்டியவள் தாய். ஏனென்றால் இவளின் அன்பாலேயே குழந்தைகளின் ஒவ்வொரு செயலும் வலிமைபெறும். அதனால் அன்னை அன்பான கடவுள் ஆவார். இதனை,

“சித்திரக் காரன் எழுதும் படத்தினில்
சிந்தனை யெல்லாம் செலுத்துதல்போல்
அத்தனை கவனமும் அன்புடன் னென்மேல்
ஆர்வமாய் அன்னை செலுத்திடுவாள்.”[27]

ஒரு படத்தை வரைதலுக்குக் கவனத்திறன் அவசியமானதுபோல அம்மாவும் குழந்தையைக் கவனமாகப் பாதுகாக்கும் தன்மையுடையவள் என்பதை உணர்த்தியுள்ளார்.

"கட்டிப் பிடித்து அணைத்தாலும்
காலால் எட்டி உதைத்தாலும்
சுட்டித் தனங்கள் செய்தாலும்
சொந்தம் நமக்கு அம்மாவே!"[28]

என எத்தகைய குறும்புத்தனத்தையும் தாங்குபவள் அன்னையாவாள் எனக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி உணர்த்தியுள்ளார்.

**2.2.1.2.4.2. அறிவே ஆசான்**

தாய் தன் குழந்தையின் உடல் வளர உணவூட்டுவதுபோல தந்தை ஆளுமையை வளர்ப்பவர். அதனால் ஒவ்வொரு குழந்தைகளும் தந்தையை மதிக்கும் பண்பினைப் பெறவேண்டும் எனக் கூறும் பாடல்களைக் குழந்தை இலக்கிய உத்திகளைப் பின்பற்றி எழுதியுள்ளனர்.

"அப்பா வாங்கித் தந்தது
அருமை யான புத்தகம்
அதில் இருக்கும் படங்களோ
ஆஹா மிக அற்புதம்!"[29]

என இவ்வரிகள் மூலம் அறிவூட்டுபவர் தந்தை என்பதைக் குறிப்பிட்டுள்ளார்.

"அப்பா கப்பல் ஏறிடும்
அன்றே நானும் ஏறுவேன்.
அப்போ உங்கள் அனைவரின்
ஆசி பெற்றுச் செல்லுவேன்."[30]

என்னும் இப்பாடல் வரிகள் மூலம் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா இன்று அப்பா மூலம் படித்த படிப்பு நாளை வெளிநாட்டிற்குப் பயணிக்கவும் வாய்ப்பாக அமையும். இதற்கு உறுதுணையானவர் தந்தை என்பதைப் பதிவு செய்துள்ளார்.

"அப்பா என்னைத் தண்ணீ ருக்குள்
அப்படித் தள்ளி விட்டார்!
அப்பா வுக்குக் கோபமா என்மேல்
அவர்ஏன் தள்ளிவிட்டார்?

அப்பா என்னை வல்லவ னாக்கும்
அக்கறை கொண்டவர்தான்
அப்பா மனம்போல் நீச்சல் கற்கவே
அப்படித் தள்ளிவிட்டார்!"[31]

என்ற பாடல் வரிகள் குழந்தைகளின் நலனுக்காக எதையும் செய்பவர் தந்தை. அதனால் தந்தையின் செயல்களுக்கு மதிப்பளிக்க வேண்டும் என அறிவுரை கூறியுள்ளார்.

தந்தையை அடுத்துக் குழந்தையைப் பராமரிப்பவர்கள் தாத்தா பாட்டியர் ஆவார்கள்.

### 2.2.1.2.4.3 தாத்தாவும் பாட்டியும்

தாத்தாவும் பாட்டியும் அன்பு நிறைந்தவர்கள்; கற்பிப்பதில் சிறந்தவர்கள்; தாத்தாவை விடப் பாட்டி மருத்துவம் பார்ப்பதில் வல்லவள்; பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புபவள்; ஆதலால் இத்தகைய தன்மைகள் நிறைந்த தாத்தாவையும், பாட்டியையும் மதிக்கவேண்டும்.

''நாட்டுக் கேற்ற தலைவர் - என்றும்
நன்மை செய்வார். - அவர்போல்
வீட்டுக் கேற்ற தலைவர் - இவர்
மிகவும் நல்ல தாத்தா!''[32]

தாத்தா வீட்டுக்கு மட்டும் தலைவராக ஆகாமல் நாட்டுக்கே தலைவர் ஆவார் எனக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா தாத்தாவை அறிமுகப்படுத்தியுள்ளார்.

''தாத்தா நடையும் தளர்ந்தால்
தாங்கிப் பிடித்துக் கொள்வேன்!
மூத்தோர் தம்மை மதிப்பேன்
முழுதும் அவர்சொல் கேட்பேன்!''[33]

என்ற பாடல் வரிகளில் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி வயதில் தளர்ந்த தாத்தாவை மதிக்கவேண்டும் என அறிவுரை கூறியுள்ளார்.

''யாருங் காட்டா அன்பை – என்றும்
எனக்குக்காட்டும் பாட்டி
நூறு நூறு ஆண்டு - இன்னும்
நூறு ஆண்டு வாழ்க.''[34]

என்ற பாடல் வரிகளில் தாய் தந்தையரின் கண்டிப்பை நீக்கி அன்பால் வழிநடத்தி பகுத்துண்டு ஓம்பும் பாட்டியை மதிக்கவேண்டும் என அறிவுரை கூறியுள்ளார்.

''பாட்டி தருவாள் மருந்தை அதுவும்
பாகற் காய்போல் கசப்பாகும்.''[35]

என்ற பாடல் வரிகளில் மருத்துவம் செய்பவள் பாட்டி எனக் குழந்தைக் கவிஞர் செல்லகணபதி அறிவுரை கூறியுள்ளார்.

வயதில் மூத்த பாட்டியைப்போல் அண்ணன், தம்பி, பாப்பா போன்ற உறவுகளைக் கூறிய பாடல்களும் உள்ளன. உறவுகளை அறிந்து மதிக்கக் கற்பித்த பாடல்கள் குழந்தை விருப்பத்திற்குத் தகுந்தாற்போல் உலகியலையும் பண்புகளையும் அறியச் செய்துள்ளன.

### 2.2.1.3. விருப்பநிலை உத்தி

விருப்பம் என்பதற்குரிய பொருள் ஆர்வம் ஆகும். ஆர்வத்தால் எதையும் அறிதலும் உணர்தலும் எளிதாகும். இதனை,

"வளரும் குழந்தை தன்னைச் சுற்றியுள்ள உலகத்தை- சுற்றுப்புறச் சூழலை-அறிந்து கொள்ளத் துடிக்கிறது. நாளுக்குநாள் ஒவ்வொன்றையும் புதிது புதிதாய் அறிந்து கொள்ளவேண்டும் என்ற ஆர்வத்தால் வெளியுலகை வியப்போடு கண்டு மகிழ்கிறது. தொடக்கநிலையில் பறவைகளும் விலங்குகளுமே குழந்தைகளின் நெஞ்சத்தைக் கவர்கின்றன."[36] என்ற கூற்றிற்கேற்றாற்போல் குழந்தைகள் மனதில் அன்பை, ஒற்றுமையை, ஈகையைப் பதிவு செய்யும் பாடல்கள் உள்ளன. வாழ்க்கையில் முன்னேற முதலில் சுறுசுறுப்பு அவசியமானதால் சுறுசுறுப்புச் சிந்தனைகள் கூறப்பட உள்ளன.

#### 2.2.1.3.1. சுறுசுறுப்பு உயரச் சேவல்

சுறுசுறுப்பும் ஊக்கமும் உழைப்பிற்கு விதையாகும். ஆதலால் சேவல் போன்ற பறவைகளை உதாரணமாகக் கூறியுள்ளார்.

"கழுத்தை நீட்டிக் கூவிடுமே
காலைப் போதில் சிறகடித்தே
எழுந்திரு விழித்திடு என்றதுவும்
எழுப்பித் தூக்கம் ஓட்டிடுமே."[37]

என்ற பாடல் வரிகளில் காலைநேரம் சேவல் கூவுவது நாம் எழுந்து சுறுசுறுப்புடன் வேலை செய்வதற்காகும் எனக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா வலியுறுத்தியுள்ளார்.

#### 2.2.1.3.2. குருவியும் முயற்சியும்

சுறுசுறுப்பால் முயற்சி வளரும். முயற்சியால் ஊக்கம் பெறலாம். அதனால்,

"சின்னக் குருவி முயற்சியால்
சிறிய கூடு கட்டினால்
உன்னைப் போலச் சிறுவனால்
ஊரை வெல்ல முடியுமே!."[38]

என சிறிய குருவி சிறிய கூடு கட்டுவதுபோல் சிறுவர்கள் முயற்சி செய்தால் ஊரை வெல்லலாம் என்ற சிந்தனையைக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி உணர்த்தியுள்ளார்.

### 2.2.1.3.3.0 உழைப்பு உயர எறும்பு நாரை

உழைப்பு வாழ்வின் மூலதனம் ஆகும். பெற்றோர்களின் வேலை அவர்களின் தொழில் ஆவது போல் குழந்தைகளின் வேலை படிப்பாகும். அதனால் படிக்கின்ற தொழிலில் வெற்றி பெற கடின உழைப்பு அவசியமானதாகும். அதனால்,

"ஈட்டி போன்ற அலகை முன்னால்
நீட்டிக் கொண்டு நிற்கும்.
இரையைக் கண்ட வுடனே அதுவும்
எட்டி விரைந்தே பிடிக்கும்."[39]

என்ற பாடல் வரிகளில் நாரை தன் தொழிலுக்காக முயற்சியுடன் உழைத்ததைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா கூறியுள்ளார். இவரைப் போலக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும்,

"சாரை சாரை யாகவே
சலித்தி டாமல் எறும்புகள்
ஓர மாகச் சென்றுதான்
உழைத்துத் தின்னும் அழகுபார்!."[40]

இப்பாடல் வரிகளில் சுறுசுறுப்பைப் பின்பற்ற வேண்டும் எனக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி கூறியுள்ளார்.

"ஆடு மாடுகள் ஓடி ஓடியே
அதனதன் உணவைக் கொள்ளும்!
பாடு பட்டுநீ பசியைப் போக்கிடும்
பண்பால் அன்பே வெல்லும்!."[41]

என்னும் பாடல் வரிகளில் ஆடுமாடுகள் உழைப்பதைப்போல் குழந்தைகளும் உழைக்கவேண்டும். இவ்வாறு உழைத்தால் படிப்பில் வெற்றி பெறலாம். உழைப்பவன் ஈகையைச் செய்யும் தகுதியை அடைவான் என்கிறார்.

### 2.2.1.3.4.0 அணிலும் ஈகையும்

ஈகை கொடைக்கு அடிப்படை ஆகும். எனவே கொடுக்கும் தன்மையால் கொடை வளரும். இதற்கேற்ற சிந்தனைகள் இவ்விரு கவிஞர்களின் பாடல்களில் விருப்பநிலை உத்தியைப் பின்பற்றி அமைந்துள்ளன.

"அணிலே அணிலே ஓடிவா
அழகு அணிலே ஓடிவா
கொய்யா மரம் ஏறிவா
குண்டுப் பழம் கொண்டு வா
பாதிப் பழம் உன்னிடம்
பாதிப் பழம் என்னிடம்
கூடிக் கூடி இருவரும்
கொறித்துக் கொறித்துத் தின்னலாம்."[42]

உதவியைப் பகிர்ந்து கொள்வது பண்பாடாகும் என்பதற்கு குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பாவின் பாடல் எடுத்துக்காட்டாக உள்ளது. இதில் உள்ள பாதிப்பழம், அணில் போன்ற சொற்கள் இருமுறை வந்து ஈகைச் செயலை நினைவுபடுத்தியுள்ளன. இவரைப்போல் குழந்தைக் கவிஞர் செல்லகணபதியும்,

“அணிலே உனக்கும் மாம்பழத்தில்
ஆசை என்றால் கடித்திடுவாய்!
அணிலே பாதியைத் தின்றிடுவாய்!
அன்பாய் மீதியைத் தந்திடுவாய்!.”[43]

எனப் பாடியுள்ளார்.இவ்வாறு இவ்விரு கவிஞர்களின் பாடல்கள் ஈகை கொடைக்கு அடிப்படையாகும் என்பதை உணர்த்தியுள்ளன. மேலும் உதவி செய்தவனின் நன்றியை மறவாதிருப்பதும் பண்பாடாகும் என்ற சிந்தனையை அறிந்த குழந்தைகள் மனிதநேயத்தை அறிவதும் அவசியமானதாகும்.

**2.2.1.3.5.0 மனிதநேய மாண்பு**

மனிதநேயம் என்பது அன்பாலும் இரக்கத்தாலும் விட்டுக்கொடுத்தலாலும் உருவாகின்றன. அதனால் இவ்விரு கவிஞர்களும் மனிதநேயம் பற்றிய சிந்தனைகளைக் கூற விருப்பநிலை உத்தியைப் பின்பற்றியுள்ளனர்.

“நிழல்த ராத மரத்தின்கீழ்
நிற்க எவரும் வருவரோ

தண்ணீ ரில்லாக் குளத்திலே
தாகம் தீர்க்கச் செல்வரோ

அன்பில் லாத மனிதரை
யார்தான் விரும்பப் போகிறார்.”[44]

என்ற பாடல் வரிகளில் அன்பில்லாத மனிதர்களை விரும்பமாட்டார்கள் என மரத்தைச் சான்று கூறி குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா உணர்த்தியுள்ளார்.

“பூனைக் குட்டி பூனைக் குட்டி
போபோ விரைவில் ஓடிப்போ
யானைக் குட்டி கிட்டே வருது
ஐயையோ நீ ஓடிப்போ

வாலை யாட்டி யானை வருது
வயலுக் குள்ளே ஓடிப்போ
காலைத் தூக்கி யானை வருது
காட்டுக் குள்ளே ஓடிப்போ.”[45]

என்ற பாடல் வரிகளில் பூனையை விட யானை பெரியதாகும். பூனை வீட்டு விலங்கு , யானையோ பூனையைவிடப் பெரிய காட்டு விலங்காகும். அதனால் யானையிடம் பூனை மாட்டிக்கொள்ளக்கூடாது எனக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி கூறும் இச்சிந்தனை நல்லவரைப் பொல்லாதவரிடம் இருந்து காப்பாற்ற வேண்டும் என்ற எண்ணத்தை வளர்க்கும் சிந்தனையாக உள்ளது.

இவ்வாறு மனித நேய மாண்புகளை உணர்ந்த குழந்தைகள் பணிவின் உயர்வு அறிதலும் அவசியமானதாகும்.

**2.2.1.3.6 பணிவே உயர்வு**

அறிவில் ஆற்றலில் சிறந்தோரை உயர்த்துவது பணிவு. இப்பணிவை அடக்கம் என்று கூறுவர். ஆதலால் இப்பணிவு பற்றிய சிந்தனையைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பாவும் குழந்தைக் கவிஞர் செல்லகணபதியும் விருப்பநிலை உத்தியுடன் அமைத்துள்ளனர். இதனை,

"அடக்கம் அமரருள் உய்க்கும் அடங்காமை
ஆரிருள் உய்த்து விடும்."[46]

என்ற திறக்குறளுக்குத் தகுந்தாற்போல் குழந்தைகள் அடக்கத்தைப் பின்பற்ற,

"காற்றுக்கு அழகு மென்மை
கடலுக்கு அழகு அலைகள்
ஆற்றுக்கு அழகு ஓட்டம்
ஆணுக்கு அழகு வீரம்

பெண்ணுக்கு அழகு கற்பு
பேச்சுக்கு அழகு உறுதி
கண்ணுக்கு அழகு கருணை
கல்விக்கு அழகு அடக்கம்."[47]

காற்றுக்கு மென்மை அழகாவது போல கடலுக்கு அலைகளால் அழகு உண்டாவது போல கற்றவனுக்கும் அடக்கம் தேவை என்ற சிந்தனையைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா கூறியுள்ளார். குழந்தைக் கவிஞர் செல்ல கணபதியும்,

"தலைநிமிர்ந்த ஆலமரம்
சாய்வதுண்டு புயல்காற்றில்!
தலைகுனிந்த நாணல்எனில்
தலைநிமிரும் புயல்ஓய்ந்தால்!

தனக்குநிகர் இல்லையென்பார்
சருக்கிவிழ நேர்வதுண்டு!
பணிவுடனே நடந்துகொண்டால்
பலமான வெற்றியுண்டு."[48]

ஆலமரம் புயல் காற்றில் சாய்ந்து அது ஓய்ந்தபின் தலையை நிமிர்த்துவதுபோல குழந்தைகளும் பெரியவர்களுக்குப் பணிந்து நடந்தால் வெற்றி அடைவர் என்பதை உணர்த்தியுள்ளார்.

பணிவு அறிந்த குழந்தைகளுக்கு தியாகத்தின் பெருமையும் தெரியவேண்டும்.

**2.2.1.3.7.0.தியாகமும் சிறப்பும்**

தியாகம் அன்பைப் பெருக்கி ஈகையை உணர்த்தும். அதனால்,

"தியாகம் செய்யும் பண்பினால்தான்
தினமும்அன்பு பெருகுமே!
தியாகம்என்றால் நமைமறந்து
பிறர்க்குதவி செய்வதே!."[49]

இப்பாடல்வரிகள் மூலம் அன்பிற்குச் சான்றாக விளங்கும் தியாகத்தை விளக்கியுள்ளார். குழந்தைக்கவிஞர் செல்லகணபதி தியாகப் பண்பினைக்கூற விதைகளையும், மாநதிகளையும் சான்றாகக் கூறியுள்ளார்.

**2.2.1.3.8.0 மகிழ்வுணர்வில் இயற்கைப்பொருட்கள்**

குழந்தைகளுக்குப் பிடித்த இயற்கையை அறிய வைத்தல் அவசியமானதாகும். ஏனென்றால் குழந்தைகள் அசையாத இயல்புடைய மலையைக் கண்டு வியப்பார்கள். வானத்திலிருந்து நீரைப் பொழியும் மழையைக் கண்டு குதிப்பார்கள். வானில் உலாவும் நிலா நட்சத்திரங்கள் போன்ற பொருட்களைக் கண்டு மகிழ்வார்கள். ஆகவே மலை, நிலவு, விண்மீன்கள் போன்றவை குழந்தைகளுக்கு மகிழ்வினை ஏற்படுத்துபவை. ஆதலால் இவ்விரு கவிஞர்களும் படைப்புகளில் நிலா உலாவுதல் போல் உள்ள இயற்கை நிகழ்வுகளைக் குழந்தைகளுக்குப் பாடிக்காட்டினால், அந்தப் பாடல்களைப் பாடி இன்புறுவார்கள் என்பதைக் கருத்தில் கொண்டு இயற்கைப் பொருட்களைப் பாடுபொருளாக்கிப் பாடியுள்ளனர்.

"கடற்க ரைக்குச் சென்றிடலாம்
வா தம்பி வா – அங்கே
காற்று வாங்கி வந்திடலாம்
வா தம்பி வா."[50]

கடற்கரைக்குச் சென்று காற்று வாங்குதல் மகிழ்வுணர்வை ஏற்படுத்தும் எனக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா பாடியுள்ளார்.

"மழை பேயுது
மழை பேயுது
மகிழ்ச்சியாய்க் குதிக்க
மழை பேயுது!

ஊசி போலவே
மழை பேயுது!

ஊதல் காற்றுடன்

மழை பேயுது!."[51]

இவ்வாறு குழந்தைப்பாடல்கள் வழி இயற்கைச் செய்திகளை அறிந்த குழந்தைகள் செயற்கை அறிதலும் அவசியமானதாகும். இதுவே உலகியலாகும். இதற்கேற்ற சிந்தனைகள் ஆயப்பட உள்ளன.

**2.2.1.4.அறிவியல் பயன்பாட்டு உத்தி**

விதிகளால் நிறுவப்படுவதை அறிவியல் எனலாம். "உலகப் பொருள்களை புறநிலையினின்று கூர்ந்து கவனித்து உள்ளவாறே விளக்குவது அறிவியலாகும்"[52] என்ற தா.ஏ.ஞானமூர்த்தியின் கூற்றிற்கேற்ப இவ்விரு கவிஞர்களின் அறிவியல் சிந்தனைகள் குழந்தைகள் மனதில் இடம்பெறும் வண்ணம் உள்ளன.

**2.2.1.4.1.0 இயற்கையின் மகத்துவம்**

தாவரங்கள், விலங்குகள், பறவைகள் போன்ற உயிரினங்கள் இயற்கையாகும். இவற்றில் தாவரங்கள் உயிர்வாழ கார்பன்டை ஆக்சைடும் நீரும் ($H_{20}$) இன்றியமையாததாகும். தாவரங்களில் உள்ள பச்சயத்தில் ஒளிச்சேர்க்கை நடைபெற்று உணவைத் தயாரிக்கிறது என்பதை மறைமுகமாகக் கூறி சிந்திக்கச் செய்த பாடலாக குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பாவின் பாடல் வரிகள் உள்ளன. இதனை,

"தரையின் மேலே
    தொட்டி பார்
தொட்டி மேலே
    செடியைப் பார்
செடியின் மேலே
    பூவைப் பார்."[53]

தொட்டி வைக்கத் தரை தேவை. செடி வளரத் தொட்டி தேவை. செடி வளர்ந்து பூக்கள் பெறத் தண்ணீர் இன்றியமையாதது என்பதை இப்பாடல் வரிகள் விளக்கியுள்ளன.

**2.2.1.4.2. செயற்கைக்கு இயற்கையும் பாதுகாப்பும்**

மனிதனது அறிவால் விளைந்த செயற்கைப் பொருட்களுக்கு இயற்கைப் பயன்பாடு அவசியமானதாகும். இதனை,

"வாசிக்க ஏடு
வசித்திட வீடு
பாலுக்கு மாடு
பண்ணாதே கேடு.

காருக்கு எண்ணெய்
கண்ணனுக்கு வெண்ணெய்
ரசத்துக்குத் தொன்னை
நம்புவாய் என்னை."[54]

செயற்கையால் உருவான வாகனத்திற்கு (காருக்கு) இயற்கையால் விளைந்த பெட்ரோல், டீசல் போன்ற எண்ணெய் அவசியமானவை என்ற சிந்தனையைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா உணர்த்தியுள்ளார். மேலும் செயற்கையால் ஏற்படும் தீங்கினை அகற்ற இயற்கைப் பாதுகாப்பு அவசியமானதாகும் என்ற சிந்தனைக்குரிய பாடல்களைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பாவைவிடக் கூடுதலாகக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி எழுதியுள்ளார்.

''கடல்நீர் சூரியன் ஆவி
கருணையி னாலே மழைநீர்!
குடிநீர் ஆவது மழைநீர்
குடிநீர் மழையினை நினைப்போம்!.''[55]

என்ற பாடல் வரிகளில் கடல்நீர் வெப்பத்தால் ஆவியாய் மாறி மழையைத் தருவதற்கு மரங்களின் வளம் அவசியமானதாகும் என்பதைக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி குறிப்பிட்டுள்ளார்.

''மரங்கள் இருந்தால் காற்றின்
மாசுகள் விலகும்; ஓசோன்
நிரம்பிய மண்டலம் தோன்றும்
நிதமொரு செடிநட லாமே

டில்லியைப் போலநம் ஊரும்
திகழ்ந்திட மரங்களை நடுவோம்
மெல்ல மெல்ல மழையை
விரைந்து பெய்திடச் செய்வோம்.''[56]

என்ற பாடல் வரிகளில் சுற்றுப்புறத்தைப் பாதுகாக்கும் கொடை போன்ற மண்டலம் (லேயர்) இனப்பூமிக்கூட்டமே மாசடைந்து வருவதாகக் கூறியுள்ளார். எனவே மாசுகளால் பாதிக்கப்படுவதிலிருந்து விலக மரங்களின் வளங்கள் அவசியமானதாகும் என்பதைக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி குறிப்பிட்டுள்ளார். நச்சுத்தன்மையை அகற்றி ஆக்சிஜனை வெளியாக்குவதற்கு இதன் இலை வேர்களும் மருந்தாகின்றன; வாசனைப் பொருள்களைத் தருகின்றன; ஆலைப் புகையினால் ஏற்படும் பாதிப்பையும் தடுப்பதற்கு மரங்கள் பயன்படுகின்றன என்பதையும் குழந்தைப்பாடல்கள் வழி அறியலாம்.

**2.2.1.4.3.0 அறிவியலும் பொருட்களும்**

அறிவியலால் விளைந்த பொருட்கள் பல. கணிப்பொறி, வாகனம் எனக் கணக்கில்லாமல் காலத்திற்கு ஏற்றாற்போல் அதிக அளவில் உருவாகி வருகின்றன. இதை அறிய வைத்தல் அவசியமானதாகும்.

''நாம் வாழும் உலகம் அறிவியல் உலகம். அறிவியலின் வியக்கத்தக்க கண்டுபிடிப்புகளான ரேடியோ, இதைத்தட்டு, டெலிபோன் போன்ற எத்தனையோ பொருள்கள் நம் அன்றாட வாழ்வில் முதன்மையான இடத்தைப் பெற்றுள்ளன.''[57] என்ற

மா.இராமலிங்கத்தின் கூற்றிற்கேற்ப வானொலி கணிப்பொறி போன்ற பொருட்களும் அறிமுகப்படுத்தப்பட்டுள்ளன.

"சிறுவர் நடத்தும் நிகழ்ச்சியாவும்
சேர்ந்து கேட்டு மகிழலாம்.

பெரிய மனிதர் பேசுகின்ற
பேச்சைக் கூடக் கேட்கலாம்.

இந்தி யாவில் மட்டுமன்றி
இந்தப் பெரிய உலகிலே,

எங்கெங் கேயோ நடப்பதெல்லாம்
இருந்த படியே கேட்கலாம்."[58]

எனக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா உலக நிகழ்ச்சிகளை இல்லத்திலிருந்தே அறியும் வானொலியை அறிய வைத்துள்ளார். இவரைப்போல் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும் கணிப்பொறி, போர்டு மோட்டார், டிஷ் ஆன்டெனா போன்ற பொருட்களை அறியச் செய்துள்ளார்.

"சாட்டிலைட் டிஷ்என அறிவியல்
சார்ந்த கண்டு பிடிப்பினால்
வீட்டு வாயிற் படியிலே
விழுந்து கிடக்குது உலகமே!."[59]

டிஷ் ஆன்டெனா டெலிபோன் இணைப்பைத் தருகிறது. மேலும் எவ்விடத்தில் நிகழும் நிகழ்ச்சிகளையும் அறியத் துணை செய்வதற்குச் சான்றாகியுள்ளன. போர்டு மோட்டார் நெல்மூட்டைகளைச் சுமந்து செல்ல உதவுகிறது. வானுலக வாகனமான விமானம், ஹெலிகாப்டர் போன்றவை தொலைவில் உள்ள ஊர்களுக்குச் செல்லும் நேரத்தைக் குறைக்கின்றன. அதனால்தான் பிரதமர் ஹெலிகாப்டரைப் பயன்படுத்துவதாகக் குறிப்பிட்டுள்ளார். மேலும் மக்கள் நெருக்கம் இல்லாத சந்திரமண்டலத்தையும் குறிப்பிட்டு, அதைப் பொய்மை, களவிற்கு ஆட்படாமல் காப்பது நம் கடமையாகும் என்கின்ற அறிவியல் சிந்தனைகளையும் ஆங்காங்கு பாடல்களில் குழந்தைக் கவிஞர் செல்லகணபதி குறிப்பிட்டுள்ளார்.

**2.2.1.4.4.0 இயற்கைச் சக்திகள்**

நெருப்பே சக்தியாகவும் சூரிய சக்தியாகவும் விளங்குகிறது. மனிதனின் உடலில் சூடு இருப்பதனாலேயே உயிர் வாழ்கிறான். அழுக்கினை நீரால் கழுவும்போது அழுக்காய் மாறுவதும் நீராகும். இந்த அழுக்கை நெருப்பில் எரிக்கும்போது அழுக்கடையாது. அதனால் மனிதனின் உயிருக்கு அடிப்படையான நெருப்பினை 'நெருப்பே சக்தி' என்னும் பாடலில் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி விளக்கியுள்ளார். மண்ணில் பிறந்தவை மண்ணுடன் சுழலும் சுழற்சியை நைட்டிரஜன் சுழற்சி எனக் குறிப்பிட்டுள்ளார். ஊசல் கடிகாரத்தைக்

கண்டறிந்த கலிலியோவையும் குறிப்பிட்டுள்ளார். அதனால் இத்தகைய இயற்கைச் சக்திகளைப் பாதுகாப்பது நம் கடமையாகும் என்பதற்கு,

‘‘நெருப்பும் நீரும் காற்றும் வேண்டும்
நிலமுடன் வானும் வேண்டும்
இருப்பது உலகம் இவ்வைந் தால்தான்
இவைகளைப் போற்றிக் காப்போம்!.’’[60]

என்ற பாடல்வரிகள் சான்றாகியுள்ளன.

அறிவியலின் முன்னேற்றத்தை அறியச் செய்த இவ்விரு கவிஞர்களும் நாணயத்திற்கு இரண்டு பக்கங்கள் அவசியமானது போல் குழந்தைகளுக்கு விளையாட்டும் கல்வியும் அவசியமாகும் எனக் கூறியுள்ளனர். அதனால் ஆர்வமூட்டல் உத்திக்குரிய சிந்தனைகள் கூறப்பட உள்ளன.

**2.2.1.5. ஆர்வமூட்டல் உத்தி**

கொடுத்தால் குறைவுபடாத அழியாத கல்வியைக் கல்வியில் ஆர்வமூட்டல் என்னும் தலைப்பில் அறியலாம்.

**2.2.1.5.1. கல்வியில் ஆர்வமூட்டல்**

சமுதாயத்தின் வளர்ச்சிக்கு அடிப்படையான அறிவியலைப் பெற இன்றியமையாதது கல்வியாகும். நாடு தன்னிறைவு பெறக் குழந்தைகளுக்குக் கல்வி இன்றியமையாதாகும். இதனை, ‘‘கல்வி கற்பிப்பதில் குழந்தைதான் முக்கியக்கூறு. மனிதனின் பண்பாடல்ல என்பது அவர் கருத்து. அதாவது குழந்தையை மையமாக வைத்துக் கல்வி புகட்ட வேண்டுமேயன்றி பாடப்பொருளை வலிந்து புகுத்தக்கூடாது என்பது இதன் கருத்தாகும். இதனால்தான் ரூசோவைக் கல்வி முறையின் கார்பனிகஸ் என்று கூறுகின்றனர்.’’[61] என்ற கூற்றினுக்கு ஏற்றாற்போல் குழந்தைகள் ஆர்வத்துடன் பயில்வதற்கேற்ற முறையில் கல்வியைக் கற்பிக்க வேண்டும் என்பதை உணர்ந்து இவ்விரு கவிஞர்களும் ஆர்வத்துடன் கல்வி வளர்த்தல் உத்தியைப் பின்பற்றியுள்ளனர்.

**2.2.1.5.1.1. நிறமும் கிழமைகளும் அறிதல்**

பள்ளிக்கூடக் கல்விக்கு முன்பாக வண்ணங்களை, கிழமைகளை, பருவங்களை, திசைகளை அறிந்துகொள்ளச் செய்யவேண்டும். ஒவ்வொரு பொருளும் ஒவ்வொரு நிறமும் உடையது.

‘‘பல்வேறு வண்ணங்களையும் கண்டு மகிழும் இயல்பு குழந்தைகட்கு உண்டு. அழகு மிக்க வண்ண வேலைப்பாடுடைய எதைக் கண்டாலும் அவற்றை அடையத் துடிப்பது அதன் இயல்பு.’’[62] என்ற கூற்றிற்கேற்றாற்போல் நிறங்களை அறியச் செய்துள்ளனர்.

‘‘தங்கம் போலப் பளப ளென்றே
ஆப்பிள் இருக்குது.

தங்கைப் பாப்பா கன்னம் போலே
ஆப்பிள் இருக்குது.''[63]

என்ற பாடல் வரிகளில் தங்கத்தின் நிறம் மஞ்சள், ஆப்பிளின் நிறம் சிவப்பு என்பதை உணரும் வண்ணம் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா நிற அறிமுகத்தைத் தந்துள்ளார். இவரைப்போல் குழந்தைக் கவிஞர் செல்லகணபதியும்,

''காக்கை காக்கை
கருப்பு நிறம்
நோக்கும் வானம்
நீல நிறம்.

ஆப்பிள் பழமோ
சிவப்பு நிறம்
தோப்புக் கிளிகள்
பச்சை நிறம்.''[64]

என காக்கை, வானம், ஆப்பிள் போன்ற பொருட்களின் நிறத்தை அறியச் செய்துள்ளார். நிறங்களை அறிந்த இவர்களுக்கு பருவங்களையும் திசைகளையும் அறியச் செய்தல் அவசியமானதாகும்.

**2.2.1.5.1.2 திசைகள் அறிதல்**

திசைகள் என்பது நாம் செல்லும் இடத்திற்கு வழி கூறும் குறியாகும். இதனை, ''பள்ளிப்பருவத்தை நெருங்கும்போதே குழந்தைகள், கிழமைப்பெயர்கள், மாதப்பெயர்கள், பருவங்களின் பெயர்கள், திசைகளின் பெயர்கள் முதலியவற்றை அறிந்து கொள்ளுகின்றனர். இவற்றைத் திரும்ப திரும்ப வற்புறுத்திச் சொல்லிக் கொடுப்பதைவிட ஒரு பாட்டாகப் பாடிக்காட்டிவிட்டால் அவை குழந்தைகளுக்கு ஒருக்காலும் மறக்காதல்லவா?.''[65] என்ற கூற்றிற்கேற்றாற்போல் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பாவும் செல்லகணபதியும் கிழமைப்பாடல்களை எழுதியுள்ளனர்.

''ஞாயிற்றுக் கிழமை நகையைக் காணோம்
திங்கட் கிழமை திருடன் கிடைத்தான்
செவ்வாய்க் கிழமை ஜெயிலுக்குப் போனான்
புதன் கிழமை புத்தி வந்தது
வியாக் கிழமை விடுதலை யானான்
வெள்ளிக் கிழமை வீட்டுக்குப் போனான்,
சனிக்கிழமை சாப்பிட்டுப் படுத்தான்

அப்புறம் அவன்கதை
ஆருக்குத் தெரியும்.''[66]

என ஏழு கிழமைகளை 'கிழமைப்பாட்டு' என்னும் பாடலில் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா அறிமுகப்படுத்தியுள்ளார்.

''வாரத்தின் நாட்கள் ஏழாகும்
வரிசைப் படிநான் பெயர்சொல்வேன்
ஞாயிறு திங்கள் செவ்வாய்பின்
புதன் வியாழன் வெள்ளி சனி
ஞாயிறு வந்தால் விளையாட்டு
நன்றாய்ப் படித்தால் பாராட்டு.''[67]

என ஏழு கிழமைகளைக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி அறியச் செய்துள்ளார்.

''சூரியன் உதிக்கும் திசையினைப் பார்த்துச்
சொல்வாய் அதனைக் கிழக்கென்று!
சூரியன் உதிக்கும் திசைக்கு எதிர்த்திசை
சொல்வாய் அதனை மேற்கென்று!

சூரியன் தன்னைப் பார்த்துநீ நின்றால்
சொல்வாய் இடப்புறம் வடக்கென்று!
சூரியன் தன்னைப் பார்த்துநீ நின்றால்
சொல்வாய் வலப்புறம் தெற்கென்று!.''[68]

என்று திசைகளை அறியவும் கண்டுபிடிக்கவும் குழந்தைக் கவிஞர் செல்லகணபதி வழி கூறியுள்ளார்.

**2.2.1.5.1.3 கல்விக்கு அடித்தளம்**

அடிப்படை எழுத்துக்களை அறிந்தவர்களே கல்வியில் சிறப்படைய முடியும். இதற்கேற்ப,

''அ ஆ என்றேனே
அத்தை வீடு சென்றேனே

இ ஈ என்றேனே
இட்டலி எட்டுத் தின்றேனே.''[69]

எனக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பாவும்,

''அ ஆ……... அ ஆ
அம்மா மீது ஆசை
இ ஈ……….......... .இ ஈ
இனிப்பைத் தேடும் ஈக்கள்.''[70]

எனக் குழந்தைக் கவிஞர் செல்லகணபதியும் குழந்தைகளுக்குப் பிடித்தாற்போல் இட்லி, காபி போன்ற பொருட்களைச் சான்றாக்கி அறியச் செய்துள்ளார்.

**2.2.1.5.1.4. ஆசான் அறிதல்**

ஆசிரியர் என்பவர் கல்வி கற்பிக்கும் போதகர். அதனால் அவரை மரியாதையுடன் வணங்கிக் கற்கவேண்டும் என்பதை,

''எத்தனை பேர்கள் எழுதப் படிக்க
இவரிடம் கற்றுக் கொண்டனரோ!
அத்தனை பேரும் அன்புடன் மதிக்கும்
ஆசிரியர் நல்ல ஆசிரியர்.''[71]

என அனுபவத்திலும் படிப்பிலும் சிறந்த ஆசிரியர்களை மதிப்பது அவசியமாகும் என்ற சிந்தனையைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா உணர்த்தியுள்ளார்.

''தன்னைத் தந்து தியாகம் செய்வதில்
தாயுடன் ஆசான் ஒன்றேதான்
தன்னைத் தந்து துயரையும் ரசிக்கும்
தகுதியால் ஆசான் தாய்க்குச்சமம்.''[72]

எனக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும் ஆசிரியர் தாய்க்குச் சமமானவர் என்பதைக் குறிப்பிட்டுள்ளார்.

**2.2.1.5.1.5 நூலகமும் பயனும்**

நூலகம் என்பது புத்தகங்களைச் சேமிக்கும் களஞ்சியம் ஆகும். விஞ்ஞானம் மருத்துவம் போன்ற பல்துறைச் செய்திகளைப் புத்தகங்களின் மூலம் அறியும் இடம் நூலகம் ஆகும். அதனால் நூலகத்தின் தன்மைகளையும் முக்கியத்துவத்தையும் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா தெரிவித்துள்ளார்.

''பள்ள மான இடத்தினைப்
பார்த்துப் பாயும் வெள்ளம்போல்
நல்ல நல்ல நூல்களை
நாடி நாமும் பயிலுவோம்.''[73]

என்னும் பாடல் வரிகளில் வெள்ளநீர் பள்ளத்தைச் சென்றடைந்து தண்ணீரால் நிரப்பப்படுதல் போல நல்ல நூல்களைப் பயிலுதலால் அறிவு வளரும் என்ற சிந்தனையை உவம உத்தியைப் பின்பற்றி எழுதியுள்ளார்.

**2.2.1.5.2.0 விளையாட்டில் ஆர்வமூட்டல்**

குழந்தைகளின் மன இன்பத்திற்கு ஏற்றது விளையாட்டு. இதனால் உடல் வலிமை பெறுவதுடன் பொழுது போக்காகவும் அமையும். இதனைத் ''தன்னியக்கம் என்பது மனத்தின் முக்கியமான பண்பாகும். அது குழந்தையின் விளையாட்டு மூலம் வெளிப்படுகிறது. அது குழந்தையின் விளையாட்டு மூலம்தான் முழு

வளர்ச்சியடையவேண்டும். ∴பிராபெல் பிற்கால மனிதனுக்குத் தேவையான வேலைதான் குழந்தைப்பருவத்தில் விளையாட்டு வடிவாக வெளிப்படுகிறது.”[74] என்ற கூற்றிற்குப் பொருத்தமான விளையாட்டுச் சிந்தனைகளை இவ்விரு கவிஞர்களும் விளையாட்டில் ஆர்வத்தை வளர்க்கும் நோக்கில் எழுதியுள்ளனர்.

திருமணம் நடத்தி விளையாடுதல், வீடு கட்டி விளையாடுதல், கிரிக்கெட் விளையாடுதல் போன்ற விளையாட்டுகள் பிற்காலத்தில் கிரிக்கெட் வீரராகப் பொறியியலாளராக உயர்த்தும். குதிரை விளையாட்டு ஒரு சிறந்த வீரராக உயர்த்தும். கோலிக்குண்டு விளையாடுதல் ராக்கெட் ஓட்டுவதில் சிறந்தவனாக்கும்.

“பொம்மைக்கும் பொம்மைக்கும் கல்யாணம்
புறப்படப் போகுதாம் ஊர்கோலம்.

தெருவில் எங்கும் தடபுடலாம்.
சிறுவர்கள் ஒன்றாய்ச் சேர்ந்தனராம்.

கிட்டு தலைமேல் மாப்பிள்ளை
கீதா தலைமேல் மணப்பெண்ணாம்.”[75]

இப்பாடல் வரிகள் பொம்மைகளை மணமகன், மணமகள் கோலத்தில் அலங்கரித்து தூக்கி எறியும் பொருளான ஓலைச்சுருளை நாதசுரம் ஆகவும் தகரக் குவளையை டமாரமாகவும் பயன்படுத்தி விளையாடலாம் என்னும் சிந்தனையை உணர்த்தியுள்ளன. இது பிற்காலத்தில் திருமணம் நடத்தும் பக்குவத்தைக் கற்றுக் கொள்வதற்கு ஏதுவாக உள்ளன.

“காசு பணம் கருவி பற்றிக்
கவலை ஏனோ தம்பி – நாம்
கடலின் ஓரம் மணலில் வீடு
கட்டு தற்கே தம்பி?.”[76]

என்னும் பாடல் வரிகள் பொருள் இன்றி மணலில் வீடுகட்டும் இவர்களின் எண்ணம் வீடுகட்டும் பொறியியலாளராக இவர்களை மாற்றும் என்பதற்குச் சான்றாக உள்ளன.

“குதிரை போல நீயுமே
குனிந்து கொள்வாய், நானுமே
முதுகில் ஏறிக் கொள்ளுவேன்.
முன்னே ஓடிச் செல்லுவாய்.”[77]

என்னும் பாடல் வரிகள் வயதில் மூத்த சிறுவர்களின் அன்பும் விளையாட்டுப் பொருளாகும் என்பதைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா குறிப்பிட்டுள்ளார்.

“கோலிக் குண்டு ஆடிடும்
குறும்புக் காரச் சிறுவனே
வேலி இல்லா வானிலே
விரையும் ராக்கெட் ஓட்டுவான்!.”[78]

கோலிக்குண்டு விளையாடும் சிறுவனே ராக்கெட் ஓட்டுவதில் வல்லவனாவான் என்ற சிந்தனையைக் குழந்தைக் கவிஞர் செல்லகணபதி உணர்த்தியுள்ளார்.

“பந்தைச் சுழற்றி வீசு
பாய்ந்து அடிப்பேன் நானே!
அந்தக் கிரிக்கெட் ஆட்டம்
அடடா! பெரும்கொண் டாட்டம்!

விரைந்து வீசும் பந்தை
வேக மாக அடிப்பேன்
துரித மாக ஓடி
ஓட்டம் நூறு குவிப்பேன்!”[79]

என்று இப்பாடல் வரிகளில் வீரர்கள் சபதம் செய்து விளையாடி வெற்றியை நாட்டுக்குச் செலுத்த வேண்டும் எனக் குழந்தைக் கவிஞர் செல்லகணபதி பதிவு செய்துள்ளார்.

இவ்வாறு மரக்குதிரை ஊஞ்சல் போன்ற உயர்ந்த பொருட்கள் இல்லையென்றாலும் மணலில் வீடுகட்டி விளையாடுதல், பம்பரம், கோலிக்குண்டு போன்ற விளையாட்டுகள் வசதியில் குறைந்தோர்க்கும் ஏற்றதாகும் என்ற சிந்தனையைக் கூறியுள்ளார்.

இவ்விரு கவிஞர்களும் வேறு ஏதேனும் உத்திகளில் கருத்துகளைத் தந்துள்ளார்களா? என ஆய்ந்தபோது,

“எடு என்பதன் இறந்தகாலச் சொல்லாக எடுத்தார் என்பதை அறிந்த குழந்தை கொடு என்பதற்குக் கொடுத்தார் என்றும், தடு என்பதற்குத் தடுத்தார் என்றும் தானே சொற்களை அமைத்துக்கொள்கிறது. பத்தும் நான்கும் பதினான்கு என்று அறிந்த சிறுவனால் பதினைந்து பதினாறு பதினேழு பதினெட்டு என்ற சொற்களை எளிதில் அமைத்துக் கொள்ள முடிகிறது. அவர் பத்து மாடு வாங்கினார் என்ற வாக்கியத்தை அறிந்த சிறுவனுடைய மூளையில் எழுவாய் முதலிலும் பயனிலை இறுதியிலும் செயப்படுபொருள் இடையிலும் அதற்கு அடையான எண்ணுப்பெயர் அதற்கு முன்னும் அமையும் அமைப்பு நன்றாகப் பதிந்து விடுகிறது.”[80] என்ற மு.வ.வின் சிந்தனைக்கேற்றாற்போல் குழந்தைகள் சொற்களை தொடர்களை இலக்கண இலக்கியங்களை அறிந்து கொள்ளுவதற்கேற்ப புதிய முறைகளில் உத்திகளின் தலைப்புகள் அமைக்கப்பட்டு ஆய்வு செய்யப்பட உள்ளன.

**2.2.1.6. இலக்கிய முதன்மை உத்தி:**

தமிழில் தோன்றிய இலக்கியங்கள் எண்ணற்றவை. இவை வாழ்வின் குறிக்கோள்களைக் கற்பதற்காகவே இயற்றப்பட்டவை. அதனால் குழந்தைகளுக்கு இலக்கிய ஆர்வத்தை வளர்க்கும் விதத்தில் பழமொழி உத்தியைப் பின்பற்றியுள்ளனர்.

**2.2.1.6.1. பழமொழி உத்தி:**

பாட்டில் பழமொழி கூறி சிந்தனை வளர்த்தல் பழமொழி உத்தியாகும்.

“சாது வான உயிர்களைச்
சாக டித்துத் தின்பதோ
போதும் போதும் இன்றேநாம்
புத்தர் வழியில் செல்லுவோம்!.”[81]

என ஆசிய ஜோதியை ‘புத்தர் வழி’ என்னும் பாடலில் நினைவுபடுத்தியுள்ளது. இதன் மூலம் ‘கொல்லாமையே அறம்’ என்னும் தொடரை உணர்வார்கள். இவரைப்போல் குழந்தைக் கவிஞர் செல்லகணபதியும் பழமொழியை,

“ஆற்றில் எதையும் போட்டால் கூட
அளந்து போடென்றார்.
ஆற்றல் மிகுநம் முன்னோர் சொன்னதை
ஆழ்ந்து சிந்திப்பாய்

நண்பனென் றால்நீ பேனா தரலாம்
நண்பன் தேர்வினிலே
உன்னைப் பார்த்து எழுத உதவினால்
உலைவரும் உன்தலைக்கே.”[82]

என்ற வரிகள் நண்பனிடத்தில் நடந்து கொள்ளும் முறைகளைக் கூறியுள்ளன.

**2.2.1.6.2.0 திருக்குறள்வழி சிந்தனை வளர்த்தல் உத்தி**

உலகப் பொதுமறையாகிய திருக்குறளை அனைவரும் அறிவர். திருக்குறளைப் படித்து அறிவை வளர்ப்பது சிறந்ததாகும். இதைக் குழந்தைகள் பின்பற்றுதல் அவசியமாகும். அதனால் இவ்வுத்தியைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பாவும் குழந்தைக் கவிஞர் செல்லகணபதியும் பின்பற்றியுள்ளனர். ஆனால் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி இவ்வுத்தியில் சிறந்த சிந்தனைகள் சிலவற்றைத் தந்து குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பாவிலிருந்து வேறுபடுகிறார்.

குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா திருக்குறளின் சிந்தனைகளைப் பாடல்களில் எழுதியுள்ளார். இதனை,

“ஒன்றே முக்கால் அடியாலே
உலகம் தன்னைக் கவர்ந்ததுவாம்
அன்றும் இன்றும் என்றென்றும்
அருமை பெருமை உடையதுவாம்.”[83]

என்னும் பாடல் வரிகள் இதற்கு உதாரணமாக உள்ளன. குழந்தைக்கவிஞர் செல்லகணபதி நட்பு, கல்வி வருமுன்காப்பாய், சிந்தித்து முடிவெடுத்தல் போன்ற சிந்தனைகளை வளர்க்க இவ்வுத்தியைப் பின்பற்றியுள்ளார். உதாரணத்திற்கு ஒரு பாடல்,

“எரியும் தீயின் முன்னால்
இருக்கும் வைக்கோல் போர்போல்
சரியும் உனது வாழ்க்கை
சங்கடம் வரும்முன் தவிர்ப்பாய்.

அடுத்த மாதம் தேர்வு
அதுவும் வரும்முன் பாக
துடிப்புடன் படிக்கும் திட்டம்
தொடங்கு உடனடி யாக!”[84]

| |
|---|
| வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை எரிமுன்னர்<br>வைத்தூறு போலக் கெடும்! |

என்ற பாடல் வரிகள் நோய் வரும் முன் காக்க வேண்டும் என்பதற்கு உதாரணமான திருக்குறளை நினைவுபடுத்துகிறது. இலக்கியத்தை முதன்மையாக்கி சிந்தனைகளை உணர்த்திய இவ்விரு கவிஞர்களும் பாடல்களில் இலக்கணத்தையும் அறியச் செய்துள்ளனர்.

### 2.2.1.7. இலக்கண முதன்மை உத்தி

இலக்கியத்தைச் செம்மையாய் அமைக்க உதவுவது இலக்கணம். இதன் மூலம் குழந்தைகள், சொற்களை, சொற்றொடர்களை அணிகளை அறிந்து கொள்வதற்கேற்ற இலக்கணங்களைப் பாடல்களில் உத்திகளாக்கியுள்ளனர்.

#### 2.2.1.7.1.0 பெயர்ச்சொல் அறிமுக உத்தி:

குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா ‘காலம்’ என்னும் பெயர்ச்சொல்லைப் பாடல்களில் பல இடங்களில் பயன்படுத்தியுள்ளார். இவ்வுத்தி மூலம் படித்தவன் தேர்வில் வெற்றியடைவான். படிக்காதவன் தோல்வி அடைவான் என்பதை நகைச்சுவையுடன் கூறியுள்ளார்.

“பள்ளிக் கூடம் திறக்கும் காலம்
பாலர் பையைத் தூக்கும் காலம்

மணியின் ஓசை கேட்கும் காலம்
மாண வர்கள் கூடும் காலம்

வாத்தி யாரைப் பார்க்கும் காலம்
வகுப்பு மாறி இருக்கும் காலம்

புத்த கங்கள் வாங்கும் காலம்
புரட்டிப் புரட்டிப் பார்க்கும் காலம்

பரீட்சை தன்னில் தேர்ச்சி பெற்ற
பாலு ஜோராய் நடக்கும் காலம்

தோற்றுப் போன கோபு மூஞ்சி
தொங்கிப் போச்சு ஐயோ காலம்.''[85]

'பள்ளிக்கூடம்' என்பது இடப்பெயராகும். காலம் என்பது காலப்பெயராகும். மேலும் படித்தவன் தேர்வில் வெற்றி பெறுவான். படிக்காதவன் தோல்வி அடைவான் என்பதை நகைச்சுவையுடன் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா கூறியுள்ளார். இவரைப்போல் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும் பெயர்ச்சொற்களைப் பாடல்கள் மூலம் அறியச்செய்ததை,

''எடிசன் தோற்றது வாழ்விலே
எத்தனை ஆயிரம் முறைகளோ
எடிசன் அயர்ந்து விடாமலே
இன்னும் முயன்றார் பலமுறை

கஜினி முகமது வெற்றியைக்
காணும் வரைக்கும் தோற்றவர்
கஜினி முகமது வெற்றியைக்
கண்டது தொடர்ந்து முயன்றதால்
.
முயற்சித் தலைநீ வாழ்க்கையின்
முழுமுதற் குறிக்கோள் ஆக்கிடு
முயற்சி தோற்கலாம் வெற்றியை
முயற்சித் தலில்நீ காணலாம்.''[86]

என்ற பாடல் வரிகளில் கஜினி, எடிசன் போன்ற சொற்கள் பெயர்ச்சொற்கள் ஆகும்.

**2.2.1.7.2.0 வினைச்சொல் அறிமுக உத்தி**

ஒரு செயலைக் குறிக்கும் சொல்லை வினைச்சொல் என்பர். இந்த வினைச்சொல் உத்திகளையும் இவ்விரு கவிஞர்களின் பாடல்களில் காணலாம். ஏனென்றால் குழந்தைகள் பள்ளியில் படிக்கின்றபொழுது ஆசிரியர் வினைச்சொற்களைக் கரும்பலகையில் எழுதிக் காட்டும்போது குழம்பும் குழப்பத்திலிருந்து பாடல்கள் விடுவிக்கும். அதனால் இவ்விரு கவிஞர்களும் இவ்வுத்தியைப் பின்பற்றியுள்ளனர்.

''சூறைக் காற்று வந்தது
சுழன்று சுழன்று அடித்தது
கூரை வீட்டைப் பிய்த்தது
குடியைக் கெடுத்துச் சென்றது.

பலத்த மழைதான் பெய்தது
பயிரை அழித்துச் சென்றது
ஜலத்தி னாலே மக்களைத்
தத்தளிக்கச் செய்தது.''[87]

என்ற பாடல் வரிகளில் வந்தது. அடித்தது, பிய்த்தது, சென்றது போன்ற சொற்கள் வினைச்சொற்களாகும். இதைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா பின்பற்றிப் பாடியுள்ளார். இவரைப்போல் குழந்தைக் கவிஞர் செல்லகணபதியும் இவ்வுத்தியைப் பின்பற்றியுள்ளார்.

''பசுவே பசுவே பால்தருவாய்
பச்சைப் புல்லை நான்தருவேன்
பாலைத் தந்தால் காய்ச்சிடுவேன்
பதமாய்க் கோவா செய்திடுவேன்
மாலை நேரம் நண்பருடன்
மகிழ்ந்தே அதனை உண்டிடுவேன்.''[88]

என்ற இவ்வரிகளில் தருவாய், தருவேன், செய்திடுவேன், காய்ச்சிடுவேன் போன்ற சொற்கள் வினைச்சொற்களாகும்.

இவ்வாறு வினைச்சொல் உத்தியைப் பின்பற்றிய இவ்விரு கவிஞர்களும் வினைச்சொற்களை அறிய வைப்பது விகுதி. ஆதலால் விகுதியின் மூலம் கருத்துகளை அறியவைப்பதும் அருமையாகும். அதனால் இதையும் உத்தியாகப் பின்பற்றியுள்ளனர்.

**2.2.1.7.3. விகுதி உத்தி:**

வினைச்சொற்களின் ஈற்றில் முடியும் சொற்களை விகுதி என்பர். இது ஐந்து பால்களை அறிய உதவும். இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் என்ற முக்காலங்களை உணர்த்தும். இவ்வாறு காலம் காட்டும் விகுதிகளைப் பாடல்களில் அதிகமாகப் பயன்படுத்தியுள்ளனர்.

**2.2.1.7.3.1 ஆம் ஆய் விகுதிகளை ஈற்றில் கூறல் உத்தி:**

ஆம், ஆய் விகுதிகளை ஈற்றில் கூறி சிந்தனை உணர்த்தும் உத்திகளும் பாடல்களில் உள்ளன.

''பட்டு ஆடை உடுத்தலாம்
பாட்டி கையைப் பிடிக்கலாம்
கொட்டு மேளம் கேட்டதும்
குடுகு டென்று ஓடலாம்.''[89]

என்னும் பாடல் வரிகளில் வெளி இடங்களுக்குச் செல்லும்போது உறவினர்களுடன் செல்லவேண்டும் என்பதை உணர்த்தியுள்ளார்.

''ஆட்டுக்குட்டி என்னைநீ
அழைப்ப தெங்கே கூறுவாய்.''[90]
''தோலை உரித்த பிறகுதான்
சுளையைத் தின்று பார்க்கலாம்.

ஓட்டை உடைத்த பிறகுதான்
உள்ளே பருப்பைக் காணலாம்.''[91]

என்ற குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா இவ்வுத்தியைப் பின்பற்றியதுபோல் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும் இவ்வுத்தியைப் பின்பற்றியுள்ளார்.

''எத்தனை நண்டு மீன்களினை
எமக்குத் தின்னத் தருகின்றாய்
எத்தனை மனிதக் கழிவுகளை
எப்படி உன்னிடம் ஏற்கின்றாய்

நல்லதை வழங்கிக் கழிவுகளை
நாளும் ஏற்கும் பெருங்கடலே
அல்லது செய்தார் தம்மிடமும்
அன்பாய் இருக்கச் சொல்கின்றாய்.

கருணை அன்பைத் தருவதற்குக்
கடலே உன்னிலும் உயர்ந்தார் யார்
அருமை அன்பே உன்ஆழம்
ஆழம் காண நாம்முயல்வோம்.''[92]

கருணையே அன்பிற்கு அடித்தளம். இந்தக் கருணை வளரக் கடல் உதாரணமாகும். அதனால் அன்பே சிறந்தது என்பதை உணர்த்தியுள்ளனர்.

**2.2.1.7.4.0 கட்டளை அடுக்கு உத்தி**

ஒரு வேலையைச் செய் என ஏவுதல் கட்டளையாகும். இவ்வாறு செய்யும் வேலையை ஒரு முறைக்கு இருமுறை அடுக்கிக் கூறுவதைக் கட்டளை அடுக்கு உத்தி என்பர். போலச் செய்யும் குழந்தைகளின் இயல்பிற்கு இவ்வுத்தி அவசியமானதாகும்.

"நில் நில் நில்
நில்லா விட்டால் உடனே ஓடிச்
செல் செல் செல்."[93]

நில் எனக் கட்டளையிடும் சொல்லைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா பயன்படுத்தியுள்ளார்.

"நாடு நாடு நாடு
நாடிப் பெற்றிடும் நல்லவர் நட்பால்
நாம்பெற லாமே இன்பம்!

கூடு கூடு கூடு
கூடி வாழ்ந்திடும் மக்களுக் கேதான்
கோடி நன்மைகள் கூடும்!."[94]

எனக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி ஒற்றுமையை வலியுறுத்தியுள்ளார்.

**2.2.1.7.5.0 வியப்பு உத்தி**

குழந்தைகள் எதையும் ஆச்சரியத்துடன் பார்க்கும் தன்மையுடையவர். இந்தப் பண்பு குழந்தைகளுக்கு மகிழ்வையும் தெரியாதவற்றைத் தெரிந்து கொள்ளும் ஆர்வத்தையும் ஏற்படுத்தும். இதற்கேற்ப,

"கண்ணில் மையைத்
தீட்டிய கை.
கட்டி அணைத்துப்
போற்றிய கை.
கடவுள் போன்ற
அன்னையின் கை!."[95]

என அன்னையின் கைமகிமையைக் குழந்தைக் கவிஞர் அழ.வள்ளியப்பா பாடியுள்ளார்.

கண்டங் களிலே மிகவும் பெரிய
கண்டம் ஆசியா.
காடு மலை பீட பூமி
நிறைந்த ஆசியா."[96]

என ஆசியாவின் பெருமையை அழ.வள்ளியப்பா பாடியுள்ளார்.

"ராஜா நேருவின்
ரோஜாச் செடி
ஆகா பூஇதழ்
அழகு எப்படி!."[97]

என்று நேரு விரும்பிய ரோஜாச் செடியின் அழகை குழந்தைக்கவிஞர் செல்லகணபதி விரும்பச் செய்துள்ளார்.

“ஒன்று சேர்தல், ‘அருமை நேரு’, ‘பார் பார்’ ‘பத்துப் பைசா பலூன்’, ‘அ ஆ’ ‘எங்கே செல்லலாம்’, ‘வாழைப்பழம்’ ‘செடிவளர்ப்பேன்’ ‘நகமும் சிங்கமும்’ போன்ற பாடல்களில் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா இவ்வுத்தியைப் பின்பற்றியுள்ளார். இவரைப்போல் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும் ‘அழகுமயில்’, ‘வண்ணத்துப்பூச்சி’, ‘சிட்டுக்குருவி’, ‘கொண்டைச்சேவல்’, ‘கொத்தும்கிளி’, ‘கிரிக்கெட் ஆட்டம்’, ‘பறக்கும் சைக்கிள்’ ‘அதோ பார்’, ‘சிங்கத்தோடு சிறுவராம்’, ‘குல்லாப் போட்ட குரங்கு’ போன்ற பாடல்களில் இவ்வுத்தியைப் பின்பற்றியுள்ளார்.

ஆச்சரியத்தை அறியும் குழந்தைகள் அழைக்கும் முறைகளையும் கற்றுக்கொள்ள வேண்டும். அதனால் விளி உத்தி என்னும் தலைப்பில் சிந்தனைகள் தரப்பட உள்ளன.

**2.2.1.7.6.0 விளி உத்தி**

‘விளி’ என்பது அழைத்தல் என்ற பொருளைத் தரும். இந்த உத்தியைக் குழந்தைகளுக்குப் பிடித்தாற்போல் அமைத்துள்ளனர்.

“கத்திக் கப்பல் செய்து வைத்தேன்
கால்வாய் கூடத் தோண்டி வைத்தேன்.
வா, மழையே, வா.
வா, மழையே, வா.
சின்னச் செடியை நட்டு வைத்தேன்.
செப்புக் குடத்தை எடுத்து வைத்தேன்.
வா, மழையே, வா.
வா, மழையே, வா.”[98]

என்ற பாடல் வரிகளில் ‘வா’ என்னும் சொல் மழையை அழைக்கும் பொருளில் வந்துள்ளது. இதனுடன் ‘வைத்தேன்’ என்னும் வினைச்சொல்லின் பயன்பாடு தண்ணீர் வரும்பொழுது குடத்தை வைத்துப் பிடிக்க வேண்டும் என்பதைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பாவின் பாடல் வரிகள் உணர்த்தியுள்ளது.

இவரைப் போல் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும் இவ்வுத்தியைப் பின்பற்றியுள்ளார்.

“வானம்மீதில் நீந்திவரும் வெண்முகிலே வா
வாழும்எங்கள் இனம்செழிக்க மழையைக்
கொண்டு வா
தான தருமம் செய்யும்மக்கள் செல்வம் பொங்கவா
தழைத்துப்பயிரும் செழித்துவளர வெண்முகிலே வா.”[99]

போன்ற பாடல் வரிகளில் இவ்வுத்திநயம் பின்பற்றப்பட்டுள்ளன. பெயர்ச்சொற்களை வினைச் சொற்களை அறிந்த குழந்தைகள் ஏகாரம் அறிதலும் முக்கியமானது அதனால் ‘ஏகார உத்தி’ என்னும் தலைப்பிலும் பாடல்கள் வகைப்படுத்தப்பட உள்ளன.

**2.2.1.7.7.0 ஏகார உத்தி**

ஏகாரத்தை ஈற்றில் அமைத்து எழுதும் உத்தியை ஏகார உத்தி என்பர்.

“நெல்லுக்குள்ளே அரிசி இருக்கு சொல்லாதே
நெருப்புக்குள்ளே சூடு இருக்கு சொல்லாதே.”[100]

என ரகசியத்தைப் பின்பற்றக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா நினைவுபடுத்தியுள்ளார்.

“அம்மா அம்மா வருவாயே
அன்பாய் முத்தம் தருவாயே.”[101]

என அம்மாவை அழைக்கும் வழி முறைகளைக் கூறியுள்ளார்.

“சின்னக் கால்கள் தத்தித் தாவும்
சிட்டுக் குருவியே
சின்ன விழிகள் மல்லி விதைபோல்
சிட்டுக் குருவியே!.”[102]

இவ்வாறு சிட்டுக்குருவியின் அழகை அறிமுகப்படுத்தும் இப்பாடலில் இவ்வுத்தியைப் பின்பற்றியுள்ளார்.

ஆச்சரியத்துடன் பார்க்க, அழைக்கக் கற்றுக் கொண்ட குழந்தைகள் வினா கேட்கவும் கற்றுக்கொள்ள வேண்டும். அதனால் வினாவிடை உத்தி என்னும் தலைப்பில் சிந்தனைகள் தரப்பட உள்ளன.

**2.2.1.7.8. வினாவிடை உத்தி**

யார்? எது? ஏன்? எப்படி? போன்ற கேள்விகள் கேட்டு விடையைப் பெறுவதை வினாவிடை உத்தி என்பர். ஓகாரம் ஈற்றில் வருவதும் வினாவில் அடங்கும்.

வினாவிடை உத்தியை இவ்விரு கவிஞர்களும் நிறையப் பாடல்களில் பின்பற்றியுள்ளனர்.

“அண்ணாமலை, அண்ணா மலை
என்ன சொன்னானாம்?
அமெரிக் கர்போல் நிலவில் இறங்க
ஆசை என்றானாம்!”[103]

போன்ற பாடல் வரிகளில் இவ்வுத்தியைப் பின்பற்றி குழந்தைகளின் எதிர்காலக் கனவைக் கூறியுள்ளார்.

“கையில் இருக்கும் களாக்காயா
காணும் மரக்கிளை பலாக்காயா
கையில் இருக்கும் களாக்காய்மேல்
கைக்கெட் டாத பலாக்காய்ஏன்?

இப்படித் தானே முன்னோர்கள்
எடுத்துச் சொன்னார் பழமொழியை
அப்படி யெல்லாம் நினைக்காமல்
ஆர்வமாய் இளைஞன் சொல்வதென்ன?

களாக்காய் பலாக்காய் போதாது
கனவோ வான உச்சியிலே
நிலாக்காய் இருப்பதைப் பிடித்திடத்தான்
நினைவும் செயலும் அதுவேதான்

இப்படிச் சொல்லும் இளைஞர்களின்
எழும்துடிப் பான கடும்உழைப்பால்
எப்பொழு தும்வான் நம்வசமே
இருகரம் பறிக்கும் நிலாக்காயை

களாக்காய் பலாக்காய் நிலாக்காயாம்
கனவினைக் காண்போம் வானில்உயர்
நிலாக்காய் தன்னில் கால்பதிப் போம்
நிச்சயம் இதனைச் சாதிப்போம்

நிலவில் மக்கள் குடியிருக்கும்
நிலைமை ஒருநாள் உண்டாகும்
நிலவும் உலகும் இணைகின்ற
நெடுநாள் கனவு நனவாகும்!.''[104]

என்ற பாடல் வரிகளில் உள்ள வினாவிடை உத்தி எதிர்காலத்தில் கனவு நனவாகும் என்ற சிந்தனையை விதைத்துள்ளது.

சமுதாய வளர்ச்சிக்குப் பாடுபட்ட பலரில் காந்தியும் தெரசாவும் குறிப்பிடத்தக்கவர்கள். இவர்கள் போன்று நாட்டுக்கு உழைத்த மன்னர்களும் அறியப்பட வேண்டியவர்கள். அதனால் பாடல்களில் சமுதாயத்திற்கு ஏதேனும் ஒரு வகையில் தொண்டாற்றிப் புகழ்பெற்ற தலைவர்களை அறிமுகம் செய்ய இவ்வுத்தியைப் பயன்படுத்தியுள்ளனர்.

''தாஜ்மகாலைக் கட்டியவர்
யார்? யார்? யார்?
சக்கரவர்த்தி ஷாஜகானாம்
கேள், கேள், கேள்

தஞ்சைக்கோயில் கட்டியவர்
யார்? யார்? யார்?
தரணிபோற்றும் ராஜராஜன்
கேள், கேள், கேள்.”[105]

இவ்வாறு யார் என்னும் உத்தியின் மூலம் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா தாஜ்மகால் கட்டிய ஷாஜகானையும் சக்கரவர்த்தி ராஜராஜனையும் அறியச் செய்துள்ளார்.

'யார்' என்னும் உத்தியைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா பின்பற்றியது போல் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி யாரோ என்னும் உத்தியைப் பின்பற்றி எழுதியுள்ளார்.

“ஆண்களில் யாரோ பேரழகு
அன்புத் தாத்தா காந்திமகான்
பெண்களில் யாரோ பேரழகு
பெரும்துணை அன்னை தெரசாதான்.

விருப்பு வெறுப்புகள் இல்லாமல்
வீழ்ந்தவர் தம்மைத் தூக்கிவிட
இருப்பதைப் பகிர்ந்து கொள்ளுகிற
இதய வலிமையே பேரழகு!.”[106]

**2.2.1.7.8.1. வினாவின் விடை மறைந்து வருதல் உத்தி:**

வினாவை மறைமுகமாகக் கேட்காமல் நேரடியாகக் கேட்டு விடையைக் கூறுதல் இவ்வுத்தியாகும். இவ்வுத்தியைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பாவும், குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும் பின்பற்றியுள்ளனர்.

“நெட்டை யான காலுடனே
நீள மான கழுத்துடனே
சுட்டுப் பொசுக்கும் மணலில்கூடச்
சுமையைத் தூக்கிச் செல்லும்அது
என்ன தெரியுமா? – தம்பி
என்ன தெரியுமா?.”[107]

ஒட்டகம் என்பதை விளக்க இவ்வுத்தியைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா பின்பற்றியுள்ளார்.

“மாம ரத்தின் பூவில் காயை
மறைத்து வைத்த தார்?
நாம்வ ணங்கும் தெய்வம் தானே
நன்றி சொல்லு வோம்?.”[108]

இயற்கையைப் படைத்தவன் இறைவன் என்பதை நேரடியாகக் கூறாமல் மறைமுகமாகக் கூறி இறைஅறிமுகத்தைக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி தந்துள்ளார்.

### 2.2.1.7.8.2. வினா கேட்டு சிந்தனைவளர்த்தல் உத்தி

சில சிந்தனைகளை முக்கியமாகப்பெற்றிருக்க வேண்டும் என்னும் சிந்தனையுடன் வினா கேட்டு சிந்திக்க வைக்கும் உத்தியைப் பயன்படுத்துவர்.இவ்வுத்தியை இவ்விரு கவிஞர்களும் பின்பற்றியுள்ளனர்.

“நன்றியைக் காட்ட நன்றாய் உதவும்
நாயின் வால்.
நமக்கும் இருந்தால் எப்படி உதவும்?
எண்ணிப் பார்.”[109]

என இப்பாடல் வரிகளில் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா யாரிடம் பழகினாலும் நன்றியுடன் பழகவேண்டும் என்பதை உணர்த்த இவ்வுத்தியைப் பின்பற்றியுள்ளார். இவரைப்போல் குழந்தைக் கவிஞர் செல்லகணபதியும்,

“வாயும்கோணல் ஆகுமாம்
வடுவைக்கடிக்கும் போதிலே
போயும்போயும் புளித்திடும்
காயைப்பறித்துத் தின்பதோ?”[110]

என இப்பாடல் வரிகளில் காய்களாக மாறும் மாமரப் பிஞ்சினைப் பறித்து வீணாக்கக்கூடாது என்ற சிந்தனையை உணர்த்தியுள்ளார்.

### 2.2.1.8.0 கூற்று உத்தி

கூறவரும் பாத்திரமாகிய குழந்தையை வெளிப்படையாக உணர்த்தாமல் சொற்களாலேயே இரண்டு குழந்தைகள் பேசிக் கொள்வது போல் பாடல்களில் கையாளும் உத்தியைக் கூற்று உத்தி எனலாம்.

“ஒட்டைச் சிவிங்கி நின்று கொண்டே
நன்கு தூங்கிடும்
உயரே வௌவால் தலைகீ ழாகத்
தொங்கித் தூங்கிடும்.

சிட்டுக் குருவி மரத்தின் கிளையைப்
பற்றித் தூங்கிடும்.
சின்னப் பாப்பா தொட்டி லுக்குள்
படுத்துத் தூங்கிடும்.

கண்ணை மூடி நாமெல் லாரும்
நன்கு தூங்குவோம்.
கண்ணைத் திறந்த படியே மீனும்
பாம்பும் தூங்கிடும்

என்ன கார ணத்தி னாலே
என்று தெரியுமா?
இவைக ளுக்குக் கண் ணைமூட
இமைகள் இல்லையே!.”[111]

என்னும் பாடல் வரிகள் ஒட்டைச் சிவிங்கி தூங்குவதை ஒரு குழந்தை சொல்வதைக் கேட்டு மற்றொரு குழந்தை மீன், பாம்பு, போன்ற உயிரினங்களுக்கு இமைகள் இல்லாததால் அவை கண்ணைத் திறந்தபடியே தூங்குகின்றன என்கின்ற விடையைச் சொல்வது போன்று அமைத்துள்ளார்.

“அழகுத் தோகை விரித்து நன்றாய்
ஆடும் மயிலைப் பாராய்
அந்த மயிலும் ஆண்மயில்தான்
அதனை நீயும் அறிவாய்.”[112]

ஒரு குழந்தை விடை கூற இன்னொரு குழந்தை ஆண் மயில்தான் தோகை விரித்தாடும் என்று தமக்குத் தெரிந்த விடையைச் சொல்வது போன்ற இவ்வுத்தியைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா பின்பற்றியுள்ளார். இவரைப்போல் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும் இவ்வுத்தியைப் பின்பற்றியுள்ளார்.

“முயற்சி முயற்சி முயற்சிதான்
முயற்சியில் தோற்பதும் இயல்புதான்
முயற்சியில் தோற்கலாம் ஆயினும்
முயற்சித் தலில்நீ தோற்பதோ

முயன்று முயன்று தோற்பினும்
முயற்சித் தலைநீ விடுவதோ
முயன்று தோற்றால் மறுமுறை
முயற்சியின் தவறுகள் புரியுமே.

தவறுகள் திருத்திநீ முயல்வதால்
தனிஒரு வெற்றி அமையுமே
அவமதிப் பில்லைநீ தோற்பதால்
அனுபவம் தானே தோல்வியும்.”[113]

என்ற பாடல் வரிகளில் முதல்வரி குழந்தை முயற்சி செய்து தோல்வியுற்றது இயல்பு என்று கூறியதற்கு அறிவுரையாளர் தவறுகளைத் திருத்தி முயற்சி செய்தால் வெற்றி அமையும் என விடையளிப்பது போல அமைந்துள்ளது.

“மாதுளையை மூடிவிட்டு
மறைத்துவைக்க லாமா
மாதுளையைத் தின்பதற்கு
வந்திடுமே அணில்கள்.”[114]

மாதுளையின் வாசனையை மறைக்க முடியுமா என்று கேட்டதற்கு மாதுளையை மறைக்க இயலாது. அதன் வாசனையை அணில்கள் கண்டறியும் என்று இன்னொரு குழந்தை விடை கூறுவது போல அமைத்துள்ளார்.

“அழகுப் பாப்பா கையை ஏன்
அங்கும் இங்கும் அசைக்குது
ஆசை யோடு உன்னையும்
அருகில் வாவென் றழைக்குது.”[115]

இப்பாடல் வரிகளில் இவ்வுத்தி அமைந்துள்ளது.

**2.2.1.9. பயிற்சி உத்தி**

பாடல்களில் நினைவாற்றலை வளர்க்க சொல்லையோ (அல்லது) தொடரையோ ஒரு முறைக்கு இருமுறை அடுக்கிச் சொல்வதைப் பயிற்சி உத்தி என்பர். இதனை சொல் திரும்ப வரல் உத்தி, தொடர் திரும்பவரல் உத்தி என வகைப்படுத்தி அறியலாம்.

**2.2.1.9.1. சொல் திரும்ப வரல் உத்தி**

வந்த சொல்லே திரும்ப வந்தால் அதனை சொல் திரும்ப வரல் உத்தி என்பர். ஒற்றுமை வளர்வதற்காக இவ்வுத்தியைப் பின்பற்றியுள்ளனர்.

“வண்ணங்கள் காட்டுது நமது கொடி
வானத்தை முட்டுது நமது கொடி
எண்ணங்கள் ஊட்டுது நமது கொடி
என்னென்ன காட்டுது நமது கொடி?.[116]

என்ற குழந்தைக்கவிஞர்அழ.வள்ளியப்பாவின் ‘நமது கொடி’ என்னும் பாடலில் ‘நமது கொடி’ என்ற சொற்கள் பலமுறை வந்து கொடியைப் பாதுகாக்கும் எண்ணத்தை ஏற்படுத்தியுள்ளன. இவரைப்போல் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும்,

“இரண்டு கண்கள் பார்ப்பதும் ஒன்றே
இரண்டு காதுகள் கேட்பதும் ஒன்றே
இரண்டு கால்கள் போவதும் ஓரிடம்
இரண்டு கைகளைச் சேர்ப்பதே பெரும்பலம்!.”[117]

என்னும் இப்பாடல் வரிகளில் பார்க்க, கேட்க, நடக்க ஒற்றுமையாக இருக்க இரண்டு என்ற வார்த்தையைப் பலமுறை பயன்படுத்தியுள்ளார்.

“இந்தியர்க் கெல்லாம் இரண்டு எண்ணமா
இல்லை அவர்க்கெலாம் ஒன்றுதான் எண்ணம்

இந்திய நாட்டை வல்லர சாக்கும்

எண்ணம் ஒன்றுதான் செயலும் ஒன்றுதான்.”[118]

என்ற வரிகளில் எண்ணம் என்ற சொற்கள் இருமுறை வந்து ஒற்றுமையை நினைவுபடுத்தியுள்ளன.

**2.2.1.9.2. தொடர் திரும்ப வரல் உத்தி**

சொற்கள் பல இணைந்து தொடராகும். இத்தொடர் திரும்பி வந்தால் அதைத் தொடர் திரும்ப வரல் உத்தி என்பர்.

ஒன்றுகூடி நாட்டுக் காகத்

தொண்டு செய்வோமே – நாமும்

தொண்டு செய்வோமே.”[119]

என்று ஒற்றுமையுடன் நாட்டுக்குத் தொண்டு செய்யவேண்டும் என்ற உணர்வை இப்பாடல் வரிகள் மூலம் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா வளர்த்துள்ளார். இவ்வாறு பயிற்சி உத்தியைப் பின்பற்றிய கவிஞர்கள் கடிதம் எழுதும் முறைகளையும் உத்தியாகக் கையாண்டுள்ளனர்.

**2.2.1.10.0 கடித உத்தி**

நம் நிலையை அயல் ஊரில் உள்ளோருக்குத் தெரிவிக்கும் ஒரு விண்ணப்பப்படிவம் கடிதமாகும். எனவே கடிதம் எழுதும் முறையைப் பாடல்களில் பின்பற்றுவதைக் கடித உத்தி என்பர். இவ்விரு கவிஞர்களும் இவ்வுத்தியைப் பின்பற்றியுள்ளனர்.

“அருமை மிக்க நண்ப னுக்குக்

கடிதம் எழுதவே

ஆசை யாக வெள்ளைத் தாளை

எடுத்துக் கொள்ளுவேன்.”[120]

என்ற வரிகளில் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா கடிதம் எழுதப் பயிற்சி அளித்துள்ளார்.

‘அன்புடைய ஆசிரியர்

அவர்களுக்கு என்வணக்கம்

காலைமுதல் தலைவலியால்

கஷ்டமிகப் படுகின்றேன்.”[121]

என்ற குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பாவின் பாடல் வரிகள் விடுப்பு எடுத்தால் ஆசிரியருக்குக் கடிதம் மூலம் விடுப்பைத் தெரிவிக்க வேண்டும் என்பதைக் குறிப்பிட்டுள்ளார். இவரைப்போல் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும் இவ்வுத்தியைப் பின்பற்றியுள்ளார்.

“அன்புள்ள தம்பிக்கு

அண்ணன் எழுதியது

என்ன நம்வீட்டில்

எல்லோரும் நலம்தானே

வெடுக்கென்று எலிகளினை
வேட்டுவிடும் கரும்பூனை
துடுக்காகத் திரிகிறதா
தொலைந்ததா எலித்தொல்லை''[122]

என்ற பாடல் வரிகளில் உறவினர்களுக்குக் கடிதம் எழுதும் முறைகளைக் கற்றுக்கொடுத்துள்ளார்.

கடிதம் எழுதப் பயிற்சி அளித்த இவ்விரு கவிஞர்களும் செயல் வலிமையடைவதற்கேற்ற பாடல்களையும் எழுதியுள்ளனர்.

**2.2.1.11.0 செயல் உத்தி**

ஆம், ஆல் போன்ற சொற்களைப் பாடல்களில் பயன்படுத்துதல் குழந்தைகளின் செயலை வலிமைப்படுத்தும். மேலும் படிப்போமா உழைப்போமா போன்ற சொற்களைப் பயன்படுத்தினாலும் குழந்தைகளின் செயல்கள் வலிமைபெறும். குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா 'விளங்க வைப்போம்' என்னும் பாடலை எழுதியுள்ளார்.

பார தம்போல் உலகி லேயே
பண்புள் ளபூமி - மிக்க
பண்புள் ளபூமி
வேறு ஏதும் இல்லை யென்றே
விளங்க வைப்போமே-என்றும்
விளங்க வைப்போமே.''[123]

பண்பாடு மிகுந்த பாரதம் உயர நற்செயல்களைச் செய்யத் தகுந்த பாடல்களை எழுதியுள்ளார். இவரைப்போல் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும் இவ்வுத்தியைப் பின்பற்றியுள்ளார்.

''மனதில் உறுதி கொண்டிருந்தால்
வாக்கினில் இனிமை நிறைந்திருந்தால்
நினைவு நல்லதாய் வளர்ந்திருந்தால்
நெருங்கின பொருள்கள் கைப்படுமாம்

பாரதி ஆதர்சம் ஆகிவிட்டால்
பக்குவப் படுவோம் நாமெல்லாம்
பாரதி கண்ட கனவையெல்லாம்
பயனுறும் நனவாய்ச் செயல்முடிப்போம்.[124]

மனதில் உறுதி, நினைவு, வாக்கில் இனிமை போன்ற செயல்கள் இருந்தால் பாரதியின் கனவு நனவாகும் என்பதை இப்பாடல் வரிகளில் கூறிச் செயலை வலிமைபெறக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி பாடியுள்ளார்.

**2.2.1.12.0 பொது அறிவு வளர்த்தல் உத்தி**

விஞ்ஞான வளர்ச்சி பெருகி விட்டநிலையில் அனைத்துப் பொருட்களையும் வாகனங்களையும் குழந்தைகளுக்கு அறிமுகப்படுத்துதல் அவசியமாகிறது. அதனால் தெரியாததைத் தெரியச் செய்தலான பொது அறிவு உத்தியை இவ்விரு கவிஞர்களும் பின்பற்றியுள்ளனர்.

"கப்பல் ஏறிக் கொள்ளலாம்;
கல்கத் தாவை அடையலாம்;
பறவைக் கப்பல் ஏறலாம்;
பாரிஸ் நகரம் போகலாம்;
மனோ ரதத்தில் ஏறலாம்;
வைய மெல்லாம் சுற்றலாம்!."[125]

என எந்த வாகனத்தில் சென்றால் எங்கெங்கு செல்லலாம் என்பதைக் கூறிப் பொது அறிவை வளர்த்துள்ளார். இவரைப்போல் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும் இவ்வுத்தியைப் பின்பற்றியுள்ளார்.

"எதுஎதிலே எதுகரையும்
எடுத்துச்சொல்ல முடியுமா
அதுபெட்ரோல் காற்றினிலே
அப்படியே கரையுமாம்.

கற்பூரம் கூடஅந்த
காற்றினிலே கரையுமாம்
முற்றிலுமாய் நீரில்உப்பு
முழுவதுமாய்க் கரையுமாம்

மண்ணெண்ணெயில் தார்கரையும்
வழுவழுப்பாம் ரப்பரோ
தண்ணீராய் பெட்ரோலில்
தானாகக் கரையுமாம்

எலுமிச்சையின் சாற்றினிலே
இந்தஉப்பு கரையுமாம்
அலுத்திடாமல் இருக்கும்மனம்
ஆர்வத்திலே கரையுமாம்.

கருணைமிகு மனமிருந்தால்
கண்ணீரிலே கரையுமாம்
உருகுகின்ற மனமிருந்தால்
ஊரேஅதில் கரையுமாம்."[126]

என கரையும் பொருட்கள் என்னும் பாடலில் பெட்ரோல் காற்றினில் கரையும். தார் மண்ணெண்ணெயில் கரையும் என்பதைப் பாடல்களில் கூறி பொதுஅறிவை வளர்த்துள்ளார். மேலும் உருகுகின்ற மனத்தையும் கூறியுள்ளார்.

### 2.2.1.13. சொல்நய உத்தி

குழந்தைகள் அன்றாடம் பெற்றோர்கள், ஆசிரியர்கள் உறவினர்கள் வழி அறிந்து வரும் இயற்சொற்களுடன் அறியாத திரிசொற்களின் பயன்பாட்டைப் பாடலில் அமைத்தல் இவ்வுத்தியின் பாற்படும். இதனை இவ்விரு கவிஞர்களும் பின்பற்றியுள்ளனர்.

''சாதி மத பேத மின்றித்
தழைத்து வாழ்வோமே – நன்கு
தழைத்து வாழ்வோமே.''[127]

இவ்வரிகளில் பேதம் என்பதற்குரிய பொருள் ''வேறுபாடாகும்'' என்பதை அறியச் செய்துள்ளார். மேலும் செழிப்பாக வாழ்வோம் என்பதைக் கூற தழைத்து என்னும் சொல்லைப் பயன்படுத்தியுள்ளார்.

''நெல்லைத் தேடி அலகால் கொத்தும்
நேர்த்தி நேர்த்தியே.''[128]

இப்பாடல் வரிகளில் சிட்டுக்குருவி உணவை அழகாக உண்கிறது என்பதைக்கூற நேர்த்தி என்னும் சொல்லைப் பயன்படுத்தியுள்ளார். நேர்த்தி எனும் சொல்லுக்குரிய பொருள் அழகாகும் என்பதைக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி உணர்த்தியுள்ளார். ஆங்கிலச் சொற்களின் பயன்பாட்டை ஒரு சில இடங்களில் அமைத்துள்ளனர். மேலும் சொற்கள் பல இணைந்து தொடராகி வரும் தொடர் நய உத்தியும் அமைந்துள்ளன.

#### 2.2.1.13.1.0 தொடர்நய உத்தி

சொற்கள் இணைந்து வருவதைத் தொடர் என்பர். இத் தொடரில் கற்பனையையோ (அல்லது) திரி சொற்களையோ அமைத்துக் கூறுவதை தொடர்நய உத்தி என்பர்.

பறங்கிக் கீற்றைப் போல வானில்
தெரியும் நிலாவே – உன்னைப்
பக்கு வம்செய் துண்ண லாமோ?.
சொல்லு நிலாவே.''[129]

என்ற பாடல் வரிகளில் நிலாவின் இயற்கைத் தோற்றத்தை வர்ணித்துப் பாடியுள்ளார். இவரைப்போலவே குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும் நிலவைக் குறித்த செய்திகளைத் தொடரில் கூறியுள்ளனர்.

''சித்திரங்கள் வைத்ததுபோல் வெண்முகிலே நீ
சிங்கம்புலி போலவானில் படர்ந்து திரிகிறாய்

நித்தம்குருவி பறவைபோன்று நிலவி வருகிறாய்

நீண்டுவளர்ந்த தென்னைபனை நீயுமாகிறாய்.''[130]

போன்ற வரிகள் தொடர்நய உத்திக்கு எடுத்துக்காட்டாகியுள்ளன.

''அசைநிலை பொருள்நிலை இசைநிறைக்கு ஒருசொல்

இரண்டு மூன்று நான்கு எல்லைமுறை அடுக்கும்.''[131]

என நன்னூல் நூற்பாவில் குறிப்பிட்டுள்ளபடி தொடர்கள் அடுக்குத் தொடர்களால் அமைந்த தொடர்நயங்களும் பாடல்களில் உள்ளன. இந்நயம் ஆர்வத்தையும் நினைவாற்றலையும் வளர்க்க ஏற்றதாக உள்ளது.

**2.2.1.13.2.0 பெயர்ச்சொல் அடுக்கு உத்தி**

ஒன்றன் பெயரை உணர்த்தும் சொல்லைப் பெயர்ச்சொல் என்பர். இப்பெயர்ச்சொல் அடுக்கிவருவதை பெயர்ச்சொல் அடுக்கு உத்தி என்பர்.

''சித்தெறும்பே சித்தெறும்பே

சிங்காரச் சித்தெறும்பே.''[132]

இவ்வரிகளில் சித்தெறும்பு என்ற பெயர்ச்சொல் இரண்டு முறை அடுக்கி வந்துள்ளது.இதைக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி எழுதியுள்ளார்.

**2.2.1.13.3.0 மூன்றுமுறை அடுக்கிவருதல் உத்தி:**

ஒருசொல் மூன்று முறை வருவதாகும்.

''என்ன, என்ன, என்ன அதோ

சப்தம் கேட்குதே! அடே,

எங்கள் வீட்டுத் தோட்டத் திலே

சப்தம் கேட்குதே!.''[133]

எனக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா பாடியுள்ளார்.

''மழைநீர் மழைநீர் மழைநீர்

மழையில் நனையலாம் வாரீர்

மழையில் நனைய நனைய

மகிழ்ச்சி புரளும் புரளும்.''[134]

என்ற குழந்தைக் கவிஞர் செல்லகணபதியின் பாடல்களில் இந்நய அமைப்பு கவனச் சிந்தனையையும் மகிழ்வுணர்வையும் வளர்த்துள்ளன.

**2.2.1.13.4.0 பெயரெச்சச் சொல் அடுக்கு உத்தி**

பெயர்ச்சொல் ஒரு பெயரெச்சச் சொல்லைக் கொண்டு முடிந்தால் அது பெயரெச்சமாகக் கருதப்படுகிறது. தொடர்களில் பெயரெச்சச் சொற்கள் இரண்டுமுறை அடுக்கி வருவதைப் பெயரெச்சச் சொல் அடுக்கு உத்தி என்பர். இவ்வுத்தி நயம் இவ்விரு கவிஞர்களின் பாடல்களில் உள்ளன.

"சின்னச் சின்னக் கோபுரம்
சிற்பி செய்யாக் கோபுரம்
என்னைப் போல் மூன்றடி
இருக்கும் அந்தக் கோபுரம்."[135]

என்று பெயரெச்சச் சொல் அடுக்கு உத்தியைப் பயன்படுத்தியுள்ளார்.

**2.2.1.13.5.0 வினையெச்சச் சொல் அடுக்கு உத்தி:**

ஒரு வினையெச்சச் சொல்லுடன் இணைந்த எச்சச்சொற்கள் அடுக்கி வந்த பாடல்கள் உள்ளன.

"கடித்துக் கடித்துத் தின்றாராம்
கணக்கைக் கூட்டிப் பார்த்தாராம்
.
ஏழும் ஏழும் பதினாலாம்.
எலியார் ஏப்பம் விட்டாராம்!"[136]

இப்பாடல் வரிகளில் 'கடித்து' என்ற வினையெச்சச்சொல் இரண்டு முறை அடுக்கி வந்து கணக்கைக் காட்டியுள்ளன. இவரைப் போல் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும் இந்நயத்தைப் பின்பற்றியுள்ளார்.

குட்டிக் குட்டிச் சுண்டெலி'
எட்டி எட்டிப் பார்க்குதாம்."[137]

இவ்வரிகளில் 'எட்டி' என்னும் எச்சச்சொற்கள் இரண்டு முறை அடுக்கி வந்து எலியைப் பிடிக்க முடியாது அது சுறுசுறுப்பானது என்பதைக் குழந்தைகளுக்கு உணர்த்தியுள்ளார்.

**2.2.1.13.6.0 அடைமொழி அடுக்கு உத்தி**

உருவில் சிறிய பொருள்களும், பெரிய பொருள்களும் சிறப்பான பொருள்களும் உண்டு. இவற்றை அடைமொழி கொடுத்து அழைப்பர். இந்த அடைமொழி உத்தியை இவ்விரு கவிஞர்களும் தொடர்நயத்தை மேன்மைப்படுத்தப் பயன்படுத்தியுள்ளனர்.

"மந்தை மந்தை யாகவே
மாடு கூடி மேய்ந்திடும்
.
சாரை சாரை யாகவே
தரையில் எறும்பு ஊர்ந்திடும்

நேரில் தினமும் பார்க்கின்றோம்.
நீயும் நானும் தம்பியே!."[138]

என்று அடைமொழி அடுக்கு உத்தியைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா பின்பற்றியுள்ளார்.

"நல்ல நல்ல செயல்களைத்தான்
நாளும்செய்வேன் என்றுதான்
சொல்லவைக்கும் பிறந்தநாள்
சொன்னபடி செய்யும்நாள்."[139]

என்று குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா தன் பாடல்களில் அடைமொழிச் சொற்களைப் பயன்படுத்தியதுபோல் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும் பயன்படுத்தியுள்ளார். இவ்வாறு இவர்கள் பயன்படுத்திய அடைமொழி அடுக்கு ஒற்றுமைக்கு, நல்ல செயல்களுக்கு வலிமையூட்டியுள்ளது.

இவ்வாறு தொடர்நய உத்திகளைப் பயன்படுத்திய இவ்விரு கவிஞர்களும் அணிநய உத்தியையும் பயன்படுத்தியுள்ளனர்.

### 2.2.1.14. அணிநய உத்தி:

அணி என்பதற்கு 'அழகு' என்னும் பொருள் உண்டு. பொருளை நிறத்தாலும் வடிவ அமைப்பாலும் அழகு செய்வதைப்போல செய்யுட்களை வார்த்தைகளால் அழகுபடுத்துவதை அணிநய உத்தி என்பர். தண்டியலங்கார ஆசிரியர் முப்பந்தைந்து வகையான அணிகளை வகைப்படுத்தியுள்ளார். ஆனால் இவ்விரு கவிஞர்களின் பாடல்களிலும் குழந்தைகளின் அறிவு வளர்ச்சிக்கு ஏற்ப இவ்வுத்திகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

உவமை என்பது பழங்காலச் சொல் ஆகும். இந்த உவமையை எடுத்துக்காட்டு என்றும் கூறுவர். அதனால் இவர்களின் அறிவு வளர்ச்சியைக் கருத்தில்கொண்டு போலச்செய்யும் குழந்தைகளுக்கு ஏற்ற வாழ்க்கை நடைமுறைச்செயல்களை விளக்க ஒத்த உவமைகளையும் உருவகங்களையும் உத்திகளாய்ப் பயன்படுத்தியுள்ளனர்.

### 2.2.1.14.1 உவமையுத்தி

மனிதனை அவனது செயல்களால் முன்னேற்றச் செய்யலாம் என்பதைக் கருத்தில் கொண்டு செயல்களால் வலிமைப்படுத்தும் உவமைகளைப் பாடல்களில் இவ்விரு கவிஞர்களும் கையாண்டுள்ளனர்.

"வெள்ளிக் கம்பி போலப் பெய்து
விரட்டி விட்ட தெங்களை
துள்ளிக் குதித்து வீடு சென்றோம்.
துரித மாக யாவரும்."[140]

என்ற பாடல் வரிகளில் மழை பெய்வது இயல்பு. அந்த மழையை இயல்பாகக் கூறாமல் வெள்ளிக் கம்பி போல என்று மழையின் வெள்ளைநிறத்தைக் காட்டவும், மழையில் நனையக்கூடாது என்பதை உணர்த்தவும் இவ்வுவமையைப் பயன்படுத்தியுள்ளார்.

"வெள்ளைப் பறவை போலே அதுவும்
மேலே நமக்குத் தோன்றுது.

மேகத் திற்குள் புகுந்து புகுந்து
வேடிக் கையும் காட்டுது."[141]

வெள்ளைப்பறவை போல ஆகாயத்தில் பறக்கும் விமானம் உள்ளதாகக் கூறி செயற்கைப் பொருளை அறியச் செய்துள்ளார்.

"சிப்பாய்கள் நிற்பதுபோல் - அதோ
தீப வரிசையம்மா,
எப்போதும் இப்படியே - இருந்தால்
இன்பம் பெருகுமம்மா."[142]

என தீபங்களின் வரிசைகள் சிப்பாய்களின் வீரச் செயலை நினைவு கூறச் செய்துள்ளன. சிப்பாய்கள் விளக்குப் போல இருந்து அடுத்தவர் வாழ்வில் விளக்கேற்றுகிறார்கள். அதனால் குழந்தைகளும் அடுத்தவர்க்குப் பயன்படவேண்டும் என்பதைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா உணர்த்தியுள்ளார்.

"கடவுள் பணியைப் போலவே
கல்விப் பணியும் சிறந்ததாய்த்
திடமாய் நம்பித் தினமுமே
தேர்ந்த கல்வி தருபவர்.
எங்கள் கல்விச் சாலையில்
இருக்கிறார்கள். ஆதலால்,
இங்கே நாங்கள் யாவரும்
இன்ப மாகப் பயில்கிறோம்."[143]

இப்பாடல் வரிகளில் கடவுள் பணி போல கல்வி கற்பிக்கும் ஆசிரியர் தொழில் அமைந்துள்ளதாகக் கூறி ஆசிரியரை நேசிக்கச் செய்ய உவம உத்தியைப் பின்பற்றியுள்ளார்.

"அப்பா வைப்போல் பெரியவனாய்
ஆன வுடனே நானுமே
மாட்டைக் கொண்டு கலப்பை பூட்டி
மண்ணை நன்கு உழுவேனே
நாட்டில் உள்ள பஞ்சம் போக
நானும் உதவி செய்வேனே."[144]

இவ்வாறு குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பாவின் பாடல்களில் காணப்படும் உவமைகள் மழையின் இயல்புகளை தீப ஒளியின் இயல்பினை வெளிப்படுத்துகின்றன. மேலும் நாட்டைப் பஞ்சத்திலிருந்து நீக்கி வளமைப்படுத்தலாம் என்ற சிந்தனையையும் உணர்த்தியுள்ளன. இதை இன்றைய குழந்தைகள் நாளையத் தலைவர்களாக ஆன பின்னும் உணர்வதற்கேற்ற

சிந்தனைகளை உவமைகளால் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா பெறச் செய்துள்ளார். இவரைப் போல் குழந்தைக் கவிஞர் செல்ல கணபதியும் எளிய உவமைகளைப் பாடல்களில் அமைத்துள்ளார்.

“சேவல் கூவுது ஏன்?
சீக்கிரம் நீ எழத்தான்!
கூவும் கோழியைப் போல்
கொஞ்சம் கண்விழிப் பாய்!”[145]

காலை நேரத்தில் எழும் சேவலைப்போல சீக்கிரம் எழுந்திருக்க வேண்டும்.

“குதித்துக் குதித்து ஆடுகிற
குழந்தைகள் நாங்கள் எங்களைப்போல்
குதித்தா யேநீ கடலலையே
கொள்ளை கொண்டாயே சோதரரை.”[146]

குழந்தைகளுக்கு மகிழ்ச்சி அளிக்கும் கடலலை குதித்தால் துன்பம் விளையும்.

“தூங்கிடும் புலியை எழுப்புதல் போலே
தூங்கிய இந்திய மக்களிடம்
ஆங்கி லேயரை விரட்டி அடித்திடும்
ஆவே சத்தை வளர்த்தானே.”[147]

புலியை எழுப்புதல் கடினமானதுபோல ஆங்கிலேயரையும் விரட்டி அடிப்பது கடினமான செயல் ஆகும். இதைச் செய்த பாரதியின் செயலை உவமையால் விளக்கியுள்ளார்.

“சின்னக் குருவி முயற்சியால்
சிறிய கூடு கட்டினால்
உன்னைப் போலச் சிறுவனால்
ஊரை வெல்ல முடியுமே!”[148]

கூடு கட்டும் சிறிய குருவியின் முயற்சியைப் பின்பற்றினால் வெற்றி பெறலாம் என்ற சிந்தனையை உணர்த்தியுள்ளார்.

“கண்மாய் குளத்தைப் பார்க்கும் போது
கடுகு போலத் தொட்டியாம்!
வண்ண மீன்கள் அதிலும் கூட
வம்பில் லாமல் வாழுமாம்!”[149]

என்று ஒற்றுமை வலிமையடைய மீன்களை எடுத்துக்காட்டாகக் கூறியுள்ளார்.

**2.2.1.14.1.1 எடுத்துக்காட்டு உவமையணி:**

உவமானத் தொடரையும் உவமேயத் தொடரையும் தனித்தனியே கூறி இடையில் போல என்னும் உவமஉருபு தொக்கு நிற்கும்படிப் பாடுவது எடுத்துக்காட்டு உவமையணி ஆகும்.

“தண்ணீ ரில்லாக் குளத்திலே
தாகம் தீர்க்கச் செல்வரோ

அன்பில் லாத மனிதரை
யார்தான் விரும்பப் போகிறார்.”[150]

தண்ணீர் இல்லாத குளத்திற்கு தாகம் தீர்க்கச் செல்ல மாட்டார்கள். அதுபோல அன்பில்லாத மனிதரையும் யாரும் விரும்ப மாட்டார்கள். இந்த சிந்தனையைப் போல என்னும் உவம உருபு மறைந்து வெளிப்படுத்தியுள்ளது. இதைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா பின்பற்றியுள்ளார்.

“தன்னைத் தந்து தியாகம் செய்வதில்
தாயுடன் ஆசான் ஒன்றேதான்
தன்னைத் தந்து துயரையும் ரசிக்கும்
தகுதியால் ஆசான் தாய்க்குச்சமம்”[151]

எனத் தன்னைத் தந்து தியாகம் செய்வதில் சிறந்தவர் ஆசான் என்பதை உவமை நயத்தால் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி வெளிப்படுத்தியுள்ளார்.

**2.2.1.14.2. உருவக உத்தி:**

உவமைக்கும் பொருளுக்கும் (உவமேயம்) வேறுபாடு ஒழித்து இரண்டும் ஒன்றே என்பதோர் உள்ளுணர்வு தோன்றக் கூறுதல் உருவக அணியாகும். அதாவது உவமேயத்தில் உவமையை ஏற்றிக்கூறுதல் ஆகும்.

“காலால் உதைத்த பந்து வானைக்
கட்டிப் பிடித்ததோ?
பால்நி லாவாய் வானில் தோன்றிப்
பகட்டு கின்றதோ?

படித்தி டாத பையன் தேர்வில்
வாங்கும் வட்டமோ?
நெடிய வானில் நிலவாய் மாறி
நீந்து கின்றதோ?”[152]

நிலவுப்பந்தைக் காலால்உதைத்ததாகப் பாடிக் குழந்தைகளின் படிப்பை வலிமையடையச் செய்துள்ளார்.

இவ்விரு கவிஞர்களும் சொல்லால் தொடரால் அணியால் அழகுபடுத்திக் குழந்தைகளைச் சிந்திக்கச் செய்துள்ளனர்.

**2.2.1.15.0 புதுமை உத்தி:**

பொதுவாக இறைவனிடம் மனிதர்கள் தான் வரம் கேட்பது வழக்கம். ஆனால் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா இதற்கு மாறாகப் பறவை வரம் கேட்பதாக ‘பறவை

வரம்’ என்னும் பாடலை எழுதியுள்ளார். கடவுள் தன்னிடம் வந்து எவ்வரம் வேண்டும் எனக் கேட்டால் இன்னிசை பாட வாய்ப்புத் தரவேண்டும் என்று பறவை கேட்பதாகக் கூறியுள்ளார்.

“எப்படி உணவைச் சேர்ப்பதெனும்
ஏக்கம் இன்றி இருந்திடுவேன்
இப்படி நாமேன் இல்லையென
மாந்தர் ஏங்கிட செய்திடுவேன்.”[153]

போன்ற வரிகளில் மாந்தர் உணவிற்கு ஏங்குவதைக் குறிப்பிட விரும்பிய குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா மாறாக பறவை உணவு தேடுவதாகவும் அதனைக் கண்டு மனிதர்கள் ஏங்குவதாகவும் குறிப்பிட்டுள்ளார்.

தொன்மைச் சிந்தனைகளைப் புதிய வழிகளில் கையாளும் முறைகளை புதுமை உத்தி என்கிறோம். இந்த உத்தி முறைகளைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பாவைப் போல் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும் பின்பற்றியுள்ளார். இதற்குச் சான்றாக ‘நண்பர்களே வாழ்க’, ‘பூ எது’ ‘யாதும் ஊரே’ போன்ற பாடல்கள் உள்ளன.

“உடைமைகள் தொலைந்தால் விலகி விடாமல்
உடன்உடன் உழல்வது ஒருநட்பு
உடைகள் நழுவினால் மானம் காத்திட
உதவிடும் கைகளாய் ஒருநட்பு.”[154]

மானத்தை, பொருளைக் காப்பவர்களாக நண்பர்கள் அமைய வேண்டும் என்பதை உணர்கிறோம்.

“உதைத்த காலையே சுமக்கும் செருப்புபோல்
உன்னை விலகிடா ஒருநட்பு.”[155]

ஏனென்றால் இன்றைய இளஞைர்களில் சிலர் பெற்றோர்களிடம் பணத்தைப் பெற்று சுகத்திற்காக நண்பர்களுடன் அலைகின்றனர். இவ்வாறு இருக்கும் நண்பர்களைவிட என்றும் துன்பத்தில் செருப்புபோல் உதவும் நண்பர்களே சிறந்தவர்கள் என்பதைப் பதிவு செய்துள்ளார்.

“மனிதனின் மானம் காப்பதற் காக
மலர்கிற மலரே பருத்திப்பூ.
இனிஒரு பூஇதைப் போல்உத விடுமோ
எனவே சிறந்தது பருத்திப்பூ

கேள்வியைக் கேட்டவர் அக்பர் அதற்கு
கிடைத்தது பதில்தான் பாபரிடம்
ஆழ்ந்த சிந்தனை பாபரைப் போன்ற
அறிஞரே பதிலைத் தரமுடியும்.”[156]

பூக்களில் சிறந்த பூ எது? என அக்பர் கேட்ட கேள்விக்கு, மானத்தைக் காப்பதற்குரிய ஆடையைத் தரும் பருத்திப்பூவே சிறந்தது என்று பாபர் கூறிய விடையை அறிய வைத்துள்ளனர்.

“வேடந் தாங்கல் பறவையும்
விரும்பி ரஷ்யப் பறவையை
ஓடி வாவென அழைக்குமே
உறவும் உலகாய் விரியுமே

ஆஸ்தி ரேலியா பறவையும்
ஆர்வத் தோடு இதம்பெற
பாச மோடு இந்தியா
பறந்து வந்து சேருமே.

இதந்தரும் வேடந் தாங்கலும்
இருகரம் நீட்டி அழைக்குமே
பதமும் பண்பும் அன்புதான்
பரிவுடன் பறவைகள் இணையுமே.

யாதும் ஊரே உலகிலே
யாவரும் சொந்தம் எனும்தமிழ்
வேதப் பொருளை பறவையும்
வேண்டிக் கற்றது யாரிடம்

சிறகடிப் போமா பறவைபோல்
சிறகடிப் போமா பறவைபோல்
உறவென உலக மானுடம்
ஒன்றாய்ச் சேரும் வண்ணமாய்”[157]

என்ற இப்பாடல் வரிகளில் ‘யாருவம் கேளிர்’ என்ற புறநானூற்றுச் சிந்தனைகளை நினைவு கூறப் பறவைகளை உதாரணமாகக் கூறி அனைவரும் உறவினர் என்ற சிந்தனையை தெளிவுபடுத்தியுள்ளார்.

**2.2.1.16. உணர்வு உத்தி**

இவ்வாறு ஆங்காங்கு பல்வேறு உத்திகளைக் கையாண்ட இவ்விரு கவிஞர்களும் குழந்தைகளுக்குத் தாயாகவும் தந்தையாகவும் இருந்து அறிவுரை கூறுதல் சிறந்ததாகும் என்பதுணர்ந்து உறவுகளின் உணர்வுகளைத் தன் உணர்வுகளாக்கி குழந்தைப்பாடல்களைப் படைத்து குழந்தை இலக்கியத்தை வளர்ச்சியடையச் செய்ததை உணர்வுத்தி என்னும் தலைப்பால் அறியலாம்.

உணர்வு என்பது மனதிலும் உடலிலும் தோன்றும் மாற்றங்கள். மனிதனின் உணர்வு பல்வேறு கருத்துகளை எடுத்துரைக்க உதவுகிறது. நல் உணர்வாக அமைந்தால் அது வீட்டை, நாட்டை உலகை வளர்க்கும். “உணர்வில் மாபெரும் சக்தி உறைந்துள்ளதால் அது வாழ்க்கையை உயர்ந்த நிலைக்கு அழைத்துச் செல்லும்.”[158] என்ற கே.மூர்த்தியின் கூற்றிற்கேற்ப சமுதாயம் ஓரளவு முன்னேறி இருந்தாலும் பல இடங்களில் தாழ்ந்த நிலையே காணப்படுகிறது. இதனை இவ்விரு கவிஞர்களும் உணர்ந்ததால் பல்வேறு உணர்வினைப் பயன்படுத்தி சமுதாயத்திற்குத் தேவையான அன்பு, அமைதி, மொழிப்பற்று, நாட்டுப்பற்று பற்றிய சிந்தனைகளைக் கூறியுள்ளனர்.

**2.2.1.16.1. உணர்வால் தாயாதல் உத்தி:**

தாய் ஆளுமை வளர்ச்சிக்கு உதவுபவள்: ஒழுக்கத்தை வளர்ப்பவள் அதனால்,

“எழுந்து காலைக் கடனையே
இனிது நீயும் முடித்திடு
தொழுது புத்த கத்தினைத்
திறந்து பாடம் கற்றிடு.”[159]

எனக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா உணர்வால் தாயாகி அறிவுரை கூறியுள்ளார்.

“சேவல் கூவுது ஏன்,
சீக்கிரம் நீ எழத்தான்
கூவும் கோழியைப் போல்
கொஞ்சம் கண்விழிப் பாய்!”[160]

“பள்ளிக்குச் சென்று
படிக்கலாம் அறிவியல்
புள்ளிக் கணக்கும்
புரிந்து கொள்ளலாம்!

உலகச் செய்திகள்
உள்ளம் அறியவே
நிலவும் செய்தித்
தாள்கள் படிக்கலாம்

நல்லதைக் கெட்டதை
நண்பர் நம்மிடம்
சொல்லக் கேட்கலாம்
உண்மை அறியலாம்.”[161]

போன்ற பாடல் வரிகளில் தாயே காலை நேரப் பழக்கங்கள் முதல் குழந்தைகள் கற்கும் அனைத்து வேலைகளையும் கற்றுக் கொடுப்பவள். அதனால் தாயை மதிக்க வேண்டும் எனக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி கூறியுள்ளார்.

**2.2.1.16.2. உணர்வால் தந்தையாதல் உத்தி**

ஆளுமை அறிவை வளர்ப்பவர் தந்தை. அதனால் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா உணர்வால் தந்தையாகி அறிவுரை கூறியுள்ளார்.

"தோலை உரித்த பிறகுதான்
சுளையைத் தின்று பார்க்கலாம்

ஓட்டை உடைத்த பிறகுதான்
உள்ளே பருப்பைக் காணலாம்

உலையில் அரிசி வெந்துதான்
உண்டு பசியைப் போக்கலாம்

துணியைத் தைத்த பிறகுதான்
சொக்காய் போட்டு மகிழலாம்

எழுத்தைக் கற்ற பிறகுதான்
ஏட்டைப் படித்து அறியலாம்

பாடு பட்ட பிறகுதான்
பலனைக் கண்டு மகிழலாம்."[162]

என சட்டை வாங்கித் தரும் தந்தையே இந்த அறிவுரையைக் கூறுவதாகப் பாடியுள்ளார். இவரைப் போல் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும் தந்தையாகி அறிவுரை கூறியுள்ளார்.

"தினமும் ஒருகுறள் படிப்பதனால்
தெரியும் நன்மை தீமையெல்லாம்!
மனதில் பிறரைத் தம்மைப்போல்
மதிக்கச் சொல்லும் திருக்குறளாம்!

யார்க்கும் நன்மை செய்வதெனும்
அன்பை வளர்க்கும் திருக்குறளாம்."[163]

எனத் திருக்குறள் என்னும் நூல் வாழ்வில் உள்ள தீமைகளைக் களைய ஏற்றது. அதனால் திருக்குறளைத் தினமும் படிக்கவேண்டும் என உணர்வால் தந்தையாகி அறிவுரை கூறியுள்ளார்.

**2.2.1.16.3 உணர்வால் குழந்தையாதல் உத்தி**

குழந்தை ஒரு கருத்தைத் தன் மனத்தால் தானே உணர்தல் சிறப்பானது. அதனால் பாடல்களில் இவ்வுணர்வை அளித்தால் அது குழந்தைகள் மனதில் எளிதில் பதியும்.

குழந்தைகளைப் பெற்றெடுத்தல் பெற்றவர்கள் கடமை. ஆனால் அதற்குப் பெயர் வைத்தல் பெரியவர்கள் கடமை. இது சில நேரங்களில் குடும்ப உறவுகளுக்குள் மனஸ்தாபத்தை விளைவிக்கிறது என்பதை,

''மூவரும் சண்டை போட்டார்கள்
முடிவே இல்லை ஆதலினால்
மூவரும் சேர்ந்து என்றனுக்கு
முப்பெயர் இட்டு அழைத்தார்கள்.
அம்மா வுக்கு சம்பந்தம்
அப்பா வுக்குச் செல்லப்பன்
பாட்டிக் கோநான் பரமசிவன்
பள்ளியில் இனிமேல் எப்பெயரோ?''[164]

என்னும் பாடல் வரிகளில் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா கூறியுள்ளார்.

''என்ன விரும்பி கேட்ட போதும்
இல்லை யென்றே சொல்லிடாள்.
சொன்ன தெல்லாம் வாங்கித் தந்து
சிரிக்க வைத்தே மகிழுவாள்.
(சின்னஞ்)
கெட்டிக் காரன் என்று சொல்லிக்
கட்டி அணைத்துக் கொள்ளுவாள்.
தொட்டி லிட்டுப் பாட்டுப் பாடித்
தினமும் தூங்கப் பண்ணுவாள்.''[165]
(சின்னஞ்)

என எதையும் கொடுக்கும் தன்மையுடையவள் தாய். அதனால் தாய்க்கு மரியாதை தர வேண்டும் எனத் தாயின் கடமைகளைக் குழந்தைக் கவிஞர் அழ.வள்ளியப்பா உணர்த்தியுள்ளார்.

மரம் வளர்த்து மழை பெறுதல் இன்றியமையாததாகும். இச்செயலில் குழந்தைகளுக்கு அக்கறை ஏற்பட வேண்டும். அதனால்,

''அம்மா வைத்த முருங்கையுமே
அளவில் லாமல் காய்க்கிறது

அண்ணன் வைத்த மாதுளையோ
கிண்ணம் போலப் பழுக்கிறது.

சின்னஞ் சிறுவன் நானும்ஒரு

செடியை நட்டு வளர்ப்பேனே!.”[166]

செடி வளர்த்தால் பயன் உண்டு என்பதை சிறுவன் உணர்வில் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா கூறியுள்ளார்.

“சங்கு சக்கர சாமியாம்;

சாய்ந்து படுத்துக் கிடக்குமாம்;

எங்கே, எங்கே தெரியுமா?

எங்கள் ஊருக் கோயிலில்

நீட்டிப் படுத்துக் கிடக்குமாம்;

நீல வண்ணச் சாமியைப்

பாட்டுப் பாடி எழுப்பலாம்.

கூட்ட மாக வாருங்கள்.”[167]

என்று இறைவனைப் பாட்டுப் பாடிக் கூடி வணங்கினால் அருளைப் பெற முடியும் என்பதைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா உணர்த்தியுள்ளார்.

“கொய்யாய் பூவே, கொய்யாய் பூவே,

தரையில் கிடப்பதேன்?

குறும்பு பையன் எறிந்த கல்லால்

பிரிய நேர்ந்ததோ? - இல்லை,

கொறிக்கும் அணில்தான் உன்னைக்

பறித்துப் போட்டதோ?”[168]

போன்ற பாடல் வரிகளில் தானாக ஒரு பழம் விழுந்தால், அதை எண்ணி வருத்தப்படுகிற ஒரு குழந்தையின் உணர்வில் பாடியுள்ளார்.

“எரியும் போதிலே – ‘ஓஹோ!’

என்று புகழ்ந்தனர்.

எரிந்து முடிந்ததும் - அந்தோ

இந்த நிலைமையா!”[169]

என வெடி வெடித்த பின்னர் ஏற்படும் தீங்கினை அனுபவத்தால் உணர்ந்த நிலையை உணர்வால் குழந்தையாகிக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா பாடியுள்ளார்.

“ஓடி ஆட ஒருநேரம்

உணவை உண்ண ஒருநேரம்

பாடம் படிக்க ஒரு நேரம்

படுத்துத் தூங்க ஒருநேரம்.

பெற்றோ ருக்கு ஒருநேரம்.
பிறருக் காக ஒருநேரம்.

இப்படி நேரம் ஒதுக்கிடுவேன்.
என்றும் இன்பம் பெற்றிடுவேன்."[170]

என்ற பாடல் வழியாகக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா நேரம் ஒதுக்கி எச்செயலையும் செய்ய வேண்டும் என உணர்வால் தானே குழந்தையாகிக் கூறியுள்ளார்.

"மறைந்த நிலவை வானில் மீண்டும்
கண்ட தம்பியின்
மறைந்த சிரிப்பும் நிலவைப் போலத்
திரும்பி வந்ததே!"[171]

நிலவைக் கண்டால் சிறு குழந்தையும் மகிழும். அதனால் சிறுவர்கள் தன்னைவிடச் சிறு குழந்தைகளின் அழுகையைச் சமாளிக்கக் கற்பிக்கும் பாடல் வரிகளைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா உணர்வால் குழந்தையாகிக் கூறியுள்ளார்.

"எங்கள் பூசை அறையிலே
இருக்கும் அழகுக் கைத்தடி."[172]

எனத் தாத்தாவின் கைத்தடிப் பெருமையை உணர்வால் குழந்தையாகி அழ.வள்ளியப்பா உணர்த்தியுள்ளார்.

"கயிற்றை அறுக்க உதவிடும்
காய் கறிகள் நறுக்கிடும்
நன்மை செய்ய நித்தமும்
நமக்கு உதவும் கத்தியால்,
கவனக் குறைவி னாலேநாம்
காயப் படுத்திக் கொள்வதா?"[173]

என்னும் பாடல் வரிகள் கவனத்துடன் பயன்படுத்தும் முறையை உணர்வால் குழந்தையாகி அழ.வள்ளியப்பா உணர்த்தியுள்ளார்.

"சுதந்தி ரத்தின் பெருமை தன்னை
உணர்ந்து வாழுவோம்-மக்கள்
துயரம் யாவும் துடைப்ப தற்கே
உறுதி பூணுவோம்.
இதயம் ஒன்றி இந்தி யத்தாய்
பெற்ற பிள்ளைகள் - நாம்
இன்ப முற்று வாழு தற்கு
வழிகள் காணுவோம்."[174]

என்னும் பாடல் வரிகளில் சுதந்திரத்தின் தன்மைகளையும் அவசியத்தையும் அதனால் நாட்டிற்கு இந்தியர்கள் அனைவரும் ஒன்று கூடிப் பாடுபட வேண்டியதன் அவசியத்தையும் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா உணர்த்தியுள்ளார்.

"என்னிடம் மந்திரக் கோல்ஒன்றும்
இருந்தால் அதனால் என்செய்வேன்?
மண்ணைப் பொன்னாய் மாற்றிடுவேன்.
வாரி வாரிக் கொடுத்திடுவேன்.
சின்னஞ் சிறிய குடிசைகளைச்
சிறந்த மாளிகை ஆக்கிடுவேன்."[175]

என்று அதிசயமான பொருளைப் பயன்படுத்தும் விதத்தைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா உணர்த்தியுள்ளார். இவரைப் போல் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும் உணர்வால் குழந்தையாகிய உத்தியைப் பின்பற்றியுள்ளார்.

"தாத்தா நடையும் தளர்ந்தால்
தாங்கிப் பிடித்துக் கொள்வேன்!
மூத்தோர் தம்மை மதிப்பேன்
முழுதும் அவர்சொல் கேட்பேன்!."[176]

என்னும் பாடல் வரிகளில் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி தாத்தாவின் சொற்களை செயல்களை மதிக்கக் கற்றுக் கொடுத்துள்ளார்.

**2.2.1.16.4 உணர்வால் அண்ணனாதல் உத்தி**

அண்ணன் தம்பி உறவு அருமையான உறவு. நல்ல அண்ணனின் சொற்களுக்குத் தம்பியும் அடிபணிவான். அதனால்,

''அண்ணன் காற்றை எந்த இடத்திலேனும்
கண்ட துண்டோ தம்பிநீ?"[177]

போன்ற பாடல்வரிகளைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா எழுதியுள்ளார்.

"கம்பி மத்தாப்பூ - அதைக்
கையில் பிடித்துமே
தம்பி கொளுத்தினான் - நண்பர்
தாவி வந்தனர்.

நண்பர் அனைவரும் - பார்த்து
நன்கு ரசித்தனர்.
வண்ணப் பொறிகளை – கண்டு
மகிழ்ந்து குதித்தனர்.

“எரிந்த கம்பியை — உடன்
எடுத்துச் சென்றுநீ
தெருவின் ஓரமாய் - போட்டுத்
திரும்பி வந்திடு.

நட்ட நடுவிலே — போட்டால்,
நடப்போர் கால்களைக்
சுட்டுப் பொசுக்கிடும்.
எனச் சொன்னார் தந்தையும்”.[178]

என மத்தாப்பூ வெடிக்கும்போது ஏற்படும் தீங்கினை தந்தையின் வழி அண்ணன் உணர்ந்து தம்பிக்குக் கூறியதைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா உணர்த்தியுள்ளார்.

**2.2.1.16.5. உணர்வால் தம்பியாதல் உத்தி**

அண்ணன் தந்தைக்குச் சமமானவன். அண்ணன் முதலில் ஒரு வீட்டில் நல்லவனாக இருக்க வேண்டும். அப்படி நல்லவனாக இருக்கும் அண்ணனின் செயல்களைத் தம்பி உணர்தல் வேண்டும். அதனால் உணர்வால் தம்பியாதல் உத்தியைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா பயன்படுத்தியுள்ளார். இதனை,

“மூர்க்க மான டாங்கிப் படையை
முறிய டித்து நொறுக்கினார்.
தாக்க வந்த விமானம் யாவும்
தவிடு பொடியாய் ஆக்கினார்.

சிங்கம் போல வீரத்தோடு
தேசம் தன்னைக் காக்கவே
எங்கள் அண்ணன் செய்த வேலை
எனக்குப் பெருமை அல்லவோ?
எனக்கு மட்டும் பெருமையில்லை;
இந்தி யர்க்கே பெருமையாம்!.”[179]

என அண்ணனின் செயல்களைத் தம்பிகளும் கடைப்பிடித்தால் பெருமை இந்தியாவுக்கே உண்டு என்பதை உணர்த்தியுள்ளார்.

**2.2.1.16.6. உணர்வால் அறிவுரையாளராதல் உத்தி**

இவ்விரு கவிஞர்களும் சிறுவர்களிடையே பழகி சிறுவர்களின் செயல்களை உணர்ந்தவர்கள். அதனால் வீதிகளில் கவனத்துடன் செல்லுதல் இன்றியமையாதது என்பதைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா கூறியுள்ளார். குழந்தைக்கவிஞர்

செல்லகணபதி கல்வி உயர உழைப்பு உயர சேமிப்பின் அவசியத்தை உணர்த்துதல் போன்ற முக்கியச் செயல்கள் வலிமையடைய உணர்வால் அறிவுரையாளர் உத்தியைப் பயன்படுத்தியுள்ளார்.

"பார்த்துப் போ தம்பி – நன்றாய்
பார்த்துப் போ தம்பி
பள்ளிக் கூடம் செல்லும் போது
பார்த்துப் போ தம்பி."[180]

இந்த வரிகளில் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா வீதிகளில் கவனமாகச் செல்ல ஏற்ற அறிவுரையைக் கூறியுள்ளார்.

இவரைப்போல் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும் சிறந்த சிந்தனைகளை உணர்வால் அறிவுரையாளராகிக் கூறியுள்ளார்.

"தேடித் தேடிப் படிப்பவர்
தெளிந்த அறிவை அடையலாம்
ஓடி ஓடி உழைப்பவர்
உயர உயர ஏறலாம்!."[181]

என்னும் பாடல் வரிகளில் படிப்பு கல்வியையும் செல்வத்தையும் தருவதால் அதை விரும்பிக் கற்க வேண்டும் என அறிவுரை கூறியுள்ளார்.

"நேர்மை யாலே உயர்ந்தவர்
நேரு மாமா போலவே
ஊரும் உறவும் போற்றவே
உயர்ந்து நிற்போம் உலகிலே."[182]

என நேர்மையைப் பின்பற்ற இவ்வுத்தியைப் பயன்படுத்தியுள்ளார்.

"பூவொரு நாள்தான் வாழும்
பூவால் மகிழ்பவர் கோடி
பூவினைப் போல்வாழ்ந் தாலும்
போதும் பிறர்மகிழ் வாரே!."[183]

பூவைப் போல் மனிதனும் முகத்தால் மலர்ந்து செயலால் மணம் பரப்பி பிறர்க்கும் பயன்பட வேண்டும் என உணர்த்தியுள்ளார்.

"அயர்ந்து படுத்தால் சோறிருந் தாலும்
சாப்பிட முடியாது
முயற்சி தொடர்ந்தால் முடியா தென்பது
உலகில் கிடையாது."[184]

சோர்வை நீக்கி முயற்சி செய்தல் அவசியமானதாகும் என்பதைக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி உணர்த்தியுள்ளார்.

"முயற்சித் தலைநீ வாழ்க்கையின்
முழுமுதற் குறிக்கோள் ஆக்கிடு."[185]

என்ற கவிஞர் செல்லகணபதியின் பாடல்வரிகள் முயற்சியே வெற்றிக்கு வழியாகும் என்பதை உணர்த்தியுள்ளன.

"ஊக்கம் கொண்டு உழைத்திடின்
உயர்ந்த பதவி கிடைத்திடும்
தூக்கம் மிகுந்த சோம்பலால்
துவண்டு போகும் வாழ்க்கையே."[186]

ஊக்கத்துடன் செய்யும் வேலையில் உயர்ந்த பதவியைப் பெறமுடியும் என்பதைக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியின் பாடல் வரிகள் உணர்த்தியுள்ளன.

"உதவி செய்ய ஓடினால்
உடலில் வலிதான் ஆயினும்
உதவி யாலே மற்றவர்
உயரும் போது மகிழ்ச்சியே!."[187]

உதவி செய்யும்போது துன்பம் விளைந்தாலும் அதனால் மற்றவர்களுக்கு மகிழ்ச்சியுண்டு என்பதை உணர்வால் அறிவுரையாளராகிக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி உணர்த்தியுள்ளார்.

"சேமிக்கும் பழக்கம் வளர்வத னாலே
தேசத்து மக்கள் பயன்பெறுவார்
சேமிப் பென்கிற திட்டத்தில் சேர்ந்து
தேசப் பெருமையை உயர்த்திடுவோம்."[188]

என்னும் பாடல் வரிகளில் சேமிக்கும் பழக்கத்தாலேயே தேசம் வளரும் எனக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி அறிவுரை கூறியுள்ளார்.

"தோல்வி கொள்பவன் இருக்கும் போதுதான்
துலங்கும் மற்றவன் வெற்றியே!
தோல்வி நேரினும் பயப்ப டாதவன்
துணிச்ச லால்வரும் வெற்றியே!."[189]

எனத் தோல்வியை நீக்கும் வழிகளைக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி கூறியுள்ளார்.

"மானுடர் வாழ்கிற நாளைவிட
மரங்களின் ஆயுளோ மிகஅதிகம்
மானுடம் வாழவே கருணையினால்
மரங்களைப் படைத்தான் பேரிறைவன்."[190]

என்ற வரிகளில் மரம் நடுதலின் இன்றியமையாமையைக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி உணர்த்தியுள்ளார்.

**2.2.1.16.7 உணர்வால் வியாபாரியாதல் உத்தி:**

வாழ்க்கைக்கு இன்றியமையாதது தொழில். கல்வி கற்றவர்க்குத் தொழிலே உயர்ந்தது. அதனால் இத்தொழிலில் உயர்வடைய நேர்மை இன்றியமையாதது என்பதை

சிறு குழந்தைகளாக இருக்கும்பொழுதே உணரவேண்டும் எனக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா ஒரு வியாபாரிபோல் உணர்த்தியுள்ளார்.

“பிச்சை எடுத்துப் பிழைக்க வில்லை
பிறரை ஏய்த்துத் திருட வில்லை
இச்சை யோடு பாடு பட்டே
இங்கு நானும் விற்கும் இந்த
ரொட்டி வாங்கிடுவாய் -தம்பி
ரொட்டி வாங்கிடுவாய்.”[191]

என்னும் பாடல் வரிகள் மூலம் நேர்மையே தொழிலை மேன்மைப்படுத்தும் என்பதை உணர்வால் வியாபாரியாகிக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா உணர்த்தியுள்ளார்.

**2.2.1.16.8 நகைச்சுவையாளராதல் உத்தி**

நகை என்பது சிரிப்பு ஆகும். உள்ளத்தில் நிகழும் அன்பு வெளிப்பாடாகும். இது உடலின் இயக்கத்திற்கும் ஆற்றலுக்கும் ஏற்றது. ஒவ்வொரு வேலையிலும் நகைச்சுவை உணர்வு உற்சாகத்தைத் தருவதாகும். அதனால் “நகைச்சுவை அறிவு நிலைக்கு ஏற்றவாறு வேறுபட வேண்டும்.”[192] என்ற அ.கி. பரந்தாமானாரின் கூற்றுக்கேற்ப இவ்விரு கவிஞர்களின் சிந்தனைகள் குழந்தைகளின் அறிவுநிலைக்கேற்ப அமைந்துள்ளன. உள்ளத்தை மகிழச்செய்ய, சுறுசுறுப்பு உணர்வு வளர்க்க, விழிப்புணர்வுடன் இருத்தல் போன்ற செயல்களுக்கு ஏற்றதாக உள்ளன. இதனை,

“தொந்தி இல்லாத கணபதியாம்
துதிக்கை இல்லாத கணபதியாம்
தந்தம் இல்லாத கணபதியாம்
என்
தம்பியே
அந்தக்
கணபதியாம்!.”[193]

என நகைச்சுவை உணர்விற்காக சில குழந்தைகளைத் தொந்தி இல்லாத கணபதி என்று கூறுவார்கள் என்பதைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா உணர்த்தியுள்ளார்.

**2.2.1.16.8.1. சிறுவர்களும் பெரியவர்களும்**

இளைஞர்களை விட பெரியவர்களுக்கு சுறுசுறுப்பு அதிகம் என்பதைப் ‘பாட்டியும் மாமாவும்’ என்னும் பாடல் மூலம் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா உணர்த்தியுள்ளார். இதனை,

“சுப்பு வுடைய பாட்டி வயது
தொண்ணூற் றொன்பது – அவள்
சுறுசு றுப்பைப் பார்க்கும் போது

இருபத் தொன்பது!.
குப்பு மாமா வயது என்ன?
இப்போ இருபது – அவர்
கூனிக் குறுகி நடக்கும் போது
அறுபத் தொன்பது!.''[194]

என்னும் பாடல் வரிகள் இளைஞர்களின் சுறுசுறுப்பை வளரச் செய்யும் நோக்கில் அமைந்துள்ளன.

**2.2.1.16.8.2. சிறுவயதில் மணச்சிந்தனை**

மணவாழ்வில் இரண்டு தாரங்கள் கூடாது இதை உணர்த்த,

''சீப்பும் எண்ணெயும் இனிவேண்டா
சிக்கன மாக வாழ்ந்திடலாம்

என்றே அற்புத சாமியுமே
எண்ணிட வில்லை, அச்சமயம்.''

இருவரை மணந்தேன் - ஆதலினால்,
என்றன் தலையும், ஐயையோ!

பாலை வனமாய்ப் போனதுவே!
பட்டது போதும்'' என்றனரே!''[195]

என்று இரு மனைவியரை மணந்தால் தொல்லைகளுக்கு ஆளாக நேரிடும் என்பதைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா உணர்த்தியுள்ளார்.

**2.2.1.16.8.3. பூனைக் கல்யாணம்**

திருமணம் செய்தால் ஒழுக்கமுள்ள மணமகனைத் தேர்ந்தெடுக்க வேண்டும். இதனை,

''திருட்டுப் பிள்ளைக்கு என்பெண்ணைத்
திருமணம் செய்ய முடியாது
வேண்டாம் இந்தச் சம்பந்தம்
வெட்கக் கேடு போய்வாரோம்.''[196]

என்ற 'பூனைக் கல்யாணம்' என்னும் பாடல் வரிகள் மூலம் ஒழுக்கமுள்ளவர்க்கே மணம் முடிக்க வேண்டும் என்ற சிந்தனையைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா விதைத்துள்ளார்.

**2.2.1.16.8.4. நேருவின் சமாதானம்**

சமாதானம் அன்பை வளர்க்கும். அதனால் ஆசைப்படும் பொருளைக் குழந்தைகளுக்கு வாங்கித் தராமல் பக்குவமாகச் சமாதானப்படுத்த வேண்டும். இதனை,

“ ‘யானைநீ கேட்டாய்
        அன்புடன் தந்தேன்.
தீனியே வேண்டாம்.
        செலவுமே இல்லை.

அடக்கமா யிருக்கும்.
        அங்குசம் வேண்டாம்.
மடித்து நீ பைக்குள்
        வைத்திடு’ என்றார்.

ஜோர் ஜோர் யானை!
        ஷோக்கான யானை!
யார்தான் தருவார்
        இதுபோல் யானை?

தலைவர் தந்தார்
        தங்கக் கையால்,
விலைக்கா வேண்டும்?
        விற்கவே மாட்டேன்!’’[197]

என்னும் பாடல் வரிகளில் நேருவைப் போல் சமாதானம் செய்து குழந்தைகளை வளர்த்தால் அவர்களது தீய பழக்கங்களைத் தவிர்க்கமுடியும் என்பதை நகைச்சுவை உத்திப் பயன்பாட்டுடன் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா கூறியுள்ளார்.

### 2.2.1.16.8.5 விலங்குகளின் இயல்புகள்

‘‘விநோத விடைகள்’ என்னும் பாடலில் மிருகங்களின் இயல்பை உணர்த்த நகைச்சுவை உணர்வு உத்தியைப் பின்பற்றியுள்ளார். மேலும்,

‘‘ஆந்தை பக்காத் திருடன் போலே
        விழித்துப் பார்ப்பதேன்? – அதே
அரச பார்வை என்று நினைத்துக்
        கொண்ட தாலேதான்!.[198]

என்ற இவ்வரிகளில் அரசன் என ஆந்தை நினைத்ததால்தான் விழிக்கிறது. அதனால் ஆந்தையைக் கண்டால் அச்சத்தைப் போக்கிக் கொள்ள வேண்டும் என்பதை உணர்வால் நகைச்சுவையாளராகிக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா கூறியுள்ளார்.

### 2.2.1.16.8.6. காசே கடவுள்

தனக்குத் தேவையான ஒன்றைப் பெற ஏற்றது முதலீடு எனப்படும் பணம். இதைக் கல்வியால் பெறுவது சிறப்பாகும். இதனை,

**அண்ணண்;** கண்ணா, அருகில் வந்திடுவாய்
**கண்ணண்;** காலில் சுளுக்கு; முடியாது.
**அண்ணன்;** கண்ணா கணக்குப் போட்டிடுவாய்.
**கண்ணன்;** கையை வலிக்குது; முடியாது.
**அண்ணன்;** கண்ணா, பாடம் படித்திடுவாய்
**கண்ணன்;** கடைவா யில்புண்; முடியாது.

**அண்ணன்** கண்ணா மாடி அறைக்குள்ளே
கறுத்த அட்டைப் பெட்டியிலே,
காசுகள் நிறைய வைத்துள்ளேன்.
கணக்காய் எண்ணிச் சொல்லிடுவாய்.
சரியாய்ச் சொன்னால் அத்தனையும்
தருவேன் உனக்கு, உனக்கேதான்!
சீடைமுறுக்கு வாங்கிடலாம்;
தின்று நீயும் மகிழ்ந்திடலாம்.

**கண்ணன்:** அண்ணா, அண்ணா, இப்பொழுதே
அத்தனை படியும் ஏறிடுவேன்
எட்டிப் பாய்ந்து பெட்டியிலே
இருக்கும் பணத்தை எண்ணிடுவேன்.''[199]

என்று இவ்வரிகளில் குழந்தை மனம் அறிந்து கூறும் எச்சிந்தனையும் வெற்றி பெறும் என்பதை நகைச்சுவை உத்தியைப் பின்பற்றி எழுதியுள்ளார்.

### 2.2.1.16.8.7 உடல் தோற்றத்தின் விளைவுகள்

உடல் தோற்றம் பிறரைத் துன்பப்படுத்தாமல் இருக்க வேண்டும். இதனை,

''சர்க்கரைச் சாமி
தாடியின் மகிமை

எடுத்துக் கூறிட
எங்கும் முயன்றால்,

தாடிபோல் அந்தச்
சரித்திரம் நீளும்.

வேண்டாம் இத்துடன்
விடைபெறு கின்றேன்.''[200]

என்னும் பாடல் வரிகளில் பிறர்க்குத் துன்பம் தராத வண்ணம் உடலைச் சரி செய்து கொள்ள வேண்டும் என்பதை உணர்த்தியுள்ளார்.

**2.2.1.16.8.8 கூச்சல் குழப்பம் தருதல்**

மனிதர்களால் வன்முறை அவ்வப்போது ஏற்படுகிறது. இதனால் இந்தியப் பொருளாதாரம் பாதிப்படைய நேரிடும் என்பதை உணர்த்த,

"சிறுத்தையே, சிறுத்தையே, ஓடுவதேன்?
சிங்கம் என்னைத் துரத்துவதால்.
சிங்கமே, சிங்கமே ஓடுவதேன்?
எங்கோ வேட்டுக் கேட்பதனால்!"[201]

இவ்வாறு மிருகங்களுக்கு வேட்டுச்சத்தம் அச்சத்தை ஏற்படுத்துதல்போல மனிதர்களுக்கு மனிதர்களின் அலறல் அச்சத்தை ஏற்படுத்துகிறது. அச்சம் ஏற்படுவதுடன் பொருளதாரமும் பாதிப்படைய நேரிடும் என்பதனை உணர்த்த உணர்வால் நகைச்சுவையாளராகிக் கூறியுள்ளார்.

**2.2.1.16.8.9 லகர ளகர வேறுபாடுணர்தல்**

ல,ள என்பது உச்சரிப்பில் குழப்பம் தரும் எழுத்துக்கள். இதனை நகைச்சுவை உத்தியைப் பயன்படுத்திக் கூறினால் குழந்தைகள் எளிதாக்கிக் கொள்வார்கள். அதனால்,

"கொல்லையில் கிடைத்தது; கொல்லையில் கிடைத்தது
கொத்துக் கொத்தாய் மல்லிகையே
கொள்ளையில் கிடைத்தது; கொள்ளையில் கிடைத்தது
கொடியவ னுக்குத் தண்டனையே!."[202]

என ல,ள கர வேறுபாடுகளை நகைச்சுவை உத்தியால் குழந்தைக் கவிஞர் அழ.வள்ளியப்பா அறியச் செய்துள்ளார்.

**2.2.1.16.8.10 மூளைப்பயன்பாடு**

மனிதன் என்பவன் வேறு. செடி கொடிகள் என்பது வேறு. இதனை உணர்த்தும் பாடலாக செடியும் சின்னத்தம்பியும் என்னும் பாடல் உள்ளது.

"சின்னச் செடியை நட்டுநான்
தினமும் தண்ணீர் ஊற்றினேன்
நன்கு செடியும் வளர்ந்தது;
நான்கு மீட்டர் உயர்ந்தது!

சின்னத் தம்பி சேகரும்
செடிபோல் வளர வில்லையே."[203]

என்னும் பாடல் வரிகள் மூலம் குழந்தைகளின் அறியாமையை விளக்கியுள்ளார்.

**2.2.1.16.8.11 உயிர்க்கொலையின் தீதுணர்தல்**

வன்முறை பெருகிய நிலையில் உயிர்க்கொலையும் அதிகமாகியுள்ளன. இச்செயல் தவிர்க்கப்பட வேண்டும் என்பதை உணர்த்த குழந்தைகளுக்கு உணர்வால் நகைச்சுவையாளராகி உணரச் செய்துள்ளார். இதனை,

''பத்துப் பேர்கள் கைகளிலே;
பத்துப் பேர்கள் கால்களிலே
மொத்தம் இருபது பேர்களடா!
வெட்டப் பட்டவை நகங்களடா!.''[204]

என நகங்களை வெட்டலாம். ஆனால் மனிதர்களை வெட்டக்கூடாது என்பதைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா உணர்த்தியுள்ளார்.

**2.2.1.16.8.12 சுகாதாரம் உயரத் தூய்மை**

தூய்மையே சுகாதாரத்திற்கு அடிப்படையாகும். அதனால்,

''தெருவில் நடந்து சென்றான்
சின்னச் சாமி என்பான்.

வாழைப் பழத்தைத் தின்றான்;
வழியில் தோலை எறிந்தான்;

மேலும் நடந்து சென்றான்;
விரைந்து திரும்பி வந்தான்;

தோலில் காலை வைத்தான்.
தொப்பென் றங்கே வீழ்ந்தான்!.''[205]

இவ்வரிகளில் சுகாதாரம் உயரத் தூய்மை அவசியமானவை என்பதை இவ்வுத்தியால் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா விளக்கியுள்ளார்.

**2.2.1.16.8.13. அச்சம் நீங்க:**

தேவையற்ற பயத்தை நீக்க நகைச்சுவையுடன் கூறினால், மனம் எளிதாக ஏற்றுக்கொள்ளும். அதனால்,

''பட்பட் வெடிகள் சத்தம் கேட்டுப்
பயந்தே ஓடி ஒளிந்த நான்
பட்பட் டென்று முதுகில் விழவே
பாட்டுப் பாடத் தொடங்கினேன்!''[206]

என்னும் இவ்வரிகள் பொருளைப் பயன்படுத்தும்போது கவனத்துடன் பயன்படுத்தினால் பொருளிழப்பிலிருந்தும் தேவையற்ற மன அச்சத்திலிருந்தும் விலக வழி கூறுகின்றன.

**2.2.1.16.8.14 சுயநலம் - பிறரது துன்பம்**

சுயநலம் என்பது தன்னலம் ஆகும். தன்நலத்தில் பிறர் துயர்ப்பட நேரிடும் என்பதை,

‘‘தாபத்துக்குத் தண்ணீர் தாரான்.
ஆபத்துக்கும் உதவான்; கொள்ளை
லாபத்துக்குப் பொருளை விற்பான்
பாபத்துக்கே ஆளாவானே!’’[207]

என்னும் பாடல் வரிகள் சுயநலம் பிறருக்குத் துன்பத்தைத் தரும் எனக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா கூறியுள்ளார்.

**2.2.1.16.8.15 தந்தையைவிட மகன் சிறந்தவன்**

ஒரு மாணவனின் தகுதியைத் தீர்மானிப்பது அவனது மதிப்பெண் பட்டியலாகும். பெற்றோர்களை விட குழந்தைகள் அறிவில் சிறந்தவர்கள். இதனை,

அப்பா நீங்கள் படிக்கையிலே
அடைந்த மதிப்பெண் பட்டியல்தான்
இப்போது உங்கள் கைகளிலே
எனது பட்டியல் இதுஎன்றான்

அதிலே அவனது மதிப்பெண்ணும்
அப்பா விற்கும் அதிகம்தான்
பதிலே இன்றிப் பட்டியலில்
பதித்தார் அப்பா கையெழுத்தை.’’[208]

என்னும் பாடல் வரிகள் மூலம் குழந்தைகள் பெற்றோர்களைவிட நல்ல மதிப்பெண்களைப் பெறுகின்றனர். அதனால் கையெழுத்து இடமாட்டேன் என்று கூறிக் குழந்தைகளைத் துன்பப்படுத்த வேண்டாம் என்பதை நகைச்சுவை உத்தியைப் பின்பற்றி குழந்தைக்கவிஞர் செல்லகணபதி கூறியுள்ளார்.

**2.2.1.16.8.16 நடுவரின் தவறு பெரிதல்ல**

போட்டிகளில் நடுவர்கள் சில நேரங்களில் தவறான தீர்ப்பைக் கூறுகின்றனர். இதற்காகக் குழந்தைகள் வருந்தக்கூடாது என்பதற்கு,

‘‘நடுவர் எதிரில் கண்ணாடி
நன்றாய்த் தெரிந்தது அவர்முகம்தான்
நடுவர் தம்முகம் பார்த்துத்தான்
நல்ல ஓவியம் என்றாரோ.’’[209]

என்ற குழந்தைக்கவிஞர் செல்லகணபதியின் பாடல்வரிகள் சான்றாகும்.

**2.2.1.16.8.17. சிறுவர் தவறு தவறல்ல**

சிறு பிள்ளைகளுக்குத் திருடும் குணம் தீர்மானிக்கப்பட்டதல்ல. அதை மாற்றும் பொறுப்பு பெரியவர்களுக்கு உள்ளது என்பதை உணர்த்த,

"திருட்டுச்சோமு பையினுள்ள
தினித்தமிட்டாய் நிறையஉண்டு.
இருட்டில்சோமு பைக்குள்சென்றே
இனிக்கும்மிட்டாய் தின்றுபாரு.

காசுயாரும் கேட்கமாட்டார்
கடுமையாகப் பேசமாட்டார்
ஏசமாட்டார் சித்தெறும்பே
இனிக்கும்மிட்டாய் தின்னவாராய்."[210]

என்னும் வரிகள் மூலம் குழந்தைகள் அறியாமல் பிறர் பொருளை எடுக்கும் செயல் திருடுதல் போன்ற தவறான செயலாகும் என்பதை உணர்வால் நகைச்சுவையாளராகித் திருத்துகிறார்.

மேற்கண்ட ஆய்வின்படி குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பாவின் பாடல்களில் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியின் பாடல்களை விட குழந்தையாகி நகைச்சுவையாளராகிப் பாடிய பாடல்கள் அதிக அளவில் உள்ளன.

குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பாவைவிட குழந்தைக் கவிஞர் செல்லகணபதி உணர்வால் அறிவுரையாளராதல் உத்திக்குரிய பாடல்களை அதிக அளவில் எழுதியுள்ளார்.

இவ்வாறு தந்தையாதல் உத்தி, தாயாதல் உத்தியைப் பின்பற்றிய இவ்விரு கவிஞர்களும் தன் வரலாற்று உத்தியையும் பாடல்களில் பின்பற்றியுள்ளனர். தன்னைப் பற்றிய வரலாறுகளைத் தானே கூறுதல் தன்வரலாற்று உத்தியாகும்.

டம்டம் டம்டம் டமாராமம்
டமாரப் பெருமை அபாரமாம்
டம்டம் எனது குரலாகும்
டமாரம் எனது பெயராகும்

ஜால வித்தை செய்யும் இடம்
சர்க்கஸ் ஆட்டம் ஆடும் இடம்.
ஏலம் கூறி விற்கும் இடம்.
எல்லா இடமும் நான்இருப்பேன்

அரசர் அடையும் வெற்றிகளை
அனைவரும் அறியச் செய்கின்ற
முரசோ எனது அண்ணாச்சி
மிருதங் கம்என் தங்கச்சி.”[211]

என டமாரத்தின் சிறப்புகளை டமாரமே கூறுவதுபோல குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா கூறியுள்ளார். இதைப் போல் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும் ‘வாய்க்கால்’ பாடலில் கூறியுள்ளார்.

**2.2.1.18.0 புலனுணர்வு உத்தி**

தன் கண்களுக்கு நேரடியாகக் காட்சி தருவதை உணர்ந்து வார்த்தைகளால் அமைத்தல் புலன் உணர்வாகும். இதற்கு எடுத்துக்காட்டாக,

“கோகு லத்துக் கண்ணன் அதோ
தெருவில் வருகிறான்.
குறும்புச் சிரிப்புச் சிரித்துக் கொண்டே
அருகில் வருகிறான்.

மேக வண்ணக் கண்ணன் அதோ
தெருவில் வருகிறான்.
மெல்ல, மெல்ல நடந்து நடந்தே
அருகில் வருகிறான்.

கையைப் பின்னால் மறைத்துக் கொண்டே
கண்ணன் வருகிறான்.
கள்ளச் சிரிப்புச் சிரித்துக் கொண்டே
கண்ணன் வருகிறான்.”[212]

எனக் கண்ணன் வரும் செய்திகளை வார்த்தைகளால் பதிவு செய்யக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா இவ்வுத்தியைப் பின்பற்றி பாடலின் முடிவில் பகவத்கீதையையும் அறியச் செய்துள்ளார்.

இவ்வாறு உணர்வு உத்தியில் கருத்துகளை விளக்கிய இவ்விரு கவிஞர்களும் திணைவேறுபாடின்மை உத்தியையும் பின்பற்றியுள்ளனர்.

**2.2.1.19.0 திணை வேறுபாடின்மை உத்தி**

மனிதனை மட்டுமல்லாமல் குருவி, காகம் போன்ற பறவைகளையும் பூனை, ஆடு போன்ற உயிரினங்களையும் உறவு முறை கூறி அழைத்தல் உயிர்களின் மீது கொண்ட கருணையாகும். அதனால் இவ்விரு கவிஞர்களும் இவ்வுத்தியைப் பின்பற்றியுள்ளனர். உதாரணத்திற்கு ஒன்றிரண்டு பாடல் வரிகள் தரப்பட உள்ளன.

“நத்தை யம்மா, நத்தை யம்மா
எங்கே போகிறாய்?
அத்தை குளிக்கத் தண்ணீர்க் குடம்
கொண்டு போகிறேன்.”[213]

எனக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா பின்பற்றியது போல் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும் இவ்வுத்தியைப் பின்பற்றியுள்ளார்.

அமெரிக் காவில் தவளை என்றால்
அதிகக் கிராக்கியாம்
யாரும் பிடிக்கும் முன்னே ஓடும்
தவளை அண்ணனே.[214]

என்னும் வரிகள் உதாரணமாக உள்ளன.

### 2.2.1.20 கற்பனை உத்தி

ஒரு மனிதனின் எதிர்கால எண்ணங்கள் கனவுகள் போன்றன கற்பனையாகும். ஒரு நிகழ்வை நடப்பதற்கு முன் நினைப்பது கற்பனையாகும். இயற்கையம்சம் நிறைந்த பேசாத உயிரினங்கள் பேசுவது போலவும், நடப்பது போலவும் உவமிப்பது கற்பனையாகும். இயற்கை சிரிக்கிறது தவழ்கிறது என்று கூறுதல் கற்பனையாகும். இவ்வாறு நடைபெற இயலாத ஒன்றை நடைபெறச் செய்தல் போல் நினைப்பது கற்பனையாகும்.

“நாம் அறிந்திருக்கும் சில செயல்கள் அல்லது நிகழ்ச்சிகளுடன் நடைபெற இயலாத சில செயல் வடிவங்களைப் பொருத்திப் பார்ப்பது.”[215] என்ற உளவியலாரின் சிந்தனையின் அடிப்படையில் ஆய்ந்து தரப்பட உள்ளன.

#### 2.2.1.20.1 கற்பனை நிகழ்வில் இயற்கைத் தோற்றங்கள்

நிலா, நட்சத்திரங்களின் இயற்கை வடிவம் குழந்தைகள் சோளப்பொறியை வீசியது போலவும் சரிகைப்புள்ளி வைத்தது போலத் தோன்றும். வில் போலவும் தோற்றமளிக்கும். ஆனால் இந்தச் சரிகையைப் பாவாடையாகப் பயன்படுத்திக்கொள்ள முடியாது. வில்லை வேட்டையாட முடியாது எனக் கூறி குழந்தைகளின் அறியாமையை நீக்க குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா இவ்வுத்தியைப் பின்பற்றியுள்ளார்.

“வில்லைப் போல வளைந்தி ருக்கும்
வெள்ளை நிலாவே – நீ
வேட்டை யாட உதவு வாயோ?
சொல்லு நிலாவே.”[216]

நிலவின் அமைப்பினைத் தெளிவுப்படுத்தியுள்ளன.

#### 2.2.1.20.2 எதிர்கால வளர்ச்சியில் கற்பனை

விஞ்ஞானிகளின் கனவை நனவடையச் செய்வது நிலா. ஏனென்றால் குழந்தைப்பருவத்திலிருந்தே இந்நிலா ஒவ்வொருவரின் கனவிலும் வளர்ந்து வருகிறது.

ஆளுமைக்குச் சிறு பிள்ளைகளாக இருக்கும்பொழுது உதவிய இந்நிலா அறிவையும் வளர்க்கும் இயல்புடையது. அதனால்

“நிலா, நிலா, ஓடிவா
நில்லாமல் ஓடிவா’
பல காலம் இப்படிப்
பாடிப் பயன் இல்லையே!

மலை மேலே ஏறிநீ
வருவாய் என்றே எண்ணினோம்
மல்லி கைப்பூக் கொண்டுநீ
தருவாய் என்றும் பாடினோம்.

எத்த னை நாள் பாடியும்
ஏனோ நீயும் வரவில்லை
சத்தம் போட்டுப் பாடியும்
சற்றும் நெருங்கி வரவில்லை

உன்னை விரும்பி அழைத்துமே
ஓடி நீ வராததால்
விண்க லத்தில் ஏறியே
விரைவில் வருவோம் உன்னிடம்!.”[217]

எனக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா பாடியுள்ளார். இவரைப் போல் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும்,

வட்ட நிலாவை
அழைப்போமா?
வானில் ராக்கெட்
விடுவோமா?
கிட்டுவை ராக்கெட்
தனில்ஏற்றிக்
கிண்ண நிலாவைப்
பிடிப்போமா?”[218]

என்னும் வரிகள் மூலம் நிலவைப் பிடிக்க விண்ணுலகுக்கு வரவேண்டும் என உணர்த்தியுள்ளார்.

### 2.2.1.20.3 விளையாட்டில் கற்பனை எண்ணங்கள்

குழந்தைகள் விளையாட்டிலே கற்பனை காணும் எண்ணமுள்ளவர்கள் இவர்கள் நாளைய ஆசிரியராக மருத்துவராகக் கனவு காண்பர். இவர்களின் கற்பனை நல்ல பொருட்களை வாங்கவும் உதவும் என்பதைக் கற்பனை உத்தியால் கூறியுள்ளனர்.

“பச்சை வண்ணக் காரு
பாய்ந்து செல்லும் பாரு
கொச்சி சேலம் வேலூர்
கோயம் புத்தூர் போகும்

வண்டி நல்ல வண்டி
வந்து பாரு தம்பி
எண்ணெய் ஏது மின்றி
என்றும் ஓடும் தம்பி.”[219]

என்று சிறுவர்கள் சிறுவயதில் வாகனங்கள் ஓட்டி விளையாடும் கற்பனை எண்ணங்கள் அவர்களை எதிர்காலத்தில் வாகனங்கள் வாங்கும் சாதனையாளர்களாக மாற்றும் என்பதற்கு உதாரணமாகக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியின் பாடல் வரிகள் உள்ளன.

“எட்டிப் பிடிக்க வானை நோக்கி
ஏறுது பாரங்கே – பட்டம்
ஏறுது பாரங்கே

கட்டிக் கரும்பாய் இனிக்கும் வித்தை
காட்டுது பாரங்கே – பட்டம்
காட்டுது பாரங்கே.”[220]

என்ற பாடல் வரிகளில் பட்டங்களின் இயல்பான நிலையைக் கற்பனை உத்தியால் கூறியுள்ளார்.

### 2.2.1.21 யாப்பு உத்தி

பொருட்களின் அகல நீளங்கள் அளவுகளாவது போல் பாடல்களில் சீரும் அடிகளும் அளவுகளாகும். இதனைப் படைப்பிலக்கிய உத்தி என்று கூறுவர். குழந்தைகளின் அறிவு வளர்ச்சிக்குத் தகுந்தாற்போல் இவ்வுத்தியை இவ்விரு கவிஞர்களும் பின்பற்றியுள்ளனர். கடினத்தளைகளை நீக்கியுள்ளனர். எளிய அடிகளைப் பாடல்களில் பின்பற்றியுள்ளனர். எதுகை, மோனை முதலிய தொடை நயங்களைக் குழந்தைகளுக்குத் தகுந்தாற்போல் அமைத்துள்ளனர்.

இந்த உத்தியை யாப்பிலக்கிய முறையில் பயன்படுத்துவதால் படைப்பிலக்கிய உத்தி என்றும் அழைப்பர்.

**2.2.1.21.1 அடி**

சீர்களால் ஆகியது அடி ஆகும். யாப்பருங்கலக்காரிகை ஆசிரியர் கூறியுள்ள அடிகள் பாடல்களில் பின்பற்றப்பட்டுள்ளன.

"குறள்இரு சீரடி சிந்துமுச் சீரடி, நாலொருசீர்
அறைதரு காலை அளவொடு நேரடி, ஐயொருசீர்
நிறைதரு பாதம் நெடிலடி யாம் நெடு மென்பணைத்தோள்
கறைகெழு வேற்கண்நல் லாய்! மிக்க பாதம் கழிநெடிலே."[221]

என்று இந்நூற்பாவில் கூறப்பட்டுள்ள செய்திகளின் அடிப்படையில் அடிகள் பின்பற்றப்பட்டுள்ளன.

**2.2.1.21.1.1 குறளடி**

இரு சீர்களால் ஆகிய அடி குறளடி ஆகும். இதற்கு எடுத்துக்காட்டாக,

"தென்னைமரத்தில் ஏறலாம்
தேங்காயைப்பறிக்கலாம்."[222]

தென்னைமரம் தேங்காயைத் தரும் என்ற பயனறி உத்திச் சிந்தனைகளைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா இப்பாடல் வரிகளில் குறிப்பிட்டுள்ளார்.

"தாயின் மொழி
தமிழைப் படி
யாரும் இதை
அறியப் படி"[223]

தாய்மொழியான தமிழை அனைவரும் அறியப் படித்தால் வாசிப்புப் பிழைகளைத் தவிர்க்கலாம் என்பதைக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி குறிப்பிட்டுள்ளார்.

**2.2.1.21.1.2 சிந்தடி**

மூன்று சீர்களால் அமைந்த அடி சிந்தடியாகும்.

"காக்கை ஒன்று வந்தது;
காகா காகா என்றது.

குயிலும் அங்கே வந்தது.
குகூ குகூ என்றது."[224]

என்று காகத்தின் குரலை குயிலின் குரலை சிந்தடியால் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா அறியச்செய்துள்ளார்.

"சின்னச் சின்னக் கிளியிது
சிவந்த மூக்குக் கிளியிது."[225]

என்ற பாடல்வரிகள் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி கிளியின் தோற்றத்தை எளிய அடிகளால் கூறியுள்ளார்.

**2.2.1.21.1.3 அளவடி**

நான்கு சீர்களால் அமைந்த அடியை அளவடி (அ) நேரடி என்பர்.

"தைதை என்றே ஆடு கின்றாள்
தங்கை மீனா ஜோராய் -என்
தங்கை மீனா ஜோராய்."[226]

ஆடுவது சிறந்ததாகும் எனக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா அளவடிகளைப் பின்பற்றிக் கூறியுள்ளார்.

"அந்தநிலா வானத்திலே
அதோபார் அதோபார்
சந்தமாமா என்றழைக்கும்
தம்பிப்பாப்பா இதோபார்!."[227]

என்ற பாடல் வரிகள் அளவடியால் நிலாவின் தோற்றத்தை குழந்தைக்கவிஞர் செல்லகணபதி அறிய வைத்துள்ளார்.

**2.2.1.21.1.4. நெடிலடி**

ஐந்து சீர்களால் அமைந்த அடியை நெடிலடி என்பர்.

"ஆனையும் ஒட்டகமும்- நல்ல
அழகுக் குதிரைகளும்
மானும் மயிலும் உண்டு – யாவும்
மரத்திலே செய்தவையாம்!."[228]

என நூலகம் விளையாடும் சூழ்நிலையில் அமைவதை வலியுறுத்திக் கல்வியை உயரச் செய்ய அடி உத்தியாகிய நெடிலடியாலும் பாடலைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா அமைத்துள்ளார்.

"எட்டாத உயரத்திலே
இருக்கும் நிலாவே – நானும்
சிட்டாகப் பறந்து வந்து
சேர்ந்து பேசவே."[229]

என இவரைப்போல் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும் நெடிலடி உள்ள பாடலை எழுதியுள்ளார் என்பதற்குச் சான்றாகியுள்ளன.

இவ்வாறு இவ்விரு கவிஞர்களும் குழந்தைகள் எளிமையுடனும் படிப்பறிவை வளர்க்கும் நோக்குடனும் திகழச் சீர்கள் குறைந்த அடிகளையும், சீர்கள் நிறைந்த நெடிலடிகளையும் பின்பற்றியுள்ளனர். பாடல்களில் கடினத்தன்மையை நீக்கியுள்ளனர். தொடை நயத்தைப் பின்பற்றியுள்ளனர்.

**2.2.1.21.2 தொடைநய உத்தி:**

யாப்பருங்கலக்காரிகை ஆசிரியர் எட்டுவகையான தொடைகளைக் கூறியுள்ளார். குழந்தைப்பாடல்களில் எதுகைத் தொடை, மோனைத்தொடை, இயைபுத்தொடை, முரண்தொடை, அந்தாதித்தொடை, இரட்டைத்தொடை போன்ற தொடைநயங்கள் குழந்தைகளின் விருப்பத்திற்கு ஏற்றாற்போல் உள்ளன. இதனை, ‘‘எதுகை மோனையுடன் கூடிய சந்தப்பாடல்களாக சிறுவர்ட்குப் பாடல்கள் எழுதுவது வழக்கம். ஆனால் அதுமட்டுமே இன்றைய சிறுவர்கட்குப் போதுமானதாக இல்லை. அவர்களின் அறிவுப் பசிக்குப் போதுமான அளவில் தீனி போடும் விதத்திலும் பாடல்கள் இருக்கவேண்டியது அவசியம்.’’[230] என்ற மு.நடராஜனின் கூற்றிற்கேற்றாற்போல் குழந்தைகளுக்கு அவசியமான கருத்துகளை எதுகை மோனை நயத்தில் பாடல்களைப் படிப்பதற்கேற்ற எளிமையுடன் அமைத்துள்ளனர்.

பொதுவாகச் சிறுவர்களை நினைவுகூரச் செய்வது முதலடிகளும் முதற்சீர்களும் ஆகும். இதனால் கருத்துகள் எளிதில் பதியும்.

**2.2.1.21.2.1 மோனை:**

பாடல்களின் அடிகளிலும் சீர்களிலும் முதலெழுத்துக்கள் ஒன்றிய தன்மைகள் நிறைந்திருந்தால் அது மோனை நயப் பாடலாகக் கருதப்படுகிறது.

‘‘ஆண்டு பிறந்தது , ஆண்ட பிறந்தது,
ஆண்டு பிறந்ததடா!
அன்பும் அறமும் அறிவும் வளர்ந்திட
ஆண்டு பிறந்ததடா!

ஆண்டு பிறந்தது, ஆண்டு பிறந்தது,
ஆண்டு பிறந்ததடா!
அன்னைநன் னாடும் மொழியும் சிறந்திட
ஆண்டு பிறந்ததடா!’’[231]

என்ற இப்பாடல் வரிகளில் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா ஆண்டின் தன்மைகளை உணர்த்தியுள்ளார். ஆண்டு பிறப்பது அன்பும் அறமும் தழைப்பதற்காக என்னும் சிந்தனையை எளிதில் பதிய வைக்கப் பாடல் வரிகளில் முதலில் உள்ள சொற்கள் முழுவதும் எதுகை மோனை நயத்தால் அமைந்துள்ளன.

இவ்வாறு முதல் இரண்டு அடிகளில் முதல் எழுத்து ஒன்றிய தன்மையால் மோனைநயம் அமைந்துள்ளது. இது குழந்தைகளுக்கு விருப்பமானதாகும் என்பதற்கு,

"**பூ**க்களில் சிறந்த பூஎது தெரியுமா
**பூ**க்களில் சிறந்தது மல்லிகையா
**பூ**க்களில் பலநிறம் நறுமணம் கொண்ட
புத்தம் புதிய ரோஜாவா."[232]

என்ற இப்பாடல் வரிகள் உதாரணமாகும்.

**2.2.1.21.2.2 அடிமோனை**

அடிதோறும் முதலெழுத்துகள் ஒன்றுவதை அடிமோனை என்பர். இதற்கு எடுத்துக்காட்டாக,

'இந்தியன்' என்று சொல்லிக் கொள்வதில்
என்றும் பெருமை கொண்டிடுவேன்!
இந்திய னாக இருந்திட நானும்
என்றும் முயற்சி செய்திடுவேன்!
இந்தியர் அனைவரும் ஒன்றென எண்ணி
என்றும் அன்பாய் நடந்திடுவேன்!
இந்திய நாட்டின் பெருமை உயர
இயன்றதை யெல்லாம் செய்திடுவேன்!"[233]

என்ற இப்பாடல் வரிகளில் முதலெழுத்துகள் முழுவதும் ஒன்றி வந்துள்ளன. இதுபோல் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும் 'அம்மா' என்னும் பாடலிலும் இந்நயத்தை அமைத்துள்ளார்.

**2.2.1.21.2.3 இணை மோனை**

முதல் இரு சீர்களில் மோனை வருவதை இணை மோனை என்பர்.

"சீனி மிட்டாய்க் கடையிலே
**சி**ன்னச் **சி**ன்னப் பொம்மைகள்
**சி**ன்னச் சின்னப் பொம்மைகள்
சீனி மிட்டாய்ப் பொம்மைகள்."[234]

எனக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா எழுதிய இப்பாடல் வரிகளில் இரண்டாம் வரியில் முற்சீரிலும் இரண்டாம் சீரிலும் மோனை நயம் அமைந்துள்ளது. இவரைப்போல் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும் இந்நயத்தைப் பின்பற்றியுள்ளார் என்பதற்கு 'நிறங்கள்' என்னும் பாடலில் உள்ள முதல் பத்தியில்,

"**கா**க்கை **கா**க்கை
கருப்பு நிறம்."[235]

என்ற வரிகள் சான்றாகும்.

**2.2.1.21.2.4 பொழிப்பு மோனை**

முதற்சீரிலும் மூன்றாம் சீரிலும் மோனை வரத் தொடுப்பதை மோனை நயம் என்பர்.

"**ந**றுக்கி எறிந்த **ந**கத்தைப் போல

இருக்கும் நிலாவே – நீ

நகர்ந்து நகர்ந்து போவ தெங்கே?

சொல்லு நிலாவே."[236]

நிலாவைப் பற்றிய கற்பனை எண்ணத்தை வளர்க்க குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா மோனை நயத்தைப் பின்பற்றியுள்ளார்.

"**ப**ள்ளி எங்கள் **ப**ள்ளியாம்

படிக்க வைக்கும் பள்ளியாம்"[237]

என கல்வி கற்கும் இடமான பள்ளியில் கற்கும் ஆர்வத்தை வளர்க்க இந்நயத்தினைக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும் பின்பற்றியுள்ளார்.

**2.2.1.2.1.2.5 கூழை மோனை**

இறுதிச் சீர்களில் மட்டும் மோனை ஒன்றாமல் ஒழிந்த மூன்று சீர்களிலும் மோனை முதலியன வரத்தொடுக்கும் நயத்தைக் கூழை நயம் என்பர். இதனை,

"**எ**ன்ன **எ**ன்ன **எ**ன்ன – அதோ

சப்தம் கேட்குதே! – அடே,

எங்கள் வீட்டுத் தோட்டத் திலே

சப்தம் கேட்குதே!"[238]

என்ற வரிகளில் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா கவனப் பண்பினை வளர்க்க இந்நயத்தைப் பின்பற்றியுள்ளார்.

"**ஆ**லமரம் **ஆ**ற்றோரம்

**ஆ**ற்றோரம் காற்றடிக்கும்

ஆலமரம் காற்றடித்தும்

அசையாமல் நின்றிருக்கும்!."[239]

எனக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும் ஆலமரம் காற்றில் அசைந்தாலும் சாய்ந்து விழாது என்பதை உணர்த்த இந்நயத்தைப் பின்பற்றியுள்ளார்.

**2.2.1.21.2.6 மேற்கதுவாய் மோனை**

இரண்டாம் சீரில் மட்டும் ஒன்றாமல் பிற சீர்களில் ஒன்றி வந்தால் அதை மேற்கதுவாய் மோனை என்பர்.

"ஏணி மேலே ஏணி வைத்து

ஏறப் போகிறேன்."[240]

போன்ற வரிகளில் ஏகாரங்கள் இரண்டாம் சீரில் மட்டும் ஒன்றாமல் வந்துள்ளது என்பதற்கு குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பாவின் பாடல் வரிகள் உதாரணமாகியுள்ளன.

"அம்மா என்னை அழைக்கின்றாள்

அப்படி வரிசையில் நில்என்றாள்!

சும்மா நின்று நேரத்தைச்

சோர்வாய்ப் போக்குதல் சரிதானா?"[241]

போன்ற வரிகளில் உள்ள அகரம் இரண்டாம் சீரில் மட்டும் ஒன்றாமல் பிற சீர்களில் ஒன்றி வந்து சூழ்நிலையை வெல்லப் பயிற்சி அளித்துள்ளது.

**2.2.1.21.2.7 கீழ்க்கதுவாய் மோனை**

மூன்றாம் சீரில் மட்டும் வராமல் முதல் இரு சீர்களில் ஒன்றினால் அது கீழ்க்கதுவாய் மோனை எனப்படும்.

"**அ**தோ, **அ**தோ பறவைக் கப்பல்,

ஆகா யத்தில் செல்லுது!"[242]

பறவைக் கப்பல் என்னும் ஒரு வாகனம் ஆகாயத்தில் செல்லும் வாகனமாகும் என்பதை நினைவுபடுத்தக் கீழ்க்கதுவாய் மோனை நயத்தைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா பின்பற்றியுள்ளார்.

"**சி**ன்னச் **சி**ன்னப் புத்தகம்

சிறுவர் வாங்கும் புத்தகம்"[243]

படிக்கும் அறிவு புத்தகத்தால் வளரும் என்பதை நினைவூட்ட குழந்தைக்கவிஞர் செல்லகணபதி இந்நயத்தைப் பின்பற்றியுள்ளார்.

**2.2.1.21.2.3. பாடல்களில் எதுகை நயங்கள்**

அடிகளிலும் சொற்களிலும் இரண்டாம் எழுத்துகள் ஒன்றி வந்து பாடலுக்கு இனிமை தருவது எதுகை நயமாகும்.

குழந்தைகள் மோனை நயத்தைப் போல எதுகையினாலும் நினைவாற்றலை வளர்த்துக்கொள்ளமுடியும்; இசையின் இனிமையை அனுபவிக்க முடியும். இதற்கேற்ப இவ்விரு கவிஞர்களின் குழந்தைப்பாடல்களிலும் எதுகை நயமும் உத்தியாக உள்ளது.

"சி**ன்**னச் சி**ன்**னப் பொம்மை

சிங்காரப் பொம்மை

என்ன வேண்டும் சொல்லே

ஏனோ பேச வில்லை."[244]

என்ற பாடல் வரிகளில் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா முதல் இரு சீர்களில் இரண்டாம் எழுத்துகளை ஒன்றச்செய்து பொம்மையால் பேச இயலாது என்ற சிந்தனையால் அறியாமையை நீக்கியுள்ளார்.

"**சி**ன்னச் **சி**ன்ன நுங்கு

செங்க ருப்பு நுங்கு

**தி**ன்னத் **தி**ன்ன இன்னும்

திகட்டி டாத நுங்கு!."[245]

தேகச் சூடு நீக்கும் நுங்குவின் சுவையை உணரச் செய்ய எதுகைநய உத்தி அமைப்பைக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும் பின்பற்றியுள்ளார்.

**2.2.1.21.2.3.1.இணை எதுகை**

முதல் இரண்டு சீர்களிலும் இரணடாம் எழுத்து ஒன்றுவதை இணை எதுகை என்பர்.

"பாப்பா பாப்பா அழாதே

பலூன் தாரேன் அழாதே."[246]

பாப்பாவின் அழுகையை நிறுத்த பலூன் உதவும் என்பதைத் தெரிவிக்க குழந்தைக் கவிஞர் அழ.வள்ளியப்பா இந்நயத்தைப் பின்பற்றியுள்ளார்.

"கடலே கடலே நீயாரோ

கருணை மேகம் உன்மகளோ."[247]

என மேகத்தின் பொழிவாலேயே கடல்நீர் பெருக்கெடுக்கிறது என்பதை உணர்த்த குழந்தைக்கவிஞர் செல்லகணபதி இவ்வுத்தியைப் பின்பற்றியுள்ளார்.

**2.2.21.2.3.2 பொழிப்பெதுகை**

முதற்சீரின் இரண்டாம் எழுத்தும் மூன்றாம் சீரின் இரண்டாம் எழுத்தும் ஒன்றி வருவதைப் பொழிப் பெதுகை என்பர்.

"பாட்டி எங்கள் பாட்டி – எல்லாப்

பல்லும் போன பாட்டி."[248]

பாட்டி என்பவள் வயதில் முதிர்ந்தவள் என்பதை உணர்த்த குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா இவ்வுத்தியைப் பின்பற்றியுள்ளார்.

"பள்ளி எங்கள் பள்ளியாம்
படிக்க வைக்கும் பள்ளியாம்
துள்ளி ஆடும் பிள்ளைகள்
சூழ்ந்து நிற்கும் பள்ளியாம்!."[249]

இவ்வாறு குழந்தைக்கவிஞர் செல்லகணபதியின் பாடல்வரிகளிலும் 'ள' கரங்கள் ஒன்றி வந்து பள்ளியை நினைவுப்படுத்தியுள்ளன.

**2.2.1.21.2.3.3 கூழை எதுகை:**

ஓர் அடியில் முதற்சீரின் இரண்டாம் எழுத்தும் இரண்டாம் சீரின் இரண்டாம் எழுத்தும் மூன்றாம் சீரின் இரண்டாம் எழுத்தும் ஒன்றி வரும் நயத்தைக் கூழை எதுகை என்பர்.

"வெங்கு, வெங்கு, வெங்கு

வெங்கு ஊதினான் சங்கு."[250]

எனக் குழந்தைக் கவிஞர் அழ.வள்ளியப்பா 'ங' கரங்களை ஒன்றச்செய்து சங்கு ஓசை எழுப்பும் பொருளாகும் என்பதை நினைவுபடுத்தியுள்ளார்.

நாடு நாடு நாடு
நாடிப் பெற்றிடும் நல்லவர் நட்பால்
நாம்பெற லாமே இன்பம்.![251]

என்ற குழந்தைக்கவிஞர் செல்லகணபதியின் பாடல் வரிகள் நல்லவர் நட்பால் இன்பத்தைப் பெறலாம் என்பதை உணர்த்த இந்நயத்தைப் பின்பற்றியுள்ளார்.

### 2.2.1.21..2.4 இயைபு நயங்கள்

இறுதி எழுத்து ஒன்றி வரும் நயத்தை இயைபு நயம் என்பர். இந்நயத்தை இவ்விரு கவிஞர்களும் உத்தியாகப் பின்பற்றியுள்ளனர்.

கொன்றுவிட்டீர்' அருமைக் கன்றை, பால்கார**ரே** -இன்னும்
கொஞ்சம் கூட இரக்க மில்லை பால்கார**ரே**
கன்றில்லாத பசுவை ஏய்த்துப் பால்காரரே-நித்தம்
கறந்து கறந்து விற்கிறீரே பால்கார**ரே**!''[252]

இரண்டாம் அடியிலும் நான்காம் அடியிலும் ரகரங்கள் ஒன்றச் செய்து கன்றுகளைக் காக்க இந்நயத்தைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா பின்பற்றியுள்ளார். இவரைப்போல் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும் பின்பற்றியுள்ளார் என்பதற்கு,

''கன்றுக் குட்**டி** கன்றுக் குட்**டி**
கண்ணன் வீட்டுக் கன்றுக் குட்**டி**.''[253]

என்னும் பாடல் வரிகள் சான்றாகும். குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும் இவ்வரிகளில் கன்றுக்குட்டியை நேசிக்கக் கற்றுக் கொடுத்துள்ளார்.

### 2.2.1.21.2.5 பாடல்களில் முரண்நயங்கள்

அடிதோறும் சொற்களாலும் பொருள்களாலும் அமைந்து அழகினைத் தருபவை பாடல்கள் ஆகும். முன்னர் எழுத்துகள் ஒன்றி வந்த தன்மையிலிருந்து மாறுபட்டுப் பொருள் தரும் பாடல்களும் உள்ளன. இவ்வாறு முன்னர் வந்த எழுத்துகள், சொற்கள் ஒன்றாது வருவதை முரண்நயம் என்பர். இவ்வாறு அடிதோறும் சொல்லாலும் பொருளாலும் மறுதலைப்படத் தொடுப்பது முரண்தொடை ஆகும். இந்நயத்தை இவ்விரு கவிஞர்களும் பின்பற்றியுள்ளனர். இந்நயச்சிந்தனைகள் எதிர்ச்சொற்களையும் எதிர்ப்பொருளையும் அறிவதற்குப் பயன்படுகின்றன.

''ஞாயிற்றுக் கிழமை நகையைக் **காணோம்**
திங்கட் கிழமை திருடன் **கிடைத்தான்**
செவ்வாய்க் கிழமை ஜெயிலுக்குப் போனான்
புதன் கிழமை புத்தி வந்தது.''[254]

இவ்வரிகளில் காணோம், கிடைத்தான் என்னும் சொற்கள் எதிர்ப்பொருளைத் தந்துள்ளன. மேலும் இது கிழமைகளை நினைவுகூற ஏற்றதாகவும் உள்ளன என்பதைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா உணர்த்தியுள்ளார்.

**''இரவும் பகலும்** பாராது
எதையும் சுமக்கத் தயங்காது

**சுறுசுறுப் பான** ஜீப்காரு
**சோம்பலில் லாத** ஜீப்காரு"[255]

என்னும் வரிகளில் இரவும் பகலும் என்னும் சொற்கள் எதிர்ப்பொருளைத் தரும் இயைபு நயத்தை அமைத்து ஜீப்காரை குழந்தைக்கவிஞர் செல்லகணபதி நினைவுபடுத்தியுள்ளார்.

**2.2.1.21.2.6 அந்தாதித்தொடை**

அடிதோறும் இறுதிக்கண் நின்ற எழுத்தாலும், அசையானும், சீரானும், அடியானும் மற்றைய அடிக்கு ஆதியாகத் தொடுத்து வருவதை அந்தாதி நயம் என்பர்.

"அதிசயம் ! அதிசயம்
அடையாற்றில் அதிசயம்! –அது
ஆலமரம் வளர்ந்திருக்கும்
அற்புதமாம் ரகசியம்!

அகலத்தையும் நீளத்தையும்
அளந்து பார்த்தேன் - அம்மாடியோ!
அவ்வளவு பெரியதான
ஆலமரம் அதிசயம்!

அதிசயம் ! அதிசயம்!
அடையாற்றில் அதிசயம்! அது
ஆலமரம் வளர்ந்திருக்கும்
அற்புதமாம் ரகசியம்!"[256]

இப்பாடல் வரிகளில் இரண்டாம் பத்தியில் 'அதிசயம்' என்று முடிந்தசொல் அடுத்த பத்தியின் தொடர்ச்சியாக அமைந்து அடையாற்று ஆலமரத்தினை நினைவுபடுத்தியுள்ளது.

ஏழை மக்கள் கூட – வாங்க
இயலும் சைக்கிள் வண்டி
வேலை செய்யும் இடத்தில் – ஆளை
விரைந்து சேர்க்கும் **வண்டி**

**வண்டி** சைக்கிள் வண்டி – நாமும்
வாங்க லாமோ இன்று
நண்பர் கற்றுத் தரவே – சைக்கிள்
நன்றாய் ஓட்டு தம்பி."[257]

எனக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும் வசதியில் குறைந்தவர்களுக்கு சைக்கிள் உதவும் என்பதை நினைவூட்டுவதற்கு இந்நயத்தைப் பின்பற்றியுள்ளார்.

**2.2.1.21.2.7 இரட்டைத் தொடை**

ஒரு வரியில் உள்ள இரண்டு சொற்கள் ஒத்துக் காணப்படுவதை இரட்டைத் தொடை என்பர்.

பறந்து மேலே சென்றிடும்
　　பட்டம் **பார் பார்** தம்பியே
பருந்து கூட இதனைப்போல்
　　பறக்கு மோநீ சொல்லுவாய்''[258]

என பார், பார் என்ற சொற்கள் 'காண்' என்னும் பொருளைத் தந்துள்ள இரட்டைத் தொடை நயத்தைக் குழந்தைக் கவிஞர் அழ.வள்ளியப்பா பின்பற்றியுள்ளார்.

''எதையும் எண்ணி எண்ணியே
எண்ணம் விலகி டாமலே
அதையே நாடிச் செய்திடும்
ஆர்வத் தாலே வெற்றிதான்!''[259]

என்ற வரிகளில் 'எண்ணி' என்ற சொற்கள் இருமுறை வந்து ஆர்வத்திற்கு வழிகோலியுள்ளன. தனித்துப் பொருள்தராத இரட்டைக்கிளவிகளும் உள்ளன.

**2.2.1.22.0 ஒலிநய உத்தி**

ஒலிநயம் என்பதை ஓசைநயம் என்பர். பாடல்களில் வார்த்தைகளால் ஓசையைத் தரச் செய்வதை ஒலிநய உத்தி என்பர். இரண்டு சொற்கள் இணைந்து வரும்போது ஓசை வரும். இதற்கு எடுத்துக்காட்டாக ஒன்றிரண்டு பாடல் வரிகள் தரப்பட்டுள்ளன.

''பாலம் கடந்துமே, போகுதுபார்
பட, பட கட, கட என்குதுபார்
.

பட்டண மாமா கடிதமெலாம்
பையிலே தூக்கி வருகுதுபார்
.

காசைக் கரியாய் ஆக்காமல்
கரியைப் புகையாய் விடுவதுபார்.''[260]

என்னும் பாடல் வரிகள் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா இவ்வுத்தியைப் பயன்படுத்தியதற்குச் சான்றாகும்.

இவரைப்போல் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும் இவ்வுத்தியைப் பின்பற்றியுள்ளார்.

''நடநட தம்பி ரயில்வண்டி
　　நான்கு மணிக்கு வந்துவிடும்

விடுவிடு விடுவென விரைந்தோடி

விழுப்புரம் செல்வோம் ரயிலேறி.''[261]

என்னும் பாடல் வரிகளில் ரயிலுக்குச் சரியான நேரத்திற்குச் செல்லவேண்டும் என்பதை உணர்த்த இவ்வுத்தியைப் பின்பற்றியுள்ளார்.

### 2.2.2. கதைப்பாடல் உத்தி

புராணச் செய்திகளையும் நல்ல செய்திகளையும் குழந்தைகள் மனதில் எளிதில் பதிய வைக்க உறுதுணையாக இருப்பது இவ்வுத்தியாகும். குறைந்த நேரத்தில் புராணச் செய்திகள் முதலிய செய்திகளைக் குழந்தைகளுக்குத் தெரிவிக்க கதையும் பாடலும் கலந்த கதைப்பாடல் உத்தியைப் பின்பற்றியுள்ளனர். ஏனென்றால், ''பாட்டும் கதையும் குழந்தைகளுக்குப் பேரின்பம் ஊட்டுவன. பிஞ்சு உள்ளங்களில் இனிய எளிய முறையில் நல்லறிவைச் சேர்க்கும் முயற்சியே இக்குழந்தை இலக்கியத்தின் குறிக்கோள் ஆகும்.''[262] என்ற கூற்றிற்கேற்றாற்போல் இவ்விரு கவிஞர்களும் கதை உத்தியைப் பயன்படுத்தியுள்ளனர். மேலும் சரித்திர நிகழ்வுகள், கதைப்பாடல்களில் புராணச் சிந்தனைகள், இயற்கைவளங்கள் மனிதநேயப் பண்புகள் நிறைந்த கதைப்பாடல்களை எழுதியுள்ளனர்.

#### 2.2.2.1 கதைப்பாடல்களில் புராணச்செய்திகள்

கண்ணன் யசோதையின் வளர்ப்புப் புதல்வன். தேவகியின் வயிற்றில் பிறந்தவன். இத்தகைய கண்ணனின் இயல்புகளை 'வெண்ணெய் திருடிய கண்ணன்' என்னும் தலைப்பில் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா கதைப்பாடலை எழுதியுள்ளார்.

''கண்ணன் வெண்ணெய் திருடித் தின்ன
எண்ணங் கொண்டனன்
கள்ளத் தனமாய் ஒருவர் வீட்டின்
உள்நு ழைந்தனன்
வெண்ணெய் முழுதும் தின்று தின்று
தீர்த்துக் கட்டினன்
வீட்டுக் காரி வந்து விட்டாள்
மாட்டிக் கொண்டனன்.

வெண்ணெய் திருடித் தின்னு கின்ற
திருட்டுக் கண்ணனே
வெளியில் போன சமயம் பார்த்துத்
திருட வந்ததேன்
உன்னை உனது தாயி டத்தில்
இழுத்துச் சென்றுநான்
உரலில் கட்டி வைக்கச் சொல்வேன்
என்று கூறினள்

வெள்ளைக் கன்றைத் தேடிக் கொண்டே
உள்ளே வருகையில்
வெள்ளை யாக உறியில் ஏதோ
இருக்கத் தெரிய லானதே
உள்ளே கையை விட்ட பிறகே
வெண்ணெய் என்று நான்
உணர்ந்தேன் என்று கூறிக் கண்ணன்
ஓடிப் போய்விட்டான்.''[263]

இவ்வாறு கண்ணனின் குறும்புத் தனத்தைப் பாடல்களில் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா எழுதியுள்ளார் என்பதற்குப் பின்வரும் பாடல் எடுத்துக்காட்டாகும். 'முருகனும் கணபதியும' என்னும் பாடலிலும் புராணச் செய்திகளைக் கூறியுள்ளார்.

**2.2.2.2 கதைப்பாடல்களில் சரித்திர நிகழ்வுகள்**

பண்டைய வரலாறுகளைச் சரித்திரங்கள் என்பர். மயிலுக்குப் போர்வை அளித்த பேகனையும், முல்லைக்குத் தேர் கொடுத்த பாரியையும் கதைப்பாடல்கள் வாயிலாகக் குழந்தைகளுக்கு குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா அறிமுகப்படுத்தியுள்ளார். இவரைப்போல் புகழ்பெற்ற அன்றைய மன்னரான அக்பர், அக்பர் யோசனை கேட்டறிந்த பீர்பாலையும் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி அறிமுகப்படுத்தியுள்ளார்.

''முத்து, பவளம், மணி இழைத்த
தேரைப் பாரடி – அதில்
மிடுக்குடனே செல்லும் அந்த
மனிதர் யாரடி?
எத்தி சையும் புகழ் மணக்கும்
பாரி தானடி – அவர்
இல்லை யென்றெ சொல்லி டாத
வள்ள லாமடி.
சாலை ஓரம் அந்தத் தேரும்

நிற்ப தேனடி? – அங்கே
சட்டென் றவரும் கீழி றங்கிப்
பார்ப்ப தென்னடி?
மாலைக் காற்றில் ஆடி அசையும்
முல்லைக் கொடியடி – அதை
வழியில் கண்டே வேக மாக
இறங்கி னாரடி.

உற்றே அந்தக் கொடியை அவரும்
பார்ப்ப தேனடி- அவர்
உள்ளம் நொந்து முகமும் வாடி
நிற்ப தேனடி?

பற்றிப் படரக் கொம்பில் லாமல்
முல்லைக் கொடியுமே – காற்றில்
சுற்றிச் சுழன்று தவிக்கும் காட்சி
கண்டு தானடி.

தேரைக் கொடியின் அருகில் கொண்டு
செல்வ தேனடி? அங்கே

சென்று கொடியைக் கையில் அவரும்
எடுப்ப தேனடி?

தேரின் மீது கொடியைப் படர
விடுகி றாரடி – அதன்
சிரமம் தீர்த்து மகிழ்ச்சி யோடு
நடக்கி றாரடி.

முல்லை படரத் தேரைக் கொடுத்த
வள்ளல் பாரிபோல் - அடியே,
மிகவும் நல்ல மனிதர் ஒருவர்
உண்டோ? சொல்லடி.

இல்லை, இல்லை, இல்லை என்றே
சொல்கி றேனடி –நாம்
எங்கு தேடிப் பார்த்திட் டாலும்
கிடைத்தி டாரடி!''[264]

என்னும் கதைப்பாடலைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா எழுதியுள்ளார்.

இவரைப்போல் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும் கிழிந்த செருப்பு என்னும் கதைப்பாடலை எழுதியுள்ளார்.

''அக்பர் அரசவை நடைமுறையில்
ஆலோ சனைக்கு அறிஞர்பலர்
அக்பர் போற்றிய அறிஞர்எனில்
அவர்தான் பீர்பால் பேரறிஞர்

.

பிரச்சினை எத்தனை எதிர்வரினும்
பிசகே இல்லாத் தீர்வதனை
உரைப்பவர் பீர்பால் அவரிடம்தான்
யோசனை அக்பர் கேட்டறிவார்

.

மக்களின் வாழ்க்கைத் தரம்அறிய
வாட்டும் துயரைப் புரிந்துகொள்ள
அக்பர் செல்வார் நகர்வலமே
அவருடன் தொடர்வார் பீர்பால்தான்

ஒருநாள் நகர்வலம் செல்லுகையில்
ஒருவன் கந்தல் செருப்பதனை
திருத்த மாகத் துடைத்திருந்தான்
சிறந்த பட்டுத் துணியாலே

விளக்கு மாற்றைக் கட்டுதற்கோ
விழைவார் பட்டுக் குஞ்சத்தை
கிழிந்த செருப்பைத் துடைப்பதற்கு
கிடைத்தது பட்டுத் துணிதானோ

அக்பர் இப்படி நினைக்கையிலே
அதுஏன் பீர்பால் விவரித்தார்
அக்கறை யான தன்னுழைப்பால்
அடைவது எதுவும் சிறப்புத்தான்

சொந்த உழைப்பில் வாங்கியது
சுற்றிலும் கிழிந்த செருப்புத்தான்
அந்தப் பட்டுத் துணியென்றால்
யாரோ தந்தார் இலவசமாய்

உழைத்துப் பெறுவது துரும்பெனினும்
உயர்ந்த மதிப்பைப் பெறுவதுண்டு
விலையில் லாமல் பொருள்கிடைத்தால்
வெறுமை தானே அதன்மதிப்பு.”[265]

என்னும் கதைப்பாடல் உழைப்பே உயர்வு தரும் என்பதை உணர்த்தும் பாடலாக உள்ளது.

இவ்வாறு மன்னர்கால வரலாறுகளைக் கூறியது போல் ஆங்கிலேயர் ஆண்ட காலத்தையும் ‘சுதந்திரம் பிறந்த கதை’ என்னும் கதைப்பாடல் நூலில் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா எழுதியுள்ளார்.

#### 2.2.2.3. கதைப்பாடல்களில் பிறசிந்தனைகள்

மனிதர்கள் மனிதனாக மாறத் தகுந்த சிந்தனைகளை இவ்விரு கவிஞர்களும் கதைப்பாடல்களிலும் கூறியுள்ளனர்.

அழ.வள்ளியப்பா ஒற்றுமை, கருணை, அன்பு, நேர்மை, கவனம் போன்ற பண்புகளையும், பண்புகளில் சிறந்த பெரியோரையும் கதைப்பாடலில் கூறியுள்ளார். குழந்தைக்கவிஞர் செல்லகணபதி உழைப்பு, மானம், பண்பாடு, அன்பு, நல்லது செய்தால் நல்லது, விலங்குகள், நம்மைத் தாக்கினால் கொல்லுதல் பாவமன்று போன்ற சிந்தனைகளைக் கதைப்பாடல்களில் கூறியுள்ளார். குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா ‘பையனும் பச்சைக்கிளியும்', ‘உமியும் அரிசியும்’ ‘எலியும் பூனையும்’, ‘என்ன வேண்டும்’, ‘என்ன நடக்குமோ’ ‘ஏமாற்றம்’, ‘கிளியின் நன்றி’, ‘கடலின் ஆழம்’ ‘கடைசி நாள்’, ‘குட்டிப்பென்சில்’, ‘தாத்தாவின் கோபம’, ‘குறும்புத்தனம்’ , ‘கருணை அன்பு’ போன்ற பல பாடல்களை எழுதியுள்ளார். இவை குழந்தைகளின் செயல்பாடுகள் சிறக்கப் பயன்படுவன. ‘கவரிமான் போற்றும் மானம்’ ‘எது பாவம்’ போன்ற பாடல்களை குழந்தைக்கவிஞர் செல்லகணபதி எழுதியுள்ளார்.

##### 2.2.2.3.1. சமயோஜித புத்தி

சமயோஜிதம் என்பது காலம் அறிந்து செயல்படுதலாகும். ஒரு செயலைச் செய்தலில் சமயோஜிதம் அவசியமானது என்பதை ‘சமயோஜித புத்தி’ என்னும் பாடல் மூலம் அறியச்செய்துள்ளார்.

“சமயம் பார்த்து யுக்தியுடன்
சரியாய்க் காரியம் நீ செய்தாய்

புத்தி மிகுந்த உன்னுடைய
புருஷன் ஆனேன் என மகிழ்ந்தான்.”[266]

என்னும் பாடல் வரிகள் சமயம் பார்த்துச் செய்யும் செயல்களுக்கு இலக்கணமாகியுள்ளன.

##### 2.2.2.3.2. கருணை

கருணைக்கு எடுத்துக்காட்டாக பல் உடைந்த முருகையன், மானின் விடுதலை, கிளியின் நன்றி போன்ற கதைப்பாடல்களைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா எழுதியுள்ளார். இதற்கு எடுத்துக்காட்டாக,

“முயலைக் கொன்று தின்றிட்ட
முன்னம் பற்கள் உடைந்தனவே

ஐயோ உயிரைக் கொன்றேனே
அதனால் கடவுள் தண்டித்தார்

என்றே எண்ணி முருகனுமே
இளகிய உள்ளம் பெற்றனனே.”[267]

போன்ற வரிகள் கருணை வளர ஏற்றதாக உள்ளன.

**2.2.2.3.3. நன்றி மறவாமை**

நன்றி என்பது செய்த உதவியை மறாவாதிருக்கும் பண்பு ஆகும். இதைக் குழந்தைப்பாடல்களில் குழந்தைகளுக்குப் பிடித்தாற்போல் ‘நாயின் நன்றி’ என்னும் பாடலில் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா உணர்த்தியுள்ளார்.

**2.2.2.3.4. மானமே தன் மதிப்பு**

மானம் என்பது தன் மதிப்பாகும். ‘கவரிமான் போற்றும் மானம்’ என்னும் பாடலில் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி உணர்த்தியுள்ளார்.

“வறண்ட தொண்டையை நனைக்க எண்ணியே
வாயிற் காவலன் தன்னிடத்தில்
தருவாய் நீர்எனக் கேட்டான் அவனோ
தாமத மாக நீர்தந்தான்!

மார்பினில் வேலும் பாய்ந்தத னாலே
மடிந்தான் என்று சாகாமல்
ஓர்வினை காவலன் அவமதிப்பாலே
உள்ளம் நொறுங்கிப் போவதுவோ!.

காவலன் மன்னனைப் பொருட்டாய் மதித்துக்
கருத வில்லையே அவமதித்தான்!
காவலன் கூடத் துரும்பென நினைத்தால்
காலத்தின் கோலம் பெருங்கொடுமை!

கவரிமான் தனது ஒருமுடி இழப்பினும்
கருதிடும் மானம் போனதென்று
அவமதிப் பாகக் கருதியே கவரிமான்.

ஆருயிர் தன்னையே போக்கிவிடும்!

இரும்பொறை அப்படிப் பட்டவன்காவலாள்
இகழ்ச்சியால் உயிரையும் விடத்துணிந்தான்!
மறுநொடி இரும்பொறை உயிரும் பிரிந்தது.
மண்ணில் சாய்ந்தான் வெற்றுடம்பாய்!.''[268]

**2.2.3.0 பாடல்களில் நாடக உத்தி**

இரு மாந்தர்கள் பேசுதல் நாடக உத்தியாகும். குழந்தை இலக்கிய வாசகர்கள் குழந்தைகள் ஆதலால் விலங்குகளை, பறவைகளை பிற உயிரினங்களை மாந்தர்களாக்கியுள்ளனர். குழந்தைகள் சுறுசுறுப்புணர்வை, கருணையை வளர்ப்பதற் -கேற்றாற்போல் இவ்விரு கவிஞர்களும் நாடக உத்தியைப் பாடல்களில் பின்பற்றியுள்ளனர். இதற்கு எடுத்துக்காட்டாக,

**மனிதன்**

''தேடிச் சென்று பூவிலே
        தேனை எடுக்கும் ஈயேவா.
ஜாடி நிறையத் தேனையே
        தருவேன்; குடித்துச் செல்லுவாய்.

**தேனீ**

என்னைப் போலத் தினம்தினம்
        ஈக்கள் தேனை எடுத்தன
கொண்டு வந்து கவனமாய்க்
        கூட்டில் சேர்த்து வைத்தன.
கூட்டைக் கலைத்தே ஈக்களைக்
        கொன்று விட்டுத் தேனையே
வீட்டில் சேர்த்து வைக்கிறீர்.
        விருந்து தரவா அழைக்கிறீர்?
எத்திப் பிழைக்க நானுமே
        எண்ண மாட்டேன். ஆதலால்,
புத்தம் புதிய தேனையே
        பூவில் எடுக்கப் போகிறேன்.''[269]

என்ற இப்பாடல் வரிகளில் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா தேனீயின் சுறுசுறுப்பையும் நேர்மையையும் கூறியுள்ளார். இவரைப்போல் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும் நாடக உத்தியைப் பின்பற்றியுள்ளார்.

**பூனை**

“பையச் செல்லும் சின்ன எலிகள்
        பண்ட பாத்தி ரங்களைப்
பாழ்ப டுத்தும் அநியா யத்தைப்
        பார்த்த தாலே செல்கிறேன்.

எலியைப் பிடித்துக் கொன்று விட்டால்
        ஏது தொல்லை வீட்டிலே
எதையும் வைத்த இடத்தி லேயே
        இருக்கப் பார்த்து மகிழலாம்

வலிய வந்து உதவி செய்ய
        வந்த தாலே என்னையும்
வம்பு செய்யும் பகைவ னாக்கி
        வழக்குப் போட லாகுமோ?

**சிறுவன்**

சின்னப் பூனைத் தோழ னேஉன்
        சிறந்த எண்ணம் புரியுது
சீக்கி ரம்நீ அருகில் வாவா
        சேர்ந்து கூடி ஆடலாம்”[270]

பூனையைத் தோழனாக்கிப் பாடியுள்ளார்.

இவ்வாறு குழந்தைகளுக்குப் பிடித்த விலங்கு பறவைகளை முதன்மைப்பாத்திரமாகவும் குழந்தைகளைத் துணைப்பாத்திரமாகவும் கொண்டு பாடல்களை எழுதியுள்ளார்.

**2.2.4.0 கதை உத்தி**

குழந்தை வாசகர்கள் விரும்பிப் படிக்கும் கதைகளை செயல் வேட்டக்கதைகள் (Adventure Story), புதிர் பொதி கதைகள் (Mystory Story), வெறும் புனைவுக் கதைகள் (Fantasy), விலங்குக்கதைகள் (Animal Story) என வகைப்படுத்தலாம்.

**2.2.4.1. குழந்தை இலக்கியக்கதை உத்திகள்**

கதை தொடக்கம், வளர்ச்சி, உச்சக்கட்டம், முடிவு போன்ற உத்திகளோடு அமையும். “குழந்தையின் மனம் கனவு காணும் இயல்புடையது. செயற்கரியச் செயல்களைச் செய்து முடிக்க வேண்டும் என்ற வேணவா இயல்பாகவே குழந்தையிடத்தில் அரும்புகிறது.”[271] என்ற மா.இராமலிங்கத்தின் கூற்றிற்கேற்றாற்போல் குழந்தை இலக்கியக் கதை உத்திகள் செயல்வேட்டக்கதை, புதிர்பொதிகதை, புனைவுக் கதை, விலங்குகளை உவமைகூறல் என்னும் தலைப்புகளில் கதைச் சிந்தனைகள் தரப்பட உள்ளன.

### 2.2.4.2. செயல்வேட்டக்கதை

செயலை அடிப்படையாகக் கொண்ட உத்தியாகும். குழந்தைகள் கனவு காணும் இயல்புடையவர்கள். இந்தக் கனவு எப்பொழுதும் நனவாகுவதில்லை. ஆனால் குழந்தைகள் நடக்காத ஒன்றைப் பெற வேண்டும். ஐம்பது பேரை வீழ்த்த வேண்டும் என்ற எண்ணமுடையவர்கள் இதனை,

“கண்காணிப்பு நிறைந்த பெற்றோரின் பிடியிலிருந்து கொஞ்சநேரம் வெளியேறி, மனம்போல் அலையவேண்டும் என்று நினைப்பதுகூடக் குழந்தைகளைப் பொறுத்தவரை அதிதீவீரச்செயல்தான்”[272] என்ற மா.இராமலிங்கத்தின் கூற்றின் அடிப்படையில் ஆயும்போது, குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பாவின் வேட்டை நாய், குழந்தைக்கவிஞர் செல்லகணபதியின் ‘ஒரு நாள் பயணம்’ போன்ற சிறுகதைகள் இக்கதை உத்திக்குச் சான்றாகியுள்ளன.

வேட்டை நாய் என்னும் சிறுகதையில், “ஸெதாந்தா காடுகளைக் கண்டு கலங்கிவிடவில்லை; மலைகளைக் கண்டு மலைத்துவிடவில்லை; ஆறுகளைக் கண்டு அயர்ந்துவிடவில்லை. தைரியத்துடனும் நம்பிக்கையுடனும் எல்லாவற்றையும் எளிதிலே கடந்து தலைநகருக்கு வந்துவிட்டான்!”[273] என்ற ஸெதாந்தாவின் வீர உணர்வு வரிகள் செயல்வேட்டக்கதை உத்திக்கு எடுத்துக்காட்டாகும்.

இவரைப்போல் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும் குமார் என்ற சிறுவன் செய்தித்தாளில் கல்லூரி மாணவனின் சாதனையை தனக்குச் சாதகமாகப் பயன்படுத்தி பெற்றோர்களின் அனுமதியுடன் அவன் ஆறுமுகம், நாகப்பன், வைரவன் என்ற மூன்று சிறுவர்களுடன் கொல்லிமலைக் காட்டுப் பகுதியைச் சுற்றிப்பார்க்க எண்ணி பெற்றோர்களின் அனுமதியுடன் செல்கின்றான். இவ்வாறு இவர்களைப் பற்றிப் படிப்படியாக குறிப்பிடும் செய்திகள் இதன் வளர்ச்சி நிலைகளாக உச்சகட்டங்களாக அமைந்துள்ளன. இதன் வளர்ச்சிக்கு உதாரணமாக “இது போன்ற தீவட்டிக் கொள்ளைக்காரர்களை நம் போன்ற சிறுவர்கள் பிடித்த கதை கூட ஏராளம். இப்போது நமக்கு அந்த வாய்ப்பு வந்திருப்பதாக எண்ணிக் கொள்ளுங்கள்.”[274] என்ற வரிகள் கதையின் வளர்ச்சி நிலைகளைக் காட்டியுள்ளன. காட்டுவாசியின் துணையுடன் திருடர்களைக் கண்டுபிடிக்கும் வழிகளைக் கண்டறிந்து அதற்குத் தீர்வை அடைய இருந்த நேரத்தில் திருடனிடம் நாகப்பன் மாட்டிக் கொண்டது கதையின் உச்சநிலையைக் காட்டியுள்ளன. எனவே கதையின் வளர்ச்சியும் உச்சநிலையும் எங்கே? என்ற கேள்வியில் மறைந்து இனிமேல் என்ன நடக்கும்? காட்டுவாசிகள் திருடனைக் கண்டுபிடிக்க உதவுவார்களா? எப்பொழுதுதான் வருவார்கள்? இவை போன்ற கேள்விகளைக் கதைகளில் மறைமுகமாகக் காட்டியிருப்பது கதையின் வளர்ச்சிநிலைகளையும் உச்சகட்டத்தையும் ஏற்படுத்தியுள்ளன. இவ்வாறு இந்நால்வரின் அச்சமின்மையே திருடர்களைப் பிடிப்பதற்கு காரணமாக இருந்தது என்ற செய்தியைக் குழந்தைகள் உணரும் வண்ணம் எழுதியுள்ளார்.

இச்செய்தி ‘‘ஒரு தாய், தன் மகனைப் பெற்றெடுக்கும்போது அடையும் மகிழ்ச்சியைக் காட்டிலும் பிறர் பாராட்டுக்குரியவனாக அவனைப் பார்க்கும்பொழுது இன்னும் அதிகமாக மகிழ்ச்சி அடைகிறாள்.’’[275] என்ற கருத்தினை உணரச் செய்துள்ளது. இவ்வாறு ‘ஒருநாள் பயணம்’ என்னும் சிறுகதைக்குச் சிறந்த முடிவையும் அமைத்துள்ளார். பாடல்களில் கதைகளில் சமூகக் சேவைச் சிந்தனைகளைப் பாத்திரங்களின் உணர்ச்சிகளை நேரடியாகப் பாத்திரங்களின் நிகழ்வுகளால் வெளிப்படுத்தியுள்ளார். இவ்வாறு நேரடியாக நிகழ்வுகளைக் காட்டுவதால் குமாரைப் போல் வெல்ல வேண்டும். வீரனாக வேண்டும் என்ற எண்ணம் கதையை வாசிக்கும் குழந்தைகளுக்கு ஏற்படும்.

**2.2.4.3. விலங்குகளை உவமை கூறல் உத்தி**

குழந்தைகளுக்குப் பிடித்தமானவை விலங்குகள், ‘‘மனிதர்களைப் போலவே விலங்குகளுக்கும் உணர்ச்சி உண்டு. அன்பு, ஆத்திரம், கவலை முதலிய உணர்ச்சிகளுக்கு அவையும் ஆளாகின்றன. அவை மனிதர்களிடத்தில் பேரன்பு காட்டுகின்றன.’’[276]என்ற மா.இராமலிங்கத்தின் கூற்றிற்கேற்றாற்போல் விலங்குக்கதைகளை எழுதியுள்ளனர். குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பாவின் நல்ல நண்பர்கள், குதிரைச் சவாரி, திரும்பி வந்த மான்குட்டி, உண்டி வில், இருகாக்கைகள், வித்தைக் குரங்கு போன்ற சிறுகதைகள் குறிப்பிடத்தக்கன. குழந்தைக்கவிஞர் செல்லகணபதி அப்பாவின் கோபம், குரங்குக்குட்டியும் எனக்குத் தம்பிதான் போன்ற சிறுகதைகளை எழுதியுள்ளார். இவை விலங்குகளை முதன்மைப் பாத்திரமாக்கி எழுதப்பட்டுள்ளன. இவற்றின்மூலம் பொருளைவிடப் பெரிதானது அன்பே என்பதைப் பதிவு செய்துள்ளனர். மேலும் மனங்குழம்பித் தவிப்பதைவிட எதையும் வெளிப்படையாகப் பேசுதல் நல்லது. துன்பம் நேரும்போது அன்பை மறக்கக்கூடாது. சுதந்திர உணர்வு மேலானது என்பதை உணர்த்தியுள்ளன. ‘திரும்பி வந்த மான்குட்டி’ என்னும் சிறுகதை குறிப்பிடத்தக்கது. ‘‘நானாக இருந்தால், திரும்பியே வந்திருக்க மாட்டேன். இவ்வளவு வசதிகள் இருந்தும், இந்த அம்மா ஏன்தான் திரும்பி வந்ததோ.!’’ என்று குட்டி மான் அடிக்கடி நினைக்கும்.’’[277] இப்படியே இருந்த குட்டிமான் தன் அம்மாவின் பேச்சை உணராமல் தப்பிக்க எண்ணியது. செல்லும் வழியில் முயலைச் சந்தித்தது. முயல் தான் தப்பித்த விவரங்களைக் கூறியதும் தக்காளி, கீரை போன்ற சுவைமிக்க உணவுகளுக்காகச் சுதந்திரமில்லாமல் வாழ்வதைவிட சுதந்திரமாகவே வாழ்வது நல்லது என்று முடிவு செய்ததை,

‘‘அடடே அப்படியா!’’ என்று கேட்டுவிட்டு ‘அம்மா பேச்சை மீறிச் சென்றிருந்தால், உயிருக்கும் ஆபத்துதான்!. என்று நினைத்துக்கொண்டே ஓட்டம் பிடித்தது குட்டிமான். எங்கே?

பணக்காரர் வீட்டைத் தேடியா? இல்லை பாசமுள்ள அம்மாவைத் தேடித்தான்.’’[278] என்று கதையின் முடிவினைக் குழந்தைகள் உணரும் வண்ணம் அமைத்துள்ளார்.

குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும் இவ்வுத்தியைக் கையாண்டுள்ளார். ‘அப்பாவின் கோபம்’ என்னும் சிறுகதையில் அருணாசலம் என்பவர் மிகவும் நல்லவராக இருந்தார். அவருக்கு ‘மெய்யப்பன்’ என்ற பெயரில் ஒரு மகன் இருந்தான். அவனிடம் தன் நண்பர் கண்ணன் உதவியாகக் கேட்ட பணம் ரூபாய் ஐந்நூற்றைக்கொடுக்கச் சொன்னார். மெய்யப்பனும் அவ்வாறே செய்கிறேன் என்று வாங்கிச் சென்றான். எதிர்பாராத சூழ்நிலையால் தன் நண்பன் சுந்தரத்திற்கு விபத்து ஏற்பட்டதால் மருத்துவமனைக்குச் செல்லும்படி நேர்ந்தது. பள்ளி ஆரம்பிக்கும் நேரம் 9.30 ஆகியதால் பணத்தை மாலையில் கொடுத்துக்கொள்ளலாம் என்று எண்ணி பள்ளி சென்றான். பள்ளி சென்று திரும்பியதும் கொடுக்கச் சென்றான். அப்பொழுது கண்ணன் தானே சென்று வாங்கி வந்ததாகக்கூறினார். வீடு திரும்பும் நேரத்தில் மெய்யப்பன் வந்ததாகக் கூறினார். வீடு திரும்பும் நேரத்தில் மெய்யப்பன் வீட்டு நாயை அடித்துக்கொண்டிருந்தார். என்ன நிகழ்ந்தது என்பதை அம்மாவிடம் விசாரித்தபொழுது அம்மா நாயை அடித்ததற்குரிய காரணத்தைக் கூறியதை உணர்ந்தான். “போடா உதவாக்கரை நாயே! எங்காவது போய்த்தொலை”[279] என்று அப்பா பேசிய வார்த்தைகள் அவனது மனத்தைக் குழப்பின. வீட்டைவிட்டு வேறு எங்காவது சென்று வாழலாம் என எண்ணினான்.

“மெதுவாகக் கதவைத் திறந்து வெளியே வந்தவன் தெருவைநோக்கி அடியெடுத்து வைத்தபொழுது அவன் காலைக்கவ்விப் பிடித்து வீரா இழுத்தது. அப்பா வீராவை இந்த அடி அடித்தும், வீட்டை விட்டே துரத்தியும் வீரா ஏன் ஓடிப் போய்விடவில்லை. தன் அப்பா அதனை வளர்த்த அன்பை நன்றியை மறக்க முடியாமல் தானே.”[280] என்ற வரிகள் மூலம் தன்னைப் பெற்றெடுத்த தாய் தந்தையர் கோபத்திற்கு ஆளானாலும் அவர்களை விட்டுப்பிரியக்கூடாது என்பதை நாயின் செயல் மூலம் இக்கதை உணர்த்தியுள்ளது. குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பாவின் கதையில் நாய் போன்ற விலங்குகளைப் பேசச் செய்துள்ளார். இவர் விலங்குகளின் செயலால் நல்ல செய்திகளை உணரச்செய்துள்ளார்.

### 2.2.4.4. கதைக்குள் வினாவிடை உத்தி

யார் அவன்? என்னும் கேள்விக்குரிய விடையைக் கதையைப் படிக்கும்பொழுது உணரவைக்கும் பாங்கு குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா, செல்லகணபதியின் கதைகளில் உள்ளன. யார்? அவன்? என்னும் வினாவிற்குரிய விடையினைப் படர்க்கையில் மறைமுகமாகக்கூறி கதைத்தலைவனை அறிமுகம் செய்யும் உத்தியைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா பின்பற்றியுள்ளார். இச்செய்தியை, கதை ஆரம்பத்திலேயே உள்ள வாக்கியங்கள் உணர்த்தியுள்ளன.

> “அவன் ஒரு கைதி!
> ஆம் கைதிதான் ஆனால், அவன் எதற்காகக் கைது செய்யப்பட்டான்?
> கொள்ளை அடித்ததற்காகவா?
> இல்லை.

கொலை செய்தற்காகாவா?

அதுவும் இல்லை.

அப்படியானால், அவன் யாரையாவது கொலை செய்ய முயன்றானோ?

அதெல்லாம் ஒன்றுமில்லை.

அப்படியானால், எதற்காக அவனைக்

கைது செய்தார்கள்?

அவனுக்கு அரசன் போக்குபிடிக்கவில்லை. அரசன் செய்து வரும் கொடுமைகளை அவன் பகிரங்கமாகப் பேசினான். கொடுங்கோல் ஆட்சியை ஒழிக்க வேண்டும் என்று மக்களிடம் கூறினான்.''[281] என்ற இவ்வரிகள் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா எழுதிய 'அபூர்வ நண்பர்கள்' என்னும் சிறுகதையில் வருகின்றன. மனிதாபிமானம் உள்ள ஒருவன் ஒரு கொடுங்கோல் அரசனை எதிர்க்கிறான். அரசன் அவனைத் தூக்கிலிட முடிவு செய்கிறான். தாய் தந்தையரைப் பார்த்து வரும் வரை அவனுக்குப் பதில் தான் சிறையிலிருப்பதாகக் கூறி நண்பனை விடுவிக்கிறான். நண்பன் வராததை அரசன் ஏளனமாகப் பேசித் தூக்கிலிடப் போகிறான். அந்தச் சமயத்தில் அதற்கு அவசியமில்லை என்று கூறி நண்பன் வருகிறான். நண்பன் வந்ததும் நண்பனுக்குப் பதிலாகச் சிறையில் இருந்தவன் நீ ஏன் இங்கு வந்தாய் எனக் கேட்டதற்கு, அவன் நண்பன், தான் கடல் வழியில் வரும்போது படகு புயலால் சாய இருந்தது. அதிலிருந்து மீண்டு வரவே தாமதமாகியது. சொல்லைக் காப்பாற்றவே வந்ததாகக் கூறினான். இதைக் கேட்டதும் இந்த இரு நண்பர்களின் உண்மையை நேர்மையை அறிந்த கொடுங்கோல் அரசன் தன் தவற்றை உணர்ந்து நல் அரசனாகி அவ்விருவரையும் விடுதலை செய்கிறான். இவ்வாறு யார் அவன்? என்று தொடக்கத்தில் தான் கேட்ட கேள்விக்குரிய விடையாக 'உண்மையுள்ள ஒருவன்' என அறியச் செய்துள்ளார். இவ்வாறு இத்தகைய கதைச் சிந்தனைகள் நேர்மையால், உண்மையால் ஒரு சமுதாயத்தை, ஒரு சமுதாயத்தின் தலைவனைத் திருத்தலாம் என்பதற்கு உதாரணமாகியுள்ளன.

### 2.2.4.5. பழமொழி கூறி சிந்தனைவிதைத்தல்

செய்யுளில் கடைப்பிடித்த இவ்வுத்தியைக் கதைகளிலும் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா கடைப்பிடித்துள்ளார். இதனை,

''கற்றறியா மக்கட் சமுதாயத்திடை பட்டறிவின் பயனாகப் பிறப்பவை பழமொழிகள்.''[282] என்று டாக்டர் ந.வீ.செயராமன் கூறியதற்கேற்ப 'கோபம் குடியைக் கெடுக்கும்' என்னும் பழமொழியை 'முன் கோபிராஜா என்னும் கதையில் விளக்கியுள்ளார்.

### 2.2.4.6. நற்செயலே சுதந்திரம்

பொன்னனின் சுதந்திரம் என்னும் கதையில் பொன்னனுக்கு நற்செயலே சுதந்திரம் என உணர்த்தப்பட்டது. இக்காலக் குழந்தைகளுக்கு திறம்படச் செய்தலே சுதந்திரம் ஆகும்.

### 2.2.4.7. புனைவு உத்தி

கதையிலே சில கற்பனை நிகழ்வுகளைச் சேர்த்துக் கூறுதலை புனைவு உத்தி என்பர். இவ்வுத்தியைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா பயன்படுத்தியுள்ளார். ‘‘பேசும் குதிரைகளையும் பாடும் கிளிகளையும் அழுது வடியும் சிங்கங்களையும் இக்கதைகளில் காணலாம்.’’[283] என்னும் கூற்றிற்கேற்றாற் போல் விலங்குகள், பறவைகளைப் பேசச் செய்துள்ளனர். ‘குப்புவின் குல்லாய்’ என்னும் சிறுகதையில் குப்பு தன் கடையிலுள்ள தின்பண்டங்களை கடையைப் பார்த்துக் கொள்ளுவதைச் சாக்காக வைத்து யாருக்கும் தெரியாமல் குல்லாவிற்குள் மறைத்து வைக்கிறான். அப்பொழுது காக்கைகள் ‘‘நீ மெதுவாகக் கீழே போ. விருட்டுனு அந்த ஓலை மூடியைத் தூக்கிக்கிட்டுப் பறந்து போய், அதோ தெரியுதே, அந்தத் தென்னை மரத்திலே உட்கார்ந்திரு. நான் அந்த பாத்திரத்திலேயிருக்கிற பண்டத்திலே பெரிசாகப் பார்த்து ஒண்ணு எடுத்து வர்றேன். ரெண்டு பேரும் பங்கு போட்டுத் தின்னலாம்.’’[284] என்றது முதல் காக்கை ‘‘நல்ல யோசனை நீ சொன்னபடியே நான் செய்கிறேன் என்று சொல்லிவிட்டு அந்தக் காக்கை மெதுவாகக் கீழ் நோக்கிச் சென்று. விருட்டென்று ஓலைக்குல்லாவை கொத்திக் கொண்டு பறந்து போய் தென்னை மரத்தில் உட்கார்ந்து கொண்டது.’’[285] இவ்வாறு இந்த வரிகள் உண்மையில் பேசாத அ∴றிணை உயிரினங்களை காகம், கிளி போன்ற உயிரினங்களைப் பேசச் செய்து, சோம்பேறியாக உள்ளவர்களின் பொருட்களைக் காக்கைத் தூக்கிப் போகும் என்ற பயத்தை இந்தக் குழந்தைகளுக்குச் சிறுவயதில் கதை உத்திகள் மூலம் அறியச் செய்ய முடியும் என்பதற்கு உதாரண வரிகளாக உள்ளன. இதே போல் ‘இரு காக்கைகள்’ என்னும் சிறுகதையில் ‘கூடி வாழ்ந்தால் கோடி நன்மை’ என்ற சிந்தனையை விதைத்துள்ளார்.

### 2.2.4.8. ஒரு கதையில் ஒரு தகவல் உத்தி

ஒரு கதையில் ஒரு தகவல் வாயிலாக பிரச்சினைகளை பிரச்சினைகள் என ஒதுக்கிவிடாமல் பிரச்சினைகளிலிருந்து விலகுவதற்குரிய சிந்தனைகளைக் கூறியுள்ளார். இதை ‘ஒரு கதையில் ஒரு தகவல்’ என்னும் உத்தி மூலம் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி ‘ஒரு கதை ஒரு தகவல்’ என்னும் நூலில் குறிப்பிட்டுள்ளார்.

நற்தீர்ப்புக் கூறுதல், தன்னம்பிக்கையே சிறந்தது போன்ற செய்திகளைக் கூறியுள்ளார்.

‘‘நீ விழுந்தது சுறாமீன் மீதல்ல சுறா மீனாக இருந்திருந்தால் அது உன்னை இந்நேரம் விழுங்கியிருக்கும் டால்பின் மீன்மீது நீ விழுந்து விட்டாய். டால்பின் மீன் யாருக்கும் எந்தக் கெடுதலும் செய்யாது. அதன் மீது யாரும் விழுந்தால் அவர்களை அது கரை சேர்த்து விடும். நல்ல வேளை, நீ கடலில் வாழும் உயிர்களுக்குச் சாப்பாடு போட்டதால் தான் டால்பின் மீன்மீது விழுந்தாய் மற்ற உயிர்களை நாம் நேசித்தால் ஒரு போதும் மற்ற உயிர்களால் நமக்கு ஒரு தீங்கும் நேராது.’’[286] என்று அன்பின்

தன்மை கொண்ட ஒரு சிறுவனை ஒரு மீன் காப்பாற்றியதுபோல அன்புள்ளவர்களை இந்த உலகத்தில் யாராவது காப்பாற்றுவார்கள் என்பது போன்ற சிந்தனைகளை இவ்வுத்தியின் மூலம் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி உணர வைத்துள்ளார்.

### 2.2.5.0 நாவல் உத்தி

நீண்ட கதை வடிவத்தை நாவல் என்பர். வார்த்தைகளாலும் பக்கங்களாலும் நீண்டது நாவல் ஆகும். ஏனென்றால் குழந்தை வாசகர்கள் படிப்பதில் பொறுமையைக் கையாள வேண்டும் என்னும் நோக்கத்தினை அடிப்படையாக வைத்துக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா 'நீலா மாலா' 'பர்மா ரமணி' போன்ற நாவல்களை எழுதியுள்ளார். குழந்தைக்கவிஞர் செல்லகணபதி 'அண்ணன் அல்ல அப்பா', ஆருயிர்த்தோழி', 'பூங்குளம் ராஜா' போன்ற நாவல்களை எழுதியுள்ளார். நாவலில் தொடக்கம், வளர்ச்சி உச்சக்கட்டம் போன்றவை பொதுவான உத்திகளாக அமைந்துள்ளன. இதனை, "அன்றாட வாழ்வில் காணப்படும் நிகழ்ச்சிகளையும் மனிதர்களையும் அடிப்படையாகக் கொண்டு அவற்றிற்கு உயிரும் உணர்ச்சியும் ஊட்டிக் கற்பனையாகப் புனையப்படும் இலக்கியமே நாவல்."[287] என்ற கூற்றிற்கேற்ப மனிதர்கள் வாழ்வில் நிகழும் அன்றாட நிகழ்ச்சிகளையும் மனிதர்களையும் அடிப்படையாக வைத்துக் கற்பனையான பாத்திரத்தை நாவலில் புனைத்துள்ளனர். சிந்தனைகள் எளிதில் பதியும் வண்ணம் பாடல்களைப்போல நாவல்களிலும் வியப்புத்தி, வினாவிடை உத்தி, கூற்று உத்தி போன்ற உத்திகளை நாவலின் உத்தியாகக் கையாண்டுள்ளனர். உதாரணத்திற்கு ஒரு சில வரிகள் தரப்பட்டுள்ளன.

"நீங்கள் சொல்வதை என்னால் நம்ப முடியவில்லையே!"

"என்ன! நம்பவே முடியவில்லையா? சரிதான்,

ஜோஸ்யம், ஆருடம் பார்த்துத்தான் நம்ப வேண்டும் போலிருக்கிறது. இவன் பொட்டணத்தில் என்ன வைத்திருந்தான் என்பது துரைசாமிக்கு அப்போது தெரியுமா? பொட்டணத்தைக் கூட அவனாக எடுத்துக் கொண்டு வரவில்லையே! நான் எடுக்கச் சொன்ன பிறகுதானே எடுத்தான்! கையும் களவுமாக அகப்பட்ட பிறகும் நம்ப முடியவில்லை என்கிறீர்களே!"[288] என்று இவ்வாக்கியம் மோகனரங்கம், மேனேஜர் ஆகிய இரண்டு பாத்திரங்கள் பேசிக்கொள்ளும் உரையாடலை உணர்த்தியுள்ளன.

இவ்வாறு நாவலைப் பாத்திரங்கள் பேசிக் கொள்வது போலவும், ஆசிரியர் கூறுவது போலவும் படைத்துள்ளார்.

### 2.2.5.1. கருவும் சிந்தனையும்

நேர்மை வாழ்வை உயர்த்தும் என்பதற்கு உதாரணமாகக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பாவின் பர்மாரமணி என்னும் நாவல் சான்றாகும். நீலா மாலா என்னும் நாவலில் வசதியுள்ளவர்கள் வசதியில்லாதவர்களுக்கு உதவ வேண்டும் என்ற சிந்தனையை விதைத்துள்ளார். இதைப் போல குழந்தைக்கவிஞர் செல்லகணபதி 'அண்ணன் அல்ல அப்பா!" என்னும் நாவலில் தம்பியின் வளர்ச்சிக்குப் பாடுபட்ட

அண்ணனின் செயல்பாடுகளை உணரச் செய்துள்ளார். இவ்வாறு நாவலின் கரு உதவியை அன்பைப் பதிவு செய்வதாக உள்ளது.

நாவல்களை நீண்ட நேரம் படிக்கின்ற குழந்தைகள் நிறைய நூல்களைப் படிக்கும் ஆர்வத்தையும் வளர்த்து தங்களது திறமைகளை வளர்ப்பார்கள். விடுகதை உத்தி, வினாடி வினா உத்தி, உரை உத்தி, தன் வரலாற்று உத்தி போன்ற தலைப்புகளிலும் பாடல் செய்திகள் ஆராயப்பட உள்ளன.

### 2.2.6. விடுகதை உத்தி

'விடுகதை என்பது நாம் வாழ அவசியமான நிலம், நீர், தீ போன்ற பொருட்களை மறைமுகமாக அறியச்செய்யும் வடிவமாகும். "விடுகதை என்பது இளஞ்சிறார்களின் அறிவையும் சிந்தனையையும் வளர்க்கும் வகையில் எழுந்த ஒரு வகை இலக்கியம். தாயர்கள் தம் மக்களின் சிந்தனை ஆற்றலை வளர்க்கும் வகையில் விடுகதைகளை எழுப்புவதும் இளஞ்சிறார் அவற்றுக்குரிய விடைகளை இறுப்பதும் இன்னும் பல இடங்களில் நாம் காணும் வழக்காகும்."[289] என்னும் கூற்றிற்கேற்றாற்போல் அறிவையும் சிந்தனையையும் வளர்க்கும் நோக்கில் விடுகதைகள் உள்ளன. "தமிழில் கேள்வி பதில் வடிவிலான நூல்கள் பல உண்டு. எல்லோராலும் பாராட்டப்படும் திருக்குறளில் பல திருக்குறள்பாக்கள் கேள்வி - பதில் வடிவிலேயே அமைந்துள்ளன.

இந்தக் கேள்வி பதில்களின் மற்றொரு வடிவமே விடுகதை."[290] என்ற இந்தக் கூற்றினுக்கு ஏற்ற வகையில் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா வெளிநாட்டு விடுகதைகளை இந்தியச் சிறுவர்களும் தமிழகச் சிறுவர்களும் கற்கும் வகையில் தமிழில் மொழி பெயர்த்து எழுதியுள்ளார்.

#### 2.2.6.1. மறைமுக வினாவும் விடையும்

குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா கூறியுள்ள நூற்றி ஐம்பத்தைந்து (155) விடுகதைகளையும் விளக்கினால் ஆய்வெல்லையின் அளவு நீளும். அதனால் சில விடுகதைகளும் விடைகளும் ஆய்ந்து தரப்பட உள்ளன.

> "ஒல்லியாய் இருப்பவராம்;
> ஒற்றைக்கண் உடையவராம்;
> உடம்பிலே பட்டாலோ
> 'உஸ்' என்று கத்திடுவாய்."[291]

என்ற விடுகதையில் ஒல்லியாய் இருப்பது ஊசி, அதன் கண் ஒற்றைக் கண்ணாகும். உடம்பில் பட்டால் உஸ் என்று வலியை உண்டாக்கும் என்று மறைமுக வினா மூலம் விடையை அறிய வைக்கும்போது சிந்தித்தலின் அவசியத்தையும் இந்த விடுகதைக்கு விடை கூற வேண்டும் என்ற ஆர்வத்தையும் குழந்தைகள் வளர்த்துக் கொள்வார்கள்.

#### 2.2.6.2. அறிதலில் ஆர்வம்

அர்ஜெண்டைனா என்னும் நாட்டில் வழங்கி வந்த விடுகதையில் ஒன்று எடுத்துக்காட்டுக்காகத் தரப்பட்டுள்ளது.

**அர்ஜெண்டைனா**

''என் பெயரைக் கேட்பவர் அநேகர்.
என்னைப் போட்டு மிதிப்பவரும் அநேகர்
நான் யார் பெயரையும் கேட்பதுமில்லை;
எவரையும் போட்டு மிதிப்பதும் இல்லை.''[292]

என்ற விடுகதையின் மூலம் தெருவே பொறுமையாக நாம் மிதிப்பதைத் தாங்கிக்கொள்ளும் என்பதைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா உணர்த்தியுள்ளார்.

<u>பெரு</u>: ''ஆசையுடன் சந்தையிலே
ஐந்து பணம் நான் கொடுத்து,
அழகான ஒரு பெண்ணை
அழைத்து வந்தேன் வீட்டிற்கு,
அழைத்து வந்த பெண் என்னை
அழவைத்து விட்டாளே!''[293]

இவ்வாறு இரண்டாவது விடுகதைக்கு எளிமையாக வெங்காயம் என்பதை விடையாகக் கூறியுள்ளாார்.

#### 2.2.6.3. முயற்சியால் விடை உணர்தல்

நாம் தான் எந்தத் தெரு என விசாரிக்கிறோம். நாம் தெருவில் மிதித்துக்கொண்டு செல்லும்போது அது நம் பெயரைக்கேட்பதும் இல்லை. நம்மை மிதிப்பதும் இல்லை. ஆதலால் இந்தத் தெருவே நம் வாகனப் பயன்பாட்டிற்கு உதவுகிறது. இப்படி ஒரு நண்பனாக இருந்து உதவும் இந்தத் தெருவிற்கு நாமும் நண்பனாக இருக்கவேண்டும். இந்தத் தெரு வாகனங்களைத் தாருமாறாக ஓட்டி மற்றவர்களின் காயத்திற்கு உயிரிழப்பிற்கு ஆளாகாதாவாறு பார்த்துக் கொள்ள வேண்டும். என்ற சிந்தனையை 'பெரு' என்ற நாட்டின் விடுகதைச் சிந்தனை வளர்க்கிறது. இவ்வாறு நூற்றி ஐம்பத்தைந்து சிறுகதைகள் இந்நூலில் அமைந்து நம்மை சிந்திக்க வைக்கின்றன.

### 2.2.7. வினாடி வினா உத்தி

வினா என்பது சிந்தனைகளைத் தூண்டும் தூண்டுகோலாகும். இந்த வினாவைக் கேட்கும்போது சில நேரங்களில் தவறான விடையும், சில நேரங்களில் சரியான விடையும் அமையும். இந்த முறையானது குழந்தைகளது முயற்சிக்கு அடிக்கோலிடும். இந்த முயற்சியால் நிறையப் படிக்க வேண்டும். நாம் நன்றாகக் கூறிப் பாராட்டைப் பெற வேண்டும் என்ற ஆர்வம் உயரும். இந்த ஆர்வத்தால் விடைகளை உணர்வார்கள். அதனால் இந்தக் கேள்வி நேர உத்தி வினா கேட்டலும் சிந்தித்தலும், முயற்சியும்

ஆர்வமும், ஆர்வத்தால் விடை உணர்தல், வினாக்களால் பொது அறிவு வளர்த்தல் போன்ற தலைப்புகளின் வாயிலாக ஆய்வு செய்யப்பட உள்ளன.

#### 2.2.7.1. வினா கேட்டலும் சிந்தித்தலும்

'கேள்வி நேரம்' என்ற நூல் ஒரு பெரியவர் வினா கேட்க அவ்வினாக்களுக்கு மூன்று குழந்தைகள் பதில் கூற முயற்சி செய்ததைக் காட்டியுள்ளது. இதில் முதலில் கூறுபவர்களுக்குப் பாராட்டுக் கிடைத்ததைக் காட்டியுள்ளது. தவறான விடை அளித்தவர்களுக்குத் தானும் விடை கூறினால் பாராட்டுக் கிடைத்திருக்கும் என்ற எண்ணத்தை வளர்த்திருக்கிறது. அதனால் சிந்திக்கும் திறனை வளர்ப்பதற்கு முயற்சி செய்வார்கள்; சரியான திறனை வளர்ப்பதற்கு முயற்சி செய்வார்கள்; சரியான பொது அறிவு வினாக்களுக்குரிய விடைகளை அளிப்பார்கள். அதனால் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா 'கேள்வி நேரம்' என்னும் நூலின் வாயிலாக இவ்வுத்தியை அறிமுகப்படுத்தியுள்ளார்.

#### 2.2.7.2. எடுத்துக்காட்டுக்கு வினாவும் விடையும்

"கேள்வி கேட்பவர் ரா.பொன்ராசன்
பிள்ளைத் தமிழ் என்றால் என்ன தெரியுமா?
ராஜேஷ் ஓ தெரியுமே! எங்களைப் போன்ற பிள்ளைகளுக்காக எழுதப்படும் தமிழ்தானே?"[294] என்று ராஜேஷ் என்னும் சிறுவன் தவறான விடையைக் கூறும்போது அவன் விடை கூறுவது தவறாக இருந்தாலும் முயற்சி செய்கிறான். பொது அறிவு வளர்ப்பதற்கு என்ன செய்ய வேண்டும் என உணர்கிறான். இதனை 'தவறில் முயற்சியும் ஆர்வமும்' என்னும் தலைப்பின் வாயிலாக அறியலாம்.

#### 2.2.7.3. ஆர்வத்தால் விடை உணர்தல்

தவறாகக் கூறிய குழந்தைகள் சரியான விடைகள் கூறும் குழந்தைகள் வாயிலாக விடைகளை உணர்கிறார்கள். பொன்ராசன் ராஜேஷிடம் வினா எழுப்புகிறார். தவறானதாகிறது மற்றொரு முறை கேட்கும்போது மற்ற ஒருவனால் விடைகளை உணர்ந்து கொண்டு பதில் கூறாதவர்களும் விடைகளைக் கூற வேண்டும் என்ற எண்ணத்தை வளர்த்துக்கொள்கிறார்கள்.

#### 2.2.7.4 வினாக்களால் பொதுஅறிவு வளர்த்தல்

பிரதாப முதலியார் சரித்திரத்தை எழுதியவர் வேத நாயகம்பிள்ளை. உலகிலேயே சிதம்பரம் ஸ்டேடியம் என்பது கிரிக்கெட்டெஸ்ட் பந்தயம் நடைபெறும் இடமாகும். தமிழ்நாட்டில் முதன் முதலாகக் கதர் பிரசாரம் செய்தவர் ஈ.வெ.ராமசாமிப் பெரியார். சுயராஜ்ஜியம் என்ற சொல்லை முதன் முதலாகப் பயன்படுத்தியவர் தாதாபாய் நௌரோஜி, குடலை அதிகமாகப் பாதிக்கும் காய்ச்சல் டைபாய்டு ஆகும். இவ்வாறு பொது அறிவு வினாக்களுக்குரிய விடைகளை அறிய கேள்வி நேர உத்தி பயன்படுவதாக உள்ளது.

### 2.2.8 உரை உத்தி

கருத்துகளை இயற்றமிழில் எழுதுவதை உரை என்பர். கருத்துகளைப் பத்திகளால் அமைத்து சிந்திக்க வைக்கும் உத்தியை உரை உத்தி என்பர். இந்த உரை உத்தி குழந்தைகளின் வாசிக்கும் திறனை வளர்க்கும்; கருத்துகளை உணர வைக்கும்; நிறுத்தற்குறிகளை அறிய வைக்கும். அதனால் சமுதாயம் மேன்மையடையக் காரணமான தலைவர்களை நினைவுகூற ஒரு பத்தியில் ஒரு சிந்தனை என்ற அளவில் அமைந்த 'பெரியோர் வாழ்விலே' என்ற புத்தகத்திலும் 'சின்னஞ்சிறு வயதில்' என்ற புத்தகத்திலும் அறிமுகப்படுத்தியுள்ளார். அதனால் இதற்குரிய சிந்தனைகள் கட்டுரைஉத்தி, தன் வரலாற்று உரை உத்தி என்னும் தலைப்புகளில் கூறப்பட உள்ளன.

#### 2.2.8.1. ஆர்வமூட்டல்

படிக்கும்போது தொடர்ந்து படிக்க வேண்டும் என்ற ஆர்வத்தை ஏற்படுத்தினால் அது அறிய வேண்டிய கருத்துகளை எளிதில் இடையூறின்றி உணர்த்தும். எனவே ஆர்வமூட்டல் உத்தியைக் கவிஞர்கள் கையாண்டுள்ளனர்.

#### 2.2.8.2. அறிவுறுத்தல்

தன்னம்பிக்கையாலும், நேர்மையாலும் திறமையாலும் உயர்ந்த திரு.வி.க.போன்றோரை அறியச் செய்துள்ளனர். காந்தி, கஸ்தூரிபாய் பற்றிய செய்தியையும் கூறியுள்ளார். "பயப்படாதீர்கள்! நான் பிழைத்துவிடுவேன். மாமிசம் சாப்பிடுவது தர்மமல்ல என்பது தங்களுக்குத் தெரியாதா? மாமிசம் சாப்பிடுவதை விட, தங்கள் மடியிலே தலை வைத்தப்படி சாவதையே நான் விரும்புவேன்."[295] என்று மலர்ந்த முகத்துடன் கஸ்தூரிபாய் கூறினார். நல்ல வேளையாக மாமிசம் சாப்பிடாமலேயே கஸ்தூரிபாய் அப்போது பிழைத்துவிட்டார். தன் உயிருக்கு இழப்பு நேர்ந்தாலும் உயிர்க்கொலை தீது என்பதனை உணர்ந்த காந்தி, கஸ்தூரி போன்ற சான்றோர்களை இவ்வுத்தியின்மூலம் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா அறிமுகம் செய்துள்ளார். இதுபோல் தன் வரலாற்று உத்தியையும் பின்பற்றியுள்ளார்.

#### 2.2.8.2. தன் வரலாற்று உரை உத்தி:

எங்கள் கதையைக் கேளுங்கள் என்ற நூலில் மிருகங்களைக் கூறி விளக்கியுள்ளார்.

**தொகுப்புரை :**

- ❖ குழந்தைகளின் கல்வி, வீரம், ஒற்றுமை போன்ற புறச்செயல்களைச் சிறப்பாக வளர்ப்பது இன்றைய சமுதாயத்தின் தேவையாக அமைகிறது. குழந்தை இலக்கியங்களுக்குக் குழந்தைகளே வாசகர்களாக அமைவதால் குழந்தைகளுக்கு மகிழ்ச்சியூட்டும் வகையில் பாடல்களையும் கதைகளையும் நாவல்களையும் எழுதுவது குழந்தைக் கவிஞர்களின் கடமையாகிறது என்ற சிந்தனையை அறிமுக உரை அறிவிக்கிறது.

- ❖ உத்தி என்பது வழிமுறையாகும். உத்திக்குப் பல பொருள் உண்டு; உத்திகட்கு வரையறை இல்லை. கவிஞன் தன் கவிதைச் சிறப்பிற்காகப் பல்வேறு உத்திகளைக் கையாளலாம் என்ற செய்திகள் ஆராயப் பெற்றுள்ளன.

- ❖ கவிஞர்கள் தங்களது உணர்ச்சியைக் கருத்தாக மாற்றம் செய்ய உத்திகளை மேற்கொள்கின்றனர். குறிப்பு மொழி, ஒலிநயம் முதலியனவும் உத்திகளாகும்.

- ❖ குழந்தை இலக்கியஉத்திகள் பெரியோர் இலக்கிய உத்திகளிலிருந்து வேறுபடுகிறது என்பதையும் இவ்வியல் அறிவிக்கிறது.

- ❖ குழந்தை இலக்கியங்களில் எளிமையைப் பின்பற்றல், அறிவுரை கூறுதல், விலங்கு பறவைகளை உவமையாக்குதல் என்ற தன்மைகளின் அடிப்படையில் உள்ளன என்று அறியப்பெற்றுள்ளது.

- ❖ நல்ல எண்ணமும் செயல்களும் உடையவருக்கே இறைவன் செவிசாய்ப்பான் என்ற நோக்கில் குழந்தை மொழியில் இறைவணக்க உத்தி அமைந்துள்ளது.

- ❖ குழந்தைகளின் எதிர்காலத் திறமையை வளர்க்கும் நோக்கில் காலை நேரத்தில் அதிகாலையில் எழுதலின் அவசியத்தை உணரச்செய்தல், படிப்பில் காலந்தாழ்த்தாமையைப் பின்பற்றல், பெரியோரை அறிந்து அவர்களின் சொற்களுக்குக் கீழ்ப்படியச் செய்தல், பெரியோர் மீது அன்பு கொள்ளச் செய்தல், தாயை நேசிக்கச் செய்தல், ஆசிரியரை மதிக்கச் செய்தல் போன்ற செயல்பாடுகளை அடிப்படையாக வைத்து அறிவுரைப் பயன்பாட்டு உத்தி அமைந்துள்ளது.

- ❖ ஆர்வத்தால் எச்செயலையும் எளிதில் வெல்லலாம். அதனால் குழந்தைகளுக்குப் பிடித்த பறவை-விலங்குகளைச் சான்று கூறி சுறுசுறுப்பு, முயற்சி போன்ற செயல்பாடுகளை வளரச் செய்துள்ள தன்மை அறியப்பெற்றுள்ளது.

- ❖ பாடல்களில் ஆங்காங்கு மகிழ்வுணர்விற்கேற்ற சிந்தனைகளைப் பதிவு செய்துள்ளனர்.

- ❖ அறிவியல் செய்திகள் கணக்கற்றவை என்றாலும் குழந்தைகளின் இயல்புகளுக்கு ஏற்றாற் போன்ற பாடுபொருட்களில் அறிவியல் உத்தியைப் பின்பற்றியுள்ளனர்.

- ❖ தாவரங்கள், விலங்குகள், பறவைகள், உயிரினங்கள் போன்ற இயற்கைப் பொருட்களையும், பெட்ரோல், டீசல் போன்ற செயற்கைப்பொருட்களையும் பாடல்களில் எளிமையாக அறியச்செய்துள்ளனர்.
- ❖ குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா தாவரங்களில் உள்ள பச்சயத்தில் ஒளிச்சேர்க்கை நடைபெறுவதாலேயே உணவைத் தயாரிக்கிறது என்பதை மறைமுகமாக உணர்த்தியுள்ளார்.
- ❖ மழைநீரைப் பெற மரங்கள் இன்றியமையாதவை. அதனால் மரங்களாலேயே இனப்பூமிக் கூட்டத்தில் ஏற்படும் மாசுகளைத் தவிர்க்க இயலும். மரங்களை வெட்டினால் மனிதர்கள் மழையின்றிச் சாவார்கள், மரங்களாலேயே வளம் உண்டு என்பதை இவ்விரு குழந்தைக் கவிஞர்களின் பாடல்கள் தெளிவுபடுத்துகின்றன.
- ❖ நெருப்பே சக்தியாகவும் சூரியசக்தியாகவும் உள்ளது. மனிதன் உடலில் சூடு இருப்பதாலேயே உயிர் வாழ்கிறான் என்ற செய்தியும் ஊசல் கடிகாரத்தைக் கண்டறிந்த கலிலியோவையும் அறிமுகப்படுத்தி அறிவியல் தத்துவத்தையும் பாடல்கள் உணர்த்துகின்றன.
- ❖ கணிப்பொறி, ரேடியோ, டிஷ் ஆண்டெனா போன்ற அறிவியலால் விளைந்த பொருட்களையும் அறியச் செய்துள்ளனர். இவ்வாறு அறிவியலால் பயன்பாட்டுச் சிந்தனைகளை அறிவியல் பயன்பாட்டு உத்தியால் பெறச் செய்துள்ளனர்.

- ❖ கொடுத்தால் குறையாத கல்வியைப் பெறச் செய்ய ஆர்வமூட்டல் உத்தியைப் பின்பற்றி நிறங்களையும், கிழமைகளையும் திசைகளையும் அறியச் செய்துள்ளனர். அடிப்படை எழுத்துகளை இட்லி, கா∴பி போன்ற பொருட்களை உதாரணமாகக்கூறி அறியச் செய்துள்ளனர். அறிவூட்டும் ஆசானை மதிப்பதற்குரிய பாடல்களும், நூலகச் செய்திகளும் உள்ளன.

- ❖ பொம்மைகளுக்குத் திருமணம் செய்து விளையாடுதல், மணலில் வீடுகட்டி விளையாடுதல், அன்புள்ள உறவினர்களில் ஒருவரைக் குதிரையாக்கி விளையாடுதல் போன்ற பாடல்களைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா எழுதியதை இவ்வியல் ஆராய்ந்து வெளிப்படுத்துகிறது.

- ❖ குழந்தைக்கவிஞர் செல்லகணபதி கிரிக்கெட், கோலிக்குண்டு போன்ற விளையாட்டுகளைப் பாடல்களில் கூறி விஞ்ஞானியாக மாற்றும் பணியில் ஈடுபட்டுள்ளார்.

- ❖ எடு என்பதன் பொருளை எடுத்தார் என்றும் 'கொடு' என்பதைக் கொடுத்தார் என்றும் தானே சொற்களை அமைத்துக் கொள்ளும் இயல்புடையவர்கள்

குழந்தைகள் என்ற செய்தி இலக்கண, இலக்கிய உத்திகள் என்ற தலைப்பில் உணர்த்தப்பட்டுள்ளது. ஆற்றில் போட்டாலும் அளந்து போடவேண்டும் என்ற பழமொழியால் உயர்ந்த பண்பைக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி அறிய வைத்துள்ளார். உலகப்பொதுமறையாம் திருக்குறள் படிப்பதன் அவசியத்தை உணர்த்தியுள்ளனர். பெயர்ச்சொல் அறிமுக உத்தியின் மூலம் ‘காலம்’ என்னும் பெயர்ச்சொல்லால் படித்தவன் வெற்றியையும், படிக்காதவன் தோல்வியையும் அடைவான் என்பதை நகைச்சுவை உணர்வுடன் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா விளக்கியுள்ளார். வினைச்சொல் உத்தியால் கிராம மக்களின் துயர நிலையையும் கிராமத்தில் வாழும் பசுவால் பாலைப் பெறமுடியும் என்ற சிந்தனையுடன் ‘வினைச்சொல்’ எது என்பதையும் அறிய வைத்துள்ளனர். பொது இடத்திற்கு உறவினர்களின் கையைப் பிடித்துச் செல்லவேண்டும்; கருணையே அன்பை வளர வைக்கும் என்ற சிந்தனைகளைப் பதிவு செய்துள்ளனர்.

- ❖ ஆர்வத்தை வளர்க்கும் வியப்பு உத்தியையும், சிந்தனை வளர்க்கும் வினா உத்திகளையும் பயன்படுத்தி மகிழ்ச்சியையும் ஆர்வத்தையும் அதிகரிக்கச் செய்யும் பாடல்களை எழுதியுள்ளனர் என்று அறியப்பெற்றுள்ளது.
- ❖ உரையாடும் திறனை வளர்க்க கூற்று உத்தியைப் பின்பற்றியுள்ளனர்.
- ❖ நினைவுப் பயிற்சி அளிக்கும் பயிற்சி உத்தியால் ஒற்றுமை உணர்வைப் பெறச் செய்துள்ளனர் .
- ❖ பாடல்களில் ஆசிரியர்களுக்கும் உறவினர்களுக்கும் கடிதம் எழுதக் கற்றுக் கொடுத்துள்ளனர்.
- ❖ செயலை வலிமைப்படுத்தும் செயல்உத்தியால் பாரதம் செழிப்பதற்கு வழி கூறியுள்ளனர்.
- ❖ பாடல்களில் பொதுஅறிவுச் சிந்தனைகளை விதைத்தல் அவசியமானது என்பதுணர்ந்து குழந்தைகளுக்கு இன்றியமையாத பொது அறிவுச் சிந்தனைகளைக் கூறியுள்ளனர்.
- ❖ அடைமொழிச் சொற்களை அறியும் வண்ணமும் சொற்களை நினைவு கூறும் வண்ணமும் ஒரு சொல் இரண்டு மூன்று முறை அடுக்கி வந்து பொருள்தரும் என்ற நன்னூலாரின் வழிகளுக்கு ஏற்பவும் குழந்தைப் பாடல்களைப் படைத்துள்ளனர்.
- ❖ சொற்களுக்கு, சொற்றொடர்களுக்கு அழகூட்டும் அணிநய உத்தியாலும் குழந்தைகளுக்கேற்ற சிந்தனைகளை இவ்விரு கவிஞர்களும் பாடல்களில் உணர்த்தியுள்ளனர்.

❖ இலக்கணத்தை அறிந்த குழந்தைகளுக்குச் சலிப்பு ஏற்படாத வண்ணம் அமையப் புதுமை உத்தியாலும் பாடல்களைத் தந்துள்ளனர். இதன் மூலம் வறுமை அகல்வதற்குரிய வழிமுறைகளைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா சிந்திக்கச் செய்துள்ளார்.

❖ குழந்தைக் கவிஞர் செல்லகணபதி நட்பு எப்படிப்பட்டது. மானம் காக்க பருத்திப்பூவே சிறந்தது என்று அக்பருக்குப் பாபர் கூறிய விடையை அறியவைத்துள்ளார்.

❖ கணியன் பூங்குன்றனாரின் 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்ற சிந்தனையையும் குழந்தைகள் பின்பற்றச் செய்துள்ளார்.

❖ உணர்வால் தாய் தந்தை போல் உணர்த்தும் பாடல்களை எழுதியுள்ளனர். நற்பழக்கங்களைப் பின்பற்ற தாயாகிக் கூறியுள்ளனர்.

❖ திருக்குறளைத் தினந்தோறும் படிக்கவேண்டும் என்பது பதிவு செய்யப்பட்டுள. தந்தையாகிக் குழந்தையை வளர்க்கும் குடும்ப உறவினர்களுக்குள் மன முரண்கள் (மனஸ்தாபம்) வரக்கூடாது என்பதைக் குழந்தையாகி விதைத்துள்ளனர்.

❖ இறைவனைப் பாட்டுப் பாடி வணங்கலாம்; வெடியைக் கவனத்துடன் பயன்படுத்த வேண்டும்; நேரம் ஒதுக்கிப்படித்தல், சிறுவர்கள் குழந்தைகளைப் பார்த்துக்கொண்டு பெரியோர்க்கு உதவும் வழிகள், சுதந்திரத்தின் பொருளை உணர்ந்து கொள்ளுதல் போன்ற சிந்தனைகளைக் குழந்தையாகிக் கூறியுள்ளனர். உணர்வால் அண்ணனாதல் உத்தியைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா பின்பற்றி வெடி வெடிக்குபோது கவனம் தேவை என்ற சிந்தனையைப் பதிவு செய்துள்ளார். இதுபோல் தம்பியாதல் உத்தியின்மூலம் அண்ணனின் செயல்களைத் தம்பி பின்பற்ற வேண்டும் எனக் கூறியுள்ளார்.

❖ கவனச் சிந்தனையை இவ்விரு கவிஞர்களும் அறிவுரையாளராகிக் கூறியுள்ளனர்.

❖ நேர்மை, சுறுசுறுப்பு, உழைப்பு, சேமிப்பு போன்ற சிந்தனைகளை உணர்வால் அறிவுரையாளராகி விதைத்துள்ளார்.

❖ நேர்மையுள்ள எந்த வியாபாரியும் தொழிலில் மேன்மையடைவான் என்ற சிந்தனையை உணர்வால் வியாபாரியாகிப் பதிவு செய்துள்ளார்.

❖ சிரிப்பால் செயல்கள் வலிமையடையும் என்பதால் உணர்வால் நகைச்சுவையாளராகவும் மாறிப் பல கருத்துகளைக் கூறியுள்ளனர். இன்றைய இளைஞர்களைவிட பெரியவர்களே சுறுசுறுப்பானவர், இரு மனைவியரால் துயரம் நேரிடும், நல்ல சம்பந்தம் அவசியம், பெற்றோர்கள் சமாதானம் செய்யக் கற்றுக்கொள்ளுதல், பிறருக்குத் துயர் தராத உடம்பைப் பெறுதல், வன்முறையைத் தவிர்த்தல், கொல்லாமைப் பண்பை வளர்த்தல், தூய்மையால் அடையும் நன்மைகள், தந்தையைவிட மகன் சிறந்தவன், நடுவர் தவற்றைப்

பெரிதாக நினைக்காமை போன்ற சிந்தனைகளை நகைச்சுவை உத்தியால் பெறச் செய்துள்ளனர். புலன் உணர்வு உத்தியைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா பின்பற்றியுள்ளார்.

- ❖ குழந்தைகள் விலங்கு பறவைகளையும் உறவினர்களாகக் கொள்ளுதல் வேண்டும். இப்பண்பால் குழந்தைகளின் அன்பு விரிவடையும் என்பதைக் கருத்தில் கொண்டு இவ்விரு கவிஞர்களும் திணை வேறுபாடின்மை உத்தியைப் பின்பற்றியுள்ளனர்.

- ❖ கற்பனையால் எதிர்கால எண்ணங்கள் வளரும் என்பதை உத்தியாகக் கொண்டு நடக்காத நிகழ்வுகளை நடப்பதாகக் காட்டியுள்ளனர்.

- ❖ ஒரு குழந்தையைத் தொடர்ந்து மற்றொரு குழந்தை செல்வது போல் ரயில் ஓட்டி விளையாடும் இந்த உணர்வும், கை, கால்களை வாகனமாகப் பயன்படுத்தும் இந்தக் கற்பனை உணர்வும் பிற்காலத்தில் குழந்தைகளைச் சிறக்கச் செய்து உண்மையாகவே வாகனங்கள் வாங்கி ஓட்டுவார்கள் என்ற தன்மையில் பாடல்கள் அமைந்துள்ளன.
- ❖ குழந்தைகளுக்காகப் புதிய வடிவங்களில் எழுதினாலும் இலக்கண நெறிக்குட்பட்டு எழுதுவதும் கவிஞர்களின் கடமையாகும் என்பதைக் கருத்தில் கொண்டு இவ்விரு கவிஞர்களும் யாப்பு உத்தி, அணி உத்தி, சொல்நய உத்தி போன்ற உத்திகளைப் பின்பற்றியுள்ளனர் என்பது அறியப் பெற்றுள்ளது. இவ்வியலில் இலக்கண முதன்மை உத்தி, இலக்கிய முதன்மை உத்தி, அணிநய உத்தி, புதுமை உத்தி, சொல்நய உத்தி, திணை வேறுபாடின்மை உத்தி, யாப்பு உத்தி என்று வகைப்படுத்தப்பட்டுச் செய்திகள் அமைந்துள்ளன.

- ❖ கவிஞர்கள் யாப்பியல் நெறிமுறைகட்கு உட்பட்டு கவிதைகளை எழுதினாலும் குழந்தைகள் வாசகர்களாக அமைவதால் குழந்தைகளுக்கு ஏற்ற முறையில் எளிமையாகப் படைத்தல் அவசியமாகும் என்பதைப் பின்பற்றி இருசீரால் ஆகிய அடியையும் முச்சீரால் ஆகிய அடியையும் உருவாக்கியுள்ளனர். கடினமான தளையை நீக்கியுள்ளனர். நினைவாற்றலை வளர்ப்பதற்குத் தகுந்தாற்போல் எதுகை மோனை நயங்கள் பின்பற்றப்பெற்றுள்ளன. எதிர்ப்பொருளை அறிவதற்குத் தகுந்தாற்போல் முரண் நயத்தைப் பின்பற்றியுள்ளனர். ஒரு பாடலின் இறுதிச்சொல் அடுத்த பத்தியின் ஆதியாக வரும் அந்தாதித் தொடையையும் எழுதியுள்ளனர்.

- ❖ பாடல்களுக்கு ஓசை தரும் ஒலிநய உத்தியையும் பின்பற்றிக் குழந்தைகளை மகிழ்ச்சிக்குள்ளாக்குகிறார்கள்.

- ❖ பாடல்களில் நாடக வடிவ உத்தியையும் பின்பற்றியுள்ளனர்.

- பாடலையே அதிகமாக விரும்பும் குழந்தைகள் கதையும் பாடலும் கலந்த கதைப்பாடலாக இருந்தால் மகிழ்வார்கள் என்பதால் புராணச் செய்திகளைப் பாடுபொருளாக்கிய கதைப்பாடல்களைப் படைத்துள்ளனர்.
- பாட்டுப்பாடி ஆடி மகிழ்ந்த குழந்தைகள் ஓர் இடத்தில் அமர்ந்து படிக்கும் திறனையும் பெறவேண்டும் என்ற நோக்கில் இந்தக் கதை உத்தி சிறந்ததாகும் என்று உணரப்பெற்றுள்ளது.
- குழந்தைகளுக்குக் கதை சிந்திக்கும் திறனை வளர்க்கும். வாசிக்கும் பயிற்சியை அதிகரிக்கும். வேறுபட்ட சிந்தனைகளைப் புதிதான உத்தியில் அமைக்கும்போது அது புத்தகம் படிக்கும் ஆர்வத்தை வளர்க்கும்.
- செயல் வேட்டக் கதை, புதிர்பொதிகதை, வெறும் புனைவுக் கதைகள், விலங்குக் கதைகள் என வகைப்படுத்தப்பட்டுள்ளன.

- கனவு காணும் இயல்புடையவர்கள் என்ற அளவில் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா, வேட்டைநாய், ஒரு நாள் பயணம் போன்ற கதைகளைப் படைத்துள்ளார்.

- போலச் செய்யும் குழந்தைகளுக்குக் கருத்துகளை உவமையுடன் விளக்கினால் எளிதில் உணர்வார்கள் என்பதால் விலங்கு, பறவைகளைச் சான்று கூறி இந்த உலகம் பொல்லாதது. அதனால் வசதியான வாழ்வை எண்ணி வெளியில் சென்றால் வேறு யாரிடமாவது மாட்டிக் கொள்ள நேரிடும் என்பன போன்ற சிந்தனைகளை இவ்விரு கவிஞர்களும் வெளிப்படுத்தியுள்ளனர்.
- ஆர்வத்தை வளர்க்கும் வினா உத்தியைக் கதைக்குள்ளும் பயன்படுத்தியுள்ளனர். கதைக்குள் பழமொழி கூறி சிந்தனைகளை வளர்த்துள்ளனர்.

- கதைக்குள்ளேயே பறவை விலங்குகள் பேசுவது போல கற்பனை நிகழ்வுகளை அமைத்துத் தன் வீடாக இருந்தாலும் தாய் தந்தையரின் அனுமதியுடன் பொருட்களை எடுத்துச் செல்ல வேண்டும் என்று கூறிக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா சிந்திக்கச் செய்துள்ளார்.

- ஒரு கதைக்குள் ஒரு சிந்தனையை மட்டும் அமைக்கும் கதை உத்தியைக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி பின்பற்றியுள்ளார்.
- நீண்ட கதை வடிவமான நாவலை எழுதியுள்ளனர். இது படிப்படியாக வாசிக்கும் திறனை வளர்க்கும். படிப்பதில் பொறுமையை ஏற்படுத்தும் என்று கருதி எழுதியுள்ளனர். வசதியுள்ளவர்கள் வசதியில்லாதவர்க்கு உதவ வேண்டும் என்பதற்கு எடுத்துக்காட்டாக நீலாமாலா, ஆருயிர்த்தோழி போன்ற நாவல்கள் உள்ளன. இவ்வாறு அவ்வப்போது நிகழும் பாத்திரங்களின் உணர்ச்சிகளை உயிரும் உணர்ச்சியும் ஊட்டிக் கருத்துகளை விளக்கியுள்ளனர்.

- ❖ விடுகதையின் மூலம் சிந்தனையை வளர்க்கும் வண்ணம் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா விடுகதை உத்தியைப் பயன்படுத்தியுள்ளார். இதற்குரிய விளக்கத்தை மறைமுக வினா கேட்டு விடையை உணர்த்துதல், அறிதலில் ஆர்வத்தை ஏற்படுத்துதல், பின் முயற்சி செய்தல் என்று படிப்படியாக விடையை அறிந்து கொள்ளும் முறைகளை உணர்த்தியுள்ளனர். இவர் வினாடி வினா உத்தியையும் பயன்படுத்தியுள்ளார்.

- ❖ பாடல், நாடகம் கதைப்பாடல் என்ற பல்வேறு வடிவங்களில் இலக்கியங்களை வெளிப்படுத்திய இவர்கள் இயல் தமிழுக்கு முக்கியத்துவம் தந்து கட்டுரை வடிவிலும், சமுதாயத்திற்குத் தொண்டாற்றிய கவிஞர்களை, தலைவர்களை அறியச் செய்துள்ளனர்.

**அடிக்குறிப்புகள்**

**இயல்-2**

1. ச.வே.சுப்பிரமணியன், கம்பன் இலக்கிய உத்திகள் , ப.37.
2. மேலது ப.39.
3. மேலது ப.38.
4. த.வசந்தாள், வாணிதாசனின் தமிழச்சி கொடிமுல்லை ஓர் ஆய்வு, ப.100.
5. ச.வே. சுப்பிரமணியன், கம்பன் இலக்கிய உத்திகள், ப.41.
6. இரண்டிற்கும் மேற்பட்ட ஆசிரியர்கள் சிற்பி பாலசுப்பிரமணியம் முதலியோர், ஆய்வுக்கோவை 2002, ப.1044.
7. அழ.வள்ளியப்பா , மலரும் உள்ளம், ப.73.
8. சோம.இளவரசு (உ.ஆ.), நன்னூல் எழுத்ததிகாரம், நூ.13, ப.17
9. ப.முத்துக்குமாரசுவாமி(தொ.ஆ.),இருபதாம்நூற்றாண்டின்100தமிழ்க்கவிஞர்கள், ப.24.
10. எஸ்.நடராஜன், மழலையர் பள்ளிக்கல்வி பயிற்று முறைகள், (குழந்தை மனவியல்), ப.94.
11. தா.ஏ.ஞானமூர்த்தி, இலக்கியத்திறனாய்வியல், ப.168.
12. ச.வே.சுப்பிரமணியன், கம்பன் இலக்கிய உத்திகள், ப.41.
13. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம் (இ.தொ.), ப.17.
14. அழ.வள்ளியப்பா , சிரிக்கும்பூக்கள், ப.18.
15. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.3.
16. செல்லகணபதி, வளரும்பூக்கள், ப.11.
17. செல்லகணபதி, மணக்கும்பூக்கள், ப.1.
18. மா.இராமலிங்கம், இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கியம், ப.256.
19. ஆசி.கண்ணம்பிரத்தினம், திருக்குறள் கருத்துரை, அதிகாரம் குறள் எண்.70.
20. நீலம்மதுமயன், படிக்காத மேதை காமராசரிடம் படிக்கவேண்டியவை, முன்னுரை.
21. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.45.
22. செல்லகணபதி, மலரும் மொட்டுகள், ப.79.
23. ஜே.எஸ்.ஏப்ரகாம், நேர நிர்வாகமும் சுய முன்னேற்றமும், ப.17.
24. செல்லகணபதி, மணக்கும்பூக்கள் ப.89.
25. அழ.வள்ளிப்பா, சிரிக்கும்பூக்கள், ப.31.
26. செல்லகணபதி, மலரும் மொட்டுகள், ப.27.
27. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.110.
28. செல்லகணபதி, மலரும் மொட்டுகள், ப.99.
29. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம் (இ.தொ.), ப.36.
30. மேலது ப.39.
31. செல்லகணபதி, மணக்கும்பூக்கள், ப.97.
32. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம் (இ.தொ.), ப.126.
33. செல்லகணபதி, மணக்கும்பூக்கள், ப.132.
34. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.54.

35. செல்லகணபதி, மலரும் மொட்டுகள், ப.111.
36. மா.இராமலிங்கம், இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்இலக்கியம், ப.264.
37. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.75.
38. செல்லகணபதி, வளரும் பூக்கள், ப.41.
39. அழ.வள்ளியப்பா, சிரிக்கும்பூக்கள், ப.43.
40. செல்லகணபதி, வளரும்பூக்கள், ப.98.
41. மேலது ப.102.
42. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.6.
43. செல்லகணபதி, வளரும் பூக்கள், ப.12.
44. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.76.
45. செல்லகணபதி, மலரும் மொட்டுகள், ப.41.
46. ஆசி.கண்ணம்பிரத்தினம்(உ.ஆ.),திருக்குறள் கருத்துரை, குறள் எண்.121, அதிகார எண்.13.
47. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.47.
48. செல்லகணபதி, மணக்கும்பூக்கள், ப.28.
49. மேலது ப.100.
50. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.67.
51. செல்லகணபதி, மலரும் மொட்டுகள், ப.85.
52. தா.ஏ.ஞானமூர்த்தி, இலக்கியத்திறனாய்வியல், ப.225.
53. அழ.வள்ளியப்பா, சிரிக்கும்பூக்கள், ப.20.
54. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.12.
55. செல்லகணபதி, மணக்கும்பூக்கள், ப.212.
56. மேலது ப.42.
57. மா.இராமலிங்கம், இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கியம், ப.267.
58. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம் (இ.தொ.), ப.64.
59. செல்லகணபதி, மணக்கும்பூக்கள், ப.211.
60. மேலது ப.202.
61. ந.சுப்புரெட்டியார் (ரூசோ), இலக்கிய வகையின் வளர்ச்சியும் இக்கால இலக்கியங்களும், ப.112.
62. மா.இராமலிங்கம், இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கியம், ப.265.
63. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம் (இ.தொ.), ப.29.
64. செல்ல கணபதி, மலரும் மொட்டுகள், ப.109.
65. மா.இராமலிங்கம், இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கியம், ப.266.
66. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.17.
67. செல்லகணபதி, மலரும் மொட்டுகள், ப.103.
68. செல்லகணபதி, மணக்கும்பூக்கள், ப.30.
69. அழ.வள்ளியப்பா, சிரிக்கும்பூக்கள், ப.22.
70. செல்லகணபதி, மலரும் மொட்டுகள், ப.105.

71. அழ.வள்ளியப்பா, சிரிக்கும்பூக்கள், ப.50.
72. செல்லகணபதி, நேற்று இன்று நாளை, ப.63.
73. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.64.
74. ந.சுப்புரெட்டியார்,இலக்கிய வகையின் வளர்ச்சியும் இக்கால இலக்கியங்களும், ப.114.
75. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம் (இ.தொ), ப.44.
76. மேலது ப.62.
77. மேலது ப.82.
78. செல்லகணபதி, வளரும்பூக்கள், ப.17.
79. செல்லகணபதி, மலரும் மொட்டுகள், ப.147.
80. மு.வரதராசனார், மொழிவரலாறு, ப.28.
81. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.100.
82. செல்லகணபதி, நேற்று இன்று நாளை, ப.23.
83. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.111.
84. செல்லகணபதி, தேடல் வேட்டை, ப.70.
85. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.33.
86. செல்லகணபதி, தேடல் வேட்டை, ப.51.
87. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.90.
88. செல்லகணபதி, மலரும் மொட்டுகள், ப.43.
89. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.35.
90. மேலது ப.41.
91. மேலது ப.43.
92. செல்லகணபதி, நேற்று இன்று நாளை, ப.17.
93. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.5.
94. செல்லகணபதி, மலரும் மொட்டுகள், ப.75.
95. அழ.வள்ளியப்பா, சிரிக்கும்பூக்கள், ப.51.
96. மேலது ப.80.
97. செல்லகணபதி, மலரும் மொட்டுகள், ப.81.
98. அழ.வள்ளியப்பா, சிரிக்கும் பூக்கள், ப.29.
99. செல்லகணபதி, வளரும்பூக்கள், ப.74.
100. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.18.
101. மேலது ப.39.
102. செல்லகணபதி, வளரும்பூக்கள், ப.1.
103. அழ.வள்ளியப்பா, சிரிக்கும்பூக்கள், ப.27.
104. செல்லகணபதி, நேற்று இன்று நாளை, ப.27.
105. அழ.வள்ளியப்பா, சிரிக்கும்பூக்கள், ப.191.
106. செல்லகணபதி, நேற்று இன்று நாளை, பக்.58-59.
107. அழ.வள்ளியப்பா, சிரிக்கும்பூக்கள், ப.35.

108. செல்லகணபதி, மலரும் மொட்டுகள், ப.83.
109. அழ.வள்ளியப்பா, சிரிக்கும்பூக்கள், ப.40.
110. செல்லகணபதி, வளரும் பூக்கள், ப.40.
111. அழ.வள்ளியப்பா, சிரிக்கும் பூக்கள், ப.48.
112. மேலது ப.70.
113. செல்லகணபதி, தேடல் வேட்டை, ப.50.
114. மேலது ப.36.
115. செல்லகணபதி, வளரும் பூக்கள், ப.56.
116. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.89.
117. செல்லகணபதி, விரிந்த வானம், ப.35.
118. மேலது ப.35.
119. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.94.
120. அழ.வள்ளியப்பா, சிரிக்கும்பூக்கள், ப.95.
121. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.49.
122. செல்லகணபதி, தேடல்வேட்டை, ப.42.
123. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.95.
124. செல்லகணபதி, தேடல்வேட்டை, பக்.34-35.
125. அழ.வள்ளியப்பா, சிரிக்கும்பூக்கள், ப.24.
126. செல்லகணபதி, தேடல்வேட்டை, ப.16.
127. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.94.
128. செல்லகணபதி, வளரும் பூக்கள், ப.1.
129. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம் (இ.தொ), ப.116.
130. செல்லகணபதி, வளரும் பூக்கள், ப.74.
131. சோம இளவரசு (உ.ஆ.), நன்னூல் சொல்லதிகாரம்,பொதுவியல், நூ.395 ப.105.
132. செல்லகணபதி, வளரும்பூக்கள், ப.13.
133. அழ.வள்ளியப்பா, சிரிக்கும் பூக்கள், ப.177.
134. செல்லகணபதி, நேற்று இன்று நாளை, ப.33.
135. அழ.வள்ளியப்பா, சிரிக்கும்பூக்கள், ப.62.
136. மேலது ப.47.
137. செல்லகணபதி, வளரும்பூக்கள், ப.33.
138. அழ.வள்ளியப்பா, சிரிக்கும்பூக்கள், ப.19.
139. செல்லகணபதி, வளரும் பூக்கள், ப.63.
140. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம் (இ.தொ.), ப.69.
141. மேலது ப.37.
142. மேலது ப.110.
143. மேலது ப.113.
144. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.62.
145. செல்லகணபதி, மலரும் மொட்டுகள், ப.61.

146. செல்லகணபதி, மணக்கும்பூக்கள், ப.49.
147. மேலது ப.52.
148. செல்லகணபதி, வளரும்பூக்கள், ப.41.
149. மேலது ப.43.
150. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.76.
151. செல்லகணபதி, நேற்று இன்று நாளை, ப.63.
152. செல்லகணபதி, மலரும் மொட்டுகள், ப.171.
153. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.113.
154. செல்லகணபதி, தேடல் வேட்டை, ப.9.
155. மேலது ப.9.
156. மேலது ப.9.
157. மேலது ப.27.
158. கே.மூர்த்தி, வாழ்வை வசந்தசோலை ஆக்கலாம் வாங்க!, ப.71.
159. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.45.
160. செல்லகணபதி, மலரும் மொட்டுகள், ப.61.
161. செல்லகணபதி, மணக்கும்பூக்கள், ப.129.
162. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.43.
163. செல்லகணபதி, மணக்கும்பூக்கள், ப.11.
164. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.156.
165. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம் (இ.தொ), ப.112.
166. அழ.வள்ளியப்பா, சிரிக்கும் பூக்கள், ப.28.
167. மேலது ப.32.
168. மேலது ப.97.
169. மேலது ப.100.
170. மேலது ப.49.
171. மேலது ப.171.
172. மேலது ப.59.
173. மேலது ப.39.
174. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம் (இ.தொ), ப.98.
175. மேலது ப.91.
176. செல்லகணபதி, மணக்கும்பூக்கள், ப.132.
177. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம் (இ.தொ), ப.67.
178. அழ.வள்ளியப்பா, சிரிக்கும்பூக்கள், பக்.99-100.
179. மேலது ப.104.
180. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம் (இ.தொ), ப.108.
181. செல்லகணபதி, வளரும் பூக்கள், ப.80.
182. மேலது ப.83.
183. மேலது ப.100.

184. செல்லகணபதி, மணக்குபூக்கள், ப.111.
185. செல்லகணபதி, தேடல்வேட்டை, ப.51.
186. செல்லகணபதி, வளரும்பூக்கள், ப.97.
187. செல்லகணபதி, மணக்கும்பூக்கள், ப.109.
188. மேலது ப.113.
189. மேலது ப.126.
190. செல்லகணபதி, தேடல்வேட்டை, ப.47.
191. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், (இ.தொ), ப.84.
192. அ.கி.பரந்தாமனார், நல்ல தமிழ் எழுத வேண்டுமா? ப.507.
193. அழ.வள்ளியப்பா, சிரிக்கும்பூக்கள், ப.185.
194. மேலது ப.187.
195. அழ.வள்ளியப்பா, ஈசாப் கதைப்பாடல்கள், ப.19.
196. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.126.
197. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம் (இ.தொ), ப.212.
198. மேலது ப.214.
199. அழ.வள்ளியப்பா, சிரிக்கும் பூக்கள், ப.198.
200. மேலது ப.203.
201. மேலது ப.189.
202. மேலது ப.199.
203. மேலது ப.188.
204. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம் (இ.தொ), ப.217.
205. மேலது, ப.220.
206. மேலது ப.222.
207. மேலது ப.220.
208. செல்லகணபதி, மணக்கும்பூக்கள், ப.230.
209. மேலது ப.232.
210. செல்லகணபதி வளரும் பூக்கள், ப.13.
211. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.22.
212. அழ.வள்ளியப்பா, சிரிக்கும்பூக்கள், ப.77.
213. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம் (இ.தொ), ப.24.
214. செல்லகணபதி, வளரும்பூக்கள், ப.34.
215. பாஞ் இராமலிங்கம், கல்வியும் உளவியலும், ப.71.
216. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம் (இ.தொ), ப.115.
217. அழ.வள்ளியப்பா, சிரிக்கும் பூக்கள், ப.34.
218. செல்லகணபதி, மலரும் மொட்டுகள், ப.95.
219. செல்லகணபதி, வளரும்பூக்கள், ப.15.
220. மேலது. ப.20.
221. தமிழண்ணல் (உ.ஆ.),அமிதசாகரர்,யாப்பருங்கலக்காரிகை,உறுப்பியல்,

நூ.12,ப.55.

222. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம் (இ.தொ), ப.19.
223. செல்லகணபதி, மலரும் மொட்டுகள், ப.25.
224. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், (இ.தொ), ப.53.
225. செல்லகணபதி, மலரும் மொட்டுகள், ப.143.
226. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம் (இ.தொ), ப.123.
227. செல்லகணபதி, வளரும் பூக்கள், ப.53.
228. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம்(இ.தொ), ப.130.
229. செல்லகணபதி, வளரும் பூக்கள், ப.73.
230. மு.நடராஜன், வட்டநிலா சிறுவர் பாடல்கள், முன்னுரை.
231. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம் (இ.தொ), ப.127.
232. செல்லகணபதி, தேடல் வேட்டை, ப.20.
233. அழ.வள்ளியப்பா, சிரிக்கும் பூக்கள், ப.61.
234. மேலது ப.146.
235. செல்லகணபதி, மலரும் மொட்டுகள், ப.109.
236. அழ.வள்ளியப்பா மலரும் உள்ளம் (இ.தொ), ப.115.
237. செல்லகணபதி, வளரும் பூக்கள், ப.30.
238. அழ.வள்ளியப்பா, சிரிக்கும் பூக்கள், ப.177.
239. செல்லகணபதி, மணக்கும்பூக்கள், ப.28.
240. அழ.வள்ளியப்பா, சிரிக்கும்பூக்கள், ப.66.
241. செல்லகணபதி, வளரும் பூக்கள், ப.64.
242. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம் (இ.தொ), ப.37.
243. செல்லகணபதி, வளரும்பூக்கள், ப.58.
244. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.42.
245. செல்லகணபதி, வளரும்பூக்கள், ப.45.
246. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.7.
247. செல்லகணபதி, நேற்று இன்று நாளை, ப.16.
248. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.54.
249. செல்லகணபதி, வளரும்பூக்கள், ப.30.
250. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம் (இ.தொ), ப.23.
251. செல்லகணபதி, மலரும் மொட்டுகள், ப.75.
252. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம் (இ.தொ), ப.223.
253. செல்லகணபதி, வளரும் பூக்கள், ப.35.
254. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.17.
255. செல்லகணபதி, வளரும் பூக்கள், ப.48.
256. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம் (இ.தொ) ,ப.71.
257. செல்லகணபதி, வளரும் பூக்கள், ப.16.
258. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.44.

259. செல்லகணபதி, வளரும்பூக்கள், ப.17.
260. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.29.
261. செல்லகணபதி, வளரும்பூக்கள், ப.49.
262. வாணிதாசன், குழந்தை இலக்கியம், என்னுரை
263. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், பக்.137-138.
264. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம் (இ.தொ), ப.197-198.
265. செல்லகணபதி, மணக்கும்பூக்கள், பக்.233 -234.
266. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.143.
267. மேலது ப.132.
268. செல்லகணபதி, மணக்கும்பூக்கள், ப.228.
269. அழ.வள்ளியப்பா, சிரிக்கும் பூக்கள், ப.134.
270. செல்லகணபதி, வளரும்பூக்கள், ப.109.
271. மா.இராமலிங்கம், இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கியம், ப.274.
272. மேலது ப.275.
273. அழ.வள்ளியப்பா, வேட்டைநாய், ப.11.
274. செல்லகணபதி, அப்பாவின் கோபம், ப.11.
275. மேலது ப.26.
276. மா.இராமலிங்கம், இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கியம், ப.281.
277. அழ.வள்ளியப்பா, திரும்பி வந்த மான்குட்டி, ப.10.
278. மேலது ப.15.
279. செல்லகணபதி, அப்பாவின் கோபம், ப.39.
280. மேலது ப.40.
281. ஆழ.வள்ளியப்பா வேட்டை நாய் (அபூர்வ நண்பர்கள் - சிறுகதை), ப.28.
282. ந.வீ.செயராமன், இலக்கண ஆய்வுக் கோவை, ப.16.
283. மா.இராமலிங்கம், இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கியம், ப.279.
284. அழ.வள்ளியப்பா, திரும்பி வந்த மான்குட்டி, பக்.58-59.
285. மேலது பக்.58-59.
286. செல்லகணபதி, ஒரு கதை ஒரு தகவல், ப.28.
287. எம்மார். அடைக்கலசாமி, தமிழ் இலக்கிய வரலாறு, ப.1.
288. அழ.வள்ளியப்பா, பர்மா ரமணி (நாவல்), ப.13.
289. ந.வீ.செயராமன், இலக்கண ஆய்வுக்கோவை, ப.14.
290. புஷ்பா பிரபாகர், தமிழ் விடுகதைகள், ப.3.
291. அழ.வள்ளியப்பா, வெளிநாட்டு விடுகதைகள், ப.10.
292. மேலது ப.13.
293. மேலது ப.15.
294. அழ.வள்ளியப்பா, கேள்வி நேரம், ப.6.
295. அழ.வள்ளியப்பா, பெரியோர் வாழ்விலே, ப.25.

## இயல்- 3

## குழந்தை இலக்கியங்களில் பண்பாடு

மனித இனத்தையும் மனத்தையும் பண்படுத்துவது பண்பாடு ஆகும். மனித இனத்தின் மாண்புகளான முகமலர்ச்சியுடன் பேசுதல், விருந்தினரை முகமலர்ச்சியுடன் வரவேற்றல், அன்பாக உபசரித்தல், பகிர்ந்துண்ணுதல், போன்ற உயர்ந்த செயல்களைத் தாம் உணர்ந்து அதைப் பின்பற்றுதலும் பண்பாடு ஆகும். இத்தகைய பண்பாட்டுச் செய்திகளை குழந்தைக்கவிஞர்களான அழ.வள்ளியப்பாவும், செல்லகணபதியும் தமது படைப்புகளில் எவ்வாறு பதிவு செய்துள்ளனர் என்பதை ஆய்வது இக்கட்டுரையின் விரிவாக அமைகிறது.

இந்த விளக்கத்திற்குரிய சிந்தனைகளை அளிக்கும் குழந்தை இலக்கியங்களில் பண்பாடு என்ற இக்கட்டுரை கீழ்க்கண்ட தலைப்புகளின் வழி ஆராயப்படுகிறது.

3.1.0 பண்பாடும் விளக்கமும்
3.2.0 பண்பாட்டின் இன்றியமையாமை
3.3.0 அறிவுயரப் பண்பாடு.
3.4 அறவாழ்க்கையும் பண்பாடும்
3.5. பழக்கங்கள் பண்பாடாதல்
3.6. நம்பிக்கைப் பண்பாடு
3.7. சாலை விதிகளும், சட்டங்களும்
3.8.0 உயர்ந்தோரைப் பின்பற்றுதல்
3.9.0 புராணப் பண்பாடு.
3.10.0 கலையுணர்வுகளில் பண்பாடு.

### 3.1.0 பண்பாடும் விளக்கமும்

பண்பாடு என்பதற்குரிய விளக்கத்தை கீழ்க்கண்டவாறு அறியலாம்.

‘‘கல்சர்(Culture) என்ற ஆங்கிலச் சொல்லிற்கு நேர் பொருளைத் தரும் வகையில் ‘பண்பாடு’ என்ற சொல் இக்காலத்து வழக்கில் வந்தது எனக் கொள்ளலாம். பண்பாடு என்ற பெயர்ச்சொல் பண்படு என்ற வினைச்சொல்லிலிருந்து உருவானதாகும். பண்படு – என்பது திருத்தம் பெறு, பக்குவப்படு எனப் பொருள்படும்.’’[1] இதிலிருந்து பண்பாடு என்பது திருத்தம் பெற்ற சிறந்த செயல்கள் என்று அறியப்பெறுகிறது.

‘‘பண்பாடு என்பது பொருள் பற்றியன, ஆன்மா பற்றியன என இரு வகைப்படும். பொருள் பற்றிய பண்பாடு என்பதைக் குறிப்பன கருவிகள், ஆயுதங்கள், அணிகள், ஆடைகள் போன்றவை. ஆன்மா பற்றிய பண்பாடு பழக்கவழக்கங்கள், சட்டதிட்டங்கள், கொள்கைகள், மனப்பான்மைகள், கலைகள் போன்றவை.’’[2] பண்பாடு வாழ்வின் எல்லா நிலையிலும் கலந்தது. திருத்தம் பெறுவது என்பதை மேற்கண்ட வரிகளால் உணரலாம்.

‘‘காதல், வீரம், கற்பு, யாதும் ஊர், யாவரும் கேளிர், அறம், ஒப்புரவு, பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் முதலிய குணங்கள் தமிழர் பண்பாடு என்று கூறியது

புலவர் நெறி.''[3] தமிழன் என்றொரு இனமுண்டு தனியே அவர்க்கொரு குணமுண்டு என்ற ஆன்றோர் கூற்றே தமிழனுக்குத் தனியான ஒரு பண்பாடு உண்டு என்பதைப் பறைசாற்றுகிறது. இதை மேற்காணும் கூற்றால் அறியலாம்.

''தனி மனிதர்கள் குடும்பமாகவும் பல குடும்பங்கள் சேர்ந்து சமுதாயமாகவும் உருவாகின்றன. முடிவாக நோக்குமிடத்துத் தனிமனிதர்கள் சமுதாயத்தின் அடிப்படையாக அமைகின்றனர். தனிமனிதர்கள் நடத்தை, ஒழுக்கம், போக்கு, செயல், நம்பிக்கை, குறிக்கோள் முதலியன சமுதாயம் ஒன்றுபட்டு வளர்ச்சி எய்தி விளங்கும் வகையில் திருத்தமுற்று ஒருங்கமைகின்றன.''[4] பண்பாடுகளைக் கடைப்பிடிக்கும் தனிமனிதர்களின் செயல்பாடுகளே சமுதாயத் திருத்தத்திற்குக் காரணமாக அமைகின்றன.

''பண்புடைய மக்களை வழித்தோன்றல்களாகப் பெற்ற குடும்பங்கள் தலைமுறைதோறும் போற்றப்படும். அப்பண்புடைய மக்கள் தம் உழைப்பால் ஈட்டும் பொருட்செல்வமே பெருமை தரும்.''[5] ஒரு வீட்டில் ஒரு தாயோ, தந்தையோ கடைப்பிடிக்கும் பண்பாடுகள் அந்தக் குடும்பத்தின் ஒவ்வொரு தலைமுறையினரையும் பின்பற்றச் செய்யும். இத்தகைய பண்பாடுடையவர்களின் உழைப்பால் பெரும் செல்வமே பெருமையையும் தேடித் தரும்.

இத்தகைய மேற்கோள்கள் மூலம் ஆய்வு செய்கையில், பண்பாடு என்பது Culture என்னும் ஆங்கிலச் சொல்லிற்கு இணையானது ஆகும். இது பொருளையும் ஆன்மாவையும் அடிப்படையாகக் கொண்டது.

செயல்களில் உயர்ந்த பழக்கவழக்கத்தைப் பின்பற்றுவது உயர்ந்த பண்பாடாகும். ஒரு குழந்தை தன் தந்தை தாயிடம் கற்ற பழக்கங்களைப் பிறரிடம் பயன்படுத்தும் விதம் பண்பாடாகும். இது அறிவு சார்ந்ததாக அமையும். ஏனெனில் அறிவு என்பது அழிக்க முடியாத கருவி ஆகும். எனவே குழந்தைகள் மனத்தில் ஒரு முறை பதிந்தவற்றை மாற்றுவது கடினம் ஆகும். ஆகையால் குழந்தைகளிடம் பழகும்போது நன்மை தீமைகளை ஆராய்ந்து கூறுதல் வேண்டும். நல்ல பழக்கவழக்கங்களைக் கற்றுத் தருதல் வேண்டும். தாய் தந்தையரிடமிருந்து கற்ற பழக்கங்களை மற்றவர்களிடம் பின்பற்றுவதைப் பொருத்தே குழந்தையின் பண்பாடு அமைகிறது. குழந்தைகள் ஒரு தாயின் அனுபவத்திலிருந்தே பண்பாட்டைக் கற்றுக்கொள்கின்றனர். எனவே பெற்றோர்கள் எந்தவிதமான தீய செயல்களையும் குழந்தைகளுக்கு நேராகச் செய்தால் அது குழந்தைகளைப் பாதிப்படையச் செய்யும்.

''குழந்தை தான் விரும்பும் ஒருவரைப்போல், அவரது நடத்தைப் பாணியையும் எண்ண நோக்கினையும் பின்பற்ற ஆரம்பிக்கிறது.''[6] என்ற உளவியலாரின் சிந்தனைக்கேற்பத் தன் தாய் தந்தையிடம் கற்ற அனுபவங்களை அடிப்படையாக வைத்து அன்பாகப் பழகுதல், முகமலர்ச்சியுடன் வரவேற்றல் போன்ற பண்பாடுகளைப் பின்பற்றுகிறது. எனவே பண்பாடு என்பது தன்னுடன் பழகுபவர் மனத்தில் மகிழ்ச்சியை

விளைவிக்கப் பயன்படுகிறது. வெற்றி பெற்றோரைப் பாராட்டுவது சிறந்த பண்பாடாகிறது. அன்பை, ஈகையை, வாய்மையை வளர்ப்பது பண்பாடாகிறது. விலங்கு, பறவை போன்ற பிற உயிரினங்களிடமிருந்து மனிதனை வேறுபடுத்திக் காட்டுவது பண்பாடாகிறது. மேலும் பிறர் மனத்தை ஈர்க்கும் வண்ணம் எண்ணத்திலும் பழக்கத்திலும் தூய்மையாய் இருப்பது பண்பாடாகிறது.

குழந்தை இலக்கியங்கள் குழந்தைகள் கற்பதற்கேற்ற நூல்களாய் அமைகின்றன. ஆதலால் குழந்தை இலக்கியத்தால் அறியலாகும் பண்பாட்டை ஈ.பீ டெய்லர் எடுத்துரைத்ததை திருநணாபரீட்சை கலைக்களஞ்சியத்தில் கூறப்பட்டுள்ள முறையின் அடிப்படையில் ஆய்வு தொடர்கிறது.

“பண்பாடு என்பது மனித சமுதாயத்தில் ஒரு உறுப்பினன் என்ற நிலைமையில் அறிவு, நம்பிக்கை, அறவாழ்க்கை, சட்டம் வழக்கங்கள் முதலியன பற்றிப் பெற்ற ஒரு வித வாழ்க்கை முறையாகும்.”[7] ஈ.பீ டெய்லரின் இக்கூற்றினுக்குத் தகுந்த பண்பாட்டுச் சிந்தனைகள் ஆய்ந்து தரப்பட உள்ளன.

**3.2.0 பண்பாட்டின் இன்றியமையாமை**

பண்பாட்டினால் அறச்செயல்கள் வளர்கின்றன. அறச்செயல்கள் எனும்போது ஈதல், இரக்கப்படுதல் போன்ற நற்குணங்கள் ஆகும். இதில் ஈதல் என்பது கொடுத்தல் ஆகும். கொடுக்கும்போது தான் என்னும் உணர்வு மறைந்து நாம் என்பது உருவாகிறது. ‘நாம் என எண்ணும்போது விட்டுக்கொடுக்கும் தன்மை, அன்பு, சகிப்புத்தன்மை, ஒற்றுமை போன்ற குணங்களைக் கற்றுக்கொள்கிறார்கள். இதனால் சாதிமத ஏற்றத்தாழ்வுகளில் இருந்து விலகுகிறார்கள். இவ்வாறு செயல்படுவதால் ஈதலைப் பின்பற்றுகிறார்கள். இந்த ஈதல் வறுமையைப் போக்க ஏற்றதாகிறது. இதனால் இரக்கப்படுதல் வேரூன்றி குழந்தைகள் மனதில் ஒரு அறம் சார்ந்த பண்பாடு உருவாகிறது.

**3.3.0 அறிவுயரப் பண்பாடு**

அறிவு அழிக்க முடியாதது. இந்த அறிவு மனதுடன் தொடர்புடையது. தான் கற்ற பழக்கங்களைப் பின்பற்றும்போது அப்பண்பாட்டால் குழந்தைகள் பல அடிப்படையான அறிவினைப் பெறுகிறார்கள். இவர்கள் தானாக உண்ண உறங்கக் கற்றுக்கொள்கிறார்கள். பிறருடன் பழகுவதால் சிறந்த மொழி ஆற்றலைப் பெறுகிறார்கள். எனவே ஒரு குழந்தை பிறரைத் தன் தாய் வரவேற்றால் தானும் வரவேற்கிறது. இச்செயலைச் செய்கிறபொழுது அது பிறரால் வாழ்த்தப்படுகிறது; வரவேற்கப்படுகிறது. இது முதல் ஐந்து ஆண்டுகள் வரை தன் தாயிடம் கற்ற பழக்கங்களாகும். பின் அக்குழந்தை தன் படிப்பறிவைப் பெற முயல்கிறது. அப்போது ஆசிரியரை வணங்கி, மதித்துப் பண்பாட்டுணர்வுடன் கல்வியைக் கற்றுக் கொள்கிறது. ஏழு வயதிற்குப்பின் பல்வேறு நூல்களைப் படித்தறிகிறது. அப்பொழுது அதற்குப் பண்பாடு கற்றுத் தரும் வழிகாட்டிகளாக குழந்தைப்பாடல்கள் அமைகின்றன. பிறருடன் மனம் ஒன்றி எவ்வாறு பழகுவது. அவர்களிடம் எவ்வாறு அன்பு கொள்வது, எவ்வாறு உதவும்

மனப்பான்மையுடன் பழகுவது, போனறவற்றிற்கு வழிகாட்டும் குழந்தைப்பாடல்களாக இவ்விரு கவிஞர்களின் பாடல்வரிகள் உள்ளன. இதற்கு எடுத்துக்காட்டாக,

"மணம் நடக்கையிலே – அங்கே
மணத்தை வீசிடுமே
குணம் பெரிதாகும் - ஆனால்
குற்றம் எதுவுமில்லை
மலர் என உள்ளம் - நமக்கு
மலர வேண்டுமடி
பலரும் போற்றிடவே – உலகில்
பண்புடன் வாழ்வோமடி."[8]

என்னும் பாடல்வரிகளில் குறிப்பிட்டதுபோல் குற்றம் இல்லாது வேலைகளைத் தவறாது செய்தால் பண்பாடு நம்மிடத்தில் மிகும்.

அறம் ஒருவரது வாழ்வை உயர்த்த இன்றியமையாததால் 'அறவாழ்க்கையும் பண்பாடும்' என்னும் தலைப்பில் பின்வரும் கருத்துகள் ஆராயப்பட உள்ளன.

### 3.4. அறவாழ்க்கையும் பண்பாடும்

அறம் என்பது தர்மம் ஆகும். இந்த அறத்தைக் குழந்தைப்பருவத்தில் பின்பற்றத் தூண்டுவதால் பண்பாடு வளர்கிறது. மேலும் மனிதநேயம், ஈகை, அன்பு, வாய்மை போன்ற குணங்களை வளர்த்துக் கொள்கிறது. அதனால் மனிதநேயத்தில் மிளிர்தல், உண்மைக்கு உயர்வளித்தல், அன்பால் அறம் வளர்த்தல், ஈகையால் உயர வைத்தல், சுதந்திரத்தின் பொருள் உணர்ந்து வாழ்தல் போன்ற சிந்தனைகள் ஆராயப்பட உள்ளன.

#### 3.4.1. மனிதநேயத்தில் மிளிர்தல்

இரக்கம் என்பது நம் உடலில் இரத்தத்துடன் ஒன்றியிருந்தாலும் இது அனுபவத்தின் வாயிலாகவே வெளிப்படுகிறது. இவ்விரக்கமே மனிதனைப் பண்பட்டவனாக்குகிறது. இது பிற உயிர்களின் பாதுகாப்பிற்கு இன்றியமையாததாகிறது. இந்த இரக்கம் அனுபவத்தாலேயே உருவாகும். அதனால் அனுபவத்தைப் பாடல்களில் கூறினால் துன்பம் தனக்கல்ல என்று இருக்காமல் ஓடி வந்து உதவும் அனுபவத்தை வளர்க்கும். இவ்வனுபவமே மனிதநேயத்தை வளரவைக்கிறது. இதை,

"சட்டிப் பாலைக் குடிக்கவா
சாது போலச் செல்கிறீர்

சட்டிப் பாலும் ஐயையோ
ஜாஸ்தி யாய்க் கொதிக்குதே

தொட்டால் நாக்கைச் சுட்டிடும்
தூர ஓடிப் போய்விடும்.”[9]

என்ற பாடல் வரிகள் மூலம் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா மனிதநேயத்தை வளர்த்துள்ளார். மேலும் இன்னொரு பாடலில்,

“சிட்டுக்குருவி கிட்டவா
எட்ட ஓடிப் போகாதே
கட்டிப் போட்டு வைக்கமாட்டேன்.
கவலைப் பட்டு ஓட வேண்டாம்.”[10]

என்று குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பாவும்,

“கூ கூ சொல்லு பூங்குயிலே
கொறித்துத் தின்ன நெல்தருவேன்!
காகா சொல்லு கருங்காக்காய்
கவளச் சோறு நான்தருவேன்!”[11]

என்று குருவிகளிடம் நேசத்தைக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும் வளர்த்துள்ளார்கள்.

“பட்டாம் பூச்சிச் சிறகு
பறந்தால் மட்டும் அழகு!
தொட்டுப் பிடிக்க நினைத்தால்
தூள்தூ ளாகும் விலகு.”[12]

இப்பாடல் வரிகளில் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி பட்டாம் பூச்சியை பறக்க விட்டு மகிழ வேண்டும் அதைத் தொட்டுப்பிடித்தால் அது தன் உயிரை இழந்துவிடும் என்று கூறியுள்ளார். இவ்வாறு பிற உயிர்களின் வருத்தத்தைத் தன் வருத்தமாகக் கருதினால் அவ்வுயிரினங்களுக்கு உதவ வேண்டும் என்னும் எண்ணம் வளரும். இவ்வெண்ணமே மனிதநேயச் செயலை வளர்க்கும் என்பதற்கு அடித்தளமிட்ட பாடல் வரிகளாக உள்ளன.

ஒன்றை உருவாக்குவது கடினம். ஆனால் அழிப்பது எளிது. அதனால் எந்த ஒரு உயிரையும் தன் உயிராகக் கருதிப் போற்றவேண்டும். இப்பண்பிலேயே மனித நேயம் வளர்கிறது. ஆதலால் மீண்டும் மீண்டும் குழந்தைகள் மனதில் இடம்பெறவேண்டும் என்னும் நோக்கத்துடன்,

“கூட்டைநாங்கள் கலைக்கமாட்டோம்
சிட்டுக்குருவி
குஞ்சுகளைத் தொடவுமாட்டோம்
சிட்டுக்குருவி
சேட்டையொன்றும் செய்யமாட்டோம்
சிட்டுக்குருவி

திண்ணம்இது திண்ணமாகும்

சிட்டுக்குருவி.”[13]

இப்பாடலில் கூட்டைக் கலைக்காமல் இருப்பது தர்மம் ஆகும் என்பதை உணர்த்தியுள்ளார்.

“முத்தை யெல்லாம் தோற்று விக்கும்

கருங்கடலே – நல்ல

முத்துப் போன்ற எண்ணங் கொள்வோம்

பெருங்கடலே.”[14]

கடல் போல உயர்ந்த எண்ணம் கொள்ள வேண்டும் என்பதைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா உணர்த்தியுள்ளார்.

எண்ணற்ற மீன்களடா தம்பி – வானில்

எத்தனை இருந்திடினும் தம்பி

வெண்ணிலவு ஒன்றுபோலத் தம்பி – அவை

வீசிஒளி தந்திடுமோ தம்பி

பெரியோர் ஒருவரைப்போல் தம்பி –பல

பேதையர்கள் கூடிடினும் ஆமோ

சரியாய் உணர்ந்திடுவாய் தம்பி-இதே

தாழ்வு உயர்வுணர்வாய் தம்பி.”[15]

எண்ணங்கள் சிறந்திருந்தால் உயர்வு தாழ்வு இல்லாத நிலை ஏற்படும். இதனால் அனைவரையும் நேசிக்க இயலும். இத்தகைய நேசிப்பால் பண்பாடு வளரும் என்பதற்கு உதாரணமாகக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பாவின் பாடல்வரிகள் உள்ளன.

### 3.4.1.1. மனிதநேயம் காக்கும் வழிகள்

கொல்லாமையே மனிதநேயம் காக்கும் உயர்ந்த அறமாகும். இதனைக் குழந்தைகளுக்கு ஏற்ற முறையில் கூறினால் அதைக் குழந்தைகள் மனதில் பதிய வைப்பார்கள். அதனால் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா குழந்தை உத்தியில் கூறியுள்ளார். இதனை,

“பத்துப் பேர்கள் கைகளிலே;

பத்துப் பேர்கள் கால்களிலே;

மொத்தம் இருபது பேர்களடா!

வெட்டப் பட்டவை நகங்களடா!”[16]

போன்ற பாடல் வரிகளில் நகங்களை வெட்டலாம். ஆனால் மனிதர்களை வெட்டக்கூடாது எனக் கூறியுள்ளார். இவரைப் போல் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும் குழந்தைப்பாடல் உத்தியில் கூறியுள்ளார். இதனை,

"உயிரைக்கொல்லல் பாவமென்று பல்லியாரே
உத்தமராம் காந்திசொன்னார் பல்லியாரே
பயின்றிருந்தால் பள்ளியிலே பல்லியாரே
பாவம்எதையும் கொல்லமாட்டீர் பல்லியாரே."[17]

என்ற பாடல் வரிகளில் பல்லியாக இருந்தாலும் கூட உயிரைக்கொல்வது பாவமாகும் எனக் கூறியுள்ளார். இவ்வாறு மனிதநேயத்தன்மைகளைச் சித்திரித்த பாடல்களில் மாற்றுத்திறனாளிகளை மதித்தலும் அவசியமானது என்று உரைக்கப்பட்டுள்ளது.

**3.4.1.2. மாற்றுத்திறனாளிகளை மதித்தலும் மனிதநேயம்**

மாற்றுத்திறனாளிகளை மதிக்க வேண்டும். மாறாக அவர்களைக் கேலி செய்தல் பண்பாடற்ற செயல் ஆகும்.

"செவிடர் குருடர் முடவர்க்கு
செய்வாய் நல்ல உதவிகள்
அவரைக் கேலி செய்வதோ
அதிக கெட்ட செய்கையாம்."[18]

செவிடர், குரடர்களை கேலிசெய்தல் கெட்ட செயல்களாகும் எனக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பாவும்,

"ஊனம் என்பது உடல்குறைதான்
உடலின் குறையை ஏளனமாய்
ஊனம் என்றே கேலிசெய்யும்
உள்ளம் தானே ஊனமடா!"[19]

ஊனமுற்றவர்களைக் கேலி செய்யும் மனிதர்களின் உள்ளம் ஊனமாகும் எனக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும் கூறியுள்ளார். அதனால் அவர்களை இகழ்தல் போன்ற தீய செயல்களைச் செய்யாமல் அவர்களுக்கு உதவவேண்டும் என்பதை மேற்கண்ட குழந்தைப்பாடல்கள் வலியுறுத்தியுள்ளன. இளமையில் இச்செய்திகள் குழந்தைகள் உள்ளத்தில் நல்லவிதமாக விதைக்கப்பட வேண்டும் என்று உணர்ந்து கூறியுள்ளனர்.

**3.4.2. உண்மைக்கு உயர்வளித்தல்**

உண்மை என்பது மாறாதது. உண்மை சில நேரங்களில் வேப்பங்காய்போல் பயன்தந்து மனிதனை உயர்த்தும். தீய செயல்களைத் தடை செய்யும். உண்மைப்பண்பு அழியாததாக அமையும். ஆதலால்தான் பண்பாடுகளில் உயர்ந்த பழக்கம் உண்மையாகும். குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா பல பாடல்களில் ஆங்காங்கு உண்மைக்கு உயர்வளித்த காந்தியைக் கூறியுள்ளார். குழந்தைக்கவிஞர் செல்லகணபதி 'காந்தீயம்' என்னும் பாடல் மூலம் உண்மையை வளர்த்துள்ளார். இதற்கு எடுத்துக்காட்டாக,

“காந்தியைப்போல் ஒருமகானைக்
காட்டுவோம் அம்மா – அவர்
கருணைபொங்கும் திருமுகத்தைக்
காணுவேன் அம்மா.

காந்தியைப்போல் ஒருமகானைக்
காட்டுவாய் அம்மா – அவர்
கனியைப் போன்ற இனிய சொல்லைக்
கேட்பேனே அம்மா.

சாந்தமூர்த்தி காந்தியைப்போல்
காணமுடியுமா? – அம்மா
சத்தியத்தின் வடிவம்தன்னைக்
காண முடியுமா?

மாந்தருக்குள் தெய்வம்தன்னைக்
காண முடியுமா? – நல்ல
வழியைக்காட்டும் ஒளியைநாமும்
காண முடியுமா?

**அம்மா**

காந்தியைப்போல் ஒரு மகானை
இந்த உலகிலே
காணமுடியும் காணமுடியும்
கண்ணே, கேளடா.

உண்மைபேசும் இடத்தில்காந்தி
குடியிருக்கிறார்.
உறுதிஉள்ள இடத்தில்காந்தி
குடியிருக்கிறார்.

அன்புபொங்கும் இடத்தில்காந்தி
குடியிருக்கிறார்.
அகிம்சைஉள்ள இடத்தில்காந்தி
குடியிருக்கிறார்.

உண்மை, உறுதி, அன்பு, அகிம்சை
உன்னி டத்திலே

உள்ளதென்றால் உன்னிடத்தும்
காந்தி இருக்கிறார்.

என்றும் அவரைக் கண்டுகொண்டு
இன்பம் கொள்ளலாம்.
இதயக்கோயில் தன்னில்வைத்துப்
பூசை செய்யலாம்.''[20]

என்னும் பாடல் உண்மையின் சிறப்பைக் கூறியுள்ளது.

இவ்வாறு காந்தியையும் அவர் கொள்கையான சத்தியத்தையும் கடைப்பிடிக்க கவிஞர்கள் வழி கூறியுள்ளனர்.

**3.4.3. அன்பால் அறம் வளர்த்தல்**

அன்பு விதை மனத்தில் ஊன்றப்படுவதால் அது வளர்கிறது. அன்பு ஆழமாகும் போது அது ஒற்றுமைக்கு ஆக்கம் தருகிறது. ஒற்றுமையுடன் இருப்பதால் விட்டுக்கொடுக்கும் பழக்கம் உருவாகிறது. அன்பு ஈதலை வளர்க்கிறது. இவ்வாறு கை உதவியாலும் பொருள் உதவியாலும் பிறரால் கவரப்படுகிறோம். இதனால் அனுசரித்துச் செல்லும் பக்குவமும் அன்பும் தழைக்கிறது. அதனால்தான் காந்தியடிகள் அன்பையும் வாய்மையையும் நாணயத்தின் இரண்டு பக்கங்கள் எனக்கூறியுள்ளார். அதனால்,

''வெள்ளையன், கறுப்பன்
வேற்றுமை எதற்கு?
ஹரிஜனன், ஏழை
அவன்குலம் தாழ்வு
என்றெல்லாம் கூறுதல்
ஏற்புடைத் தன்று.
உலகமே குடும்பம்,
உயிரெலாம் உறவே
இவ்வழி அன்பின்
எழிலினைக் காண்போம்!''[21]

அனைத்து உயிர்களையும் நம் உறவினர்களாக்கினால் அன்பு வளரும் என்பதற்கு இப்பாடல் வரிகள் சான்றாகின்றன. மேலும் 'காந்தி வழி' என்னும் பாடலின் மற்றொரு பத்தியில்,

''தோழர்க ளிடத்தும் அன்பு!
தொண்டர்க ளிடத்தும் அன்பு!
ஏழைக ளிடத்தும் அன்பு!
எதிரிக ளிடத்தும் அன்பு!
கோழைக ளிடத்தும் அன்பு!
கொலைஞர்க ளிடத்தும் அன்பு

வாழைபோல் உதவி அன்பை

வளர்த்தனர் காந்தி அண்ணல்![22]

இப்பாடல் வரிகளில் காந்தியடிகள் ஆங்கிலேயரிடம் அன்பு கொண்டதால்தான் ஆங்கிலேயரே அடிபணிந்து சுதந்திரத்தினைத் தந்தனர் என்பதற்குச் சான்றாகின்றன. மேலும் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா,

"அரும்பு விரிய விரியத்தான்

அளிக்கும் மணத்தை மலருமே

அன்பு பெருக பெருகத்தான்

அமைதி அடையும் உலகமே."[23]

இவ்வாறு இப்பாடல் வரிகளில் குறிப்பிட்டதுபோல் அன்பாலேயே உலகம் அமைதியைத் தழுவ இயலும் என்பதைக் குறிப்பிட்டுள்ளார்.

ஒற்றுமை யாக இருப்பதற்கும்

ஒருவரை ஒருவர் மதிப்பதற்கும்

கற்றுத் தருகிற ஆட்டோவாம்

காற்றாய் விரைகிற ஆட்டோவாம்.!"[24]

என்று வாகனங்களில் செல்லும் போது ஏற்படும் ஒற்றுமையால் அன்பு வளர்கிறது என்பதைக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி குறிப்பிட்டுள்ளார்.

"பார்த்துப் பார்த்துச் சிரித்திடும்

பலவாம் வண்ணப் பூக்களும்

சேர்த்து வாழும் அழகையே

சிறிது பார்த்து மகிழடா!."[25]

என்ற பாடல் வரிகள் பூக்கள் போல ஒற்றுமையுடன் இருந்தால் பிறரால் போற்றப்படலாம் என்பதை உணர்த்தியுள்ளன.

"காசு தர வேண்டு மென்று

கலங்க வேண்டாங்க

நேச முண்டு நெல்லு முண்டு

நீங்க வாருங்க."[26]

போன்ற வரிகள் குழந்தை இலக்கிய உத்தியில் அறத்தைப் போதிக்கின்றன.

**3.4.3.1. முகமலர்ச்சியே அன்பாதல்**

பலரின் அன்பிற்கும் ஈகைக்கும் இது உயர்வளிக்கிறது.

"மலரைப் போலச் சிரிக்கலாம்

மனதில் மகிழ்ச்சி காணலாம்

பலரும் நண்பர் ஆகவே

பாசத் தோடு பழகலாம்."[27]

இப்பாடல் வரிகள் ரோஜா மலர் போல் குழந்தைகளும் அன்புள்ளவர்கள் என்பதற்கு எடுத்துக்காட்டாகின்றன. இவ்வாறு விதைக்கப்படும் சிநதனைகள் குழந்தைகள் மனதில் வேரூன்றி அன்பை வளர்த்துப் பிறரை மகிழ்ச்சிக்குள்ளாக்குகின்றன.

**3.4.3.2 அறச் செயலில் தூய்மை**

அறச்செயல் செய்ய மனம் தூய்மையானதாக இருக்க வேண்டும். தான் புகழ்பெறத் தண்ணீர்ப்பந்தல் வைக்கின்றனர். ஆனால் அதில் சுத்தமான தண்ணீரை வழங்குவதில்லை. தண்ணீர்ப்பந்தலின் மூலம் மக்கள் கிருமிகளின் பரவுதலுக்கு ஆளாகின்றனர்.

“தருமம் செய்வ தாகக் கூறித்
தண்ணீர்ப் பந்தல் வைப்பவர்,
கிருமி நிறைந்த நீரை வழங்கின்
கெடுதல் அதிகம் ஆகுமே.”[28]

என்ற வரிகள் அறம் செய்யத் தூய்மையும் அவசியமாகும் என்பதைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா குறிப்பிட்டுள்ளார். மேலும் விளையாட்டுத்திடலும் முட்களற்றதாக இருக்கவேண்டும். அன்னதானம் வழங்கும்போதும் சுத்தம் கடைப்பிடிக்கப்படுதல் வேண்டும். இது தவிர நூல் நிலையங்களில் மக்களின் அறிவைக் கெடுக்கும் நூல்களைத் தவிர்க்க வேண்டும். இவ்வாறு நாம் செய்யும் ஒவ்வொரு செயல்களிலும் தூய்மையைக் கடைப்பிடிக்கவேண்டும் எனக் குழந்தைக்கவிஞர் எச்சரித்துள்ளார். அன்பிற்கு அடிப்படை ஈதல். ஆதலால் ஈகையால் உயர வைத்தல் என்னும் தலைப்பின்கீழ் சில சிந்தனைகள் ஆயப்பட உள்ளன.

**3.4.4. ஈகையால் உயரவைத்தல்**

ஈகை என்பது கொடுத்தல் ஆகும். இந்த ஈகை ஒவ்வொரு உறவுகளாலும் வளர்கிறது; தாய் தந்தையர் பொருளைத் தன் பிள்ளைகளுக்குத் தந்து உதவும் அன்புச் செயல்களால் மாதா பிதா உறவு வளர்கிறது. சிறு குழந்தைகள் தன் பொருளைப் பிறருக்குத் தருவதால் நட்பு என்னும் உறவு வளர்கிறது. மாமா, சித்தி போன்றோர் பொருட்களைத் தன் அக்கா குழந்தைகள் போன்றோருக்குத் தருவதால் உறவுகள் பலப்படுத்தப்படுகிறது. தாத்தாவும் பாட்டியும் தன் அன்பைத் தன் பேரக் குழந்தைகளுக்குக் கொடுப்பதால் பெரியோரின் அன்பு உணரப்படுகிறது. ஆசிரியர் தன்னிடம் உள்ள அறிவைக் குழந்தைகளுக்குப் பகிர்ந்தளிப்பதால் ஆசிரியரின் மேல் மதிப்பு உயர்கிறது. தம்பி தங்கைகள் மீது கொள்ளும் அன்பால் சிறுவர்களின் அன்பு வளர்கிறது. இவ்வாறு ஏழை எளியவர்களுக்கு உதவும் அன்பால் வறுமை நீங்குகிறது. அதனால் இவ்விரு கவிஞர்களும் பாடல்களில் ஆங்காங்கு ஈகை பற்றிய சிந்தனைகளை வளர்த்துள்ளனர்.

“ஆண்டவன் தந்த கை எதற்கு?
அனைவருக் குதவி செய்வதற்கு

ஆண்டவன் தந்த கை எதற்கு?
அவரை நன்றாய்த் தொழுவதற்கு.”[29]

என குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா உதவி செய்வதற்கே கைகளைத் தந்துள்ளதாகக் கூறியுள்ளார்.

“இருக்கும் இரண்டு கைகளில்
எந்தக் கைதான் கொடுப்பினும்
ஒருகைக்(கு) ஒருகை மறைவிலே
உதவி செய்தல் வேண்டுமாம்.”[30]

இவரைப்போல் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும் நமக்கு இருக்கும் இரண்டு கைகளையும் உதவி செய்வதற்கே படைத்துள்ளதாகக் கூறியுள்ளார்.

“பலப் பல பொருள்களைத் தினம் தினமே –மிகப்
பரிவுடன் நீங்கள் கொடுத்தருள்வீர்
உலகில் நானும் உங்களைப் போல்-பிறர்க்(கு)
உதவிட எனக்கொரு வழியுரைப்பீர்.”[31]

என்னும் வரிகளில் உதவி என்பது பறிமாறிக் கொள்ளும் செயல் ஆகும் என்பதைக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி குறிப்பிட்டுள்ளார்.

“உதவி செய்ய ஓடினால்
உடலில் வலிதான் ஆயினும்
உதவி யாலே மற்றவர்
உயரும் போது மகிழ்ச்சியே!.”[32]

போன்ற வரிகளில் உதவி செய்யும் பொழுது உதவி செய்தவருக்குத் துன்பங்கள் நேர்ந்தாலும் அந்த உதவியால் மகிழ்ச்சி உண்டாகும். அதனால் உதவி செய்வது அவசியமாகும் என்பதைத் தெரிவித்துள்ளார்.

“கிளியே கிளியே இங்கேவா
கிண்ணம் நிறையப் பால்தருவேன்
களித்துப் பாலைக் குடித்திடுவாய்
கதைகள் எனக்குச் சொல்லிடுவாய்.”[33]

எனக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி குறிப்பிட்டுள்ளார்.

“கொய்யா மரத்துக் கிளையினிலே
கொஞ்சித் திரியும் அணிலேபார்!
கொய்யாப் பழம்நீ தரவேண்டும்!
கொறித்திட நெல்லை நான்தருவேன்!.”[34]

என்னும் பாடல்வரிகளில் ஒரு பொருளைக் கொடுத்துப் பிறரிடம் உதவியைப் பெற வேண்டும் என்பதைக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி உணர்த்தியுள்ளார்.

“தியாகம் செய்யும் பண்பினால்தான்
தினமும் அன்பு பெருகுமே!

தியாகம் என்றால் நமைமறந்து
பிறர்க்குதவி செய்வதே!"[35]

இவ்வரிகளில் தியாகம் என்பது பிறர்க்கு உதவி செய்வதாகும். இதனால் அன்பும் பெருகும் என்பதைக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி உணர்த்தியுள்ளார்.

"ஆலம்விதை போன்றவர்
அருமையான சிறுவர்கள்
காலகாலம் வளருவார்
கருணையோடு உதவுவார்!."[36]

ஒரு ஆலம் விதையால் பல கிளைகளையுடைய ஆலமரம் உருவாவதுபோல சிறுவர்கள் எக்காலத்திலும் உதவி செய்யும் பண்பால் சிறப்பார்கள்.

"உதவி எதுவும் செய்யாமல்
யோசனை சொல்வதில் பலனுண்டோ?
இல்லை இல்லை என்றேதான்
இக்கதை மூலம் உணர்கின்றோம்."[37]

உதவி கேட்கும்பொழுது யோசனைகளைக் கூறக்கூடாது. உதவி செய்தபின் கேட்கவேண்டும் என்பதைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா கூறியுள்ளார்.

"மரத்தின் கிளைகள் தினமும்
வழங்கும் இனிக்கும் பழங்கள்
மரத்தின் கிளைபோல் நாமும்
வழங்க வேண்டும் எதையும்.![38]

"போருக் காகக் கப்ப லென்றால்
　　யாருக் குத்தான் லாபமே
ஊருக் காக உதவ வேண்டும்
　　உயர்ந்த கப்பல் தேவையே."[39]

என்ற பாடல் வரிகளில் கப்பலை ஊருக்குத் தேவையான பொருட்களை ஏற்றுமதி இறக்குமதி செய்ய மட்டுமே பயன்படுத்த வேண்டும். இதைப் போருக்காக உபயோகிப்பதைத் தவிர்க்க வேண்டும் என்னும் சிந்தனையைக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி உணர்த்தியுள்ளார். இவ்வாறு பாடல்களில் வலியுறுத்தும் பண்பினால் பண்பாட்டை நிலைநிறுத்த முடியும் என்பதை இவ்விரு கவிஞர்களும் விளக்கியுள்ளனர். குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா, குழந்தைக்கவிஞர் செல்லகணபதியைப் போல் பிற கவிஞர்களும் ஈதலின் சிறப்பை உணர்த்தியுள்ளனர்.

"ஈட்டுதற்கு உதவாமல்
கரமிருந்து என்ன பயன்?
இக்கட்டிற்கு உதவாமல்
பொருளிருந்து என்ன பயன்?"[40]

என்ற பாடல் வரிகளில் தளவை இளங்குமரன் கைகள் என்பது கொடுப்பதற்காக ஆகும். அதனால் பொருளைக் கொடுத்து உதவும் பண்பைப் பதிவு செய்துள்ளார்.

"ஒரு மர மேனும் நான்நட்டு – என்
உயிரைப் போலப் பேணிடுவேன்!
ஒருவர்க் கேனும் சிறுஉதவி –நான்
உள்ளன் போடு செய்திடுவேன்!."[41]

ஒரு மரத்தை வளர்த்து அதன் பயனைப் பெறுவது போல ஒருவருக்காவது உதவினால் உதவி செய்யும் பண்பை வளர்க்கலாம் என்பதை உணர்த்தியுள்ளார்.

"காகம் வந்து கரைந்திட்டால் - நான்
கைப்பிடிச் சோறு வைத்திடுவேன்
தாகம் என்று வருவோர்க்கு – நான்
தண்ணீர் தந்து மகிழ்ந்திடுவேன்

படிப்பறி வில்லா மாந்தர்க்கு – என்
படிப்பால் நன்மை புரிந்திடுவேன்!
துடிக்கும் ஏழை துயர்துடைக்க – நான்
தூங்கா திருந்து வழிகாண்பேன்!."[42]

போன்ற பாடல் வரிகள் மூலம் கவிஞர் பூதலூர் முத்து ஊரில் உள்ள அனைவருக்கும் உதவ முடியவில்லையென்றாலும் ஒருவருக்காவது உதவ வேண்டும். என்னும் பண்பை வளர்த்துள்ளார். மேலும் இவர் படிப்பறிவில்லாத ஏழைகளின் துயரைத் தீர்க்கக் கொடுத்துதவும் பண்பு அவசியமானதாகும் என்பதையும் விளக்கியுள்ளார். இது சமூக வறுமையை ஒழிப்பதற்கும் ஏற்றதாகும். அதனால் வறுமை ஒழிப்பதற்குரிய சிந்தனைகளும் கூறப்பட உள்ளன.

### 3.4.4.1. வறுமை ஒழிக்கும் உயர்பண்பாடு

உதவி செய்து வறுமையைப் போக்க முடியும். குழந்தைகளுக்கு இதைக் கூறினால் பிற்காலத்தில் தன்னிடம் உள்ள உணவுப் பொருட்களையோ, அல்லது படிப்புக் கருவிகளையோ கொடுத்து உதவும் பண்பினை வளரத்துக் கொள்வர். அவர்களது மனத்தில் இவ்வெண்ணம் பதிந்து சமூகத்தில் மாற்றம் வரும், இதனை,

“உதவி நானும் செய்திடுவேன்
உறும்பசி யால்பிறர் துயருற்றால்
இதமாய் எனது சோற்றைத்தான்
இன்னல் தீரப் பகிர்ந்துகொள்வேன்.

கிடைப்பதை யெல்லாம் பிறருக்கும்
கிடைக்கும் படியாய் பங்குவைப்பேன்
நடக்கும் அன்பு ராஜாங்கம்
நாளும் வளரும் பேரின்பம்.”[43]

வறுமையால் துன்புறும் மக்களின் பிணியை அகற்றப் பாடல்களின் மூலம் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி உணர்த்தியுள்ளார்.

### 3.4.4.2. கதைகளிலும் நாவல்களிலும் ஈதற்சிந்தனைகள்

குழந்தைகளுக்கு உதவ வேண்டும் என்னும் சிந்தனையைப் பதிவு செய்யக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா ‘நீலா மாலா’ என்னும் நாவலை எழுதியுள்ளார். குழந்தைக்கவிஞர் செல்லகணபதி ‘ஆருயிர்த்தோழி’ என்னும் நாவலை எழுதியுள்ளார். ஆபத்தில் உதவ வேண்டும். இல்லையென்றால் உதவாதவர்களும் ஆபத்தில் சிக்க நேரிடும் என்பதற்கு உதாரணமான சிறுகதையாக குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பாவின் ‘உதவாத டெலிபோன்’ என்னும் சிறுகதை உள்ளது.

### 3.4.5. சுதந்திரத்தின் பொருள் உணர்தல்

சுதந்திரம் என்பது ஒரு மனிதனுக்குத் தரும் உரிமையாகும். இது அடிமை என்ற எண்ணத்தைப் போக்கும். தன்னம்பிக்கையை வளர வைக்கும். ஆதலால் இந்தச் சுதந்திரத்தைக் குழந்தைகள் தான் நினைத்தபடி செய்யலாம் எனத் தவறாகக் கருதுகின்றனர். ஆதலால் சுதந்திரத்தின் பொருளைச் சரியாக உணரச்செய்யும் பாடல்களை இயற்றியுள்ளனர்.

தன் சுதந்திரம் தனக்கு மட்டுமல்ல. பிறரது உரிமையை மதிப்பதற்கும் பேச்சிலும் செயலிலும் உண்மையைக் கடைப்பிடிப்பதற்கும் ஏற்றதாகும். அதனால் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா ‘எது சுதந்திரம்’ என்னும் பாடலில்,

“சோம்பிக் கிடப்பது சுதந்திரம் இல்லை
தொல்லைகள் தருவதும் சுதந்திரம் இல்லை
வீம்புகள் செய்வதும் சுதந்திரம் இல்லை.
வேறெது உண்மைச் சுதந்திரம் ஆகும்?

பிறரது உரிமையை மதிப்பது சுதந்திரம்.
பேச்சிலும் செயலிலும் தூய்மையே சுதந்திரம்

உரிமையும், கடமையும் ஒன்றாய்ச் சேர்வதே
உண்மையில் சுதந்திரம் சுதந்திரமாகும்!"[44]

என்ற பாடல் வரிகள் சுதந்திரம் தனக்கு உரிமையுடையவை எனத் தவறான செயல்களைச் செய்யக்கூடாது என்பதற்கு உதாரணமாகியுள்ளன. எனவே சுதந்திரத்தின் பொருள் உணர்ந்து நடத்தலும் ஒரு அறச் செயலாகும். இதனாலும் பண்பாடு வளர்கிறது என்பதற்கு மேலுள்ள பாடல் வரிகள் சிறந்த எடுத்துக்காட்டாகும். இவ்வாறு அறவுணர்வுகள் மட்டும் பண்பாடல்ல. உயர்ந்த பழக்கமும் பண்பாடாகும் என்பதைப் பழக்கங்களில் பண்பாடு என்னும் தலைப்பில் ஆராயப்பட உள்ளன.

### 3.5.6. பழக்கங்களில் பண்பாடு

நல்லொழுக்கம், நற்சிரிப்பு, நற்பேச்சு போன்ற குணங்களைப் பெற்றிருத்தல் பண்பாட்டின் அடித்தளமாகிறது. இதனால் பிறரது அன்பிற்குரியவராக ஆகிறோம். எனவே நாம் செய்யும் செயல்களில் ஒழுக்கத்தைப் பின்பற்றி நடக்கும்போது உயர்ந்ததாகிறது.

"ஒழுங்கில் லாமல் செய்வ தெதுவும்
உயர்வ தில்லையே!
ஒழுங்கு வேண்டும் என்றும் எதிலும்
உணர்ந்து கொள்ளடா!"[45]

என்ற பாடல் வரிகள் மூலம் காட்டுத்தனமாய் வாகனம் ஓட்டினால் அதன் வேகத்தன்மை நம்மைச் சாய்த்துவிடும் என்பதைக் குழந்தைப்பாடல்களிலேயே கற்றுத் தருகின்றார் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி. இது போல் எழுதினால் திருத்தமாக எழுத வேண்டும். படித்தால் பிழை அறிந்து படிக்க வேண்டும். உணவு உண்டால் சிதறாமல் உண்ண வேண்டும். ஆபத்தில்லா நேரத்தில் ஒருவரை அழைத்தால் மென்மையாக அழைக்க வேண்டும் போன்ற செயல்பாடுகள் அனைத்தும் ஒழுக்கம் என்னும் செயலில் அடங்கும். இவ்வாறு உயர்ந்த பழக்கமும் பண்டாகின்றது. எனவே தாய், தந்தை, குழந்தை ஆசிரியர், பொதுமக்கள் என ஒவ்வொருவருக்கும் பண்பாடு இன்றியமையாததாகிறது. இதைப் பாடல்களில் வலியுறுத்தினால் குழந்தைகள் தாயாகித் தந்தையாகிப் பிறகும் சிறப்பார்கள்.

#### 3.5.6.1. தாயின் பண்பாடு

அன்பு வளர்க்கும் முதல் உறவு தாய் ஆவாள். இவளே தெய்வமாகக் கருதப்படுவாள். இவளிடம் அடிப்படையில் கற்றுக்கொண்ட பழக்கங்களே பண்பாட்டை வளரவைக்கின்றன. தாயின் கடமைகளை ஆங்காங்கு குறிப்பிட்டுள்ளனர். சான்றிற்காக சில வரிகள் தரப்பட்டுள்ளன.

"ஒழுக்கம் உயர்ந்ததாய்
உன்னில் வளர்ப்பதார்?
பழக்கம் நல்லவை
பயிற்று விப்பதார்?

சேய்கள் ஒழுக்கமாய்த்
திகழ்கி றார்எனில்
தாய்வ ளரத்திடும்
தகுதியே காரணம்!

தாயின் சொற்களைத்
தலைமேல் கொண்டுநீ
ஓய்ந்தி டாமலே
உடனே செய்திடு!.''[46]

என்ற இப்பாடல் வரிகள் மூலம் ஒழுக்கம் வளர்ப்பது தாயின் கடமையாக அமைந்தாலும் தாயின் செயலைப் பின்பற்றுவதிலேயே நல்ல பழக்கங்கள் வளர்கின்றன என்பதைக் கூறி எச்சரித்துள்ளார். மாதா, பிதா, குரு, தெய்வம் என்பார்கள். அதனால் மாதாவிற்கு அடுத்தபடியாக ஆசிரியர் பண்பாடு பற்றிய சிந்தனைகள் ஆராயப்பட உள்ளன.

**3.5.6.2. ஆசிரியர் பண்பாடு**

ஆசிரியர் பாடம் நடத்தும்போது பண்பாட்டைப் பின்பற்றினால் மாணவர்களும் ஆர்வமுடன் இருந்து அவர்கள் நடத்தும் பாடத்தை அக்கறையுடன் கவனிப்பார்கள். அவர்கள் நல்லாசிரியர்கள் எனப் போற்றப்படுவார்கள்.

''எத்தனை பேர்கள் எழுதப் படிக்க
இவரிடம் கற்றுக் கொண்டனரோ!
அத்தனை பேரும் அன்புடன் மதிக்கும்
ஆசிரியர், நல்ல ஆசிரியர்.''[47]

எனவே ஆசிரியரின் நற்பழக்கங்களாலும் கற்பித்தலாலும் மாணவன் உயர்வடைகிறான் என்பதற்கு இவ்வரிகள் அடித்தளமிட்டுள்ளன.

**3.5.6.3. சிறுவர் பண்பாடு**

காலைநேரம் சீக்கிரம் எழுதல், பல்துலக்குதல் இறைவனை வணங்குதல், வீட்டு வேலைகளைச் செய்தல், பள்ளிக்குச் சீருடையில் செல்லுதல், மாணவர்களுக்குரிய ஒழுக்கத்தைப் பின்பற்றுதல், அதாவது தினந்தோறும் பள்ளி மணி அடிப்பதற்கு முன் செல்லுதல், நட்புணர்வுடன் பழகுதல், உற்றார் உறவினர்களிடம் அன்பாக நடத்தல், நண்பர்களிடமும் வகுப்புத் தோழர்களிடமும், அறிமுகம் இல்லாதவர்களிடமும் ஒற்றுமையாகப் பழகுதல், பாடங்களைப் படித்தல், உடல்நிலை சரியில்லாதபோது விடுப்புக்கடிதம் எழுதி அனுப்புதல் இது போன்ற செயல்களால் அவன் பாராட்டப்படுகிறான். நல் மாணவன் என்ற பெயரை அடைகிறான். எனவேதான் குழந்தைகளின் நற்பழக்கங்களை வளர்க்கும் நோக்கில்,

''காக்கைப் பாட்டுப் பாடவே
காலை நேரம் விடிந்தது
தூக்கம் போதும் தம்பியே
சோம்பல் ஏனோ எழுந்திரு!

ஊக்கம் கொண்டு உழைத்திடின்
உயர்ந்த பதவி கிடைத்திடும்
தூக்கம் மிகுந்த சோம்பலால்
துவண்டு போகும் வாழ்க்கையே!

பூக்கள் மீது கும்பலாய்
புதிய தேனை உண்ணவே
ஈக்கள் கூடும் அழகுபார்
இன்னும் தூக்கம் ஏனடா!"[48]

என்று குழந்தைக்கவிஞர் செல்லகணபதி உணர்த்தியுள்ளார். மேலும்,

"சாரை சாரை யாகவே
சலித்தி டாமல் எறும்புகள்
ஓர மாகச் சென்றுதான்
உழைத்துத் தின்னும் அழகுபார்!

தென்றல் வீசும் காலையில்
சீக்கி ரம்நீ எழுந்திரு
உன்றன் பாடம் படித்திடு
உலக அறிவைப் பெற்றிடு!"[49]

போன்ற பாடல் வரிகளில் காலை நேரம் சீக்கிரம் எழுதல், உழைத்தல், பதவியைப் பெறுதல், உலக அறிவைப் பெறுதல் போன்ற செயல்களில் சிறந்தோங்கிய குழந்தைகளின் செயல்கள் பிற்காலத்தில் பிறரை மகிழ்விக்கச் செய்யும் என்னும் நோக்கில் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியால் கூறப்பட்டுள்ளது.

"பழக்கம் இருந்தால் சர்க்கஸ் வித்தையும்
பார்த்திட எளிதாய்த் தோன்றும்!
பழக்கத் தாலே கம்பியில் கூடப்
பதமாய் நடந்திடக் கூடும்.

தாயின் மார்பைக் குட்டிகள் இறுகத்
தழுவிக் கொள்ளும் போது
பாய்ந்து தாவும் குரங்குகள் மலையில்
பயமறி யாமல் ஏறும்!

தண்ணீர் மூழ்கி நீந்திடப் பழகி
தகுதியை வளர்த்துக் கொண்டால்
கண்மாய், கடலில் விழுந்துவிட் டாலும்
கவலைகள் வருமோ நெஞ்சில்? [50]

இவ்வரிகள் பழக்கத்தால் பிறரை வணங்கலாம் வாழ்த்தலாம் என்பதற்கு உதாரணமாக உள்ளன. நல்ல பழக்கம்தான் பின்னால் போற்றப்படும் பண்பாடாக வளர்கிறது.

படகில் உள்ள துடுப்பைப் போலப்
பக்க வாட்டில் செதிள்களை
அடக்க மாக அசைத்து நீந்தும்
அமைதி யான மீன்களாம்

சோர்வில் லாமல் நீந்து கின்ற
சுறுசு றுப்பு மீன்களாம்
சேர்ந்து வாழும் தந்து வத்தைச்
செய்து காட்டும் மீன்களாம்.”[51]

இப்பாடல் வரிகளில் மீன்கள் சுறுசுறுப்பாக இயங்குவதால் தான் தன் வேலையைச் செய்து எந்த விதத் துயரமுமில்லாமல் சேர்ந்து வாழுகின்றது என்பதை குழந்தைக்கவிஞர் செல்லகணபதி குறிப்பிட்டுள்ளார். இவ்வாறு இவ்விரு கவிஞர்களும் காகம், எறும்பு, மீன் இவற்றை எடுத்துக்காட்டி குழந்தைகளுக்குப் பண்பாட்டைக் கற்பித்துள்ளனர்.

### 3.5.6.4. மாணவர் பண்பாடு

மாணவர்கள், தினந்தோறும் பள்ளிமணி அடிப்பதற்கு முன் பள்ளிக்குச் செல்லுதல், பள்ளிக்குச் சீருடையில் செல்லுதல், பள்ளியில் நட்புணர்வுடன் பழகுதல், ஒழுக்கத்தைக் கடைப்பிடித்தல் அவசியமாகும். பள்ளிக்குச் செல்லுதல், பாடங்களைப்படித்தல், விடுப்புக்கடிதம் எழுதி அனுப்புதல் இது போன்ற செயல்களால் மாணவர்கள் பாராட்டப்படுகின்றனர். நல் மாணவன் என்ற பெயரையும் பெறுகின்றனர். எனவேதான் ‘மாணவர் கடமை’ என்னும் பாடலில் நா.செகதீசன் பள்ளிக்குச் செல்லும் மாணவர் கடமைகளை,

“ஐந்து மணிக்கு எழுவேனே;
காலைக் கடனை முடிப்பேனே!
ஆறு மணிக்கு அமர்வேனே;
அழகாய்ப் பாடம் படிப்பேனே!
ஏழு மணிக்குக் குளிப்பேனே!
எழிலாய் ஆடை அணிவேனே!
எட்டு மணிக்கு உண்பேனே!
ஏட்டில் பாடம் எழுதுவேனே!
ஒன்பது மணி அடித்தவுடன்
ஒழுங்காய்ப் பள்ளிக்குச் செல்வேனே.!”[52]

என்று பட்டியலிட்டுக் கூறியுள்ளார். இவரைப் போல் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பாவும்,

''அன்புடைய ஆசிரியர்
அவர்களுக்கு என்வணக்கம்

காலைமுதல் தலைவலியால்
கஷ்டமிகப் படுகின்றேன்.''[53]

என்ற இப்பாடல் வரிகள் மூலம் விடுப்புக்கடிதம் கொடுத்து விடுப்பு எடுக்கும் பழக்கத்தைப் பின்பற்றச் செய்துள்ளார். இவரைப் போல் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும்,

''பாடம் படிப்பாய்
அக்கறையாய்!
படித்ததைப் போல்நட
பக்குவமாய்!''[54]

என்னும் பாடல் வரிகளில் படிப்பில் அக்கறை செலுத்துதல் அவசியமாகும் என்பதை அறியச் செய்துள்ளார்.

''பெற்றவர் இடத்தில் மரியாதை
பெரியவர் இடத்தில் மரியாதை
கற்றவர் இடத்தில் மரியாதை
காட்டி நடப்பது ஒழுக்கம் என்போம்

நன்மை பயக்கும் சொல்லோடு
நல்லோர் போற்றும் செயலோடு
உண்மை பேசும் துணிவோடு
உலகில் வாழ்வது ஒழுக்கம் என்போம்.

மாறும் சுற்றுச் சூழ்நிலையில்
மாசுகள் செய்து கெடுக்காமல்
போற்றும் பொதுச்சொத்(து) அழிக்காமல்
பேணிக் காப்பது ஒழுக்கம் என்போம்.

உதவிக் கரங்கள் நீட்டிடவும்
ஊரார் உன்னைப் போற்றிடவும்
பதவி பெருமை காத்திடவும்
பக்குவப்படுத்தும் ஒழுக்கம் என்போம்.''[55]

என்ற பாடல் வரிகளில் தணிகைச் சிலம்பன் ஒழுக்கம் பற்றிய சிந்தனைகளைக் கூறியுள்ளார்.

"உழைக்கும் பேரை உயர்த்திடத்தான்
உட்கார்ந் திருக்கும் கணபதியாம்!
உழைத்துப் படித்தால் நீஉயர
உனக்கும் அருள்தரும் கணபதியாம்!"[56]

போன்ற வரிகள் மூலம் உழைப்பின் மேன்மையை உணர்தல் மாணவர்களுக்கு அவசியமானதாகும் என்பதைக் கூறியுள்ளார். இவ்வாறு சிறுவர் பண்பாடுகளைக் கூறிய பாடல்களில் பொதுமக்கள் பண்பாடு பற்றிய சிந்தனைகளும் கூறப்பட உள்ளன.

### 3.5.6.5. பொதுமக்கள் பண்பாடு

"மலிவுவிலைக் கடை, தபால்துறை போன்ற இடங்களுக்குக் குழந்தைகள் செல்லுதல் தாய் தந்தையர்க்கு உற்ற துணையாகிறது. ஆதலால் இது மாதிரியான இடங்களுக்குச் செல்லும் போது குழந்தைகள் நடந்து கொள்ளும் தன்மைகளை பர்மா ரமணி நாவல் அறிவிக்கிறது."[57] இதைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா எழுதியுள்ளார். இவரைப்போல் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும் வரிசையில்நின்று முறையாகப் பெறுதலே பண்பாடாகும் என்பதை பாடலில் நினைவுபடுத்தியுள்ளார்.

### 3.5.6.6.கூட்டுத் தொழிலாளர்களின் பண்பாடு

தொழில் செய்தலில் அனுசரித்தல் இன்றியமையாதது. கூட்டுத்தொழில் செய்யும் முதலாளிகளுக்கு விட்டுக்கொடுத்தல், இன்றியமையாதது. எனவே கூட்டுத்தொழில் உயரும் வண்ணம்,

"ஒத்துச் சேர்ந்து எங்கள் தொழிலை
ஊக்க மாய் நடத்துவோம்
சத்தி யத்தைக் கடைப்பி டித்துச்
சகல ருக்கும் உதவுவோம்."[58]

இவ்வரிகள் மூலம் ஒற்றுமையாக விட்டுக் கொடுத்துத் தொழில் செய்தால் அனைவராலும் போற்றப்படலாம் என்பதைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா உணர்த்தியுள்ளார்.

"கூட்டாக இதனைச் செய்யக்
கொஞ்சம் உதவிடு – அந்தப்
பாட்டாலே வரும்புகழில்
பாதி பெற்றிடு![59]

கூட்டாக ஒருவருக்கொருவர் உதவித் தொழில் செய்தால் சிறந்த புகழைப் பெறலாம் என்பதைக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி உணர்த்தியுள்ளார். தனிமனிதர்களாகிய

ஆசிரியர், தாய், சிறுவர் போன்றோரின் பண்பாடுகளையும் பொதுமக்கள் பண்பாடு எடுத்துரைக்கிறது.

### 3.5.6.7. பிற செயல்களும் பண்பாடாதல்

தலையில் பூ அணிதலும், பகிர்ந்துண்ணலும் வாழத்துதலும், பாராட்டுதலும் நன்றி மறவாமையும் தாயின் அனுமதியுடன் செல்லுதலும், பிற செயல்களும் பண்பாடாகின்றன.

### 3.5.6.8. தலையில் பூ அணிதலும் பண்பாடு

சிறு குழந்தைகளுக்குத் தலையில் பூச்சூடியிருப்பது மகிழ்வை ஏற்படுத்தும்.

"பாவம் போக்கும் கடவுளின்
பாதம் சேரும் மல்லிகை
சீவி முடித்த தலையினைச்
சிங்கா ரிக்கும் மல்லிகை!"[60]

இப்பாடல் வரிகள் மூலம் வாசம் உள்ள மலர்களை இறைவனுக்குச் சூடுதல் பண்பாடு என்பதைப் போலப் பெண்கள் தலையில் பல வண்ணப் பூக்களை அணிந்து கொள்ளுதலும் பண்பாடாகும் என்ற சிந்தனையைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா உணர்த்தியுள்ளார்.

### 3.5.6.9. பகிர்ந்துண்ணுதலும் பண்பாடு

தன்னிடம் உள்ள பொருட்களைப் பிறருக்குக் கொடுத்து மகிழ்ந்து உண்ணும் பண்பு உயர்ந்தது. இதற்கு எடுத்துக்காட்டான பாடல்வரிகள் குழந்தைப்பாடல்களில் உள்ளன.

"அணிலே அணிலே ஓடிவா
அழகு அணிலே ஓடிவா
கொய்யா மரம் ஏறிவா
குண்டுப் பழம் கொண்டுவா
பாதிப் பழம் உன்னிடம்
பாதிப் பழம் என்னிடம்
கூடிக் கூடி இருவரும்
கொறித்துத் கொறித்துத் தின்னலாம்."[61]

இப்பாடல் வரிகள் ஒரு பழமாக இருந்தாலும் அதைப் பகிர்ந்துண்ணுதல் வேண்டும் என்ற சிந்தனையைக் கூறுகின்றன.

"வட்ட மான தட்டு
தட்டு நிறைய லட்டு
லட்டு மொத்தம் எட்டு
எட்டில் பாதி விட்டு
எடுத்தான் மீதம் கிட்டு

மீதம் உள்ள லட்டு
முழுதும் தங்கை பட்டு
போட்டாள் வாயில் பிட்டு

கிட்டு நான்கு லட்டு
பட்டு நான்கு லட்டு
மொத்தம் தீர்ந்ததெட்டு
மீதம் காலித் தட்டு.”[62]

எத்தகைய சுவையான பொருட்களாக இருந்தாலும் அதைப் பங்கு வைத்துத் தின்ன வேண்டும் என்பதைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா மேற்கண்ட பாடலில் உணர்த்தியுள்ளார்.

“அணிலே உனக்கும் மாம்பழத்தில்
ஆசை என்றால் கடித்திடுவாய்!
அணிலே பாதியைத் தின்றிடுவாய்!
அன்பாய் மீதியைத் தந்திடுவாய்!.”[63]

மேற்கண்ட குழந்தைக்கவிஞர் செல்லகணபதியின் பாடல் வரிகளும் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா கூறியது போல் பங்கு வைத்துத் தின்னும் பழக்கத்தை வளர்த்துள்ளன. நாம் உணவை உண்ணும் நேரத்தில் பிறர் நமது இல்லத்திற்கு வந்தால் அதனைப் பகிர்ந்துண்டு பிறரை மகிழ்விக்கச் செய்யும் நற்பழக்கத்தைப் பின்பற்ற வேண்டும் என்பதைக் குழந்தைப்பாடல்களில் இவ்விரு கவிஞர்களும் கூறியுள்ளனர். இவ்வாறு பகிர்ந்துண்ணும் குழந்தைகளுக்குப் பிறரை வாழ்த்தும் பண்பைக் கற்றுக் கொடுப்பதும் அவசியமானதாகும்.

**3.5.6.10. வாழ்த்துதலும் பாராட்டுதலும் பண்பாடு**

அனைவரும் சிறக்க வாழ்த்துதலும் வெற்றி பெற்றோரைப் பாராட்டுதலும் மனிதராய்ப் பிறந்து ஒவ்வொருவருக்கும் இன்றியமையாததாகும். பிறந்தநாள் போன்ற விழாநாட்களில் வாழ்த்துக்களைப் பெறுவது அவசியமானதாகும். உறவினர்களுக்கு இனிப்பைத் தந்து உதவுதல் மட்டும் சிறந்ததல்ல. எல்லோரையும் வாழ்த்துவதாலும், வாழ்த்தப்படுவதாலும் பண்பாடு வளரும். இந்தச் சிந்தனையை,

“உண்மை பேசி உயரவும்,
உயர்ந்தோர் வழியில் செல்லவும்
தன்னம் பிக்கை கொள்ளவும்
சாமி அருளை வேண்டும்நாள்.”[64]

போன்ற பாடல் வரிகள் உணர்த்துகின்றன. அன்பு, உண்மை போன்ற பழக்கத்தைப் பிறந்தநாள் விழா போன்ற விழா நாட்களில் பின்பற்ற வேண்டும் என்பதைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா கூறியுள்ளார். இவரைப்போல் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும்,

"வாழ்கவாழ்க என்று சொன்னால்
வாழும்உலகம் இன்பமாய்!
ஆழ்ந்தமனதில் தோன்றும்வாழ்த்து
அன்பைநாளும் வளர்க்குமே!."[65]

என்கிறார். வாழ்க என்று சொன்னால் இந்த உலகம் இன்பமாக வாழும். அதனால் ஒவ்வொரு குழந்தைகளின் மனதிலும் வாழ்த்தும் செயலால் பிறரது அன்பிற்கு உரியவராகிறோம் என்னும் தன்மையை உணர்த்த மேலுள்ள பாடல்வரிகள் உதாரணமாக உள்ளன.

வாழ்த்தும் பழக்கத்தைக் கற்றுக்கொண்ட குழந்தைகளுக்கு இறைவணக்கப் பழக்கங்களும் நம்பிக்கையும் பண்பாடாகும் என்பதை உணர்த்தியுள்ளனர். வாழ்த்துதலுடன் பாராட்டுதலும் பாராட்டைப் பெறுதலும் ஒவ்வொரு மனிதருக்கும் இன்றியமையாதவை. பாராட்டுதலால் பிறரது மனமகிழ்விற்கு உரியவராகிறோம். பாராட்டைப் பெறுதலால் பிறரால் மதிக்கப்படுகிறோம். அதனால் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா 'நீலா மாலா' என்னும் நாவலில் இச்சிந்தனையை விளக்கியுள்ளார்.

'நேருமாமா லெனின் மாமா' என்ற கட்டுரையை நீலா எழுதினாள். அதற்கு மாலா படம் வரைந்தாள். அதனால் இவ்விருவரும் வெற்றி பெற்றனர். இதனை அறிந்து பூங்குடியில் உள்ள பெரியவர்கள் சிறியவர்கள் பாராட்டுக்கடிதம் எழுதினர். அதனால் இதன் மூலம் பாராட்டுதலும் உயர்ந்ததாகும் என்பதை அறிகிறோம். ஒருவரின் உதவியை அறிந்து பாராட்டுதல் போல அந்த உதவியை மறக்காமல் இருப்பதும் சிறந்ததாகும்.

**3.5.6.11. நன்றி மறவாப் பண்பாடு**

நன்றி என்பது ஒருவர் நமக்குச் செய்த உதவிக்கு நாம் செய்யும் பரிகாரம். ஒருவர் செய்த உதவியைப் பெற்ற ஒருவர்தான் பெற்ற உதவியைப் பாராட்டி நன்றி கூறுதல் மரபு. இதனை,

"எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு."[66]

என்ற குறளின் அடிப்படையில் ஆய்கையில் குழந்தைப்பாடல்களிலும் நன்றி மறவாமைச் சிந்தனைகளைக் குழந்தைக்கவிஞர்கள் எடுத்துக்காட்டி விளக்கியுள்ளனர். கதைகளிலும் நாவல்களிலும் இச்சிந்தனைகள் உள்ளன. குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா 'நாயின் நன்றி' என்னும் பாடலில் விளக்கியுள்ளார்.

"தன்னுடை உயிரும் தப்பியதே
தங்கம் வெள்ளி நகையுடனே
நன்றி மிகவும் உள்ள தென
நாயைப் புகழ்ந்தார் தந்தையுமே.

மனமகிழ் வுடனே அந்நாயை
மகனினும் மேலாய்ப் போற்றினரே
தினமும் சோறு வைத்தனரே
தின்னுதல் கண்டு மகிழ்ந்தனரே.''[67]

என்னும் வரிகள் மூலம் நாயின் நன்றி உணர்வைப் பாராட்டி வளர்த்த பெரியோரைப் போல குழந்தைகளும் விளங்குவார்கள்.

''இதுதான் இயற்கை இப்படித்தான்
இருக்கும் உளியுடன் தீக்குச்சி
அதுதான் நன்றி மறப்பதுவாம்
அப்படி நடந்திட வேண்டாமே!

மழுங்கிய உளியைத் தீட்டிடவே
மரமும் உதவிடக் கூடும்தான்
உளிக்கு கூர்தந்த மரத்தினையே
உளியும் பிளப்பது முறைதானா?.''[68]

போன்ற பாடல் வரிகள் உளியைப் பிடிக்கும் கைப்பிடி மரத்தால் செய்யப்படுகிறது. அதனால் அந்த மரத்தை வெட்டுதல் நன்றி மறவாமைக்குரிய செயலாகும் என்பதைக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி உணர்த்தியுள்ளார். நன்றி மறவாமையைப்போல் இறை மீது நம்பிக்கை கொள்ளுதலும் தன் மீது நம்பிக்கை கொள்ளுதலும் இன்றியமையாததாகும்.

### 3.6. நம்பிக்கைப் பண்பாடு

தன் மீது நம்பிக்கை கொள்ளுதலும், இறைமீது நம்பிக்கை கொள்ளுதலும் உயர்ந்த பழக்கங்களாகும். நம்பிக்கை என்பது தன்மீது தான் வைக்கும் மதிப்பு ஆகும். இறை நம்பிக்கை இருந்தால் துன்பத்திலும் இடையூறில்லாத வெற்றியைப் பெற இயலும். அதனால் நம்பிக்கை இன்றியமையாததாகும். இதை இறை நம்பிக்கை, தன்னம்பிக்கை என இரண்டு வகையாகக் குறிப்பிட்டு ஆய்வு செய்யப்பட உள்ளன.

#### 3.6.1. இறை நம்பிக்கை

உழைப்பே இறைவன் என இரு கவிஞர்களும் கூறி பாடல்களில் இறை நம்பிக்கையை வளர்த்துள்ளனர்.

''கொடுமை மிக்க கம்சனைக்
கொன்று வென்ற கண்ணனாம்
தூது சென்று பாண்டவர்
துயரம் தீர்த்த கண்ணனாம்.

அர்ச்சு னர்க்குக் கீதையை
அருளிச் செய்த கண்ணனாம்
நல்ல வர்க்கே அருளுவான்
நாங்கள் போற்றும் கண்ணனாம்.''[69]

என்னும் பாடல் வரிகள் மூலம் நல்லவர்க்கே இறைவன் அருள்புரிவான். இறைமீது நம்பிக்கை கொண்டால் பண்பாடு வளரும் என்பதற்கு குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பாவின் பாடல் வரிகள் எடுத்துக்காட்டாகியுள்ளன.

**3.6.2. தன்னம்பிக்கை**

தன்னம்பிக்கை தன் தகுதியை உயர்த்தும். துன்பத்திலும் வெற்றி காண இது ஏற்றதாகும். இதற்கு எடுத்துக்காட்டாக குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பாவின் பாடல் வரிகளும், குழந்தைக்கவிஞர் செல்லகணபதியின் பாடல் வரிகளும் உள்ளன. இதனை,

''கருத்தை ஊன்றிப் பள்ளியில்
கற்று நாங்கள் யாவரும்
சிறப்பு மிக்க மனிதராய்த்
திகழ என்றும் முயலுவோம்.

அறிவுச் செல்வம் தன்னையே
அள்ளி அள்ளித் தந்திடும்
அருமைப் பள்ளி ஓங்கவே
ஆண்ட வனை வேண்டுவோம்.''[70]

போன்ற பாடல் வரிகளில் கல்வி கற்ற மாணவர்களுக்கு தன்னம்பிக்கை அவசியமாகும் என்பதைக் குழந்தைகளுக்குக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா கூறியுள்ளார். இவரைப்போல் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும்,

''தன்னால் எதுவும் முடியுமோ?
தகுதி தானே உயருமோ?
உன்னால் முடியும் உழைத்திட
உழைப்பி னாலே உயர்வுகொள்!''[71]

இப்பாடல்வரிகளில் தன்மீது நம்பிக்கை கொண்டு உழைத்தால் உயர்ந்த லட்சியத்தை அடையமுடியும் என்பதை உணர்த்தியுள்ளார். இவ்வாறு தன்னம்பிக்கைச் சிந்தனையுடன் உழைத்த குழந்தைகள் தொழில்களையும் மேன்மைப்படுத்தி சமூகப் பொருளாதாரத்தையும் உயர்த்துவார்கள்.

**3.7. சாலை விதிகளும் சட்டங்களும்**

சாலைகள் என்பது நாம் பயணம் செல்ல உதவும் வழியாகும். இந்தப் பாதை நமக்கு மட்டும் சொந்தமானதல்ல. பிறருக்கும் உரியதாகும். அதனால் இதில் செல்லும் விதிமுறைகளையும் சட்டங்களையும் பின்பற்றினால் உயிரிழப்புகளையும் பொருளிழப்புகளையும் தவிர்க்க முடியும். அதனால் சாலை விதிகளைப் பின்பற்றுதல் அவசியமாகும். அதாவது சாலைகளில் மித வேகத்துடன் செல்லுதல், பேருந்தில்

ஏறும்போதும் இறங்கும்போதும் ஏற இறங்குபவர்களுக்கு வழிவிட்டு இறங்குதல் போன்ற பண்பாட்டுச் சிந்தனையைப் பதிவு செய்யும் நோக்கில்,

"சாலை ஓரம் நடந்து சென்றால்
சங்க டங்கள் இல்லை தம்பி
சாலை விதிகள் தெரிந்த வர்க்குச்
சற்றும் கவலை இல்லை தம்பி."[72]

போன்ற குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பாவின் பாடல்வரிகள் சாலை ஓரம் நடந்து செல்லுதல் பண்பாடாகும் என்பதை உணர்த்தியுள்ளன.

"காட்டுத் தனமாய் வேக மாகக்
கண்ணை மூடியே
ஓட்டிச் சென்றால் அந்த வேகம்
உன்னைச் சாய்க்குமே!

வேக மாகச் செல்வ தாலே
விபத்து நேரலாம்!
தேகம் சிராய்க்க நடக்கும் மனிதர்
தெருவில் சாயலாம்.!"[73]

இவ்வரிகள் வாகனங்களில் மித வேகத்துடன் செல்லுதல் பண்பாடாகும் என்பதை உணர்த்தியுள்ளன.

### 3.8. உயர்ந்தோரைப் பின்பற்றுதல்

காந்தி நம் தேசப்பிதா ஆவார். அவரை தேசப்பிதா என்று வாக்காளர்களிடம் ஓட்டு வாங்குவதற்காகவே அழைக்கிறார்கள். காந்திஜி பிறருக்கு உதவ வேண்டும் என்ற கொள்கையை உடையவர். அதை மக்கள் இச் சமுதாயத்தில் பின்பற்றினால் வறுமை ஒழியும் என்பதை உணர்த்த,

"சட்டையில் லாத விரதம் பூண்டது
சட்டையெல் லார்க்கும் கிடைத்திடத்தான்
சட்டெனைக் கொன்ற நாளினில் கூடச்
சட்டையில் லாமல் மடிந்தவன்நான்.
சட்டையில் லாமல் இருந்தால் தொலையட்டும்
சாப்பிடக் கூட உணவின்றித்
தட்டுப் பாட்டினில் பற்பல மக்கள்
தவிப்பதைப் பொறுக்க மனமில்லை.

சந்தை மாடுகள் பெறுகிற வாய்ப்பும்
ஜனங்களுக் கில்லை பரிதாபம்
இந்த நாட்டினில் இனியும் வாழ
எனக் கொரு விதியா என்செய்வேன்.''[74]

போன்ற பாடல் வரிகள் மூலம் ஏழைகளின் வறுமை போக்கப்படவில்லை என்பதைக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி உணர்த்தியுள்ளார். மேலும் காந்தியைப்போல் நேருஜியும் மக்கள் பண்பாட்டைக் கடைப்பிடிக்கவில்லையென வருந்துவதாக,

''பட்டினித் துயரில் பாதி ஜனங்கள்
பசியினை விரட்டி வீழ்த்தாமல்
வெட்டி முழக்கிய விடுதலை நாளினைக்
கொண்டா டுவதும் சரிதானோ?''[75]

என்று கூறியுள்ளார்.

**3.9. புராணப் பண்பாடு**

திருமால் இராமராக அவதாரம் எடுத்தவர்.இவர் தன் நாட்டு மக்களுக்காகத் தன் குடும்பத்தையே இன்னல்களுக்குள்ளாக்கியவர். இத்தகைய இராமரின் செயல் அயோத்தியையே காத்தது. ஏனென்றால் பண்பாடு நிறைந்த ஒருவர் வாழ்க்கையைப் பின்பற்றினால் தவறிலிருந்து விடுபட்டு நற்செயல்கள் செய்து பண்பாட்டை உயர்த்தமுடியும். இதற்கு உதாரணமாக 'ராமரும் கண்ணனும்' என்னும் பாடல் உள்ளது.

''கண்ணன் கீதையில் கூறியதைக்
கற்றே நாமும் உயர்ந்திடுவோம்.

வாழ்ந்து காட்டிய ராமனையும்
வழியைக் காட்டிய கண்ணனையும்

வாழ்வில் என்றும் மறவோமே!
மறவோம், மறவோம்; மறவோமே.!''[76]

என்ற பாடல் வரிகள் மூலம் வாழ்ந்து காட்டிய ராமரையும் வழியைக் காட்டிய கண்ணனையும் மறத்தல் தவறாகும். அதனால் குழந்தைகள் அதைப் பின்பற்றத் தூண்டும் வகையில் கவிஞர்களின் பாடல்கள் உள்ளன.

இத்தகைய புராணக் கருத்துகளை வெளிப்படுத்த ஏற்றது கலையுணர்வுகள். அதனால் கலையுணர்வுகளும் பண்பாடாதல் என்னும் தலைப்பில் சிந்தனைகள் ஆயப்பட உள்ளன.

**3.10. கலையுணர்வுகளும் பண்பாடாதல்**

கலை பிறரை மகிழ்வூட்டும் செயல். ஒரு கலையே ஒரு சமூகத்தின் பண்பாட்டை வெளிப்படுத்துகின்றது. தமிழர்களின் கலைப் பண்பாட்டைக் குழந்தைகளுக்கு

இளவயதிலேயே சொல்லிக் கொடுக்கும் வழிகளைக் கூறியுள்ளனர். இயல், இசை, நாடகம் என்ற முத்தமிழாலும் கலை வளர்ந்து கொண்டிருக்கிறது. மனிதன் தன் எண்ணத்தைப் பிறருக்கு உணர்த்த இயலால் சொற்பொழிவு ஆற்றுகின்றான். மேலும் கருத்துக்களை எளிதில் உணர்த்த மேள தாளத்துடன் பாடலைப் பாடி உணர வைக்கிறான். நடிப்பால் மக்களுக்குத் தம் கருத்துகளை எளிதில் சென்றடையும் வண்ணம் செய்வதை நாடகம் என்பர். இதில் இசையைக் கருவிப் பயன்பாட்டுடன் பாடும்போது அது செவியையும் மனத்தையும் குளிரச் செய்கிறது. அதனால் இந்த இசை உணர்வு குழந்தைகளுக்கும் உருவாக வேண்டும் என்னும் நோக்கில் இசை பற்றிய சிந்தனைகளை இவ்விரு கவிஞர்களும் எழுதியுள்ளனர்.

“பாட்டுப் பாடுவேன் - நான்
பாட்டுப் பாடுவேன்
பலரும் புகழ, இனிய தமிழில்
பாட்டுப் பாடுவேன்.

கேட்டு மகிழவே – நீங்கள்
கேட்டு மகிழவே,
கிளியின் மொழிபோல் இனிய தமிழில்
கீதம் பாடுவேன் - நான்
கீதம் பாடுவேன்

குழலை ஊதுவேன் - புல்லாங்
குழலை ஊதுவேன்
கோகு லத்துக் கண்ணன் போலக்
குழலை ஊதுவேன்.”[77]

இவ்வாறு வாயாலும் கருவியாலும் இசைத்து பிறரை மகிழ்விப்பதும் பண்பாடாகும் என்ற சிந்தனையைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா கூறியுள்ளார். மேலும் சிறுகுழந்தைகளை மகிழ்விக்க ஏற்றது பாடல் என்பதை,

“அம்மா உடனே அருகில் வந்தாள்;
அழுகை நிற்க வில்லை.
‘ஆ.........ராரோ’ பாட லானாள்
அழுகை பறந்து போச்சு!”[78]

என்ற பாடல் உணர்த்துகிறது. இத்தகைய தாலாட்டுப் பாடல்கள் தமிழனின் பண்பாடல்லவா?

“தமிழ்மலை யாளம் தெலுங்கு கன்னடம்
தனித்தனி யாகப் பலமொழிகள்.!

அமுதினும் இனிய இம்மொழி மட்டும்
அவைகள் அனைத்திலும் அடங்கியதாம்!

கைவிரல் அசைப்பில் கால்களின் ஜதியில்
கண்டு கொள்ளலாம் இம்மொழியை
பொய்கலக் காத புனித மொழியிது
புரிந்துகொண் டவர்க்கே இதமளிக்கும்!

பழகிடப் பழகிடச் சுகந்தரும் அம்மொழி
பழகிடு வோர்க்கே சுவைதெரியும்!
அழுதிட வைக்கும் ஆடிட வைக்கும்
அனுபவித் துணர்ந்தால் இம்மொழியை!.''[79]

தமிழ் மலையாளம், தெலுங்கு போன்ற பிறமொழிகளிலிருந்து வேறுபடக்கூடிய இசை தமிழ் மொழியின் இசையாகும். கைவிரல் அசைப்பிலும், கால்களின் ஜதியிலும் கண்டு கொள்ளலாம் என்று இசையின் பெருமை பற்றிய சிந்தனைகளைக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி பாடல்களில் கூறியுள்ளார்.

''இம்மொழி எம்மொழி இசையெனும் நல்மொழி
இதயங்கள் கவரும் இன்பமொழி
இம்மொழி கேட்பது எவர்க்கும் மகிழ்ச்சியே
இனிமை இனிமை இசைமொழியே!''[80]
''முத்தமிழ் மூன்றும் முத்துகள்
மோகனப் பாடல் சொத்துகள்
முத்தமிழ் மூன்றும் பயின்றிட
முந்திடு முந்திடு தம்பியே!''[81]

எனக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி பாடியுள்ளார்.

''இனிய பாடல் ராகம் பாடி
இன்பம் காணலாம்
தனிமை யாக ரசித்துப் பாடித்
தாகம் தீரலாம்.''[82]

போன்ற பாடல் வரிகள் இனிய பாடலில் இன்பம் உள்ளதால் தனித்துப் பாடி இன்பத்தைப் பெறலாம் என்பதைக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி கூறியுள்ளார்.

''பூவைச் சுற்றி வண்டு பாடும்
புதிய ஓசையில்
நூலில் நல்ல தமிழைத் தோய்த்து
நாளும் பாடலாம்.

கோயில் மணியின் ஓசை நாதம்
கூட்டும் ஒலியிலே
பாயில் உறங்கும் மனிதர் விழிக்கும்
பாங்கில் பாடலாம்.

விடியற் காலம் பறவை இனங்கள்
மிகவும் இனிமையாய்
வடிக்கும் ராக மெட்டில் நாமும்
மகிழ்ந்து பாடலாம்.''[83]

இசைக்கு மகிழாத உயிர்கள் இல்லை. அதுபோல் குழந்தைகளும் இசையின் இனிமையை விரும்புவார்கள் என்பதற்கு இப்பாடல் வரிகள் சான்றாக உள்ளன.

''பாட்டு பாட்டு பாட்டு – அதைக்
கேட்டு கேட்டுக் - கேட்டு
நெஞ்சம் சிலிர்க்கு தம்மா – நல்ல
நினைவும் துளிர்க்கு தம்மா.
கொஞ்சம் கொஞ்ச மாக- இன்பக்
குளிர்ச்சி தோன்று தம்மா.''[84]

இவ்வாறு குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா, குழந்தைக்கவிஞர் செல்லகணபதியின் பாடல் வரிகளில் கூறப்பட்டுள்ள சிந்தனைகள் உடல் உறுப்புகளின் அசைவால், முகபாவத்தால் உள்ளங்களை மகிழச் செய்யலாம் என்பதை உணர்த்தியுள்ளன.

**தொகுப்புரை**

- பண்பாடு என்ற சொல்லுக்கு விளக்கம் அறியப்பெற்றது.
- பண்பாட்டின் இன்றியமையாமை உணர்த்தப்பெற்றது.
- குழந்தைகள் சிறுவயதில் தாய் தந்தையரிடம் கற்ற பழக்கங்களே பின்னால் அவர்களின் பண்பாட்டை வளர்க்கின்றன என்பதைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா செல்லகணபதியின் பாடல்கள் உணர்த்துகின்றன.
- குழந்தைகள் ஈகை, அன்பு, வாய்மை போன்ற பண்பாடுகளைக் கற்றுக் கொள்வதற்கு குழந்தைக்கவிஞர்களின் படைப்புகள் வழிகாட்டியுள்ளன.
- மனிதநேயத்தைக் காக்கும் வழிமுறைகள் அறியப்பெற்றன.
- மாற்றுத்திறனாளிகளை மதிப்பதும் பண்பாடாதலால் அவர்களை மதிக்க வேண்டும் என்ற எண்ணத்தை இவ்விருவரின் படைப்புகள் உணரச் செய்துள்ளன.
- மாறாத் தன்மையுடைய உண்மையைப் பின்பற்றுவதற்குரிய பாடல்களை இவர்கள் எழுதியுள்ளனர். இதற்கு காந்தியை எடுத்துக்காட்டாகக் கூறியுள்ளனர்.
- அன்பின் அவசியத்தைக் கூறியுள்ளனர். முகமலர்ச்சியுடன் பழகுபவர்களிடம் ஆயிரம் நண்பர்கள் பழகுவார்கள் என்ற உண்மையைத் தம் பாடல்கள் மூலம் அறியச் செய்துள்ளனர்.
- அறச் செயல்களைச் செய்தாலும், அதில் தூய்மை கடைப்பிடிக்க வேண்டும் என்ற சிந்தனையைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா பதிவு செய்துள்ள தன்மை ஆராயப்பெற்றது.
- குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா கொடுப்பது கொடையாகும். அதனால் பிறருக்குக் கொடுப்பதற்கே இறைவன் கைகளைத் தந்துள்ளார்; உதவி செய்வதற்கு முன் யோசனைகளைக் கூறாமல் உதவி செய்தபின் கூறவேண்டும் என்பதைக் கூறியுள்ளார்.
- குழந்தைக்கவிஞர் செல்லகணபதி உதவி என்பது பறிமாறிக்கொள்ளும் செயலாகும்; உதவி செய்யும்போது துன்பம் நேர்ந்தாலும் அதைப் பெரிதுபடுத்தக்கூடாது; தன்னிடம் உள்ள ஒன்றைக் கொடுத்து மற்றவர்களிடம் உள்ள ஒரு பொருளைப் பெறவேண்டும் என்பது போன்ற சிந்தனைகளைப் பதிவு செய்துள்ளார்.
- சமூகத்தில் பசித்தவர்க்கு உணவு கொடுத்து வறுமையைப் போக்க வேண்டும் எனக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி கூறியுள்ளார்.
- இவ்விரு கவிஞர்களும் மேற்கூறியதற்கேற்பச் சிந்தனைகளைக் கதைகளிலும் நாவல்களிலும் வளர்த்துள்ளனர் என்று ஆராய்ந்து அறியப்பெற்றுள்ளது.
- தான் நினைத்தவற்றைச் செய்யாமல் பிறருக்குத் துன்பம் தராமல் இருப்பதே சுதந்திரமாகும் என்கின்ற சுதந்திரத்தின் பொருளை உணரச் செய்த பாடல்களாக இவர்கள் பாடல்கள் உள்ளன.

❖ தாய், ஆசிரியர், மாணவர், தொழிலாளர் போன்ற ஒவ்வொருவரும் பின்பற்ற வேண்டிய உயர்ந்த செயல்கள் பாடல்களில் கூறப்பட்டுள்ளன. ஏனெனில் இவைதாம் பின்னால் குழந்தைகளால் பின்பற்றப்படுபவை ஆகும்.

❖ குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பாவும் செல்கணபதியும் வாழ்த்துதலும் பாராட்டுதலும் பண்பாடாகும் என்று உணர்த்தியுள்ளனர்.

❖ ஒருவர் செய்த நன்றியை மறக்காமல் இருப்பதும் பண்பாடாகும்; இறைநம்பிக்கையும், தன்னம்பிக்கையும் பண்பாடாகும்; சாலை விதிகளும் சட்டங்களும் பண்பாடாகும்; உயர்ந்தோரைப் பின்பற்றுதலும் பண்பாடாகும் என்ற சிந்தனைகளைப் பதிவு செய்துள்ளனர்.

❖ இராமாயணத்தில் நற்செயல்களால் ஆட்சி செய்த இராமனைக் குழந்தைப்பாடல்களில் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா காட்டியுள்ளார்.

❖ இயலால் சொற்பொழிவாற்றி, இசையால் இசைத்து, நாடகத்தால் நடித்து பிறரை மகிழச்செய்யும் கலையுணர்வுகளும் பண்பாடாகும் என்றறியப்பெற்றது.

## இயல்-3

## அடிக்குறிப்புகள்

1. செ.பழனிச்சாமி, புறநானூற்றில் தமிழர் பண்பாடு, பக்.11-12.
2. மேலது ப.12.
3. கோவை ஞானி, தமிழ், தமிழர், தமிழ். இயக்கம், ப.11.
4. செ.பழனிச்சாமி, புறநானூற்றில் தமிழர் பண்பாடு, ப.8.
5. சா.எழிலன், மழலையர் கல்விக்கு மணியான யோசனைகள், ப.5.
6. எஸ்.நடராஜன், மழலையர் பள்ளிக்கல்வி பயிற்றுமுறைகள், ப.50.
7. திருநணா பரீட்சை, கலைக்களஞ்சியம் தொகுதி ஆறு, ப.690.
8. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.59.
9. மேலது ப.13.
10. மேலது ப.21.
11. செல்லகணபதி, மலரும் மொட்டுகள், ப.47.
12. மேலது ப.65.
13. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.79.
14. மேலது ப.106.
15. மேலது ப.107.
16. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம் (இ.தொ.), ப.217.
17. செல்லகணபதி, வளரும் பூக்கள், ப.95.
18. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.102.
19. செல்லகணபதி, மணக்கும் பூக்கள், ப.133.
20. அழ.வள்ளியப்பா, சிரிக்கும் பூக்கள், பக்.117-118.
21. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம் (இ.தொ.), ப.141
22. மேலது ப.143.
23. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.77.
24. செல்லகணபதி, வளரும் பூக்கள், ப.87.
25. மேலது ப.88.
26. மேலது ப.3.
27. மேலது ப.89.
28. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம் (இ.தொ.), ப.122.
29. அழ.வள்ளியப்பா, சிரிக்கும் பூக்கள், ப.31.
30. செல்லகணபதி, மணக்கும்பூக்கள்,ப.16.
31. மேலது ப.33.
32. மேலது ப.109.
33. செல்லகணபதி, மலரும்மொட்டுகள், ப.63.
34. மேலது ப.145.
35. செல்லகணபதி, மணக்கும் பூக்கள், ப.100.

36. செல்லகணபதி, வளரும் பூக்கள், ப.105.
37. அழ.வள்ளியப்பா, ஈசாப் கதைப்பாடல்கள், ப.12.
38. செல்லகணபதி, வளரும் பூக்கள், ப.94.
39. மேலது ப.79.
40. பூவண்ணன், செல்லகணபதி (தொ.ஆ.), பிள்ளைப்பாடல்கள். ப.31.
41. மேலது ப.32.
42. மேலது ப.32.
43. செல்லகணபதி, மணக்கும் பூக்கள், ப.196.
44. அழ.வள்ளியப்பா, சிரிக்கும் பூக்கள், ப.165
45. செல்லகணபதி, வளரும் பூக்கள், ப.86.
46. செல்லகணபதி, மணக்கும் பூக்கள், ப.130.
47. அழ.வள்ளியப்பா, சிரிக்கும்பூக்கள், ப.50.
48. செல்லகணபதி, வளரும் பூக்கள், ப.97.
49. மேலது ப.98.
50. செல்லகணபதி, வளரும் பூக்கள், ப.99.
51. மேலது ப.96.
52. பூவண்ணன், செல்லகணபதி (தொ.ஆ.), பிள்ளைப்பாடல்கள், ப.38.
53. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.49.
54. செல்லகணபதி, மலரும் மொட்டுகள், ப.79.
55. பூவண்ணன், செல்லகணபதி (தொ.ஆ.), ப.44.
56. செல்லகணபதி, மணக்கும் பூக்கள், ப.2.
57. அழ.வள்ளியப்பா, பர்மாரமணி (நாவல்), ப.6.
58. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.63.
59. செல்லகணபதி, வளரும் பூக்கள், ப.73.
60. மேலது ப.27.
61. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.6.
62. மேலது ப.4.
63. செல்லகணபதி, வளரும் பூக்கள், ப.12.
64. அழ.வள்ளியப்பா, சிரிக்கும் பூக்கள், ப.65.
65. செல்லகணபதி, வளரும் பூக்கள், ப.63.
66. ஆசி.கண்ணம்பிரத்தினம் (உ.ஆ.), திருக்குறள் கருத்துரை, அதிகாரம் செய்நன்றி அறிதல், குறள் எண்.110.
67. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.140.
68. செல்லகணபதி, விரிந்த வானம், ப.27.
69. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.3.
70. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம்(இ.தொ.), ப.114.
71. செல்லகணபதி, வளரும் பூக்கள், ப.67.
72. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம் (இ.தொ.), ப.108.

73. செல்லகணபதி, வளரும் பூக்கள், ப.86.
74. செல்லகணபதி, மணக்கும் பூக்கள், ப.64.
75. மேலது ப.65.
76. அழ.வள்ளியப்பா, சிரிக்கும் பூக்கள், ப.88.
77. மேலது ப.55.
78. மேலது ப.68.
79. செல்லகணபதி, மணக்கும் பூக்கள், பக்.9-10.
80. மேலது ப.10.
81. மேலது ப.12.
82. செல்லகணபதி, வளரும் பூக்கள், ப.93.
83. மேலது ப.93.
84. மேலது ப.90.

## இயல்- 4

## குழந்தை இலக்கியங்களில் சமுதாயச் சிந்தனைகள்

இலக்கியங்கள் காலத்தைப் பிரதிபலிப்பவை. அதே சமயத்தில் அவை மனித குலத்தைப் பண்படுத்துவன. அறத்தையும் நீதியையும் போதிப்பவை. நாளையத் தலைவர்களான இன்றைய குழந்தைகள் எவ்வாறு சமூக உணர்வு பெற்றுத் திகழ வேண்டும் என்பதைக் குழந்தைக்கவிஞர்களான அழ.வள்ளியப்பாவும், செல்லகணபதியும் தங்கள் பாடல்களில் பதிவு செய்துள்ளனர். அவற்றைப் பின்வருமாறு வகைப்படுத்தி ஆராயலாம்.

4.1. சமூகமும் சமூக வகைமைகளும்
4.1.1 கிராமப்புறச் சமுதாயம்
4.1.2. நகர்ப்புறச் சமுதாயம்
4.2. சமூக இன்னல்களும் தீர்வுகளும்
4.2.1.0 தனிமனித ஒழுக்கம்
4.2.2. காந்தீயமும் மனிதநேயமும்
4.2.2.1 எளிமையே காந்தீயம்
4.2.2.2 அஹிம்சையே காந்தீயம்
4.2.2.3. உண்மையே காந்தீயம்
4.2.2.4. அன்பே காந்தீயம்'
4.2.3.0. களவு நீக்குவோம்.
4.2.4.0. கூடி வாழக் கோரிக்கை
4.2.5.0 அசுத்தமாக்கும் ஆலைக்கழிவு.
4.2.6.0 குழந்தைகளின் குறை
4.2.7.0 போலித்துறவியை அறிதல்
4.2.8.0. குண்டும் அழிவும்
4.3. பாதுகாப்பு உயர்த்தும் சமூகச்சிந்தனைகள்
4.3.1. ஆன்மீகத்தால் அறம் வளர்த்தல்
4.3.2.0 மாசகற்ற மரம் வளர்த்தல்
4.3.3.0 வல்லரசுச் சிந்தனைகள்
4.3.4.0 சேமிப்பும் சிந்தனையும்
4.3.5.0 சமூக இணக்கத்திற்கு மொழிப்பாதுகாப்பு
4.3.6.0 கொடியும் சிந்தனையும்
4.3.7.0 சுதந்திர உணர்வு
4.3.8.0 இளைஞர்கள் வாழ்வில் அயல்நாடு
4.4. சமூகமும் தலைவர்களும்
4.5. சமூகமும் கவிஞர்களும்
4.6. சமூகமும் சான்றோரும்
4.7. சமூகமும் நிறுவனங்களும்

4.8.0 சமுதாய வளர்ச்சியில் தலைமைப் பொறுப்பு

4.9.0 சமுதாயமும் விழாக்களும்

4.10.0 கதை காட்டும் சமூகம் போன்ற தலைப்புகள் இவ்விரு கவிஞர்களின் படைப்புகளில் இடம்பெறும் சமுதாயச் சிந்தனைகளைத் தெளிவுபடுத்துகின்றன.

**4.1.சமூகமும் சமூக வகைமைகளும்**

மக்கள் கூடி வாழும் அமைப்பையே சமூகம் என்கிறோம். மக்கள் வாழ்வின் தன்மைக்கேற்ப கிராமப்புறச் சமுதாயம், நகர்ப்புறச் சமுதாயம் என வழங்கப்படுகிறது. ஆட்சியமைப்பின் வசதிகருதி கிராமம், நகரம் எனப் பிரிக்கப்பட்டு அதற்குத் தகுந்தாற்போன்ற வசதிகளை அரசு ஏற்படுத்திக் கொடுக்கிறது. இந்தச் சமூக அமைப்பை இயக்குபவன் மனிதன். எனவே சமூகத்தைப் பற்றிய உணர்வும் அக்கறையும் அவனுக்கு இன்றியமையாத் தேவையாகிறது.

**4.1.1.கிராமப்புறச் சமுதாயம்**

விவசாயத்தைத் தொழிலாகக் கொண்ட மக்கள் வாழும் பகுதி கிராமப்புறமாகும். வயலை உழுது விதையிட்டு அதைப் பயிராக்கி உழைப்பை உரமாக்கி உணவைத் தருபவர்கள் உழவர்கள். வயிற்றுப்பசியை நிறைவு செய்வது உணவு. இந்த உணவிற்குரிய நெல், பருப்பு, கோதுமை போன்ற பயிர் வகைகளை உற்பத்தி செய்பவர்கள் உழவர்கள். இதை உற்பத்தி செய்ய ஏற்ற தொழில் உழவுத்தொழில் ஆகும். ‘‘உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்.’’[1] என்ற மகாகவி பாரதியின் எண்ணத்திற்கு ஏற்பவே இவ்விரு கவிஞர்களின் பாடல்களில் இத்தொழிலுக்கு ஏற்ற சிந்தனைகள் கூறப்பட்டுள்ளன.

விவசாயத் தொழிலுக்கு உறுதுணையாக அமைவது கிராமங்களே. அதனால் ஆங்காங்கு பாடல்களில் கிராமப்புறச் சிந்தனைகள் உள்ளன.

குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா ‘தொழில்’ என்னும் பாடலில் உழவுத்தொழில் செய்வதையே தன் தொழிலாகக் கருத வேண்டும் என்பதை,

‘‘பாடு பட்டு உழுபவர்
பலனும் கண்டு தருபவர்
நாடு வளர வாழ்பவர்
நன்கு வாழ்க வாழ்கவே.’’[2] எனப் பாடியுள்ளார்.

‘‘அப்பா வைப்போல் பெரியவனாய்
ஆன வுடனே நானுமே
மாட்டைக் கொண்டு கலப்பை பூட்டி
மண்ணை நன்கு உழுவேனே
நாட்டில் உள்ள பஞ்சம் போக
நானும் உதவி செய்வேனே.’’[3]

இத்தொழிலுக்குக் காளை மாட்டின் பயன் இன்றியமையாதது என்பதை ‘குணங்கள்’ என்னும் பாடலில் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா உணர்த்தியுள்ளார்.

"அண்டை ஊர்கள் சென்றிடவே
வண்டி யிழுத்துச் சென்றிடுமே
மண்டிப் பயிர்கள் வளர்ந்திடவே
மண்ணை நன்கு உழுதிடுமே."[4]

என கிராமப்புறத்தில் உழவுத்தொழில் சிறப்படைய காளைமாட்டின் பயனும் இன்றியமையாதது என்பதைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளிய்யப்பா உணர்த்தியுள்ளார். இதற்காக இவர் 'உழவர் வாழ்க' என்னும் பாடலையும் எழுதியுள்ளார். பாடுபட்டுப் பலன் தரும் உழவர்களே நாட்டின் வளர்ச்சிக்காகப் பாடுபடுபவர்கள். அதனால் இவர்களை வாழ்த்த வேண்டும் என்னும் குறிக்கோளுடன் 'வாழ்க வாழ்க' என்னும் பாடலை எழுதியுள்ளார்.

கிராமப்புற வீடுகள் குடிசை வீடுகளாகும். இந்த வீடுகளுக்குக் காற்றாலும் பலத்த மழையாலும் நெருப்பாலும் நில நடுக்கத்தாலும் பாதிப்புண்டு என்பதை 'விந்தை' என்னும் பாடலில் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா உணர்த்தியுள்ளார். இதனை,

"சூறைக் காற்று வந்தது
சுழன்று சுழன்று அடித்தது
கூரை வீட்டைப் பிய்த்தது
குடியைக் கெடுத்துச் சென்றது."[5]

என்னும் பாடல் வரிகள் புலப்படுத்துகின்றன. கிராமப்புற வீடுகளின் நிலையையும் கிராமப்புற மக்கள் ஏழ்மைக்குச் சொந்தக்காரர்கள் என்பதையும் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா கூறியுள்ளார். நீரின்றி உழவுத்தொழில் சிறப்படைய முடியாது. உழவுத்தொழில் சிறப்படையத் தக்கது வாய்க்கால் ஆகும். இது தன் பணியைச் செய்யாது விட்டால் மீன் இனங்களும் தண்ணீர் இல்லாமல் வருந்தும். வயலின் பசுமையும் குறையும். எனவே வயலுக்கு நீரைக் கொண்டு செல்வது வாய்க்கால் ஆகும். அதனால் கிராமங்களில் உழவுத்தொழில் செய்பவர்களுக்கு வாய்க்காலின் முக்கியத்துவம் இன்றியமையததாகும். இதனை,

"ஊரார் உண்டிட வயல்கள் விளையுமாம்
உதவிக்கு நானும் வருவேனாம்!
தீராப் பசிப்பிணி தீர்க்கும் செயலில்
சிறிய துரும்பாய் இருப்பேனாம்!"[6]

என்னும் பாடல் வரிகள் மூலம் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி உணர்த்தியுள்ளார்.

வயல்களில் உழவனுக்கு நண்பனாக விளங்கும் மண்புழுவை அறிமுகப்படுத்தியுள்ளார். பூமிக்கடியில் ஈரப்பதத்தில் வாழ்வது மண்புழு ஆகும்.

"கலப்பை இன்றிக் கலக்க மின்றிக்
கருத்தாய்ச் சிறிய புழுக்களும்
நிலத்தை உழுது பயிர்கள் வளர்க்கும்
நேர்த்தி என்ன நேர்த்தியோ!"[7]

என்னும் பாடல் வரிகளில் உழவுத்தொழில் செய்ய மண்புழுவும் நண்பனாக இருக்கிறான் எனக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி உணர்த்தியுள்ளார். மேலும் இந்த உழவுத்தொழில் நவீன வசதியால் வளமடைந்து வருவதாகவும் இதற்குப் போர்டு மோட்டாரைப் பயன்படுத்துவதாகவும் கூறியுள்ளார். கிராமத்தின் வளர்ச்சியால் தான் கட்டடங்களும் விரிவடையும். படிப்பறிவும் உயரும். நாடுகளின் பல பகுதிகளில் உள்ள கிராமங்கள் உழவுத்தொழிலையே அதிகமாகக் கொண்டிருக்கும். இந்நாட்டிற்கு முக்கியமானவை கிராமவளம் ஆகும். கிராம வளத்திலேயே விவசாயத் தொழிலின் முன்னேற்றம் உள்ளது. விவசாயத் தொழிலின் முன்னேற்றத்தால் தரமும் வளமும் விரிவுபடும். பொருளாதாரமும் உயரும். ஆனால் சில கிராமத்தில் வாழும் மக்கள் குடிசையில் வாழ்வதால் இயற்கைச் சீற்றங்களால் பாதிக்கப்படுகின்றனர். அதனால் இவர்களது வசதியையும், வாய்ப்பையும் பெருகச் செய்வது நம் கடமையாகும் என்பதை வருங்காலத் தலைவர்களுக்கு குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா எச்சரிக்கைச் சிந்தனையாகத் தந்துள்ளார். இதனை,

“இருந்து வாழ உதவிடும்
இயற்கை என்று எண்ணினேன்
இறந்து போகச் செய்யுதே
இதுவும் விந்தை தானடா.”[8]

என்னும் பாடல் வரிகள் மூலம் குழந்தைகளைச் சிந்திக்கச் செய்துள்ளார். ஒரு நாட்டின் முன்னேற்றத்திற்காகப் பெரிதும் பாடுபடுபவர்கள் உழவர்கள். ஆதலால் இவர்களது வளர்ச்சியிலேயே நாட்டின் வளர்ச்சி அமைந்துள்ளது என்பதைக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி உணர்த்தியுள்ளார். இதற்கு உதாரணமாக,

“சேற்றில் கிடந்து உழைப்பவரே
தினமும் பயிரை வளர்க்கின்றார்
நாற்றும் நடவும் கிராமத்தில்
நடப்பதி னால்தான் நமக்கு உணவு!”[9]

என்னும் பாடலை எழுதியுள்ளார். வருங்காலத்தில் விவசாயத் தொழிலை மேற்கொள்ள வேண்டும் எனப் பதிய வைத்துள்ளார். இத்தொழிலுக்குத் தேவையான வாகனங்களையும் கருவிகளையும் அறிமுகப்படுத்தியுள்ளார். கிராமப்பகுதியில் மக்கள் படும் பாடுகளையும் விளக்கியுள்ளார். குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா கூறாத வாய்க்கால் பற்றிய சிந்தனைகளையும், மாடுகளை நண்பனாக்கி உழுபவனாலேயே இச்சமூகம் உயர்வடைகிறது என்பதைக் கிராமம் என்னும் பாடலில் கூறியுள்ளார். கிராமத்திலேயே இச்சமூக வளம் உள்ளது என்பதைப் பதிவு செய்துள்ளார். இதனை,

“கிராமம் வளரக் கட்டடங்கள்
கிராமக் உயரப் படிப்பறிவு
கிராமம் உயர உயரத்தான்
கிடைக்கும் வளங்கள்; நாடுயரும்.”[10]

என்னும் பாடல்வரிகள் நாட்டின் முன்னேற்றத்திற்கு கிராமங்களின் வசதிகளும் இன்றியமையாதவை என்பதை உணர்த்தியுள்ளன.

**4.1.2. நகர்ப்புறச் சமுதாயம்**

வசதியிலும் வாய்ப்பிலும், பரப்பளவிலும் உயர்ந்தது நகரமாகும். கார், குதிரை வண்டிகள் எனக் கணக்கில்லாமல் ஓடும் பகுதியாகும். நீதிமன்றம், உயர்பள்ளிக்கூடங்கள், கல்லூரிகள் போன்ற அனைத்து வசதிகளும் நிறைந்த பெரிய சமுதாயமாகும். இது அமைதியற்ற சூழ்நிலையையும் ஆரோக்கியமில்லாத சூழ்நிலையையும் ஏற்படுத்தும் வாகனப் போக்குவரத்துகளும் நிறைந்த ஒரு சமுதாயமாகக் கருதப்படும். இந்நகரத்தில் வண்டி இழுக்க மனிதர்களை காளை மாடுகளாய்ப் பயன்படுத்துவது வருத்தத்தைத் தருவதாக உள்ளது எனக் கூறி மனிதநேயத்தைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா வளர்த்துள்ளார்.

“சென்னை போன்ற பெரிய நகரத்
தெருக்கள் தோறும் பார்க்கிறோம்
இன்னும் இந்த மனித வண்டி
இருப்ப தேனோ ஏனோதான்.”[11]

என்னும் பாடல் வரிகள் மூலம் மனிதர்கள் வண்டிகள் இழுப்பதைத் தடைசெய்ய வேண்டும் என்பதை உணர்த்தியுள்ளார்.

அடுக்குமாடிக் கட்டடங்கள் நிறைந்தவை நகரங்களாகும். நாம் எட்டுமாடிக் கட்டடத்தில் இருந்தவண்ணம் கற்பகாம்பாள் கோயில் கடைத்தெரு போன்றவற்றைக் காணக்கூடிய இயல்புடைய நகரச் சிந்தனைகளைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா பாடல்களில் கூறியுள்ளார்.

“புகையில் லாத ரயிலும் ஊரில்
புகுந்தே ஓடுது.
பொம்மை ரயில் போலே அதுவும்
எனக்குத் தோணுது.”[12]

என்ற பாடல்வரிகளில் மின்சார ரயில்வண்டி ஓடுவதைத் தூரத்தில் இருந்து பார்த்தால் அது பொம்மை ரயில் போலத் தெரிவதாகக் குழந்தை மொழியில் உணர்த்தியுள்ளார்.

இவரைப்போல் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும் நகர்ப்புறச் சமுதாயம் சிக்கலானதாக உள்ளதாகக் கூறியுள்ளார். முன்னொரு காலத்தில் காளை மாடுகளை அடக்குதலையே வீரம் என்போம். ஆனால் பயண நெரிசலை எதிர்ப்பது வீரமாகிறது. இதனை,

“காரும் பஸ்சும் மோபெட்டும்
கண்மண் தெரியா வேகத்தில்
சீறி வருமாம் கவனமுடன்
தெருவில் நடந்தால் விபத்தில்லை!”[13]

எனவே இன்றைய வீரனுக்குத் தெருவில் நடக்கும்போதும், வாகனம் ஓட்டும்போதும் ஏற்படும் அச்சமின்மையும் கவனமும் இன்றியமையாதவை என்பதை நாளைய தலைவர்களுக்கு உணர்த்த மேல் உள்ள பாடல் வரிகள் சான்றாகியுள்ளன.

**4.2 சமூக இன்னல்களும் தீர்வுகளும்**

சமூகச் சிக்கல்களுக்கு மனிதனின் நடவடிக்கையே காரணம். தவறான ஒழுக்கம், படிக்காத பாமரரின் பன்பற்ற செயல், பிறரை மதிக்காமை, சாதி மதப் பூசல், பொய், களவு, காமம், பிறரை ஏமாற்றுதல், புறங்கூறல், சினங்கொள்ளுதல், அறவாழ்க்கையில் ஈடுபடாமை, வன்முறை போன்ற பல காரணங்களால் இன்னல்கள் ஏற்படுகின்றன. இத்தகைய இன்னல்களுக்குத் தனிமனிதர்களின் சுயநலமும் காரணமாகியுள்ளன. அன்றையத் தலைவர்கள் போல் நாட்டுக்காக நாட்டுமக்களுக்காகப் போராடும் தலைவர்கள் இன்று இல்லாததும் காரணமாகும்.

சமுதாயம் மேலும் சுற்றுப்புறச் சீர்கேடுகளாலும் ஆலைத் தொழில்களாலும், வாகன விபத்தினாலும், அறிவியலை ஆக்க வழியில் பயன்படுத்தாததாலும், இயற்கைச் சீற்றங்களாலும் பாதிப்படைந்து வருகிறது. அதனால் மனிதநேயத்தைக் குழந்தைகளிடம் வளர்ப்பது அவசியமாகும். “மனிதன் தன் அடிமனத்திலிருந்து எழும் அன்பின் வெளிப்பாடுகளான பாசம், பற்று, கருணை, கொடை, பகிர்வு. விட்டுக்கொடுத்தல், தியாகம் போன்றவற்றைப் பிற உயிரினங்களோடு பகிர்ந்து கொள்கின்றான்; இவ்அன்பு சார்ந்த உணர்வுகள், செயல்கள் அனைத்தையும் உள்ளடக்கியதே மனிதநேயம் எனப்படுகிறது.”[14] என்ற ச.முருகேசனின் கூற்றிற்கேற்ப இறைவனால் படைக்கப்பட்ட மனிதன், விலங்குகள், பறவைகள் போன்ற உயிரினங்களைக் காப்பது மனிதநேயம். எனவே மனிதர்கள் மனிதாபிமானம் உள்ளவர்களாக விளங்க மனிதனின் தனிமனித ஒழுக்கம் சிறந்ததாகும். இந்தத் தனிமனித ஒழுக்கத்தினால் கிடைக்கும் அன்பும், விட்டுக்கொடுக்கும் மனப்பான்மையும், கடைப்பிடிக்கும் ஒழுக்கநிலையும் சமுதாயப் பாதுகாப்பிற்கு உரியனவாகும். மேலும் இந்த அன்பு மனதில் வேரூன்றுவதால் இவ்வுலகு நமக்குச் சொந்தம் என்ற எண்ணத்தில் உள்ளவர்கள் முதலாளிகளாய் இருந்தாலும் தங்கள் தொழில்களால் நேரும் இன்னல்களை உணர்வார்கள். இதன் மூலம் சுற்றுப்புறச் சீர்கேடுகளால் பாதிப்படைவதையும், ஆலைத் தொழில்களால் பாதிப்படைவதையும் தடுப்பார்கள். வாகன விபத்தினால் ஏற்படும் பாதிப்பையும் தவிர்க்க முடியும். எனவே இந்தப் பாதுகாப்பிற்கு இன்றியமையாதது தனிமனித ஒழுக்கம் ஆகும். ஏனென்றால் இந்தத் தனிமனிதனே வாகன ஓட்டியாக, காவலாளியாக, மருத்துவராக, ஆசிரியராக, தொழிலாளராக முதலாளியாகப் பணிபுரிகின்றான். அதனால் இவர்களுக்கு உரிமையுடையது தனிமனித ஒழுக்கம் ஆகும்.

**4.2.1.0 தனிமனித ஒழுக்கம்**

இன்று வாகனங்களாலும், சுற்றுப்புறச் சீர்கேடுகளாலும் விபத்துக்களினாலும் சமூகம் பாதிப்படைந்து வருகிறது. இதற்குக் காரணம் தனிமனிதனின் ஒழுக்கமின்மை, தனிமனிதனின் கவனமின்மை, பொதுச் சொத்தைத் தன் சொத்தாக மதிக்காமை போன்ற

காரணங்கள் சமூகப் பாதுகாப்பிற்கு இடையூற்றை ஏற்படுத்துகின்றன. இதனை, ‘‘தனிமனிதர்கள் குடும்பமாகவும், பல குடும்பங்கள் சேர்ந்து சமுதாயமாகவும் உருவாகின்றன. முடிவாக நோக்குமிடத்துத் தனிமனிதர்கள் சமுதாயத்தின் அடிப்படையாக அமைகின்றனர்.’’[15] என்ற சிந்தனையின் அடிப்படையில் நாளைய மனிதர்களாகிய குழந்தைகளிடத்தில்தான் சமுதாயம் உயர்வடையத் தகுந்த அன்பு, விட்டுக்கொடுத்தல் போன்ற சிந்தனைகளைப் பெறமுடியும். அதனால் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பாவும், குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும் நாளைய தலைவர்களுக்குத் தங்களது படைப்புகளால் உணர்த்தியுள்ளார்.

‘‘டாக்ட ராக நானிருந்தால்
நாடி பிடித்துப் பார்த்திடுவேன்,
நாக்கை நீட்டு என்றிடுவேன்.
நன்றாய் ஊசி போட்டிடுவேன்.

வாத்தி யாராய் நானிருந்தால்
வகுப்பில் பாடம் நடத்திடுவேன்.
பார்த்துப் பரீட்சை எழுதுகிற
பைய னுக்குச் சுழித்திடுவேன்.’’[16]

போன்ற பாடல் வரிகளில் ஒரு மருத்துவராக இருந்தால் முதலில் நாடி பிடித்து பார்த்த பின்னரே நோயாளியின் உடல் நோயைத் தீர்க்க மருந்து எழுதித்தர வேண்டும் எனக் கூறியுள்ளார். ஆசிரியராக இருந்தால் மாணவர்கள் பார்த்து எழுதுவதைக் கண்டுபிடித்துத் திருத்தும் அச்சமில்லா ஆசிரியர்கள் தேவை. இவ்வாறு பதவியிலிருந்து ஒரு மனிதன் செய்ய வேண்டிய செயல்பாட்டுச் சிந்தனைகள் தனிமனித ஒழுக்கத்திற்கு ஏற்றதாக உள்ளன. மேலும் வறுமையை ஒழிப்பதற்கு ஒரு மனிதன் கடைப்பிடிக்க வேண்டிய கடமைகளைக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி உணர்த்தியுள்ளார்.

‘‘உதவி நானும் செய்திடுவேன்
உறும்பி யால்பிறர் துயருற்றால்
இதமாய் எனது சோற்றைத்தான்
இன்னல் தீரப் பகிர்ந்துகொள்வேன்.’’[17]

போன்ற பாடல் வரிகளில் பசியால் வாடுபவர்களுக்கு கொடுத்து உதவி வாழும் தனிமனித ஒழுக்கத்தைக் கூறியுள்ளார். கதைகளிலும் நாவல்களிலும் ஆங்காங்கு தனிமனித ஒழுக்கங்கள் சொல்லப்பட்டுள்ளன. மேலும் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியின் தனிமனித ஒழுக்கம் பற்றிய பாடலும் குறிப்பிடத்தக்கதாக உள்ளது.

“இரண்டு சக்கர வண்டி – நான்
ஏறிச் செல்லும் வண்டி.
குறைந்த விலையில் வாங்கி – நான்
குந்தி ஓட்டும் வண்டி.

எண்ணெய் ஊற்ற வேண்டாம்-அதை
எதுவும் இழுக்க வேண்டாம்.
சின்னச் சந்தில் கூட – நான்
செல்ல உதவும் வண்டி.

வழியை விட்டுச் செல்வீர் - என்று
வாயால் கூற மாட்டேன்
அழகு மணியைக் கையால் - நான்
அடித்தே விலக வைப்பேன்

ஒருவர் ஏறிச் செல்ல – நன்கு
உதவும் சைக்கிள் வண்டி.
இருவர் ஏற லாமே - இன்று
இல்லை, போலீஸ் தொல்லை.”[18]

என்ற பாடல் வரிகளில் எச்செயலைச் செய்தாலும் அதை ஒழுக்கத்துடன் செய்தால் விபத்துகள் நேரிடாது என்பதை உணர்த்தியுள்ளார்.

இவ்வாறு மேற்குறிப்பிட்டுள்ள பாடல்கள் தனிமனித ஒழுக்கத்தால் சமுதாயம் சீர்படும் என்பதைக் காட்டுகின்றன. எனவே காவலாளி, ஆசிரியர் வாகனஓட்டுநர் போன்ற பதவியில் உள்ள தனிமனிதர்கள் ஒழுக்கத்தைப் பின்பற்றினால் அவர்களது அன்பும் பொறுமையும் இச்சமூகத்தை உயர்த்தும்.

### 4.2.2. காந்தீயமும் மனிதநேயமும்

காந்தீயம் பற்றி அறிவதற்கு முன் காந்தீயத்தைத் தந்த காந்தியைப் பற்றி அறிதல்வேண்டும். காந்தி அக்டோபர் இரண்டில் பிறந்தவர்; அன்பிற்கும் பண்பிற்கும் இலக்கணமானவர்; சுறுசுறுப்பைத் தொழிலில் கடைப்பிடித்தவர்; விரதம் இருக்கும் காலத்திலும் சுறுசுறுப்பாக இருந்தவர்; விடுதலைக்குப் பாடுபட்டவர் என்பதற்கு உதாரணமாக,

கண்போல் கதரைக் கருதிவந்தார் - அவர்
கைராட்டை யால்தினம் நூற்றுவந்தார்
உண்ணா விரதம் இருக்கையிலும் - அவர்
ஒருநாளும் நூற்கா திருந்ததில்லை!.”[19]

என்னும் பாடல்வரிகள் உள்ளன.

"கத்தியின்றி ரத்தமின்றி

யுத்தமொன்று வருகுது."[20]

என்று நாமக்கவிஞர் தன்பாடல் வரிகளில் குறிப்பிட்டுள்ளதுபோல் கத்தியைத்தீட்டும் மனிதர்களிடமிருந்து இச்சமூகத்தைக் காந்தீயம் காக்க உதவும். அதனால் அன்பு, விட்டுக்கொடுத்தல், உண்மை, பொறுமை, அமைதி போன்ற காந்தீயத் தன்மைகளைக் குழந்தைகளுக்கு விதைத்தால் அது நாளைய சமுதாயத்தை வளரச் செய்யும். அதனால் இவ்விரு கவிஞர்களும் காந்தீயத்தைப் பாடல்களில் ஆங்காங்கு விதைத்துள்ளனர்.

குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா, காந்திசொல், 'காந்தி வழி', 'காந்தியும் கதரும்', 'காந்தித்தாத்தா' போன்ற பாடல்களில் காந்தீயச் சிந்தனைகளை விதைத்துள்ளார். மேலும் பெரியோர் வாழ்விலே என்னும் நூலிலும் காந்தியின் சிறுவயதுப் பருவச்சிந்தனைகளையும் திருமணம் ஆனபின்பு கஸ்தூரிபாய்காந்தி காந்தியிடம் நடந்து கொண்ட முறைகளையும் குறிப்பிட்டு எழுதியுள்ளார். நாவல்களில் இவரைப்பற்றி ஒரு சில இடங்களில் குறிப்பிட்டுள்ளார். குழந்தைக்கவிஞர் செல்லகணபதி 'அஹிம்சைநெறி', 'காந்தீயம்' போன்ற பாடல்களை எழுதியுள்ளார்.

**4.2.2.1. எளிமையே காந்தீயம்**

ஆடம்பர வாழ்வகற்றி எளிமையைப் பின்பற்றுதலும் காந்தீயக் கொள்கைகளில்அடங்கும். அதனால்,

"சொந்தநம் நாட்டுச் சகோதரர்கள் - இங்கே
சோற்றுக் கில்லாமல் தவிக்கையிலே
அந்நிய நாட்டுத் துணிகளிலே – நாமும்
ஆசைகொள் எல்மிக மோசமஎன்றார்."[21]

என்னும் பாடலில் அந்நியமோகத்தைத் தவிர்த்து எளிய வாழ்வு வாழ்ந்தால் வறுமையை ஒழிக்க முடியும் என்று கூறியுள்ளார்.

"எம்முடன் பிறந்த சோதரர்க்கு
இருப்பது அரைக்கால் உடையென்றால்
எனக்கும் அரைக்கால் உடைபோதும்
என்று வாழ்ந்தவர் மகாத்மா!"[22]

இப்படி பிறருக்காவது தன் உடையிலேயே மாற்றத்தினை ஏற்படுத்திக் கொள்வதே காந்தீயம் ஆகும். எனவே ஆசையை ஒழித்து ஆடம்பரத்தை ஒழித்து எளிமைக்கு முதலிடம் தந்தால் காந்தீயம் வளரும். மேலும் காந்தீயம் என்பது இந்தியச் சமூகக் கொள்கைகளில் ஒன்றாகும்.

**4.2.2.2 அஹிம்சையே காந்தீயம்**

ஒருவர் மனத்தில் எழும் தேவையற்ற சினமே வன்முறையை உருவாக்கும்.

"அறம்செயவிரும்பு
ஆறுவது சினம்."[23]

என்ற ஔவையாரின் வாக்கு சினம் கொள்ளக்கூடாது என்பதைத் தெளிவுபடுத்துகிறது. ஆனால் இன்று மாறாக சினம் தழைத்துக் கொண்டிருக்கிறது. இதற்குக் காரணம் மனிதர்களின் அன்பற்ற தன்மையும், தனக்கே தெரியாத மூர்க்கத் தனமான சினமும் காரணம் ஆகும். இச்சினம் நீங்க பொறுமையையும் அமைதியையும் மனதில் பதிய வைக்க வேண்டும். அவ்வாறு பதிய வைத்தால் வன்முறை போன்ற பிளவுகளிலிருந்து சமூகத்தைக் காத்து அஹிம்சையை வளர்க்க முடியும் என்பதற்கு அடித்தளமிட்ட பாடல்வரிகள் இவ்விரு கவிஞர்களின் பாடல்களில் உள்ளன. இதற்கு எடுத்துக்காட்டாக,

''காந்தி சொன்ன வழிகளைக்
கடைப்பி டித்து நடந்திடின்
சாந்தி எங்கும் நிலவிடும்
சத்தி யந்தான் வென்றிடும்.''[24]

என்ற இவ்வரிகளைக் குறிப்பிடலாம்.

''உண்மை பேசத் தயங்காதே
உள்ளப் பொறுமை வளர்ப்பாய்நீ
என்று சொன்னவர் மகாத்மா
இதுதான் எளிய காந்தீயம்.''[25]

எனவே உள்ளத்தில் உண்மையையும், அன்பையும் பதிய வைத்தால் வன்முறையைத் தடுக்கமுடியும் என்பதை இவ்வரிகள் உணர்த்தியுள்ளன.

**4.2.2.3. உண்மையே காந்தீயம்**

உண்மையால் உயர்வு உள்ளது. ஏனென்றால் இந்த உண்மை மாறாதது. உண்மையைக் கடைப்பிடிப்பதால் தவறான செயல்களிலிருந்து மனிதன் விலகுவான். அதனால் உண்மையைக் கடைப்பிடித்தல் ஒவ்வொரு மனிதனுக்கும் இன்றியமையாதவை. அதனால் இவ்விரு கவிஞர்களும் உண்மையைக் கடைப்பிடித்த காந்தியின் கொள்கையை எடுத்துக்காட்டாகக் கூறி உண்மையை அறியச் செய்துள்ளனர்.

''சத்தியம் பேசுதல் அவர்கொள்கை
தருமம் காத்தல் அவர்கொள்கை
இத்தல மக்கள் யாவர்க்கும்
இன்ப சுதந்திரம் அவர்கொள்கை.''[26]

இப்பாடல் வரிகளில் உண்மையைக் கடைப்பிடித்த காந்தீயச் சிந்தனைகளைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா எழுதியுள்ளார். இவரைப்போல் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி பாடிய ''உண்மை பேசத் தயங்காதே'' என்னும் பாடல் வரிகளும் நினைவில் கொள்ளத்தக்கன.

#### 4.2.2.4. அன்பே காந்தீயம்

காந்தி அன்பிற்கு இலக்கணமானவர். இதற்கு எடுத்துக்காட்டாகப் பின்வரும் பாடல் வரிகளைக் குறிப்பிடலாம்.

“தோழர்க ளிடத்தும் அன்பு!
தொண்டர்க ளிடத்தும் அன்பு!
ஏழைக ளிடத்தும் அன்பு!
எதிரிக ளிடத்தும் அன்பு!
கோழைக ளிடத்தும் அன்பு!
கொலைஞர் ளிடத்தும் அன்பு!
வாழைபோல் உதவி அன்பை
வளர்த்தனர் காந்தி அண்ணல்!”[27]

என்று அனைத்து மக்களிடமும் அன்பை வளர்த்தவர் காந்தி என்பதைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா குறிப்பிட்டுள்ளார்.

“தாய்ப்பால் இன்றித் தவிக்கும் குழந்தைகள்
பரிவுடன் அருந்தப் பாலினைச் சுரந்தும்
உழுதிடக் காளைகள் உவந்தே நல்கியும்
அறத்தினை வளர்த்தே அவனியில் விளங்கும்
பசுவினைக் கொல்லுதல் பாரினில் நிலவும்
அன்பையே கொல்லுதல் ஆகும் அல்லவோ?
∴ ∴ ∴
பிள்ளை பெண்டு யாவரும்
உள்ளம் ஒன்றி வாழவே
கள்ளொ ழிக்கச் செய்ததே
காந்தி யாரின் அன்புதான்!

“தொடுதல் தீட்டு’ என்பதும்
தொலைவில் ஒதுக்கி வைப்பதும்
கெடுதல் கெடுதல் என்றதே
கேட்பீர், காந்தி அன்புதான்!

வேற்று நாட்டுப் பொருள்களை
விலக்கி, ஏழை உய்யவே
நாட்டுத் தொழிலை வளர்த்ததே
நமது காந்தி அன்புதான்!”[28]

போன்ற பாடல் வரிகளில் அன்பே உயிர்களைக் கொல்லாமையை, சாதிவேற்றுமையை ஒழிக்கும் என்பதை உணர்த்தியுள்ளார்.

### 4.2.3.0 களவு நீக்குவோம்

களவுத் தொழிலால் நம் நாட்டில் அழிந்தவர்களும் இழந்தவர்களும் ஏராளமானோர். நாம் அறியாத வண்ணம் நம் பொருட்களைத் திருடிச்சென்ற கள்வர்கள் உலகெங்கிலும், மாநிலமெங்கிலும், நாடெங்கிலும் உலவுகின்றனர். இவர்களுடைய இத்தகைய அழிவிலிருந்து இச்சமுதாயத்தைக் காக்க வருங்காலத் தலைவர்களாகிய குழந்தைகளுக்குப் பாடல்களில் அறிவுரை கூறியுள்ளனர். வருங்காலத்திலாவது திருட்டுத் தொழிலின் துன்பத்திலிருந்து காக்க முடியும் என்ற எண்ணத்துடன் ‘நல்லவனும் கெட்டவனும்’ என்னும் பாடல் மூலம் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா கூறியுள்ளார்.

“பாலு என்னும் ஒரு பையன்
பழக்கடை ஒன்றில் நுழைந்தானாம்
மாம்பழம் ஒன்றை எடுத்தானாம்
மறைத்து மடியில் வைத்தானாம்

பார்த்ததும் உடனே கடைக்காரர்
பட்டென அறைகள் விட்டாராம்.

திருடன் திருடன் என்றவனைத்
திட்டினர் அங்கு யாவருமே

பாலு கெட்டவன் என்றறியப்
பத்தே நிமிஷம் ஆனதடா.

ராமு நல்லவன் என்றுணர
நாட்கள் பற்பல ஆகுமடா.”[29]

இவ்வாறு இந்தக் கதைப்பாடலில் வார்த்தைகளால் விடும் அறை உண்மையாகவே விழுகிற அறைபோல் குழந்தைகள் மனதில் பதியும். குழந்தைகளும் இதை உணர்ந்து திருந்துவார்கள் என்பதற்கு இவ்வரிகள் உதாரணமாகியுள்ளன.

குழந்தைக்கவிஞர் செல்லகணபதி குழந்தைகள் அறியாமையால் செய்யும் இத்திருட்டுச் செயலைப் பெற்றோர்கள் திருத்தவேண்டும் என்பதை நகைச்சுவையுடன் உணர்த்தியுள்ளார். இதனை,

“ஐயாப்பிள்ளை தெருவில்மிட்டாய்
அம்மன்கோவில் தெருவில்மிட்டாய்
பொய்யேஇல்லை சித்தெறும்பே
புற்றைவிட்டு வந்துபாராய்

திருட்டுச்சோமு பையினுள்ளே
    திணித்தமிட்டாய் நிறையஉண்டு
இருட்டில்சோமு பைக்குள்சென்றே
    இனிக்கும்மிட்டாய் தின்றுபாரு.

காசுயாரும் கேட்கமாட்டார்
    கடுமையாகப் பேசமாட்டார்
ஏசமாட்டார் சித்தெறும்பே
    இனிக்கும்மிட்டாய் தின்னவாராய்.''[30]

என்னும் பாடல் வரிகளால் அறியலாம்.

**4.2.4.0. கூடி வாழக் கோரிக்கை**

நம் நாடு பல்வேறு இனத்தவராலும், மதத்தவராலும் ஆளப்பட்டு வருகிறது. ஆனால் இந்த இனமும் மதமும் தொழிலும் நம்மை வேறுபடுத்தி மனிதர்களின் உயிரைப் போக்கும் சாதித்துயரங்களை உருவாக்கி வருகின்றன. இதற்குரிய சிந்தனையைப் பாரதியாரும் தன் கவிதையில் கூறியுள்ளார்.

``ஒன்றுபட்டால் உண்டு வாழ்வே-நம்மில்
    ஒற்றுமை நீங்கிடில் அனைவர்க்கும் தாழ்வே.''[31]

என்ற பாரதியின் சிந்தனையை அறிந்த இவ்விரு கவிஞர்களும் குழந்தைப்பாடல் உத்தியில் குழந்தைகளுக்கு அறிவுரை கூறியுள்ளனர்.

ஒற்றுமை வலிமைபெற குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா 'விளங்கவைப்போம்', 'மலர்கள்' போன்ற பாடல்களிலும் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி 'ஐந்தும் விரல்களே' போன்ற பாடல்களின் வாயிலாகவும் ஒற்றுமைக்கு முக்கியத்துவம் கொடுத்துள்ளார்.

``ஒன்று கூடி நாட்டுக் காகத்
    தொண்டு செய்வோமே- நாமும்
    தொண்டு செய்வோமே
அன்றே நமது நாட்டின் பெருமை
    அதிக மாகுமே - இன்னும்
    அதிக மாகுமே.''[32]

என்று ஒன்று கூடி நாட்டுக்கு உழைத்தால் நாட்டின் பெருமை அதிகமாகும் என்பதைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா கூறியுள்ளார்.

``அந்தியில் மலரும் அல்லியைக் காண
    அன்புடன் வருவீர், தோழியரே,

எந்தச் சமயமும் சோலையில் வந்தால்
இன்பம் பெறலாம், தோழியரே.''[33]

அழகான சோலை அனைவரின் மனத்தையும் ஒன்றிணைக்கும். அதனால் அழகியலைப் பாதுகாக்கும் நோக்குடன் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா எழுதியுள்ளார்.

ஒற்றுமை யாக விரல்கள் இருப்பதால்
உன்தன் கைக்கு மிகுந்தபலம்!
ஒற்றுமை யாக மக்கள் வாழ்வது
ஒவ்வொரு நாட்டிலும் நிறைந்தவளம்!''[34]

விரல்களை எடுத்துக்காட்டாகக் கூறி ஒற்றுமையின் முக்கியத்துவத்தை குழந்தைக்கவிஞர் செல்லகணபதி கற்றுக்கொடுத்துள்ளார்.

''பெரியவர் சிறியவர் உயர்ந்தவர் தாழ்ந்தவர்
பேதமில்லாத மானுடம் போல்
கிறிஸ்தவர் இந்து முஸ்லீ மோஇவர்
கேட்டறி யாத குணம் வேண்டும்.

மதங்கள் வேறென வாழ்ந்திடும் யாவரும்
மனதில் அன்பை வளர்த்துவைத்தால்
மதங்களி னாலே வேறு பாடுகள்
மனிதர்கள் மனதில் பெறமாட்டார்.''[35]

பெரியவர், சிறியவர், இந்து, முஸ்லீம் என்ற மத, இன வேற்றுமைகள் இருந்தாலும் அனைவரும் ஒன்று என்ற உணர்வை மனதில் பதியவைத்தால் நமக்குள் வேறுபாடுகள் வராது என்ற சிந்தனையை வலியுறுத்தியுள்ளார்.

''ஏழை யென்னும் எளியோ ரென்றும்,
எண்ணங் கொண்டிடோம் - நாம்
இந்தி யர்கள் அனைவ ருக்கும்
சொந்த மாகிறோம்.
நாளை இந்த நாட்டை நாமே
ஆளப் போகிறோம் - இன்றே
நல்ல முறையில் அடித்த ளத்தை
அமைத்துக் கொள்ளுவோம்.''[36]

ஏழை, பணக்காரர் என்ற வேறுபாடுகளை நீக்கி அனைவரும் ஒன்று என்ற உணர்வை வளர்த்தால் நாளைய பாரதம் மேன்மையுறும் என்பதைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா விளக்கியுள்ளார்.

‘இந்தியன்’ என்று சொல்லிக் கொள்வதில்
என்றும் பெருமை கொண்டிடுவேன்!
இந்திய னாக இருந்திட நானும்
என்றும் முயற்சி செய்திடுவேன்!
இந்தியர் அனைவரும் ஒன்றென எண்ணி
என்றும் அன்பாய் நடந்திடுவேன்!
இந்திய நாட்டின் பெருமை உயர
இயன்றதை யெல்லாம் செய்திடுவேன்!.”[37]

இந்தியன் என்றாலே ஒற்றுமை உணர்வு நிறைந்தவர்கள். அதனால் இந்த நாட்டின் பெருமையை உயர்த்த தன்னால் முடிந்ததைச் செய்து ஒற்றுமை உணர்வுடன் விளங்கவேண்டும் என்பதைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா குறிப்பிட்டுள்ளார்.

“சின்ன எறும்புகள் பெரிய பூச்சியைச்
சேர்ந்தே இழுப்பதைப் பார்!
என்றும் ஒற்றுமை வெற்றியைத் தந்திடும்
எறும்புகள் சொல்வதைக் கேள்!”[38]

எறும்புகளைச் சான்று கூறி ஒற்றுமை உணர்வைக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி உணர்த்தியுள்ளார்.

“கண்களைச் சுற்றி வெண்மைநிறம் -அக்
கண்களின் நடுவில் கருமைநிறம்
கண்கள் பார்ப்பது கருநிறத்தால் - அக்
கண்களுக்கு அழகு வெண்ணிறத்தால்

கருமையும் வெண்மையும் கலந்ததனால் - நம்
கண்கள் பார்ப்பதை உணர்ந்திடுவாய்
கருப்புடன் சிவப்பு நிறத்தவர்கள் - உட்
கலந்துற வாடுதல் பெருமையடா!”[39]

கண்களில் கருப்பும், வெண்மையும் கலந்ததனாலேயே கண்களால் பார்க்கும் உணர்வைப் பெறுகிறோம். அதுபோல் கருப்பு, சிவப்பு என்ற நிற வேறுபாடுகள் மனிதர்களிடம் காணப்பட்டாலும் அனைவரும் ஒன்று என்ற உணர்வை வளர்க்கும் இப்பாடல் வரிகளைக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி உணர்த்தியுள்ளார்.

“அம்மா அப்பா ஒற்றுமை யால்தான்
அண்ணன் தங்கை ஒற்றுமை வளரும்
அம்மா பிள்ளை ஒற்றுமை யால்தான்
அன்பும் பாசமும் பின்னிப் படரும்.

இருவர் ஒற்றுமை பேணிடும் போது
எளியவன் கூட உடல்பலம் பெறுவான்
இரண்டாய் ஆகிப் பிரிந்து விடாமல்
என்றும் ஒற்றுமை பேணிக் காப்போம்.''[40]

குடும்ப உறுப்பினர்களின் ஒற்றுமையால் குடும்பப் பாசம் வளர்கிறது. அதனால் இரண்டு என்பதை விடுத்து ஒன்று என்பதை வளர்த்து ஒற்றுமையைக் பேணிக் காக்க வேண்டும் எனக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி எச்சரித்துள்ளார்.

''ஒற்றுமை யாக இருப்பதற்கும்
ஒருவரை ஒருவர் மதிப்பதற்கும்
கற்றுத் தருகிற ஆட்டோவாம்
காற்றாய் விரைகிற ஆட்டோவாம்!''[41]

பள்ளிகளுக்கு ஆட்டோவில் செல்லும்போது ஒற்றுமைப்பண்பு வளர்கிறது என்பதைக் குறிப்பிட்டுள்ளார்.

''படகில் உள்ள துடுப்பைப் போலப்
பக்க வாட்டில் செதில்களை
அடக்க மாக அசைத்து நீந்தும்
அமைதி யான மீன்களாம்

சோர்வில் லாமல் நீந்து கின்ற
சுறுசு றுப்பு மீன்களாம்
சேர்ந்து வாழும் தத்து வத்தைச்
செய்து காட்டும் மீன்களாம்.''[42]

மீன்களின் ஒற்றுமையை எடுத்துக்காட்டாகக் கூறி ஒற்றுமை உணர்வை வளர்த்துள்ளார்.

''ஆற்றங் கரையின் அருகிலே
அழகு நாரை தலைமையில்
ஊற்று மீனின் நடனமாம்
உழுவை மீனின் பாடலாம்

.

இப்படியும் நடக்கு தென்றால்
ஏதே உலகில் போரடா
அப்பட்டமாய்க் கனவு கண்டேன்
அத்தனையும் பொய்யடா.''[43]

நாரை, மீன் போன்ற உயிரினங்கள் விழாக்களில் ஒன்று சேர்ந்து நடனம் ஆடினாலும் உணர்வால் ஒன்றுபடவில்லை என்பதை நகைச்சுவை உணர்வுடன் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி உணர்த்தியுள்ளார்.

''இரண்டு மாடுகள் இரண்டு பக்கமாய்
இழுத்தால் வண்டி எப்படி நகரும்?
இரண்டு படாத ஒற்றுமை யால்தான்
எதையும் வெல்லலாம் இன்பம் கொள்ளலாம்

இந்தியர்க் கெல்லாம் இரண்டு எண்ணமா
இல்லை அவர்க்கெலாம் ஒன்றுதான் எண்ணம்
இந்திய நாட்டை வல்லர சாக்கும்
எண்ணம் ஒன்றுதான் செயலும் ஒன்றுதான்!''[44]

என்று இரண்டு மாட்டு வண்டிகளின் செயல் ஒற்றுமையால் வண்டி நகர்தலை உதாரணமாகக் கூறி, இந்தியாவை வல்லரசாக்கும் எண்ணத்தை வளர்ப்பதற்குரிய வழியைக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி கூறியுள்ளார்.

இவ்வாறு இவ்விரு கவிஞர்களும் ஒற்றுமைச் சிந்தனைகளைப் பல்வேறு உத்திகளில் வளர்த்துள்ளனர் என்பதற்கு மேலுள்ள பாடல் வரிகள் சான்றாகும்.

**4.2.5.0 சுத்தமாக்கும் ஆலைக்கழிவு**

ஆலைக்கழிவுகளால் சுற்றுப்புறம் பாதிப்படைந்து வருகிறது. இதிலிருந்து விடுபட,

''தொழிற்சா லைகளின் கழிவுகளைத்
தூய ஆற்றில் கலக்கவைத்தார்!
அழிந்தது ஆற்றின் தூய்மையுமே
ஆற்றில் கிருமிகள் சேர்ந்தனவே!''[45]

இந்நிலை ஏற்பட முதலாளிகளின் சுயநலமே காரணமாக உள்ளது. ஆதலால் பொதுமக்களின் நலனைக் கருத்தில் கொண்டு நாளைய மனிதர்களாகிய குழந்தைகளுக்குப் பாதுகாப்பு நடவடிக்கை எடுக்கவேண்டும் என எச்சரித்துள்ளார்.

**4.2.6.0 குழந்தைகளின் குறை**

நாளைய உலகில் அதிகாரிகளாய், அமைச்சர்களாய், அறிஞர்களாய் மாற உள்ள இன்றைய குழந்தைகளின் குடும்பங்களை வறுமை ஆள்வதால் குழந்தைத் தொழிலாளர்களாய் மாறியுள்ளனர். இந்நிலையைக் கண்ட குழந்தைக்கவிஞர் செல்லகணபதி,

''குழந்தை வேலை செய்து வாடும்
கொடுமை விலகச் செய்குவோம்!
குழந்தை என்றும் பள்ளி சென்று
கூடி ஆடச் செய்குவோம்.!''[46]

எனக் குழந்தைகளுக்கு வரும் தீங்குகளைக் கூறியுள்ளார். குழந்தைகள் பள்ளிக்குச் சென்று படிக்கலாமே தவிர குழந்தைத் தொழிலாளர்களாய் மாறக்கூடாது என்ற சிந்தனையைக் கூறியுள்ளார்.

**4.2.7.0 போலித்துறவிகளிடமிருந்து காத்தல்**

தன்னைப் புலியாக எண்ணிப் பாட்டியிடம் அடி வாங்கிய பூனையைப் போலித்துறவிகளுக்கு எடுத்துக்காட்டாகக் கூறி குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா விளக்கியுள்ளார்.

''பூனை என்றும் பூனைதான்
புலியாய் மாற முடியாது
தானே இப்படி எண்ணியதே
சாது வாக மாறியதே.''[47]

என்னும் கதைப்பாடலில் பூனைகளைப் போல போலித்துறவிகளும் தங்களை உண்மையான துறவிகள் என எண்ணச் செய்து மற்றவர்களை வேதனைக்குள்ளாக்குகிறார்கள்.இப்படி உண்மையான துறவிகள் போல் நடிக்கும் பூனைகளைப்போல் போலித்துறவிகளும் பாதிக்கப்படுவார்கள். அதனால் போலி வாழ்க்கை துயரைத் தரும் என எச்சரித்துள்ளார்.

**4.2.8.0. குண்டும் அழிவும்**

குண்டுகள் உயிர்களை அழிப்பதால் குண்டினைத் தயார் செய்வதைத் தவிர்க்கவேண்டும் என்பதை,

குண்டு தன்னை யூகமாய்க்
கண்டு தந்த மனிதரின்
மண்டை மூளை உலகையே
மாய்க்கத் தானோ கண்டது?''[48]

என இப்பாடல் வரிகள் உணர்த்தியுள்ளன.

**4.3. பாதுகாப்பு உயர்த்தும் சமூகச் சிந்தனைகள்**

நம் சமுதாயத்தைப் பாதுகாக்க கூடிவாழ்தலுடன் பொருளாதாரத்தில், அறிவியலில், ஆன்மீகத்தில் இந்தியாவை வெற்றியடையச் செய்தல் அவசியமானதாகும். அதனால் ஆன்மீகத்தால் அறம் வளர்த்தல், மாசகற்ற மரம் வளர்த்தல் போன்ற தலைப்புகளில் பாதுகாப்புச் சிந்தனைகள் வகைப்படுத்தப்பட உள்ளன.

**4.3.1.0 ஆன்மீகத்தால் அறம்வளர்த்தல்**

ஆன்மீகம் என்பது தெய்வப்பற்று. தெய்வப்பற்று இருக்குமிடத்தில் வன்முறை, காமம் போன்ற தீய நிகழ்வுகளுக்கு இடமில்லை. எனவே தெய்வபக்தி உள்ளவர்கள் நல்ல செயல்களையே செய்வார்கள். நல்ல நிகழ்வுகளே நிகழும். இதனை, ''நம் சமுதாயத்தின் அடிப்படை ஆன்மீகம். இதன் காரணத்தாலேயே பல சீரழிவுகளுக்கும் குழப்பங்களுக்கும் மத்தியிலும் அணையா விளக்காக பாரதசமுதாயம் ஒளிவிட்டு

வாழ்ந்து வருகிறது.''[49] என்ற அ.லெ.நடராஜன் கூற்றிற்கேற்ப ஆன்மீகச் சிந்தனையால் அறம் வளரும் என்பதை நோக்காகக் கொண்ட பாடல்கள் குழந்தைப்பாடல்களில் உள்ளன.

''எல்லாம் அறிந்த கணபதியே,
எவ்வரம் கேட்பேன், தெரியாதா?
நல்லவன் என்னும் ஒருபெயரை
நான்பெற நீவரம் தா தா தா.''[50]

போன்ற வரிகளில் நல்லவனாக அருள்புரிய வேண்டும். ஏனென்றால் நல்லவர்களின் நற்செயல்களாலேயே இச்சமுதாயம் உயர்வடைய முடியும் என்பதை எடுத்துரைத்துள்ளார். ஆன்மீகச்சிந்தனை என்பது தமிழகத்தில் இருக்கும் மிக உயர்ந்த பண்பாடாகும். அதனால்,

''கண்ணன் கையில் இருந்தது
கால மெல்லாம் உதவிடும்
உண்மை கூறும் புத்தகம்
உயர்ந்த பகவத் கீதையாம்!.''[51]

என்ற பாடல் வரிகளில் கண்ணபிரான் நமக்களித்த பகவத்கீதையைப் பின்பற்றினால் ஆன்மீகத்தை உயர்த்த முடியும் என்கிறார்.

''பொய்சொன் னாலோ
பொல்லாச் சாமி!
பொய்சொல் லாதே!
பொய்சொல் லாதே!''[52]

போன்ற பாடல் வரிகளில் உண்மையைப் பின்பற்றுதலும் நேர்மையுடன் நடத்தலும் ஆகிய பண்புகளை ஆன்மீகத்தால் வளர்க்கலாம் என்பதைக் கூறியுள்ளனர்.

#### 4.3.2.0 மாசகற்ற மரம் வளர்த்தல்

மரம் வளர்த்தல் பற்றிய சிந்தனைகள் ஆங்காங்கு இவ்விரு கவிஞர்களின் நூல்களில் இடம் பெற்றுள்ளன. மரம் வளர்த்தலால் மழைப் பொழிவைப் பெறுகிறோம். எனவே விவசாய நாடான இந்திய நாடு தன்னிறைவு பெற ஏற்றது மழையாகும். இம்மழையே நாம் வெளிவிடுகிற மூச்சில் ஏற்படும் நச்சுக்கார்பன்டை ஆக்சைடை அகற்றி ஆக்சிஜனை வெளியேற்றும். மேலும் மரத்தின் இலை, வேர்கள் வாசனைப் பொருள்களாய்ப் பயன்படுகின்றன. ஆலைகளின் புகைகளினால் ஏற்படும் மாசு படிந்த காற்றினையும் போக்குகின்றன. ஆதலால் இம்மரங்களின் சிந்தனைகளை இன்றைய காலச்சூழலுக்கேற்ப குழந்தைக்கவிஞர் செல்லகணபதி குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பாவைவிட அதிக அளவில் கூறியுள்ளார்.

“டில்லியைப் போலநம் ஊரும்
திகழ்ந்திட மரங்களை நடுவோம்.
மெல்ல மெல்ல மழையை
விரைந்து பெய்திடச் செய்வோம்.”[53]

நம் நாடு செழிப்புற மரங்கள் அவசியமானதாகும் என்பதை உணர்த்த டில்லியின் பசுமையை எடுத்துக்காட்டாகக் கூறி விளக்கியுள்ளார்.

“மரங்களி னால்தான் மழையே
மரங்களை வெட்டிச் சாய்த்தால்
மரமா சாகும் வெட்டும்
மனிதனே மழையின்றிச் சாவான்.”[54]

மரங்களை வெட்டினால் மனிதர்களுக்கே ஆபத்து எனக் கூறி இயற்கைப் பாதுகாப்புக் குறித்த சிந்தனையைக் குழந்தைக் கவிஞர் செல்லகணபதி விதைத்துள்ளார்.

**4.3.3.0 வல்லரசுச் சிந்தனைகள்**

வல்லரசு நாடுகளில் ஒன்றாக இந்தியாவையும் மாற்ற வேண்டும் என்ற எண்ணத்தைக் குழந்தைகளிடம் இவ்விரு கவிஞர்களும் வளர வைத்துள்ளனர்.

நாடு காக்கும் பல நல்ல வீரர்களை இச்சமுதாயத்திற்கு உருவாக்க ‘அண்ணனின் வேலை’ என்னும் பாடலைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா எழுதியுள்ளார்.

“மூர்க்க மான டாங்கிப் படையை
முறிய டித்து நொறுக்கினார்.
தாக்க வந்த விமானம் யாவும்
தவிடு பொடியாய் ஆக்கினார்.

சிங்கம் போல வீரத்தோடு
தேசம் தன்னைக் காக்கவே
எங்கள் அண்ணன் செய்த வேலை
எனக்குப் பெருமை அல்லவோ?
எனக்கு மட்டும் பெருமையில்லை
இந்தி யர்க்கே பெருமையாம்.”[55]

அண்ணனின் செயலை தம்பி எடுத்துரைக்கும் தன்மை தம்பியையும் வீரனாக்கும் என்பதற்கு இவ்வரிகள் எடுத்துக்காட்டாயுள்ளன.

என்தாய் மண்ணில் இம்மி அளவையும்
எவருக்கும் விட்டுத் தரமாட்டோம்!

பொன்பொருள் கேட்டால் பிச்சை போடுவோம்
போர்எனில் பகைவரை விடமாட்டோம்!.''[56]

என்னும் பாடல் வரிகள் மூலம் அஹிம்சை இந்தியாவிற்கே சொந்தம். இந்தியாவிற்கு வரும் எதிரிகளுக்கு அல்ல என்பதைக் கூறி தாயகத்தைப் பாதுகாக்கக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி வழி கூறியுள்ளார்.

#### 4.3.4.0 சேமிப்பும் சிந்தனையும்

பொருளாதாரத்தைக் காக்கும் வழிகளுள் சேமிப்பும் ஒன்றாகும். சிறுதுளிகள் வெள்ளம் ஆவதுபோல் சிறுதொகை பெரிய தொகையாகி ஒவ்வொருவரின் வாழ்வை உயர்த்தும். இச்சேமிப்பு நாட்டின் மதிப்பை உயர்த்தும்; வன்முறை போன்ற தீய எண்ணங்களை அகற்றும். சேமிப்பை வளர்ப்பவனிடத்தில் பொருளை அழிக்கும் எண்ணம் வளராது. மேலும் இச்சேமிப்பு உழைப்பவனுக்கே உரியதாகும். வங்கியில் தொடங்கும் இச்சேமிப்பு தனிமனிதனுக்கு மட்டுமல்லாமல் வங்கிக்கும் பணவரத்து ஏற்பட்டு அந்த வங்கியையே வளர வைக்கிறது. தேசத்தையே உயர்த்துகிறது.

''சேமிக்கும் பழக்கம் வளர்வத னாலே
தேசத்து மக்கள் பயன்பெறுவார்
சேமிப் பென்கிற திட்டத்தில் சேர்ந்து
தேசப் பெருமையை உயர்த்திடுவோம்.''[57]

என்னும் பாடல்வரிகளில் கூறப்பட்டுள்ள சேமிப்புச் சிந்தனைகள் ஒரு மனிதனை மட்டும் உயர்த்துவதுடன் அல்லாமல் சமூகத்தையே உயர்த்தும் என்பதற்கு எடுத்துக்காட்டாக உள்ளன.

#### 4.3.5.0 சமூக இணக்கத்திற்கு மொழிப்பாதுகாப்பு

சமுதாயம் என்பது மக்கள் தொகுதி. மக்கள் எனப்படும்போது அவர்கள் வேற்று நாட்டவராக மதத்தவராகக் கூட இருக்கலாம். எனவே இவர்களுடன் பழக மொழிப்பயிற்சி அவசியமானதாகும். அதாவது பிழையில்லாமல் பேசுவதும் எழுதுவதும் இன்றியமையாததாகும். இல்லையெனில் தரத்தில் தகுதியில் குறைய வாய்ப்பு ஏற்படும். அதனால்,

''தாய்சொல்லித் தந்த மொழி
தாலாட்டில் கேட்ட மொழி
சந்திரனை அழைத்த மொழி
சாய்ந்தாடிக் கற்ற மொழி
பாட்டிகதை சொன்ன மொழி
பாடிஇன்பம் பெற்ற மொழி
கூடிஆட உதவும் மொழி
கூட்டுறவை வளர்க்கும் மொழி.
மனந்திறந்து பேசும் மொழி

வாழ்க்கையில் உதவும் மொழி
எங்கள் தாய்மொழி – மிக
இனிய தமிழ்மொழி,
இனிய தமிழ்மொழி - அது
எங்கள் தாய்மொழி.”[58]

என்னும் பாடல்வரிகளில் சமுதாய நல்லிணக்கமும் கூறப்பட்டுள்ளது. மக்களுடன் நெருங்கிப் பழகினால் வாழ்க்கையை உயர்த்தலாம் என்பதையும் உணர்த்தியுள்ளார். அதனால் இத்தகைய தாய்மொழியான தமிழையோ அல்லது இந்தி போன்ற மொழிகளைக் கற்றாலும் அதன் பாதுகாப்புக் கருதி பிழையில்லாமல் கற்கவேண்டும் என்பதை,

“தாயின் மொழி
தமிழைப் பாடி
யாரும் இதை
அறியப் படி.
இன்பத் தமிழ்
இதனைப் படி
வண்ணத் தமிழ்
வளரப் படி.”[59]

என்று தாய்மொழியைக் கற்கும் முறையைக் கூறியுள்ளார். குழந்தைகள் யாரும் அறியப் படித்தால் பிழைகளைத் தவிர்த்து தமிழை வளரச் செய்ய முடியும்.

“தாய்நாட்டில் தமிழ்மொழிதான் வேண்டும்
தாய்பேசும் மொழியன்றோ வேதம்
தாய்மொழியில் கற்கின்ற போது
தானாகப் புரிந்துகொள்ளத் தோது!

மொழிபெயர்த்துச் சொல்லாமல் என்றும்
மொழியறிவைப் புகட்டுபவள் அன்னை!
அழிவறியா ஆற்றலினை ஊட்டும்
அன்னைமொழி ஆராரோ பாட்டு!”[60]

போன்ற பாடல் வரிகளில் தாய் மொழியில் கற்பதனால் ஏற்படும் எளிமையையும் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி உணர்த்தியுள்ளார்.

**4.3.6.0 கொடியும் சிந்தனையும்**

மூவண்ணங்களால் ஆன எண்ணங்களை ஈடுபடுத்தும் அமைப்பு நம்நாட்டுக்கொடியில் அமைந்துள்ளது. இதன் சிவப்பு நிறம் தீரத்திற்கும், தியாகத்திற்கும், வீரத்திற்கும், வெற்றிக்கும் ஏற்றது; வெள்ளை நிறம் ஒளிக்கும்

உண்மைக்கும், தெளிவிற்கும் ஏற்றது. பச்சைநிறம் வளமைக்கு ஏற்றது. இது குறைவினைப் போக்கும்.

"சத்தியம் காட்டிடும் கொடி நடுவே
தர்மத்தின் சின்னமாம் சக்கரமே
நித்தியம் சுற்றிடும் நில்லாமலே
நீதியை நாட்டிடும் சக்கரமே."[61]

என்னும் பாடல் வரிகள் கொடிச் சின்னத்தின் இயல்புகளை எடுத்துரைத்துள்ளன. மேலும் கொடியை வணங்கும் முறையைக் கொடிப்பாடல் அறிமுகப்படுத்தியுள்ளது. ஒவ்வொரு சுதந்திரத் திருநாள் அன்றும் இந்தக் கொடியை ஏற்றி வணங்குவதால் கொடியைப் பாதுகாக்கும் தன்மையைப் பெறுகிறோம் என்பதை உணர்த்தியுள்ளன. இதனை,

"ஏற்றி வணக்கம் செலுத்திடுவோம்.
எல்லோரும் சேர்ந்துமே பாடிடுவோம்.
போற்றிநம் நாட்டினைக் காத்திடுவோம்.
புகழெங்கும் பரவிடச் செய்திடுவோம்."[62]

போன்ற வரிகளில் குறிப்பிட்டுள்ளதுபோல் கொடியை வணங்கக் கற்றுக்கொண்ட குழந்தைகள் கொடியை ஏற்றி வணங்க வேண்டும் என்பதைத் தெரிவித்துள்ளார்.

**4.3.7.0. சுதந்திரத்தின் தன்மைகள் உணர்தல்:**

ஒவ்வொருவரின் வேலையையும் பிறரின் இடையூறில்லாமல் செய்து முடிக்க நமக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் அதிகாரமே சுதந்திரம் ஆகும். உழைப்பதற்குக் கொடுக்கப்பட்ட இவ்வதிகாரத்தை சோம்பலுக்காகத் தன் சுய சிந்தனைக்காகப் பயன்படுத்தக்கூடாது. இதைப் பல இடங்களில் பாடல்களில் ஆங்காங்கு உணர்த்தியுள்ளார். நம்பிக்கையுடன் முயற்சி செய்வதற்கும் ஏழ்மையை விரட்டுவதற்கும் தாழ்ந்தவரை ஒழிப்பதற்கும் ஏற்றது சுதந்திரம் ஆகும்.

"பிறரது உரிமையை மதிப்பது சுதந்திரம்.
பேச்சிலும் செயலிலும் தூய்மையே சுதந்திரம்.
உரிமையும், கடமையும் ஒன்றாய்ச் சேர்வதே
உண்மையில் சுதந்திரம், சுதந்திரமாகும்!"[63]

என்னும் பாடல் வரிகள் மூலம் உரிமையை மதிப்பதும் எண்ணத்தில் தூய்மையாக இருப்பதும் சுதந்திரம் ஆகும் எனக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா உணர்த்தியுள்ளார்.

"கொட்டும் முரசும் இன்னிசைப் பாடலும்
சுதந்திரம் ஆவதுண்டோ?
பட்டினி என்பதை ஒழிப்போம் அன்றே
பாரதம் சுதந்தரமாம்!"[64]

என்று வறுமையை ஒழிக்கும் நாளே சுதந்திரம் பெற்ற நாளாகும் என்பதைக் குழந்தைக்கவிஞர் செல்ல கணபதி உணர்த்தியுள்ளார்.

### 4.3.8.0 இளைஞர்கள் வாழ்வில் அயல்நாடு

இந்தியாவை முன்னேற்றும் வல்லமையுடையவர்கள் இளைஞர்களே. அதனால் அயல்நாடான அமெரிக்கர்கள் பனியை வென்று பாடுபட்டதுபோல் இந்திய இளைஞர்களும் பின்பற்ற வேண்டும். கல்வியால், உழைப்பால், மொழியால் உயர்ந்த இளைஞர்கள் அயல்நாட்டுக் கொள்கையை ஏற்கவேண்டும். ஆனால் இந்தியாவை விட்டு அயல்நாட்டிற்குச் செல்லக்கூடாது என்பதை உணர்த்த,

“மனிதர் தம்மை மனிதர் போற்றும்
மாண்பு கொண்ட நாடெது?
இனிய நாடு அமெரிக் காவாம்
இந்த நாட்டைப் போலெது?”[65]

என்னும் பாடல் வரிகளில் உணர்த்தியுள்ளார்.

### 4.4. சமூகமும் தலைவர்களும்

தலைவர்கள் நாட்டை நெறிப்படுத்தும் தகுதியுடையவர்கள். அதனால் நல்ல தலைவர்களின் சிந்தனைகளை எடுத்துக்கூறல் இன்றியமையாதது என்பதைக் கருத்தில் கொண்டு இவ்விரு கவிஞர்களும் தலைவர்களை குழந்தைகளுக்கு எடுத்துக் கூறியுள்ளனர். ஏனென்றால் “நாட்டுக்கு உழைத்த நல்லவர்களையும், மொழிக்குக் கேடு நேரும்போது அதனை எதிர்த்து நின்று புரட்சி செய்து வென்ற அறிஞர்களையும் நினைத்துப் போற்ற வேண்டுவது நம் கடமை. உலக உத்தமர் காந்தி, பகுத்தறிவுத்தந்தை பெரியார், தமிழ்க்கடல், மறைமலையடிகளார் பாட்டுக்கொரு புலவன் பாரதி போன்றோர் என்றென்றும் நிலைத்து நிற்க வேண்டியவர்.”[66]எனக் குழ.கதிரேசனின் கூற்றிற்கேற்றாற்போல் உலகஉத்தமர் காந்தி நேரு, ராஜாஜி போன்ற தலைவர்களின் செயல்களைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா பின்பற்றச் செய்துள்ளார். இவர்களுடன் அறிஞர் அண்ணா, பெரியார் போன்ற தலைவர்களின் செயல்களைக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி பின்பற்றத் தூண்டியுள்ளார்.

### 4.4.1. காந்தி

தலைவர்களில் காந்தி முதன்மையாகக் கூறப்பட வேண்டியவர். இவரைப் பற்றிய செய்திகள் ‘காந்தீயமும் மனிதநேயமும்’ என்னும் தலைப்பில் தரப்பட்டுள்ளன.

### 4.4.2. நேரு

நேரு நேர்மையால் உயர்ந்தவர்; அன்பால் வளர்ந்தவர்; கொள்கையால் காந்தியின் பரம்பரையைச் சேர்ந்தவர்; இந்தியாவை வழிநடத்தியவர்; சிறந்த தலைவராகவும் இருந்தவர்; இந்தியாவின் பிரதமராகவும் உயர்ந்தவர். இத்தகைய நேரு பற்றிய சிந்தனைகள் இவ்விரு கவிஞர்களின் பாடல்களிலும் உள்ளன.

“தக்க வழி காட்டி வந்த
எங்கள் நேருஜி
தடைக ளெல்லாம் தகர்த்துவந்த
எங்கள் நேருஜி

மக்க ளுக்குள் மாணிக்கமாம்
எங்கள் நேருஜி
வாழ்க, வாழ்க, வாழ்க, வாழ்க
எங்கள் நேருஜி.''[67]

என்ற இப்பாடல் வரிகள் நேருவின் தன்மைகளை எடுத்துரைத்துள்ளன.

''நாட்டு மக்கள் நலமுடன்
நன்கு வாழும் வழிகளைக்
காட்டு நின்ற ஜவஹரைப்
போற்று வோம்நாம் யாவரும்.''[68]

போன்ற வரிகளில் நாட்டு மக்களின் நலனுக்கேற்ற வழிகளைக் கூறிய உயர்ந்த தலைவரான நேருஜியைப் போற்றவேண்டும் என்பதைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா கூறியுள்ளார்.

இவரைப்போல் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும் வினாவிடை உத்தியைப் பயன்படுத்தி நேருவை நினைவுபடுத்தியுள்ளார்.

''ரோஜாப் பூப்போல் நாளுமே
ஜோராய்ச் சிரிக்கும் மலர்எது?
ராஜா நேரு போலவே
ஜோராய் வாழந்த மனிதர்யார்?

கள்ள மில்லாப் பிள்ளைபோல்
கபடில் லாமல் உழைத்திடும்
உள்ளம் கொண்ட நேருபோல்
உலகில் யார்தான் பிறந்துள்ளார்?

நேர்மை யாலே உயர்ந்தவர்
நேரு மாமா போலவே
ஊரும் உறவும் போற்றவே
உயர்ந்து நிற்போம் உலகிலே.''[69]

என்ற பாடல்வரிகள் மூலம் சீரும் சிறப்புடனும் வாழ்ந்த நேருவை அறியச் செய்துள்ளார்.

**4.4.3.ராஜாஜி**

விடுதலைக்குப் போராடிய தலைவர்களுள் இராஜாஜியும் ஒருவர் என்பதை இவ்விரு கவிஞர்களும் பாடல்களில் கூறியுள்ளனர்.

### 4.4.3. அறிஞர் அண்ணா

நம் சமுதாயத்திற்குப் பாடுபட்ட தலைவர்களில் இவரும் ஒருவர். அன்பு நிறைந்தவர். தாய்மொழியாகிய தமிழ் மொழியின்மீது ஈடுபாடு கொள்ளச் செய்தவர். கடமை, கண்ணியம், கட்டுப்பாட்டுக்கு உரியவர். இவரின் சிந்தனைகளை,

"பிறருக்குத் துன்பம் செய்யா திருப்பது
பெரிய கண்ணியம் என்றார்!
உறவுடன் பிறருக் குதவிடும் பாங்கினை
உனது கடமையாய்ச் சொன்னார்!"[70]

என்று பிறரின் நலனைத் தன் நலமாகக் கொண்ட அண்ணாவைக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியின் பாடலால் அறியலாம்.

### 4.5. சமூகமும் கவிஞர்களும்

கவிஞர்களும் தங்களுக்குத் தோன்றிய சமுதாய உணர்வுகளைக் குறிக்கோளாக்கி கவிதைகள் இயற்றியுள்ளனர். மேலும் களவு, வறுமை போன்ற சமுதாய இன்னல்கள் களைய இவர்கள் செய்த முயற்சியே இன்று கவிதைகளாக மலர்ந்து கொண்டிருக்கின்றன. இதில் குழந்தைகளுக்காகப் பாடல் இயற்றியவர்களைக் குழந்தைக்கவிஞர்கள் என்கின்றனர்.

குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா, கவிமணி, பாரதி, ஔவை போன்ற குழந்தைக் கவிஞர்களை அறிமுகப்படுத்தி இவர்களது குறிக்கோளைத் தம் பாடல்களில் வெளிப்படுத்திப் பின்பற்றச் செய்துள்ளனர்.

### 4.5.1. பாரதியார்

பாரதியார் பற்றிய சிந்தனைகள் இவ்விரு கவிஞர்களின் பாடல்களிலும் உள்ளன. பாரதியார் சங்கம் அமைத்துத் தொண்டு செய்தவர். தன் மனைவியுடன் தான் வாழுங்காலத்தில் செல்வத்தைவிட புத்தக அறிவே சிறந்தது என்றார். இந்தக் கல்விச் செல்வத்தால் சமுதாயம் உயர்வடையும். அதனால்,

"பட்டுப் புடவை, வெள்ளியிலே
பாத்திரம், பண்டங்கள் வாங்காமல்
பட்டணம் சென்றே வீணாகப்
பணத்தைக் கெடுத்ததாய் எண்ணுகிறாய்."

அழிகின்ற செல்வம் நான்கொடுத்தே
அழியாத செல்வம் கொண்டுவந்தேன்.
அழகழ கான கருத்தையெல்லாம்
ஆனந்த மாகப் படித்தறிவோம்."[71]

என்ற கதைப்பாடல் உத்திமூலம் பாரதியாரை அறியச் செய்து பாரதியின் குறிக்கோள் புத்தக அறிவை வளர்த்தல் ஆகும் என்பதை குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா அறியச் செய்துள்ளார்.

“பால்தரும் பசுகிளி கோழி நாயுடன்
பழகிடும் வித்தை சொன்னானே
பால்போல் வெள்ளை பிள்ளைகள் மனதில்
பாசம் அன்பைப் பதித்தானே.”[72]

என்று இப்பாடல் வரிகளில் குழந்தைகளிடம் அன்பைப் பதித்தவன் பாரதி என்பதைக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி கூறியுள்ளார். இவ்வன்பினைப் பின்பற்றினால் அறம் தழைத்து நாடு செழிப்பாகும். மேலும் அன்பாக நடத்தலும், படிப்பறிவை வளர்த்தலும் பாரதியின் குறிக்கோளாகும் எனக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா கூறியுள்ளார். ஆனால் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி பாரதி பாப்பாபாட்டைக் கற்றுத்தந்தவர். இவரை விடுதலைக்குப் போராடிய கவிஞர்களில் ஒருவராகக் கூறியுள்ளார். மேலும் இவர் கவிதைக்குரல் தூங்கும் மக்களை எழுப்பியதால்தான் விடுதலை அடைந்தது என்ற சிந்தனையைக் கூறி அஞ்சாமையைப் பதிவு செய்துள்ளார். இதனை,

“தூங்கிடும் புலியை எழுப்புதல் போலே
தூங்கிய இந்திய மக்களிடம்
ஆங்கி லேயரை விரட்டி அடித்திடும்
ஆவே சத்தை வளர்த்தானே.

பாப்பா பாட்டினால் குழந்தைகள் தம்மை
பண்பாய் வளர்ந்திடச் செய்தானே
பூப்போல் சிரித்திடும் பிள்ளைகள் மனதில்
புதுப்புது கருத்துகள் விதைத்தானே.”[73]

என்ற இப்பாடல் வரிகளால் அறியலாம்.

**4.5.2. கவிமணி**

குழந்தைப்பாடல்களைப் பாடியவர் கவிமணி என இரு கவிஞர்களும் கூறியுள்ளனர். எதிர்காலத் தலைவர்களாகிய குழந்தைகள் வளம்பெற ‘தோட்டத்தில் மேயுது வெள்ளைப்பசு’ என்னும் பாடல் முக்கியமானதாகும். குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா போன்று இன்று எண்ணற்ற குழந்தைக்கவிதைகள் உருவாகுவதற்கு இப்பாடல் தோற்றுவாயாகும்.

“சின்னஞ் சிறிய பிள்ளைகள்
சேர்ந்து பாடி மகிழவே
இன்ப மான கவிதைகள்
இயற்றித் தந்த கவிமணி!”[74]

என குழந்தைக்கவிஞர்களை உருவாக்கியவர் கவிமணி என்பதை இப்பாடல் வரிகளில் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா குறிப்பிட்டுள்ளார்.

"பாரதி தேசிக விநாயகமாம்
பரம்பரை அடுத்தவர் வள்ளியப்பா
ஆர்வம் பெருகப் பிள்ளைகளை
ஆடிப் பாடச் செய்தனரே

பழகிக் கொள்ளும் பண்புகளை
பாடல் வழியே சொல்லுகிற
அழகினைப் பாடலில் காட்டியவர்
அடடா தேசிக விநாயகமாம்."[75]

என்னும் பாடல் வரிகள் குழந்தைகளுடன் குழந்தைகளாக ஒன்றிக் குழந்தைக்கவிதைகள் இயற்றியவர் கவிமணி என்பதைக் கூறியுள்ளனர்.

**4.5.3. ஔவையார்**

கவிமணியை அறிந்து கொண்ட குழந்தைகள் இடைக்காலப் புலவரான ஔவையாரையும் அறிந்து கொள்ள வேண்டுமென குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா,

"சொந்த நலன் ஏதும் இன்றி – தமிழ்த்
தொண்டு செய்தே வாழ்ந்த பாட்டி."[76]

என சொந்த நலனைப் பெரிதாகக் கருதாமல் தமிழ்மொழியின் வளர்ச்சிக்குத் தொண்டாற்றிய புலவர் என அறிமுகப்படுத்தியுள்ளார்.

குழந்தைக்கவிஞர் செல்லகணபதி குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா கூறாத பாரதிதாசன், நாமக்கல்கவிஞர் வெ.ராமலிங்கம் பிள்ளை, கண்ணதாசன், குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா போன்றோரையும், அவர்களின் சிந்தனைகளையும் கூறி அறிமுகப்படுத்தியுள்ளார்.

**4.5.4. பாரதிதாசன்**

புரட்சி மிகு சொற்களால் சமுதாயம் வளரத் தகுந்த பாடல்களை எழுதியவர். இளைஞர்களின் வீரம், மூடநம்பிக்கை எதிர்ப்பு போன்ற பொருட்களைப் பாடுபொருளாகக் கொண்டவர். இளைஞர் இலக்கியம் என்னும் சிறுவர் இலக்கியம் எழுதியவர். தமிழை உயிராகக் கருதியவர். இத்தகைய பாரதிதாசனின் சிந்தனைகளை அறிய,

"தமிழே உயிராய் தமிழே அமுதாய்
தமிழே வாழ்வென வாழ்ந்தவராம்
தமிழே படிப்போம் தமிழே பேசுவோம்
தமிழ்க்கவி பாரதி தாசனைப்போல்."[77]

என்ற பாடல் வரிகள் தமிழ் மொழியின் மீது பாரதிதாசன் கொண்ட பற்றினைப் போல் குழந்தைகளும் தாய்மொழியாகிய தமிழின் மீது பற்றுக்கொள்ள வேண்டும் என்பதை உணர்த்துகின்றன.

### 4.5.5. நாமக்கல் கவிஞர் வெ.ராமலிங்கம்பிள்ளை

நாமக்கல் கவிஞர் விடுதலைக்குப் பாட்டெழுதியவர்; உண்மைக்கு உயர்வளித்தவர்; மகாத்மாவின் அஹிம்சையைப் பின்பற்றியவர்; துன்பத்திலும் உண்மையையே பேசியவர்; எளிமையானவர்; இவரின் சிந்தனைகளை அறிய,

“பகட்டினை வளர்த்துக் கொள்ளாமல்
பணிவுடன் எளிமையைக் கொண்டிருந்தால்
அகத்தினில் உண்மை ஒளிவளரும்
அரவணைக் கின்ற அன்புவரும்.”[78]

என்ற பாடல் உதவுகிறது. பணிவுடன் எளிமையைப் பின்பற்றி என்றும் மாறாத உண்மையைத் தன் வாக்கினில் கடைப்பிடித்தால் சமுதாயம் உயரும். அதனால் சமுதாய உயர்விற்கேற்ற பாடல்களை எழுதிய ராமலிங்கம் பிள்ளையை அறிமுகப்படுத்தியுள்ளார். மேலும் இவர் கண்ணதாசனையும் அறிமுகப்படுத்தியுள்ளார்.

### 4.5.6. கண்ணதாசன்

இலக்கியத்தை உணராத பாமரமக்களும் படித்தறியும் பாடல்களை எழுதியவர். பட்டினத்தாரை அறியச் செய்தவர். சங்க இலக்கிய நூல்களான புறநானூறு அகநானூறு போன்ற நூல்களின் சிந்தனைகளை கண்ணதாசன் கவிகளாக ஆக்கியவர். இவரின் பாடற்திறமையை கீழ்க்காணும் பாடலில் அறியலாம்.

தென்றலாய் வீசும் பாடலும் எழுதினார்
தீயாய்ச் சுடுகிற அனல்பாட்டும்
நன்றாய் எழுதினார் இன்பமும் துன்பமும்
நமக்கொன் றேயெனச் சொல்லியவர்
.

இவரைப் போலே இன்னொரு கவிஞர்
இனிப்பிறந் திடுவது அரிதென்று
கவலைப் படாதே கண்ணனும் அருள்வான்
கண்ண தாசனாய் நீஆவாய்.”[79]

சமுதாயத்திற்குப் பாடிய கவிஞர்களில் இவர் மிகவும் சிறந்தவர். இவரைப்போல் குழந்தைகளும் கவிதைகள் எழுத முயற்சி செய்தால் இன்னொரு கண்ணதாசன் உருவாகலாம் என்பதைக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி பாடல்களில் கூறியுள்ளார். இவர் குழந்தை இலக்கிய வளர்ச்சிக்குக் குழந்தைக்கவிதைகள் எழுதித் தொண்டாற்றிய இவ்ஆய்வுத் தலைப்பிற்கு உரியவருமான குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பாவையும் பாடல்களில் குறிப்பிட்டுள்ளார்.

### 4.5.7. குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா

ஏடுதூக்கிப் பள்ளியில் இன்று பயிலும் நாளைய தலைவர்களுக்கும் பாடல்கள் எழுதியவர். சிறுவர்களுடன் சிறுவர்களாக ஒன்றிப் பாடல் எழுதியவர். வயது மூத்தாலும் உணர்வில் குழந்தையாகியவர். சிறுவர் தேடும் பொருளை விரும்பும் பொருளைப் பாடல்களில் எழுதியவர்.

"குழந்தைக் கவிஞன் என்பவன்
குழந்தை ஆக வேண்டுமாம்
குழந்தை யோடு குழந்தையாய்க்
கூடி ஆட வேண்டுமாம்.

வள்ளி யப்பா இதனையே
வாழ்வின் கொள்கை ஆக்கினார்
துள்ளும் குழந்தைப் பாக்களின்
சூத்தி ரத்தைக் காட்டினார்."[80]

போன்ற வரிகள் குழந்தையாக மாறி குழந்தை இலக்கியம் படைக்கவேண்டும் என்னும் கருத்தினை உணரச் செய்துள்ளன.

### 4.6.0 சமூகமும் சான்றோரும்

தலைவர்களை அறிவதோடு – கொள்கைகளை உணர்ந்த சான்றோர்களை அறிதல் அவசியமானதாகும். அதனால் திரு.வி.க. வள்ளல்அழகப்பர், அறிவியல்மேதை அப்துல்கலாம், அண்ணாமலை அரசர், டாக்டர் எம்.ஏ.எம்.ராமசாமி, டாக்டர் ஏ.சி.முத்தையா, கருமுத்து தியாகராசர், குன்றக்குடி அடிகளார், கண் மருத்துவர் வேங்கடசாமி போன்ற சான்றோர்களை அறியச் செய்துள்ளனர்.

சமுதாயம், அறிவியல், மருத்துவம் எனப்பல துறைகளிலும் சிறந்து விளங்கிய பெரியோர்களைச் சான்றோர் என அழைக்கிறோம். இத்தகைய சான்றோர்களில் அழகப்பர் கொடை வள்ளலாக விளங்கியவர் அறிவியல் மேதை அப்துல்கலாம் மிகச் சிறந்த விஞ்ஞானியாக விளங்கியவர். தமிழிசையில் ஈடுபாடு கொண்ட அண்ணாமலையாரையும் அறிந்து கொள்ளச் செய்துள்ளனர்.

"அப்துல் கலாமும் மாணவர் செயல்பட
அறிவுரை ஐந்தைச் சொல்லுகிறார்
எப்பொழுதும் அவர் அறிவுரை ஏற்றால்
இந்தியா நிச்சயம் வல்லரசு.

எழுத்தறி வற்றவர் பதின்மரை யாவது
எழுதப் படிக்கப் பழக்கிடுவேன்
மொழிமத சமூக வேறுபா டின்றி
மொத்தமும் ஒன்றெனப் பழகிடுவேன்.''[81]

போன்றவரிகள் அவரது போதனைகளுக்கு எடுத்துக்காட்டாக உள்ளன.

''பல்க லைக்கு இணைய வேந்தாய்
படிக்கும் வாய்ப்பினை
இல்லை என்னும் ஏழை கட்கும்
இவர் கொடுத் தாரே.''[82]

போன்ற வரிகளில் ஏழைகளுக்கு கல்வி அளித்த முத்தையவேளை அறிமுகப்படுத்தியுள்ளார்.

எம்ஏ எம் விளையாட்டின்
இனிய ரசிகராம்
எம் ஏ எம் ஊக்கம்தர
எதையும் சாதிப்போம்.''[83]

என்ற பாடல்வரிகள் விளையாட்டில் ஆர்வமுடைய டாக்டர் எம்,ஏ.எம்.ராமசாமியை அறிமுகப்படுத்தியுள்ளன.

''சிரிப்பே அன்பின் அடித்தளமாம்
சிரிப்பே உறவின் அடிப்படையாம்
சிரித்துச் சிரித்துச் சிந்தனையில்
தெளிவை வளர்ப்போம் நம்மனதில்.''[84]

என்ற பாடல் வரிகளில் முகமலர்ச்சியுடன் வாழ்ந்த டாக்டர் ஏ.சி.முத்தையாவை அறிமுகப்படுத்தியுள்ளார்.

இவ்வாறு சான்றோர்களைப் பாடல்கள் வாயிலாக நாவல்கள் வாயிலாக, இலக்கியங்களில் அறிமுகப்படுத்தும்போது குழந்தைகள் மனதில் சான்றோர்களின் செயல்கள் பதிந்து அவர்களைப்போல நல்ல சான்றோர்களாக விளங்குவார்கள்.

குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா பெரியோர் வாழ்விலே சின்னஞ்சிறு வயதில் போன்ற கட்டுரை நூல்களில் சான்றோர்களை அறிமுகப்படுத்தியுள்ளார். ஆனால் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி பாடல்களில் எழுதியுள்ளார்.

**4.7.சமூகமும் நிறுவனங்களும்**

சமுதாய வகைமைகளை, சமுதாய இன்னல்களை, சமுதாயத் தலைவர்களை அறிந்த குழந்தைகள் சமுதாய நிறுவனங்களையும், அதன் பயனையும் அறிதல் அவசியமானதாகும். ஏனென்றால் மேல் உள்ள செய்திகளை அறிய இந்நிறுவனங்களும் ஒரு வழிகாட்டியாகும். அதனால் ஆரம்பப்பள்ளி, கல்லூரி போன்ற நிறுவனங்களைப் பாடல்களில் கூறியுள்ளனர். தபால்நிலையம் பற்றிய சிந்தனையைப் பர்மா ரமணி

என்னும் நாவலில் கூறியுள்ளார். ஆரம்பப்பள்ளி, கல்லூரி தொடர்பான சிந்தனையைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா ‘ஆரம்பப்பள்ளியும் கல்லூரியும்’ என்னும் பாடலில் எழுதியுள்ளார்.

**கல்லூரி**

நாக ரிகம் என்ன தென்று
நன்கு காட்டி மாந்தர்கள்
வேக மாக மொழியைக் கற்க
வேண்டும் சக்தி தந்ததார்.

**ஆரம்பப் பள்ளி**

கழுத்தில் டையும் தலையில் ஹேட்டும்
காலில் பூட்ஸூம் அணிவோரும்
எழுத்துக் கூட்டிக் கற்றி டாமல்
எப்ப டிமுன் னேறினர்.”[85]

போன்ற வரிகள் உயர்கல்வி கற்கும் இடம் கல்லூரியாகும். அடிப்படைக் கல்வி கற்கும் இடம் பள்ளியாகும் என்பதை நாடக உத்தியில் கல்லூரியும் பள்ளியும் தன்தன் பெருமையை உயர்த்திப் பேசி சண்டையிடுவது போல் கூறியுள்ளார். இவரைப்போல் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும்,

“பள்ளி எங்கள் பள்ளியாம்
படிக்க வைக்கும் பள்ளியாம்!.”[86]

எனக் கல்வி கற்கும் இடம் பள்ளிக்கூடம் ஆகும் என்பதை உணர்த்தியுள்ளார்.

பள்ளிகளில் மாணவர்கள் ஒன்றிணைந்து நாட்டு நலப்பணித்திட்டம், செஞ்சிலுவைச்சங்கம், போன்ற சங்கங்களில் சேவை செய்வது உண்டு. அதனால் பாடல்களில் செஞ்சிலுவைச்சங்கம் பற்றிய சிந்தனையையும் நூல் நிலையம் பற்றிய சிந்தனைகளையும் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா குறிப்பிட்டுள்ளார்.

### 4.7.1. செஞ்சிலுவைச் சங்கம்

செஞ்சிலுவைச் சங்கம் என்ற ஒரு சங்கத்தைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா கூறியுள்ளார். இத்தாலிய தேசத்துப் போர்க்களத்தில் எண்ணற்ற போர் வீரர்கள் மாண்டனர். கைகள் முறிந்தவர் கால்கள் முறிந்தவர் என எண்ணற்ற வீரர்கள் காயத்துடன் அலறினர். குடிக்கத் தண்ணீர் இல்லாத மக்களின் இந்தக் காட்சியைக் கண்டு உள்ளம் உருகியவர். டூனான்டு என்பவர் ஆவார். இவரும் இவர் உதவிக்கு அழைத்த பலரின் சமூக சேவையால் எத்தனையோ உயிரிழப்புகளை நீக்கினார். இதைப் புத்தகமாக எழுதிப் பாரில் உள்ள அறிஞர்கள் பின்பற்றும் வண்ணம் செய்தவர். இவரின் இத்தகைய முயற்சியால் உருவானதே செஞ்சிலுவைச் சங்கம் ஆகும் என்பதை,

“சீரிய ரான அவர்தம் முயற்சியால்
‘செஞ்சிலுவைச் சங்கம்’ தோன்றியதாம்

நேரிய வழிகளில் பற்பல தொண்டுகள்
நித்தம் அச்சங்கமே செய்திடுமாம்.

நோயின்றி வாழ்ந்திடச் செய்வதும்- பிறர்
நோயுற்ற போதில் உதவுவதும்
நேயமாய் உலகினில் வாழ்வதும் -துன்பம்
நீக்கலும் முக்கிய கொள்கைகளாம்.''[87]

என்னும் பாடல் வரிகள் உணர்த்துகின்றன. சமுதாயத்தில் நோயில் போரில் பாதிக்கப்பட்டவர்களுக்குத் தொண்டுகள் செய்துவரும் செஞ்சிலுவைச் சங்கத்தைப் பற்றிக் குழந்தைகள் அறியச்செய்துள்ளார்.

**4.7.2. நூல் நிலையம்**

சமுதாய நிறுவனங்களில் ஒன்று நூல்நிலையம் ஆகும். வங்கி, தபால்அலுவலகம், பள்ளி போன்ற சமூக நிறுவனங்களுள் நூல்நிலையமும் ஒன்றாகும். பணத்தை வங்கிகளில் சேமிப்பது போல் நூல்களை நூலகத்தில் சேமிக்கலாம். இந்த நூலகம் குழந்தைகளுக்கேற்ற முறையில் இருந்தால் அது குழந்தைகளை மகிழ்ச்சியடையச் செய்யும் என்பதை 'குழந்தைகள் நூல்நிலையம்' என்னும் பாடலில் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா குறிப்பிட்டுள்ளார்.

**4.8.0 சமுதாய வளர்ச்சியில் தலைமைப் பொறுப்பு**

தலைமைப் பண்பிலேயே சமுதாய உயர்வு உள்ளது. இதற்கு எடுத்துக்காட்டாக தலைவன் வேண்டும் என்னும் பாடல் உள்ளது. மங்கோலியர்க்கு செங்கிஸ்கான் தலைவனாக இருந்து சமுதாயத்தை உயர்த்தியது போல் நல்ல தலைவர்களால் சமுதாயம் முன்னேறமுடியும் என்கிறார்.

''தலைவ னின்றி எந்த நாடும்
தக்க வழியில் செல்லுமோ?
தலைவன் காட்டும் வழியி னால்தான்
தகுதி நாட்டில் உயருமே.''[88]

போன்ற பாடல் வரிகளால் அறியலாம்.

**4.9.0 சமுதாயமும் விழாக்களும்**

சமுதாய நிகழ்வுகளை அறிந்த குழந்தைகள் சமுதாய விழாக்களையும் அறிய வேண்டும் .சமுதாயத்தில் உள்ள அனைவரும் ஒன்றுகூடிச் செய்து ஒற்றுமைப்பண்பை வளர்த்துக்கொள்ள இந்த விழாக்கள் பயன்படுகின்றன. ஆதலால் தீபாவளி, பொங்கல், கார்த்திகைத் திருநாள் போன்ற விழாக்களைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா அறியச் செய்துள்ளார். மேலும் இந்த விழாப்பாடலின் மூலம் வறுமையை அகற்றவும் வழி கூறியுள்ளார்.

பசி நேரத்தில் உணவு இன்றி இருப்பதை வறுமை என்பர். இந்த வறுமை கௌரவத்தைக் குலைக்கும். நோய் நொடியை ஏற்படுத்தும். அதனால் இந்த வறுமையை ஒழிக்கும் வண்ணம் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா,

"தெருவில் உள்ளோர் யாவரும்
சிரித்தே ஆடித் திரிகையில்
ஒருவன் மட்டும் மூலையில்
ஒதுங்கி இருந்து அழுவதோ?

அரக்கன் அழிந்த நாளென
ஆடிப் பாடிப் போற்றுவோர்
வறுமை என்னும் அரக்கனை
வாழ விடுதல் நீதியோ?"[89]

என்று பாடியுள்ளார். தீபாவளிப் பண்டிகை அன்று புத்தாடை அணிந்து பலகாரங்கள் பல உண்டு வெடிகள் வெடித்து மகிழ்ச்சியாகக் கொண்டாடுகிறோம். ஆனால் இந்தச் சமுதாயத்தில் உள்ள அனைவரும் கொண்டாடுகிறார்களா என்ற சிந்தனையைக் கூறியுள்ளார். இவ்விழாவைப் போல் கார்த்திகை விளக்கை ஏற்றி ஒளிக்கு ஒளி கூட்டுகிறோம். இவ்வாறு தீபாவளி கார்த்திகை போன்ற விழாக்களைக் குடும்பத்தினருடன் இணைந்தும் கோவிலுக்குச் சென்று வழிபட்டும் கொண்டாடுகிறோம்.

வீதிகளில் அனைத்து மக்களுடன் ஒன்றிணைந்து கொண்டாடும் தேர்த்திருவிழா என்ற விழாவை 'திருவிழா' என்ற பாடலில் அறியலாம். 'தேர் ஓட்டம்' என்னும் பாடலில் விழா குறித்த சிந்தனையை விளக்கியுள்ளார். இதனை,

"எள்ளுப் போட்டால் எண்ணெய் ஆகும்
எங்கும் மக்கள் கூட்டம் கூடும்
துள்ளித் திரியும் பாப்பா வாராய்
துள்ளித் துள்ளித் தேரைப் பாராய்."[90]

என்ற வரிகளில் அதிகமாக மக்களைத் திருவிழாவில் காணலாம் என்பதை உணர்த்தியுள்ளார்.

**4.10.0 கதை காட்டும் சமூகம்**

ஒரு சமுதாயத்தில் மனிதன் உயரப் பணத்தை விட பண்பே பெரிதானது என்பதற்கு உதாரணமாக முன்கோபி ராஜா, பணத்தின் மகிமை, பண்பே அடித்தளம், உதவாத டெலிபோன் போன்ற சிறுகதைகள் உள்ளன.

பணத்தின் மகிமை என்னும் சிறுகதையில் ஹாஸன் என்பவன் அரண்மனையில் வேலை செய்கிறான். அவனது வருமானத்துடன் இன்னும் அதிகமான பொருட்களைப்

பெற எண்ணுகிறான். அதனால் தன் மனைவியிடம் தன்னைச் சிறைக் கைதியாக்கிவிட்டதாகவும், விடுவிக்க வேண்டிய பணத்தைப் பெற மனைவியை நடிக்கச் சொல்கிறான். ஹாஸனுடைய மனைவி பாத்திமாவும் ஹாஸன் சொன்னவாறே நடித்துக் கடைக்காரர்களிடமிருந்தும் உறவினர்களிடமிருந்தும் அதிகமாகப் பொருட்களைப் பெறுகிறார்கள். இதனுடன் தினந்தோறும் அரண்மனையில் இருந்து ஏதாவது ஒரு பொருளை ஹாஸன் எடுத்து வந்ததன் மூலம் நிறையப் பொருட்களைச் சேகரிக்கிறார்கள். இச்செய்தியை அரசன் அரண்மனைக் காவலாளிகளால் அறிகிறான். தண்டனை தர எண்ணுகிறான். ஆனால் அவர்கள் இருவரும் கெஞ்சுகின்றனர். பின் அரசன் ஒரு முடிவு செய்து இந்த நகைகளையும் பொருட்களையும் அவர்கள் இருவரையும் வைத்துக் கொள்ளச் சொன்னார். உறவினர்களிடமும், கடைக்காரர்களிடமும் இவர்கள் எந்தவிதத் தொடர்பும் வைத்துக் கொள்ளக்கூடாது எனக்கூறி இவர்கள் செல்லும் இடங்களுக்கு அரண்மனைக் காவலாளிகளை அனுப்பி வைத்தார். இதனால் இவர்களிடம் உள்ள பொருட்களை விற்க முடியாததால் பொருள் இருந்தும் உண்பதற்கு வழியில்லாமல் வருந்தினார்கள். பின் இவர்கள் அரசனிடம் சென்று பொருட்களைக் கொடுத்து ஒரு நல்ல வேலையைப் பெற்றனர். இதனைக் குழந்தைக் கவிஞர் அழ.வள்ளியப்பா ''அரசர் உடனே சேவகர்களை அழைத்தான்''. இந்த 'இரண்டு மூட்டைகளையும்' எடுத்துச் செல்லுங்கள். இவர்களிடம் ஏமாந்த கடைக்காரர்களிடம் ஒரு மூட்டையையும், உறவினர்களிடம் மற்றொரு மூட்டையையும் கொடுத்துவிடுங்கள்.'' என்று உத்தரவிட்டான். பிறகு ஹாஸனையும் பாத்திமாவையும் பார்த்து, இப்பொழுதாவது பணத்தின் மகிமை தெரிகிறதா? பணம் என்பது ஒரு சின்னம்தான். அதை எவ்வளவுக்கு எவ்வளவு நல்ல வழிகளில் உபயோகப்படுத்துகிறோமோ அவ்வளவுக்கு அவ்வளவு அதற்கு மகிமை உண்டு; நமக்கும் மகிழ்ச்சி உண்டு. பெட்டியிலோ அல்லது பையிலோ உண்ணாமல், உடுத்தாமல் சேர்த்து வைத்திருந்தால் அதற்கும் மகிமை கிடையாது. நமக்கும் மகிழ்ச்சி கிடையாது; இப்போதாவது இதைத் தெரிந்து கொள்ளுங்கள்'' என்றான். ''ஆம் அரசே இப்பொழுது நன்றாகத் தெரிந்துகொண்டோம்'' என்றனர் ஒரே குரலில் ஹாஸனும் பாத்திமாவும்.''[91] இவ்வாறு பணத்தின் மகிமை உணர்ந்த இவர்களின் இத்திருத்தம் நாளைய அரசியல் வாதிகளை ஒரு சிறந்த தலைவர்களாக மாற்றும். தலைவர்கள் சிறந்தால் சமூகம் சிறப்படையும் என்பதற்கு எடுத்துக்காட்டாக உள்ளது. மேலும் சமுதாயம் உயர நல்ல தலைவர்கள் தேவை. அதனால் நல்ல தலைவர்களை உண்மையால் நேர்மையால் பெற்றுவிட முடியும் என்பதற்கு எடுத்துக்காட்டாக அபூர்வ நண்பர்கள் என்னும் சிறுகதை உள்ளது.

பாடல்கள் மட்டுமல்லாமல் சிறுகதைகளும் நாவல்களும் சமுதாயத்தில் மனிதர்களுடன் பழகும் தன்மைகளை வளர்க்கின்றன.

எத்தகு சூழ்நிலையிலும் பொய் கூறாத பண்பே சமுதாயத்தை உயர்த்தும் என்பதற்கு எடுத்துக்காட்டாக ‘பர்மா ரமணி’ என்னும் நாவல் உள்ளது.

சமுதாயத்தில் ஏழ்மையால் உள்ளவர்களோடும் நட்புறவுடன் பழகலாம் என்பதற்கு எடுத்துக்காட்டாக ‘நீலாமாலா’, ‘ஆருயிர்த்தோழி’ என்னும் நாவல்கள் உள்ளன.

## தொகுப்புரை

- சமுதாயம் என்ற சொல்லின் விளக்கமும் அறிமுகமும் உணர்த்தப்பெற்றது.
- கிராமத்தின் இயல்புகளைக்கூறி, இத்தகைய கிராமத்தை வளர்க்க வேண்டும் என்று குழந்தைக்கவிஞர்கள் கூறியுள்ளனர்.
- நகர்ப்புறச் சமுதாயம் சிக்கலான சூழ்நிலையில் அமைந்தது. அதனால் கவனத்துடன் பயணிக்க வேண்டும் என எச்சரித்துள்ளனர்.
- சமூகச் சிக்கல்களுக்கு மனிதனின் ஒழுக்கமின்மையே காரணமாக அமைந்துள்ளது. அதனால் தனி மனிதன் ஒழுக்கச் செயல்களை வளர்த்து சமுதாயத்தை உயர்த்த காந்தீயச் சிந்தனைகள் தேவை என்பதை உணர்ந்து அதைப் பதிவு செய்துள்ளனர்.
- சமூகம் களவுகளாலும் அழிக்கப்பட்டு வருவதால் அதைத் தீர்க்க வழிசொல்லப்பட்டுள்ளது.
- ஒற்றுமையால் இந்த சமூகத்தைத் திருத்த முடியும் என்பதைக் காட்டியுள்ளனர். இதற்கு மீன், ஆட்டோ போன்ற பொருள்களை உதாரணமாகக் கூறி விளக்கியுள்ளனர்.
- ஆலைக்கழிவுகளால் ஏற்படும் பாதிப்பையும், குழந்தைத் தொழிலாளர்களால் ஏற்படும் பாதிப்பையும், குண்டால் ஏற்படும் தீய விளைவையும் பாடல்களில் அறிய வைத்துள்ளனர்.
- சமூகம் உயர்வதற்கு ஏற்றாற்போல் ஆன்மீகத்தால் அறம் வளர்க்கலாம் என்று கூறியுள்ளனர். மாசகற்ற மரம் வளர்த்தல் அவசியமாகும் என்பதை விதைத்துள்ளனர்.
- நாடு காக்கும் எதிர்கால இளைஞர்கள் உருவாகும் வண்ணம் வல்லரசுச் சிந்தனைகள் உள்ளன.
- பொருளாதாரத்தை உயர்த்தும் சேமிப்புச் சிந்தனைகள் பாடல்கள் வழி அறியப்பெற்றுள்ளன.
- சமூக இணக்கத்திற்கு மொழிப்பாதுகாப்பு அவசியமானது என்பதைக் கூறியுள்ளனர்.
- மூவண்ணங்களால் ஆன கொடியின் இயல்புகளையும் அறிய வைத்துள்ளனர்.
- சுதந்திரத்தின் இயல்புகளை உணரச் செய்துள்ளனர்.

- கல்வியால், உழைப்பால் உயர்ந்த குழந்தைகள் வெளிநாட்டுக் கொள்கைகளை ஏற்க வேண்டும். ஆனால் இந்தியாவை விட்டு அயல் நாட்டிற்குச் செல்லுதல் கூடாது என்பதைப் பதிவு செய்துள்ளனர் என்று அறியப்பெற்றுள்ளது.
- தலைவர்கள் நாட்டை நெறிப்படுத்தும் தகுதியுடையவர்கள். அதனால் காந்தி, நேரு போன்ற தலைவர்களின் கொள்கைளைப் பின்பற்றச் செய்யும் பாடல்களைப் படைத்துள்ளனர்.
- சமூகக் கவிஞர்களான பாரதி, கண்ணதாசன், கவிமணி போன்ற கவிஞர்களைப் பாடல்கள் வழி அறியச் செய்துள்ளனர்.
- சமூகச் சான்றோரான அப்துல்கலாம் போன்ற நம்முடன் இன்று வாழ்ந்த சான்றோரையும், முத்தையவேள், எம்.ஏ.எம்.ராமசாமி போன்ற அன்றைய சான்றோரையும் பற்றிப் பாடல்கள் உணர்த்துகின்றன.
- சமூக நிறுவனங்களையும், செஞ்சிலுவைச் சங்கத்தையும், நூல் நிலையத்தையும் அறிமுகப்படுத்தும் பாடல்கள் உள்ளன.
- சமுதாய வளர்ச்சியில் தலைமைப் பொறுப்பின் அவசியத்தையும் உணர்த்தியுள்ளனர்.
- சமுதாய விழாக்களையும் நினைவுகூரச் செய்துள்ளனர்.
- சமுதாயத்தில் பணத்தை விடப் பண்பே அடிப்படையானது என்பதை உணர்த்துகின்ற கதைகளை எழுதியுள்ளனர்.
- இவ்வாறு பாடல்கள் மட்டுமல்லாமல் சிறுகதைகளும், நாவல்களும் சமுதாயச் சிந்தனைகளைக் குழந்தைகளுக்கு உணர்த்துவதாக அமைந்துள்ள தன்மை ஆராயப்பெற்றுள்ளது.

## இயல்-4

## அடிக்குறிப்புகள்.

1. சீனி.விசுவநாதன் (ப.ஆ.), பாரதியார் கவிதைகள், ப.123.

    "உழவுக்கும் தொழிலுக்கும்
    வந்தனை செய்வோம் -வீணில்
    உண்டுகளித் திருப்போரை
    நிந்தனை செய்வோம".
2. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.83.
3. மேலது ப.62.
4. மேலது ப.74.
5. மேலது ப.90.
6. செல்லகணபதி, மணக்கும்பூக்கள், ப.20.
7. மேலது ப.36.
8. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.90.
9. செல்லகணபதி, மணக்கும் பூக்கள், ப.18.
10. மேலது ப.18.
11. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.69.
12. அழ.வள்ளியப்பா, சிரிக்கும் பூக்கள், ப.46.
13. செல்லகணபதி, மணக்கும்பூக்கள், ப.159.
14. ச.முருகேசன், செவ்வியல் இலக்கியச் செந்நெறி ப.49.
15. செ.பழனிச்சாமி, புறநானூற்றில் தமிழர் பண்பாடு, ப.8.
16. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம் (இ.தொ.), ப.59.
17. செல்லகணபதி, மணக்கும்பூக்கள், ப.196.
18. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம் (இ.தொ.), ப.76.
19. மேலது ப.133.
20. கு.ராஜவேலு (தொ.ஆ.), நாமக்கல் கவிஞரின் தேர்ந்தெடுத்த கவிதைகள், பா.38 கத்தியின்றி ரத்தமின்றி
21. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம் (இ.தொ.), ப.134.
22. செல்லகணபதி, மணக்கும் பூக்கள், ப.119.
23. வ.சுப.மாணிக்கம் (உ.ஆ.), மாணவர்களுக்கான அறநெறி நூல்கள், ஆத்திச்சூடி பா.வ.1.
24. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.93.
25. செல்லகணபதி, மணக்கும்பூக்கள், ப.120.
26. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.61.
27. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம்,(இ.தொ.), ப.143.
28. மேலது ப.142.
29. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், பக்.129 -130.

30. செல்லகணபதி, வளரும் பூக்கள், ப.13.
31. சீனி.விசுவநாதன் (ப.ஆ.), பாரதியார் கவிதைகள், ப.22.
32. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.94
33. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம் (இ.தொ.), ப.57
34. செல்லகணபதி, மணக்கும் பூக்கள், ப.148.
35. மேலது ப.187.
36. அழ.வள்ளியப்பா, சிரிக்கும் பூக்கள், ப.106.
37. மேலது ப.61.
38. செல்லகணபதி, வளரும் பூக்கள், ப.69.
39. மேலது ப.71.
40. செல்லகணபதி, நேற்று இன்று நாளை, ப.32.
41. செல்லகணபதி, வளரும் பூக்கள், ப.87.
42. மேலது ப.96.
43. மேலது ப.75.
44. செல்லகணபதி, விரிந்த வானம், ப.35.
45. செல்லகணபதி, மணக்கும் பூக்கள், ப.215.
46. மேலது ப.134.
47. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.136.
48. மேலது ப.120.
49. அ.லெ.நடராஜன், ஸ்ரீ தாயுமானவர் வாழ்வும் வாக்கும், முன்னுரை.
50. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம் (இ.தொ.), ப.17.
51. அழ.வள்ளியப்பா, சிரிக்கும் பூக்கள், ப.79.
52. செல்லகணபதி, வளரும் பூக்கள், ப.11.
53. செல்லகணபதி, மணக்கும் பூக்கள், ப.42.
54. செல்லகணபதி, நேற்று இன்று நாளை, ப.36.
55. அழ.வள்ளியப்பா, சிரிக்கும்பூக்கள், ப.104.
56. செல்லகணபதி, மணக்கும்பூக்கள், ப.92.
57. மேலது ப.113.
58. அழ.வள்ளியப்பா, சிரிக்கும் பூக்கள், ப.52.
59. செல்லகணபதி, மலரும் மொட்டுகள், ப.25.
60. செல்லகணபதி, மணக்கும் பூக்கள், ப.8.
61. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.89.
62. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம் (இ.தொ.), ப.79.
63. அழ.வள்ளியப்பா, சிரிக்கும் பூக்கள், ப.165.
64. செல்லகணபதி, மணக்கும் பூக்கள், ப.163.
65. செல்லகணபதி, மணக்கும் பூக்கள், ப.93.
66. ப.முத்துக்குமாரசுவாமி (தொ.ஆ), இருபதாம் நூற்றாண்டு 100 தமிழ்க்கவிஞர்கள், ப.24.

67. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம் (இ.தொ.), ப.88.
68. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.118.
69. செல்லகணபதி, வளரும் பூக்கள், ப.83.
70. செல்லகணபதி, மணக்கும் பூக்கள், ப.125.
71. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம் (இ.தொ.), ப.196.
72. செல்லகணபதி, மணக்கும்பூக்கள், ப.52.
73. மேலது ப.52.
74. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம் (இ.தொ.), ப.89.
75. செல்லகணபதி, மணக்கும்பூக்கள், ப.60.
76. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம் (இ.தொ.), ப.121.
77. செல்லகணபதி, மணக்கும்பூக்கள், ப.54.
78. மேலது ப.56.
79. மேலது ப.58.
80. மேலது ப.62.
81. மேலது ப.70.
82. மேலது ப.74.
83. மேலது ப.76.
84. மேலது ப.78.
85. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.114.
86. செல்லகணபதி, வளரும் பூக்கள், ப.30.
87. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம் (இ.தொ), ப.136.
88. செல்லகணபதி, மணக்கும் பூக்கள், ப.123.
89. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம் (இ.தொ), ப.144.
90. செல்லகணபதி, மணக்கும் பூக்கள், ப.103.
91. அழ.வள்ளியப்பா, வேட்டைநாய், பக்.60-61.

# இயல் ஐந்து



## உளவியல் அடிப்படையில் உணர்த்தப்படும் செய்திகள்

## இயல்- 5

## உளவியல் அடிப்படையில் உணர்த்தப்படும் செய்திகள்.

குழந்தைப்பருவம் என்பது மனிதனின் தொடக்கப்பருவம் ஆகும். இதை இளமைப்பருவம் என்று கூறுவர். குழந்தைப்பருவ மனநிலை வளர்ந்த மனிதனின் மனிநிலையிலிருந்து வேறுபட்டது. எனவே குழந்தைகளுக்கு கூறுவனவற்றை அவர்கள் மனம் அறிந்து கூறுதல் இன்றியமையாதது. ஏனென்றால் மனஊடுபாடு வெற்றிக்கு வழிவகுக்கும். குழந்தைகளுக்குச் செய்திகளை விரும்பும் விதத்தில் கூறினால் அவர்கள் மனம் அதை ஏற்றுக்கொள்ளும்.

குழந்தை இலக்கியப் படைப்பாளர்கள் குழந்தை இலக்கியத்திற்கு ஆசிரியர்களாதலால் குழந்தை உளவியல் பற்றிய செய்திகளை அறிந்து எழுதுவது அவசியமாகிறது. இதன் காரணமாகவே குழந்தைகளுடன் பேசும்போதும், குழந்தைகளுக்காக எழுதும்போதும் பெரியவர்கள் குழந்தைகளாகவே மாறிவிடுகின்றனர். அவ்வகையில் குழந்தைகளுக்காக எழுதிய குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பாவும் செல்லகணபதியும் குழந்தையின் மனநிலை உணர்ந்து குழந்தை உளவியல் நோக்கோடு வெளிப்படுத்திய சிந்தனைகளை ஆய்வது இவ்வியலின் நோக்கமாகும்.

### 5.1 உளவியல்

உளவியல் என்றால் சைகாலஜி (psychology) எனப் பொருள்படும். இது ஆங்கில வார்த்தை ஆகும். இது இரண்டு கிரேக்கச் சொல்லிலிருந்து பெறப்பட்டதாகும். இவை சைகி, (psyche-soul) ஆன்மா லோகாஸ் (Logas-Talk) பேச்சு என்பர். சைகாலஜி என்னும் சொல்லை ஆன்மாவைப் பற்றிய பேச்சு என்பர். லோகாஸ் என்பதன் நேர்பொருள் அறிவியலென்னும் பொருளுடன் தொடர்புடையதாகும். சைகாலஜி என்பது ஆன்மாவைப் பற்றிய பேச்சு என்னும் பொருளையும் தருகிறது. உளவியலார் உளவியலை ஆன்மாவின் அறிவியல், மனத்தின் அறிவியல், உணர்ச்சியின் அறிவியல், நடத்தையின் அறிவியல் என்றெல்லாம் குறிப்பிடுகின்றனர்.

உளவியலானது மனிதர்களின் நடத்தையை ஆய்கிறது; விலங்குகள், பறவைகள் போன்ற உயிரினங்களின் நடத்தையை ஆய்கிறது; இவ்வாறு ஒரு மனிதனின் மனத்தையோ (அ) விலங்கு பறவைகளின் மனத்தையோ ஆய்கிற அறிவியலாக உளவியல் உள்ளது.

“நாம் எவ்வாறு உற்றுநோக்குகிறோம்; கற்கிறோம்; நினைவுகூர்கிறோம்; கற்பனை செய்கிறோம்; சிந்திக்கிறோம்; கருத்தாய்வு செய்கிறோம்; உணர்கிறோம்; செயல்புரிகிறோம் என்பன பற்றி விளக்க முற்படுவதே உளவியல்”[1] இவ்வாறு நம் செயல்களை ஆராய்ந்து உரைப்பதாக இக்கூற்று அமைகிறது.

**5.2. குழந்தை உளவியல்**

“நாம் கற்பிக்கும் பொருள் பற்றிய அறிவுடன் குழந்தையைப் பற்றியும் ஆசிரியர் அறிய வேண்டும். குழந்தையைப் பற்றியறிய உளவியல் உதவும்.”[2] என இ.பா வேணுகோபால் குறிப்பிட்டுள்ளார்.

குழந்தை உளவியல் பிறப்பு உளவியலின் ஒரு பிரிவாகும். இது குழந்தைகளுக்கு இன்றியமையாத செய்திகளை அவர்கள் மனமறிந்து பயிலுவதற்கேற்ற நெறியை ஆராய்கிறது. ஏனென்றால் குழந்தைகள் மனஎழுச்சி பெறாவதவர்கள்; முழுவளர்ச்சி பெறாத நுண்ணறிவைப் பெறாதவர்கள்; நன்மை தீமை எதுவெனப் புரிந்துகொள்ள இயலாதவர்கள். ஆதலால் குழந்தைகளுக்கு குழந்தைகளின் இயல்புகளை அறிந்து கூறுதல் அவசியமானதாகும். குழந்தை வளரும்போதே அதன் மனம், தன்மை ஆகியவற்றை ஆராய்ந்து அவர்களின் ஆற்றலை வளரச்செய்வது அவசியமானதாகும் என்பதைக் குழந்தை உளவியலால் அறிகிறோம்.

“குழந்தைகள் எவ்வாறு முதிர்ச்சியுறுகின்றன? குழந்தைகளிடம் மொழி முதிர்ச்சி எப்போது தொடங்குகிறது? அவர்கள் எப்படி மனவளர்ச்சி பெறுகின்றனர்? அவர்களிடம் மொழி, மனம், சமூகம் உடல்வளர்ச்சிகள், மற்றும் மன எழுச்சிகள் எப்போது நிகழ்கின்றது என்பனவற்றையெல்லாம் ஆராய்கிறது.”[3] என்று உளவியலார் வரையறை செய்துள்ளனர். இந்தக் கூற்றின்படி வளர்ச்சி என்பது பொதுவாக குழந்தைப்பருவத்தில் அமைதல் இன்றியமையாததாகும். எந்த ஒரு செயலின் பயனையும் பிறர் வாயிலாகப் பெறுவதாக இருந்தாலும் அது மன விருப்பத்திற்கு ஏற்றாற்போல் அமைந்தால் மனம் அதை ஏற்றுக்கொள்ளும். அதனால் மேற்கண்ட மேற்கோளில் குறிப்பிட்டுள்ள மொழி, மனம், சமூகம் போன்றவற்றை அறிவதற்குரிய சிந்தனைகளைப் பாடல்களிலும் கதைகளிலும் இவ்விரு கவிஞர்களும் ஆங்காங்கு கூறியுள்ளனர். இச்சிந்தனைகளை,

5.3. உளமறிதலும் வழிநடத்தலும்
5.4.பெரியோரைப் பின்பற்றல்
5.5 அன்பு வளர்த்தல்.
5.6. இயற்கை –அறிதல்
5.7. செயற்கை அறிதல்
5.8. மன எழுச்சி
5.9. அச்சம் நீக்கல்
5.10. நற்பழக்கங்களைப் பின்பற்றல்
5.11. ஆளுமை வளர்த்தல்
5.11.1.மொழி வளர்ச்சி
5.11.2. கல்வி வளர்ச்சி
5.11.3 பண்பாடு வளர்த்தல்
5.12. சமூக வளர்ச்சி
5.12.1.நாட்டுப்பற்றளித்தல்

5.12.2.சங்கம் அறிதல்

5.12.3. பொருளின் அருமையுணர்தல்

5.12.4.தொழில் அறிதல் போன்ற தலைப்புகள் வெளிப்படுத்தும்.

**5.3.உளமறிதலும் வழிநடத்தலும்**

குழந்தைகளின் உளமறிந்து வழிநடத்தும் உறவுகள், தாய், தாத்தா, பாட்டி போன்றோர். ஆனால் இவர்கள் அன்பின் மிகுதியால் குழந்தைகளுக்கு எத்தகைய துன்பத்தை விளைவிக்கின்றனர் என்பதைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பாவும் செல்லகணபதியும் விளக்கியுள்ளனர்.

“அம்மா வுக்கு சம்பந்தம்
அப்பா வுக்குச் செல்லப்பன்
பாட்டிக் கோநான் பரமசிவன்
பள்ளியில் இனிமேல் எப்பெயரோ?”[4]

பெற்றோர்கள் பெயர்களை மாற்றி மாற்றி வைப்பதைக் கண்டு குழந்தைகள் வருத்தமடைவார்கள் என்பதை நகைச்சுவை உணர்வுடன் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா கூறியுள்ளார். இவரைப்போல் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும்,

“அப்பா விடத்தில் பட்டியலை
அவனும் காட்டிய போதுஅவரும்
எப்படி கணித மதிப்பெண்ணும்
இருபதாய்ப் போனது எனக்கடிந்தார்.

அப்பா நீங்கள் படிக்கையிலே
அடைந்த மதிப்பெண் பட்டியல்தான்
இப்போது உங்கள் கைகளிலே
எனது பட்டியல் இதுஎன்றான்.”[5]

பெற்றோர்கள் இளவயதில் படிப்பதைவிட இப்போதைய குழந்தைகள் நன்கு படிக்கிறார்கள். தேவையில்லாமல் பெற்றோர்கள் குழந்தைகளைத் துன்புறுத்துவதைத் தவிர்க்கவேண்டும். இதையே குழந்தைகள் விரும்புகிறார்கள் என்பதை உணர்வால் குழந்தையாகிக் கூறியுள்ளார்.

“தட்டிக் கொடுங்கள் அப்பா நீங்கள்
தட்டிக் கொடுங்கள் அம்மாவே
கெட்டிச் செயல்கள் செய்து காட்டுவேன்
கெலித்துக் காட்டுவேன் படிப்பினிலே.”[6]

ஒவ்வொரு குழந்தைகளையும் பெற்றோர்கள் தட்டிக்கொடுத்து வளர்க்கவேண்டுமென விரும்புகிறார்கள் என்ற சிந்தனையைக் குழந்தையாகிக் கூறியுள்ளார்.

இத்தகைய பாடல் சிந்தனைகள் குழந்தையே தன்னுடைய விருப்பத்தை (உள்ளத்தை), வெளிபடுத்துவதாக அமைந்துள்ளன.

### 5.4. பெரியோரைப் பின்பற்றல்

உறவுகளில் தாய் தெய்வம் போன்றவள்; முதன்மையானவள்; அதனால் அம்மாவை வணங்குவதற்குரிய பாடல்களையும் எழுதியுள்ளனர்.

"நிலவைக் காட்டி காட்டி எனக்கு
நெய்யும் சோறும் ஊட்டுவாள்.
"உலகில் உன்போல் உயர்ந்த செல்வம்
உண்டோ?" என்றும் போற்றுவாள்."[7]

என்று அம்மாவின் இயல்புகளை அம்மாவின் செயல்களால் குழந்தையே உணர்ந்து கூறுவதாகக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா பாடியுள்ளார். இவரைப்போல் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும் 'அம்மா' என்னும் பாடலில் கண், காது, வாய் போன்ற உறுப்புகள் அம்மா அழைத்தால் கேட்பதற்காக உள்ளது. அம்மா ஊட்டினால் சாப்பிடுவதற்காக உள்ளது என்பதைக் குறிப்பிட்டுள்ளார். (இந்தப்பாடல் இரண்டாவது இயலில் அறிவுரைப்பயன்பாட்டு உத்தியில் தன்செயலால் பெரியோர்க்கு மதிப்பளித்தல் என்னும் தலைப்பில் தரப்பட்டுள்ளது.)

அம்மாவைப் போல் தந்தையின் செயல்களையும் பின்பற்ற வேண்டும் என்பதை உணர்த்த,

"அப்பா வாங்கித் தந்தது
அருமை யான புத்தகம்.
அதில் இருக்கும் படங்களோ
ஆஹா மிக அற்புதம்!"[8]

என குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா பாடியுள்ளார்.

"அப்பா என்னைத் தண்ணீ ருக்குள்
அப்படித் தள்ளி விட்டார்!
அப்பா வுக்குக் கோபமா என்மேல்
அவர்ஏன் தள்ளிவிட்டார்?

அப்பா என்னை வல்லவ னாக்கும்
அக்கறை கொண்டவர்தான்
அப்பா மனம்போல் நீச்சல் கற்கவே
அப்படித் தள்ளிவிட்டார்!"[9]

என்னும் பாடல் வரிகளில் குழந்தைகளின் நன்மைக்காகவே தாய் தந்தையர் பாடுபடுவார்கள் என்பதைக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி உணர்வால் குழந்தையாகி உணர வைத்துள்ளார்.

"படிப்புச் சொல்லித் தருவார் -நல்ல
பழக்கம் கற்றுத் தருவார்
சிடுசி டுக்க மாட்டார் -என்றும்
சிரித்துக் கொண்டே இருப்பார்."[10]

தாத்தாவின் பெருமையைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா உணர்வால் குழந்தையாகி அறியச் செய்துள்ளார். இவரைப்போல் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும்,

"தாத்தா நடையும் தளர்ந்தால்
தாங்கிப் பிடித்துக் கொள்வேன்!
மூத்தோர் தம்மை மதிப்பேன்
முழுதும் அவர்சொல் கேட்பேன்!"[11]

என்னும் பாடல் வரிகளில் தளர்ந்த தாத்தா போன்ற பெரியவர்களைப் பாதுகாக்கும் பொறுப்பினைக் குழந்தைகள் உணர உணர்வால் குழந்தையாகிப் பாடியுள்ளார்.பாட்டியின் அன்பை உணரவைப்பதற்கேற்ற பாடல்களும் உள்ளன.

"அப்பா அடித்துவிட்டால்- என்னை
அணைத்துத் தேற்றும் பாட்டி
தப்போ தவறோ செய்தால்-என்னைத்
தடுத்துத் திருத்தும் பாட்டி"[12]

தாய் தந்தையின் கண்டிப்பால் வருந்தும்போது ஆறுதல் தருபவளாக உள்ளாள். அதே நேரத்தில் தவறுகளைத் திருத்தும் குணமுடையவள் பாட்டி என்பதை உணர்த்த குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா உணர்வால் குழந்தையாகிப் பாடியுள்ளார்.

"ஆட்டுக் குட்டி ஆட்டுக் குட்டி
அடடா மழையில் நனையாதே
மாட்டிக் கொண்டால் மழையால்
உனக்கு
வருமே தும்மல் ஏராளம்

பாட்டி தருவாள் மருந்தை அதுவும்
பாகற்காய்போல் கசப்பாகும்
ஆட்டுக் குட்டி ஆட்டுக் குட்டி
அடடா மழையில் நனையாதே."[13]

என்னும் பாடல் வரிகளில் மழையில் நனைந்தால் தும்மல் வரும். பின் பாட்டியின் கசப்பான மருந்தைச் சாப்பிட நேரிடும் என்பதை ஆட்டுக்குட்டியிடம் குழந்தை கூறுவது போல குழந்தைக்கவிஞர் செல்லகணபதி கூறியுள்ளார்.

### 5.5. அன்பு வளர்த்தல்

பிற உயிர்களின் நேசிப்பு குழந்தைகளின் அன்பை மிகுதிப்படுத்தும். இதைப் 'பூனைக்குட்டி' 'வெள்ளை முயல்' போன்ற பாடல்களிலும் 'நல்ல நண்பர்கள்' போன்ற கதைகளிலும் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா வளர்த்துள்ளார்.

"பள்ளி விட்டு வந்ததும்,
பாசத் தோடு பூனைகள்

துள்ளி வந்தே, ‘மியாவ், மியாவ்
தூக்கு என்றே சொல்லுமாம்.

ஆளுக் கொன்றாய்த் தூக்குவோம்.
அணைத்துக் கொஞ்சி மகிழுவோம்.
தோளின் மீதும் ஏற்றுவோம்.
சுற்றிச் சுற்றி ஆடுவோம்.’’[14]

என்னும் பாடல் வரிகளில் பூனையைத் தோளின் மீது ஏற்றி விளையாட வேண்டும் என்ற அன்பின் வெளிப்பாட்டைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா காட்டியுள்ளார்.

‘‘துள்ளி துள்ளி ஓடுதுபார்
வெள்ளை முயல் அம்மா – அதை
மெள்ள ஓடிப் பிடித்திடவே
மிகவும் ஆசை அம்மா.

பஞ்சு போன்ற உடலைத் தடவிப்
பார்க்க ஆசை அம்மா –நான்
கொஞ்சிப் பேசிக் கூடி ஆடிக்
குதிக்க வேண்டும் அம்மா’’[15]

முயலின் மீது குழந்தைகள் கொண்டுள்ள அன்பைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா பதிவு செய்துள்ளார்.

‘‘பஞ்சு போலே முடியைக் கொண்ட
பாமரேனியன்
கொஞ்சி அணைத்துக் கொள்ள ஏற்ற
பாமரேனியன்!’’[16]

என்ற வரிகளில் நாயின் மீது அன்பு கொள்ள வேண்டும் என்பதைக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி உணர்த்தியுள்ளார்.

வேட்டைநாய் என்னும் சிறுகதையில் ஸெதாந்தா என்னும் சிறுவன் பிரபு என்பவரின் வேட்டைநாயைத் தன் உயிரைக் காப்பாற்றிக் கொள்வதற்காகக் கொன்றான். இதனால் பிரபு வருந்தினார். அவர் மன வருத்தத்தைப் போக்கத் தானே ‘பிரபு’ என்பவரின் வேட்டைநாய்போல் இருந்து காவல் காத்தான். இதற்கு எடுத்துக்காட்டாக,

‘‘நானே உங்கள் வீட்டில் வேட்டைநாய் போல் இருந்து காவல் காத்து வரப்போகிறேன்.’’[17] என்று விருப்பத்தை ‘வேட்டைநாய்’ என்னும் சிறுகதை எடுத்துரைத்துள்ளது.

இன்று குழந்தைகளின் பெற்றோர்களாகிய பல பெரியவர்கள் தன்னை வளர்த்த பெற்றோர்களை முதியோர் இல்லத்தில் சேர்க்கிறார்கள். இந்நிலையைக் குழந்தைகள் பின்பற்றக்கூடாது என்பதற்காகக் கதைகளில் சில சிந்தனைகளைக் கூறியுள்ளனர்.

எடுத்துக்காட்டாக ‘‘நல்ல நண்பர்கள்’ என்னும் சிறுகதையைக் குறிப்பிடலாம். இதில் சீதா, முரளி ஆகிய இருவரும் தான் வளர்த்த கஸ்தூரி என்ற வாத்தையும், வீரன் என்ற நாயையும் அன்பாக வளர்த்தார்கள். இந்த இரு உயிர்களும் தேவையற்ற காரணத்தினால் இறந்தன. இதனால் அவர்கள் வருத்தத்தை,

‘‘ஐயோ, வீரா! நீ எங்களை விட்டுப் பிரிந்து விட்டாயே! இனி எப்படி எங்களுக்குப் பொழுது போகும்?’’[18] என்று தன்னுடன் பழகிய நிகழ்வுகளை என்றும் உணரும் வண்ணம் இறந்த இடத்தில் இரு செடிகளை நட்டு வளர்த்தனர். இச்செயல் தன்னை வளர்த்தவர்களை தன்னுடன் பழகியவர்களை நேசிக்க வேண்டும் என்பதை உணர்த்துகின்றன என்பதைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா பதிவு செய்துள்ளார்.

இதைப்போல ‘பூங்குளம் ராஜா’ என்னும் சிறுகதையில் செல்வம் என்னும் சிறுவன் நாயைப் பிரிந்ததால் பட்ட வேதனையை உளவியல் பொருத்தப்பாட்டுடன் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி உணர்த்தியுள்ளார். இதனை,

‘‘ஒரு நாள் இரவு செல்வம் தூங்கின பிறகு நான் தேரோட்டியைக் கூப்பிட்டு நாயைத் தூக்கிக்கொண்டு போய் எங்கேயாவது தூரத்துக் கிராமத்தில் விடச் சொன்னேன்.

அன்றையிலிருந்து செல்வம் சரியாகச் சாப்பிடுவதில்லை தூங்குவதில்லை. எந்நேரம் பார்த்தாலும் நாயைப்பற்றியே பிதற்றிக் கொண்டிருந்தான். அதன் விளைவுதான் அவன் இப்படி இளைத்து விட்டான்.’’[19] இந்நிகழ்வுகளில் அன்பு செலுத்திய உயிர்களைப் பிரிதல் கொடுமையானது என்பதை உணர்த்துகிறது.

பாடல்களில், கதைகளில் கொடுக்கப்பட்டுள்ள இந்த அன்பு வெளிப்பாடு முதியோர் இல்லத்தில் வாழும் பெரியோர்களின் நிலையை மாற்றி இல்லத்திலேயே வாழவைக்கும். மேலும் இது மனநிலையைப் பாதிக்காது இருக்க வேறு புதிதான செயல்களைச் செய்வதால் மனதில் பதிந்த பழைய வருத்தங்களை அகற்றுவதற்கு ஏற்றாற்போல் இருக்கும் என வழி கூறியுள்ளனர். மேலும் பூனை, முயல் போன்ற உயிரினங்களிடம் காட்டும் அன்பு அவர்களைப் பிற்காலத்தில் சிறந்த மனிதர்களாக்கி மனிதர்களைக் காக்கும் சிறந்த மனிதர்களாக விளங்குவார்கள் என்பதற்கு மேலே தரப்பட்டுள்ள சிந்தனைகள் எடுத்துக்காட்டாக அமைந்துள்ளன.

### 5.6. இயற்கை அறிதல்

செடி கொடி போன்ற தாவரங்கள் மனிதனுக்கு உதவுபவை. ஒரு பொருளை அசையச் செய்வது காற்று. இதைப்பார்க்க முடியாது. செடி, கொடிகள், காற்று போன்றவை இயற்கையாகும். இதில் செடி, கொடிகளை குழந்தைகள் பார்த்திருப்பார்கள். ஆனால் காற்றினைப் பார்த்திருக்க மாட்டார்கள். அதனால் இதனை உணரலாம். பார்க்க முடியாது என்கின்ற கருத்துகளை விளக்க,

அண்ணன் - காற்றை எந்த இடத்திலேனும்
கண்ட துண்டோ தம்பிநீ?

தம்பி – காற்றை இநதக் கண்களாலே
கண்ட தில்லை இதுவரை.
அண்ணன் - காற்றை யாரும் கண்டதாகக்
காதில் கேட்ட துண்டோநீ?
தம்பி – காற்றை எவரும் கண்டதாகக்
காதில் விழவும் இல்லையே!
அண்ணன் -காற்று உண்டு உலகில் என்று
கண்டு கொள்வ தெப்படி?
தம்பி - கண்டு பிடிக்க வழிகள் உண்டோ?
கற்றுத் தருவாய் அண்ணனே.''

∴ ∴ ∴

**அண்ணன்**

பட்டம் மேலே செல்வதைப் பார்
பச்சை இலைகள் அசைவதைப் பார்.
கடலில் அலைகள் எழுவதைப் பார்.
காகி தங்கள் பறப்பதைப் பார்.''[20]

என இவ்வரிகள் மூலம் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா காற்றின் இயல்பினை செடி கொடிகள் அசைவதன் மூலம் அறிந்துகொள்ள முடியும் எனக் கூறியுள்ளார்.

''தென்ற லேநீ அங்ஙனம்
திகழ வேண்டும் என்றுதான்
உன்னை மறைத்துக் கொண்டபின்
உடலைத் தழுவிச் செல்வையோ.''[21]

இயற்கை இனிமையைத் தரும் என்பதை அறியக் குழந்தைக்கவிஞர் செல்லக்கணபதியின் இவ்வரிகள் உதாரணமாகியுள்ளன.

இயற்கை மாற்றங்கள் சிலநேரங்களில் துன்பத்தையும் ஏற்படுத்தும். இதைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பாவும் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும் கூறியுள்ளனர்.

''சூறைக் காற்று வந்தது
சுழன்று சுழன்று அடித்தது
கூரை வீட்டைப் பிய்த்தது
குடியைக் கெடுத்துச் சென்றது.''[22]

என்ற வரிகளில் வலிமையான காற்று சில நேரங்களில் வீசுவதால் அது குடிசையில் வாழும் ஏழை மக்களைப் பாதிக்கின்றது என்பதைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா குழந்தையாகிக் கூறியுள்ளார்.

“கடலே கொந்தளித் திடலாமா
கடலே ராட்சச அலைகளினால்
விடலைப் பிள்ளைகள் எங்களையே
விழுங்கி ஏப்பம் விடலாமா.”[23]

என்ற இவ்வரிகளில் சுனாமியால் எண்ணற்றோர் இறந்ததைக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி உணர்த்தியுள்ளார். இப்பாடல்கள் குழந்தைகளுக்கு இயற்கை அறிவைத் தருகின்றன.

**5.7.செயற்கை அறிதல்**

இயற்கைக்கு மாறுபட்டவை செயற்கையாகும். உணவுப் பொருட்களும் வாகனங்கள் போன்ற பொருட்களும் செயற்கையாகும்.

“ரொட்டி ரொட்டி ரொட்டியாம்
வெட்டி வெட்டி வெண்ணெயில்
தொட்டுத் தொட்டு வாயிலே
பிட்டுப் பிட்டுப் போடலாம்.
ரொட்டி என்று சொன்னதும்
மட்டில் லாத ஆசைதான்
சொட்டு தம்மா எச்சிலும்
துட்டுக் கெங்கே போவது?”[24]

எனக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா ரொட்டி வாங்கப்பணம் தேவை என உணர்த்தியுள்ளார்.

“பள்ளிக் கூடம் செல்லும் போதும்
பாழும் சீடை நினைவுதான்
அள்ளி அள்ளித் தின்ற போதும்
ஆசை மட்டும் குறையலே

எனக்கு மட்டும் தானா ஆசை
இந்தச் சீடை தின்னவே
உனக்கும் ஆசை நிறைய உண்டு
உண்மை தானா இல்லையா!”[25]

என்னும் வரிகளில் ரொட்டி, சீடை போன்ற திண்பண்டங்கள் செயற்கையாகும். இதைத் தின்பதைக் குழந்தைகள் விரும்புவார்கள் என்பதை உணர்வால் குழந்தையாகிக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி கூறியுள்ளார்.

“சைக்கிள் ஏறிக் கொள்ளலாம்
சைதாப் பேட்டை செல்லலாம்.

காரில் ஏறிக் கொள்ளலாம்.
காரைக் குடிக்குப் போகலாம்.''[26]

மிதிவண்டியில் அருகில் உள்ள இடங்களுக்கும் காரில் தொலைவில் உள்ள இடங்களுக்கும் செல்லலாம் என்பதைக் குழந்தையாகி அழ.வள்ளியப்பா கூறியுள்ளார். இவ்வாறு இவ்விரு கவிஞர்களும் செயற்கைக்கு ஏற்ற சிந்தனைகளை அறியச்செய்துள்ளனர்.

**5.8. மன எழுச்சி**

மன எழுச்சி என்பது குழந்தைகளின் மனமகிழ்ச்சியாகும். இம்மகிழ்ச்சி குழந்தைகளின் ஆர்வத்தை அன்பை வளர்க்கும். அமைதியை நிலைநாட்டும். எதையும் தெரிந்து கொள்ளவேண்டும் என்ற உற்சாகத்தை ஏற்படுத்தும். இது மாதிரியான மனவெழுச்சிகள் உடலியல் தேவைகளைப் பூர்த்தி செய்யும். இதயத்தைத் துரிதப்படுத்தும். தசைகளில் தோன்றும் விரைப்பு, சோர்வு போன்றவைகளை நீக்கும் இயல்புடையது. மேலும் செரிவைக் கட்டுப்படுத்தும். இரத்தத்தின் சர்க்கரைப் பொருளை ஈரலிலிருந்து வெளியேற்ற ஏற்றதாக உள்ளது. இத்தகைய உளவியலாரின் இச்சிந்தனைகள் நிறைந்த குழந்தைகள் உற்சாகத்துடன் செயல்படுவர். விரல் சூப்புதல், நகங்கடித்தல் போன்ற இசைவின்மைப் பழக்கத்திலிருந்து விடுபவடுவார்கள். மேலும் இம்மகிழ்வே மன இறுக்கத்தைத் தளரச்செய்து உடலை இலகுவாக்குவதற்கு ஏற்ற இயற்கை மருந்தாகும் என்ற உளவியலாரின் இக்கருத்துக்கு ஏற்ற பாடல்கள் எடுத்துக்காட்டுக்குத் தரப்பட்டுள்ளன.

''கொட்டி டுவாய் மழையே – நாங்கள்
குதூகல மெய்திடவே
சொட்டுச் சொட்டாய்த் தொடங்கி – மழையே
சோ வெனப் பெய்திடுவாய்.

வளைவு கட்டி வைத்தே – பெரியார்
வருகை நோக்குதல்போல்
வளைந்த வான வில்லும்- உனது
வருகை காட்டிடுமே.''[27]

போன்ற வரிகளின் மூலம் மழை மனதிற்கு மகிழ்வைத் தரும் என்பதைக் குழந்தையாகிக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா அறிய வைத்துள்ளார்.

''கத்திக் கப்பல் செய்து வைத்தேன்
கால்வாய் கூடத் தோண்டி வைத்தேன்
வா, மழையே, வா
வா, மழையே, வா.''[28]

என்ற பாடல் வரிகளில் மழையைக் கண்டவுடன் சிறுவர்களுக்குத் தோன்றும் இயல்பான உணர்வைக் குழந்தையாகிக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா உணர்த்தியுள்ளார்.

'உண்மை பேசி உயரவும்
உயர்ந்தோர் வழியில் செல்லவும்,
தன்னம் பிக்கை கொள்ளவும்
சாமி அருளை வேண்டும்நாள்.
இன்று எனக்குப் பிறந்தநாள்
இறைவன் என்னைப் படைத்தநாள்.''[29]

இவ்வாறு இப்பாடல்வரிகளில் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா பிறந்தநாளில் நாம் மேற்கொள்ளும் தன்னம்பிக்கைச் சிந்தனை மனமகிழ்வை ஏற்படுத்தும் என்பதைப் பாடல்களில் காட்டியுள்ளார். மேலும் இவரது நகைச்சுவைச் சிந்தனைப்பாடல்களும், கேள்விநேர முடிவில் கூறப்பட்டுள்ள நகைச்சுவை உணர்விற்கேற்ற வினாவிடைகளும் மகிழ்ச்சியை ஏற்படுத்தும் வண்ணம் உள்ளன. இவரைப்போல் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும் மனமகிழ்ச்சிக்குரிய பாடல்களைப் பாடியுள்ளார்.

''சிலுசிலு சிலுவென மழை
சிரிக்க வைப்பதும் மழை
அள்ளிக் கொள்ளவும் மழை
ஆட்டம் போடவும் மழை!''[30]

போன்ற வரிகளைப் படிக்கும்பொழுதே குழந்தைகள் மகிழ்வார்கள்.

''முத்துப் போல மல்லிகை
மோழைக் குண்டு மல்லிகை
கொத்துக் கொத்தாய் மல்லிகை
கொஞ்சிச் சிரிக்கும் மல்லிகை!''[31]

இப்பாடல் வரிகள் மூலம் மல்லிகையின் அழகும் மனமகிழ்வு தரும் என்பதைக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி உணர்த்தியுள்ளார்.

''கருமை வண்ணக் குயிலே
கருமை வண்ணக் குயிலே
அருமை யாகப் பாட
யாரி டம்நீ கற்றாய்?

உருவம் தன்னைக் கண்டு
உன்மேல் வெறுப்புக் கொண்டு
கருமை கருமை என்று
கடிந்து சொல்வார் குயிலே!

செல்லும் நேரம் பார்த்துச்
சிறிது பாடு வாய்நீ

வில்லை விட்ட அம்பாய்
விரைந்தே அவரும் வருவார்

உனது பாட்டைக் கேட்டு
உள்ளம் பூரித்து ஆடும்
மனதில் இன்பம் பொங்கும்
மகிழ்ச்சி தங்கும் தங்கும்!”[32]

போன்ற பாடல்வரிகளும் மனவெழுச்சிக்கு ஏற்றதாக உள்ளன.

“காலையில் இயற்கையின் காட்சிகள் பார்ப்பது
கண்களின் பயனாகும்
மாலையில் மலரும் பூக்களைப் பார்ப்பதும்
மனதுக்கு இதமாகும்.”[33]

இவ்வாறு இயற்கைக் காட்சிகளாலும் மனமகிழ்வு ஏற்படும் என்பதற்கு இவ்வரிகள் உதாரணமாகியுள்ளன.

பிறந்தநாள் ஒவ்வொருவருக்கும் மகிழ்ச்சியைத் தரக்கூடியது. அதனால் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பாவைப்போல் பிறந்தநாள்விழாவைக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி அறிமுகப்படுத்தியுள்ளார்.

“எந்தநாளாய் இருந்தபோதும்
எவரோ ஒருவர் பிறந்தநாள்!
எந்தநாளும் சந்திக்கின்ற
எல்லோரையும் வாழ்த்துவோம்.

வாழ்கவாழ்க என்றுசொன்னால்
வாழும்உலகம் இன்பமாய்!
ஆழ்ந்தமனதில் தோன்றும் வாழ்த்து
அன்பைநாளும் வளர்க்குமே!”[34]

என்னும் இப்பாடல் வரிகளில் வாழ்த்துதலாலும் வாழ்த்துகளைப் பெறுதலாலும் மனமகிழ்வு ஏற்படும் என்பது உணர்த்தப்படுகிறது. அதனால் பிறந்தநாள்விழா போன்ற விழாக்களில் பிறரை வாழ்த்தி, தானும் மகிழ்ந்து பிறரையும் மகிழ்விக்கவேண்டும் என்பதை அறியலாம்.

### 5.9. அச்சம் நீக்கல்

குழந்தையின் மனம் சிறியது. அழுக்காறுகள் இல்லாதது; எளிதில் பாதிக்கப்படக்கூடியது. குழந்தைகள் சத்தங்களால் பாதிக்கப்படுவார்கள். மனக் குழப்பத்தால் பாதிக்கப்படுவார்கள்; விலங்குகள் பறவைகளைக் கண்டு பயங்கொள்ளுதலாலும் பாதிக்கப்படுவார்கள்; உயர்வு தாழ்வான இடங்களுக்குச் செல்லுவதாலும் பாதிக்கப்படுவார்கள்; தனிமையால் பாதிக்கப்படுவார்கள். இது போன்ற

அச்சத்தூண்டல்களில் இருந்து குழந்தைகளைப் பாதுகாப்பது இன்றியமையாததாகிறது. எனவே இவற்றைப் போக்கும் சிந்தனைகள் இவ்விரு கவிஞர்களின் பாடல்களில் உள்ளன.

கடுமையான தோற்றம் உடைய தெய்வங்களால் குழந்தைகளின் மனம் சில நேரங்களில் பாதிப்படையும். இதைப் போக்கும் வண்ணம்,

“எனக்கு ஒற்றை வாயைத் தந்த
பிரம்மதேவனே
ஏனோ கூட மூன்று வாய்கள்
பிரம்மதேவனே.”[35]

எனக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பாவும்,

“கையில் அரிவாள்
கருப்பண சாமி
கடுகடு முகத்துடன்
கருப்பன சாமி
பொய்சொன் னாலோ
பொல்லாச் சாமி!
பொய்ச்சொல் லாதே
பொய்சொல் லாதே!

நல்லது செய்தால்
நல்லவர் சாமி!.”[36]

எனக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும் பாடியுள்ளார். இவர்களின் இவ்வரிகள் கடுமையான தோற்றமுடைய தெய்வங்களைக் கண்ட மனம் அச்சத்திலிருந்து விடுபட ஏற்றதாகியுள்ளன.

வீடுகளில் அன்றாடம் காணும் பூனைகளும் எலிகளும் குழந்தைகளுக்கு அச்சத்தை விளைவிக்கும். அதனால் இவ்விரு கவிஞர்களும் பூனையைத் தோழனாகக் கூறியுள்ளனர்.

பறவைகளில் அச்சம் தரக்கூடியது ஆந்தை. இந்த ஆந்தையால் ஏற்படும் அச்சத்தை இவ்விரு கவிஞர்களும் நீங்கச் செய்துள்ளனர்.

“பயப்பட லாமா
பயம்தான் எதற்கு?
பாசம் மிகுந்திடப்
பழக்கிடு ஆந்தையை.”[37]

என்னும் பாடல்வரிகள் சான்றாகும்.

தவளை, அட்டை போன்ற பிற உயிரினங்களைக் கண்டு அஞ்சுவார்கள். இவற்றால் வரும் அச்சத்தைப் போக்கும் வண்ணம் குழந்தைக்கவிஞர்

அழ.வள்ளியப்பாவின் ‘மரவட்டை’ என்னும் பாடலும் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியின் ‘தவளையார்’ என்னும் பாடலும் உள்ளன.

இவ்வாறு வீடுகளில் அன்றாடம் காணும் பூனை, தவளைகள் போன்று குழந்தைகள் காணும் பொருட்களின் மீது உண்டாகும் அச்சத்தை நீங்கச் செய்த பாடல்களாக உள்ளன. கதைச் சிந்தனைகள் மூலமும் மனஇழப்பு நேரிடாத வண்ணம் இவ்விரு கவிஞர்களும் கூறியுள்ளனர். இதனைப் பின்வரும் தலைப்பில் அறியலாம்.

**தவறுகளை வெளிப்படுத்துதலே நன்மை**

குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா ‘குதிரைச்சவாரி’ என்னும் சிறுகதையில், மோஹன் குதிரையில் சவாரி செய்ய ஆசைப்படுகிறான். தந்தையால் குதிரை ஓட்டிக்குப் பணம் தராத சூழ்நிலையை உணர்கிறான். அதனால் குதிரை ஓட்டியிடம் பழகி குதிரையின் மீது பயணம் செய்தும் குதிரையுடன் பழகியும் வருகிறான். இப்படி இருந்து வரும் சமயம் ஒரு நாள் துஷ்டப் பையன்களால் குதிரைகள் மோஹனிடம் இருந்து பிரிகின்றன. இதனால் தனக்குத் துன்பம் நேரிடும் என எண்ணி, குதிரை ஓட்டியிடமும், பெற்றோரிடமும் சொல்லாமல் தன் மனதிற்குள்ளேயே புலம்புகிறான். இதைத் தானாக அறிந்த தந்தை குதிரைச் சவாரிசெய்யத் தானே உணர்ந்து அழைத்துச் செல்கிறார். இவ்வாறு நடந்தவற்றை முனுசாமியும் தந்தையும் உணர்ந்து அறிவுரை கூறியதை,

“குதிரைகள் கிடைக்கவில்லை என்று தெரிந்தவுடன் முனுசாமியிடம் போய்த் தகவல் சொல்லியிருக்க வேண்டாமோ? செய்த இந்தக் குற்றத்தை மறைக்க எவ்வளவு பொய் சொல்ல வேண்டியதாயிற்று? நல்ல வேளை, குதிரைகள் கிடைத்துவிட்டன. இனிமேல் இந்த மாதிரி செய்யாதே. என்ன சரிதானா?”[38] என்று அன்போடு புத்திமதி கூறினார் அப்பா.

இவரைப்போல் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும் தேவையற்ற மன இழப்புகள் நீங்க ‘அப்பாவின் கோபம்’ என்னும் சிறுகதையை எழுதியுள்ளார்.

“மெய்யப்பன் எங்காவது ஓடிப்போய் விடுவதுதான்! அப்பாவுக்கு நிம்மதி தரும். ஆகவே வீட்டைவிட்டுப் போய் விடுவது என்று முடிவுக்கு வந்தான்.”

மெய்யப்பன் வீட்டை விட்டுப் போக முடிவு செய்தான். எங்கே போவது என்று நினைத்த மெய்யப்பன், ஓவென்று அழுதுகொண்டே வீட்டுக்குத் திரும்பினான். நன்றியுள்ள நாய் வீராவையும் சேர்த்து அணைத்துக்கொண்டுதான்.”[39] என்ற இக்கதையில் நாய் நன்றி மிக்க விலங்கு என்பதையும், பெற்றோரை விட்டுப் போக முடிவு செய்த மெய்யப்பனுக்கு எங்கு போகவேண்டும் என்று தெரியவில்லை. எனவே வீடு திரும்பினான் என்று இக்கதையின் மூலம் தனக்குச் சோறிட்டு வளர்த்த நாயின் நன்றி உணர்வை எண்ணி, பெற்றோரைப் பிரிதல் மன இழப்பாகும் என்பதை உணர்ந்த மெய்யப்பன் திருந்துகிறான் என்பதைக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி கூறியுள்ளார்.

**5.10.நற்பழக்கங்களைப் பின்பற்றல்**

விரல்சூப்புதல், நகங்கடித்தல் போன்றவை குழந்தைகளின் பழக்கங்களாகும். இவற்றில் நகங்கடித்தல் பழக்கம் ஏற்படாமல் இருக்க நகங்களை வெட்டி எறிய வேண்டும். இதற்கு ஏற்றாற்போல் உள்ள பாடல்களை இவ்விரு கவிஞர்களும் எழுதியுள்ளனர். இதனை,

''பத்துப் பேர்கள் கைகளிலே;
பத்து பேர்கள் கால்களிலே;
மொத்தம் இருபது பேர்களடா!
வெட்டப் பட்டவை நகங்களடா!.''[40]

எனக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பாவும்,

''நகங்கள் விரலில் வளரும் போது
நறுக்கி எறியலாம்.!
இகழ்ந்து பேசும் அகந்தை வந்தால்
இன்றே அழிக்கலாம்!''[41]

எனக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும் நற்பழக்கங்களைப் பின்பற்றச் செய்துள்ளனர்.

**5.11. ஆளுமை வளர்த்தல்**

ஒரு மனிதன் உடல், உள்ளம் ஆகிய இரண்டின் வலிமையால் இயங்குகிறான். எனவே ஒரு மனிதனின் உடல் வலிமையுற, ஊட்டமுள்ள உணவும், ஆரோக்கியமான சூழலும் அவசியமாகின்றன. உள்ள வலிமைக்கு நல்ல சிந்தனைகளை வளர்த்துக்கொள்ளுதல் முக்கியமானதாகும். இவ்விரண்டு கருத்துகளும் ஆளுமைக்கு அவசியமாகும் என்பதை,

''மனிதன் உடல் உள்ளம் சார்ந்த ஒரு சமூக உயிரி. ஆகையால் அவனுடைய உயிரியல் காரணிகள், சமூகவியல் காரணிகள், உளவியல் காரணிகள் ஆகியவைகளால் ஆளுமை வளர்ச்சி அடைகிறது.''[42]

''சமூகக் காரணிகளான இல்லம், பள்ளிக்கூடம். மொழி, பண்பாடு ஆகியவை மனிதனது ஆளுமையில் பங்கு வகிக்கும்.''[43] என்று பாஞ்.இராமலிங்கம் குறிப்பிட்டுள்ள கூற்றுகளின் அடிப்படையில் ஆராய்கையில் உயிரியல் காரணிகளும் சமூகக் காரணிகளும் மனிதனது வளர்ச்சிக்கு அவசியமானதாகும்.

உயிரியல் காரணிகள் எனும்போது ஒருவனுடைய எடை, உயரம், புறத்தோற்றம், அச்சமற்ற தன்மை, உடல் ஆரோக்கியம் போன்றவை ஆகும். அதனால் இவ்விரு கவிஞர்களும் ஒருவனது உடல் எடை குறைபாடுகளைச் சரிசெய்யப் பாடல்களில் சத்துள்ள உணவுகளை உண்ணவேண்டும் என வழி கூறியுள்ளனர். இதற்கு எடுத்துக்காட்டாக குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பாவின் 'இன்பமாக உண்ணலாம்' என்னும் பாடலும், குழந்தைக்கவிஞர் செல்லகணபதியின் 'கீரை' என்னும் பாடலும் குறிப்பிடத்தக்கதாக உள்ளன.

சமூகக் காரணிகள் எனும்போது ஒரு குழந்தை தன் இல்ல உறவினர்களுடன் பழகி அறிந்த உயர்ந்த பழக்கங்களும், மொழிவளர்ச்சியும், பள்ளி கல்லூரிகளில் கல்வி கற்ற முறையும் குழந்தைகளின் ஆளுமையை வளர்ச்சியடையச் செய்யும். உறவினர்களுடன் பழகி உணர்ந்த சிந்தனைகள் இயல்-2 இயல்-3ல் தரப்பட்டுள்ளன. மொழிவளர்ச்சி, கல்வி வளர்ச்சி பற்றிய சிந்தனைகளைப் பின்வருமாறு அறியலாம்.

### 5.11.1 மொழி வளர்ச்சி

எந்த ஒரு மனிதனையும் கவர்வது நாம் பேசும் மொழியாகும். இதைத் தாய்மொழியில் கூறினால் அது ஆர்வத்தை ஏற்படுத்தி பேசத்தூண்டும். ஆதலால் மொழி வளர்ச்சிக்குரிய சிந்தனைகளைப் பாடல்களில் உளவியல் பொருத்தப்பாட்டுடன் எழுதியுள்ளனர்.

“மனந்திறந்து பேசும் மொழி
வாழ்க்கையில் உதவும் மொழி.
எங்கள் தாய்மொழி-மிக
இனிய தமிழ்மொழி
இனிய தமிழ்மொழி – அது
எங்கள் தாய்மொழி.”[44]

எனக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா மொழியின் இன்றியமையாமையைக் குழந்தைகளே உணர்ந்து கூறுவதாகப் பாடியுள்ளார்.

“தாய்மொழியால் சத்தியமாய்த் தகுதி
தானாக உயர்ந்துவிடும் மிகுதி!
தாய்மொழியில் கல்வியினைக் கற்போம்
சாதனையால் தலைநிமிரந்து நிற்போம்!”[45]

என்னும் பாடல் வரிகள் தாய்மொழி தகுதியை உணர்த்தும் எனத் தாய்மொழியின் இயல்புகளைக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி உணர்த்தியுள்ளார்.

### 5.11.2. கல்வி வளர்ச்சி

குழந்தைகளைப் பண்பட்டவர்களாக மாற்றுவது கல்வி ஆகும். ஆதலால் கல்வி பற்றி உளவியலார் கூறிய கருத்துகளோடு குழந்தைக்கவிஞர்களின் பாடல்களில் ஒரு சில கருத்துகள் பொருந்தியுள்ளன.

“அனுபவத்தின் மூலமாக நமது செயல்களை மாற்றி அமைக்கும் செயல் முறையே கற்றல் ஆகும். கற்றல் வாழ்க்கை முழுவதும் நடைபெற்றுக் கொண்டிருக்கும் ஒரு தொடர் நிகழ்வாகும்.”[46] என்ற உளவியலாரின் கூற்றிற்கேற்ப கற்றல் இன்றியமையாததாகும்.

“பிறக்கும் குழந்தை முதலில் சுவாசிக்கக் கற்பதன் மூலமாகத் தொடர்ந்து சுவாசிக்கின்றது. தாயிடம் பாலருந்தக் கற்பதன் மூலமாகத் தொடர்ந்து பாலருந்துகிறது.

இவ்வாறே நடத்தல், மிதிவண்டி ஓட்டுதல், பாடுதல், நீந்துதல் போன்ற பலவற்றையும் கற்பதன் மூலமாகவே செயலாற்றுகின்றோம்.''[47] என்ற கூற்றிற்கேற்றாற்போல் நீந்துதல், ஓடுதல், பாடுதல், மிதிவண்டி ஓட்டுதல் போன்ற கற்றல் வகைமைகளை இவ்விரு கவிஞர்களும் பாடல்களில் கற்றுக் கொடுத்துள்ளனர்.

**5.11.2.1. நீந்தக் கற்றல்**

படிப்பது எழுதுவதுபோல் நீந்துதலும் மிதிவண்டி ஓட்டுதலும் கற்றலாகும். தண்ணீருக்குள் உடல் முழுவதையும் படுக்கச் செய்து கைகள் இரண்டையும் மாற்றி மாற்றித் தூக்கிக் கொண்டு நீந்துதல் ஒரு வகையான கற்றலாகும்.

''கையைக் காலை உதறி உதறிக்
கற்றது நீச்சலென்பேன்
பையப் பைய நீரில் மிதக்கும்
பக்குவம் கற்றறிந்தேன்!''[48]

எனத் தற்காப்புக் கலைகளில் நீந்துதலும் ஒன்று. இந்த நீந்துதலும் வாழ்க்கைக்கு இன்றியமையாதது என்பதைக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி தம் பாடல்களில் பதிவு செய்துள்ளார்.

''எத்தனை மகிழ்ச்சி உற்சாகம்
எதிரும் புதிரும் குதியாட்டம்
கத்தி இரைந்து தண்ணீரைக்
கைகளால் இறைக்கும் பேரின்பம்!''[49]

என்று இப்பாடல் வரிகளில் நீந்துதல் மகிழ்ச்சி தரும். ஆதலால் நீந்துதலையும் கற்றுக்கொள்ளவேண்டும் என்கின்ற சிந்தனைகள் வலியுறுத்தப்பட்டுள்ளன.

**5.11.2.2. மிதிவண்டி ஓட்டக் கற்றல்**

நீந்துதல் போன்று மிதிவண்டி ஓட்டக் கற்றுக்கொள்வதும் அவசியமாகிறது.

''இடுப்பை வளைத்துக் கோணி டாமல்
என்றும் ஓட்டுவாய்!
எடுப்பாய் நிமிர்ந்து நேராய்ப் பார்த்துத்
துடிப்பாய் ஓட்டுவாய்.''[50]

என்று சைக்கிள் ஓட்டுதலின் முறைகளைப் பாடல்களில் கற்றுக் கொடுத்துள்ளார்.

**5.11.2.3 அனுபவத்தின் மூலம் கற்றல்**

அனுபவம் என்பது ஒரு செயலில் ஈடுபட்டு அதனை உணர்தல் ஆகும்.

''குழந்தைகள் தினசரி அனுபவங்களை முறைப்படுத்திக் கொள்கிறது.''[51] என்று உளவியலார் கூறியுள்ளார். இதற்கு எடுத்துக்காட்டாக,

''எண்ணற்ற மீன்களடா தம்பி – வானில்
எத்தனை இருந்திடினும் தம்பி

வெண்ணிலவு ஒன்றுபோலத் தம்பி- அவை
வீசிஒளி தந்திடுமோ தம்பி.

பெரியோர் ஒருவரைப்போல் தம்பி – பல
பேதையர்கள் கூடிடினும் ஆமோ
சரியாய் உணர்ந்திடுவாய் தம்பி - இதே
தாழ்வு உயர்வுணர்வாய் தம்பி.''[52]

என்னும் பாடல் வரிகளில் வெண்ணிலவு ஒளி வீசக்கூடியது. அதுபோல பெரியோரும் அன்பால் பண்பால் ஒளிவீசுவார்கள். அவர்களைப் பார்த்துக் குழந்தைகளும் கற்கமுடியும் என்கின்ற சிந்தனைகள் உணர்த்தப்பட்டுள்ளன.

''வளர்தல் குறைதல் அதனில்நாம்
மாறி மாறிக் கண்டிடலாம்.

வெள்ளையன் கறுப்பன் என்றெல்லாம்
வேற்றுமை எதுவும் அதற்கில்லை.
யாரா யிருப்பினும் அதன்தோற்றம்
என்றும் கறுப்பு நிறமேதான்''[53]

நாம் எங்கு சென்றாலும் நிழல் நம்மைத் தொடர்ந்து வரும். ஏனென்றால் இது நம்மைப் போன்ற வடிவமாகும். ஆனால் இதன் வடிவம் நிலா வெளிச்சத்தில் செல்லும்போதும் சூரிய ஒளியில் செல்லும்போதும் மட்டுமே காணப்படும். இவ்வாறு நிழலைப் பார்த்து நம்மைக் காட்டுகிற இந்த உருவத்தைக் குழந்தைகள் தாங்களாகவே பார்த்து உணர்வதற்கேற்றாற்போல் உள்ளன. இது அனுபவத்தின் மூலம் கற்றலுக்கும் தானே கற்றலுக்கும் எடுத்துக்காட்டாகும்.

''காசு பணம் கருவி பற்றிக்
கவலை ஏனோ தம்பி – நாம்
கடலின் ஓரம் மணலின் வீடு
கட்டு தற்கே தம்பி?''[54]

எந்த விதச் செலவும் இல்லாமல் கடல் மணலில் வீடுகள் கட்டலாம் என்பதைக் குழந்தைகள் மணலில் வீடு கட்டிப்பார்த்து அனுபவத்தால் உணர்வார்கள் என்பதைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா பாடல்களில் காட்டியுள்ளார்.

''அதிசயம்! அதிசயம்!
அடையாற்றில் அதிசயம்! அது
ஆலமரம் வளர்ந்திருக்கும்
அற்புதமாம் ரகசியம்

அகலத்தையும் நீளத்தையும்
அளந்து பார்த்தேன்- அம்மாடியோ!
அவ்வளவு பெரியதான
ஆலமரம் அதிசயம்!''[55]

இப்பாடல் வரிகளில் கூறப்பட்டுள்ளது போல் அடையாற்றில் உள்ள ஆலமரம் அகலமும் நீளமும் கொண்டது. இதைக் காணும்போது அதிசயிக்கச்செய்யும். ஆலமரத்தை நேரில் பார்த்து உணர்ந்த அனுபவத்தைத் தரும் என்பதைப் பாடல்களில் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா வெளிப்படுத்தியுள்ளார்.

**5.11.2.4. தானே கற்றல்**

மனிதனை மனிதனாக்கத் தகுந்த உயர்ந்த பண்புகளும் சிறந்த கல்வி பெற உதவும் சிந்தனைகளும் இக்கற்றல் முறைக்குச் சிறந்த சான்றாகும்.

''பல சிறப்பம்சங்களைக் குழந்தை கற்றுக் கொள்கின்றது. பிறரின் செயல்களில் இருந்தும் வழிகாட்டுதலில் இருந்தும் தானே கற்றல் ஏற்படுகின்றது.''[56] என்ற உளவியலாரின் சிந்தனைக்கு ஏற்ப தானே கற்றல் முறை அமைகிறது.

''கையில்தடி வைத்திருப்பார்
போலீஸ்காரர்
காக்கிச்சட்டை போட்டிருப்பார்
போலீஸ்காரர்''[57]

காவலாளியின் தோற்றத்தைப் பாடல்களின் வாயிலாகத் தானே கற்றுக் கொள்கிறார்கள் என்பதைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா பாடியுள்ளார்.

''ஏழு வர்ணம் காட்டிடும்
இந்த நல்ல இறகினைக்
கீழே போட்ட பறவையே
கேட்டால் உடனே தருகிறேன்.''[58]

இப்படி ஒரு பறவையின் இறகு கீழே விழுந்து விட்டதாகக் கூறி அதைக் கேட்டால் உடனே தருவதாகக் கூறுதல் கருணை எண்ணத்தை வளர்க்கும். இதைப்பாடல்கள் வாயிலாகக் குழந்தைகள் தானே வளர்த்துக்கொள்கிறார்கள். நூலகத்தில் குழந்தைகள் தானே அமர்ந்து கல்வி கற்கும் சிந்தனைகளும் பாடல்களில் கூறப்பட்டுள்ளன. இந்தக் கற்றல் முறை அவசியமானது. ஏனென்றால் இது வாழ்க்கையில் தொன்று தொட்டு வரும் தொடர் நிகழ்ச்சி ஆகும். மனிதன் சிறுவயதிலிருந்தே இப்பழக்கத்தை மேற்கொள்ள வேண்டும். எனவே இதற்கு அவசியமான கற்றலின் கூறுகளை உளவியலார்,

''கற்றலின் கூறுகளாக அக்கறை, பழக்கம், கவனம், கற்பனை, புலன்காட்சி, நினைவாற்றல், சிந்தனை போன்ற பலவற்றைக் கூறலாம்.''[59] என்று கூறியுள்ளார். இதில் வாழ்க்கையில் வெற்றி பெற அவசியமானது அக்கறை ஆகும்.

### 5.11.2.5. அக்கறை

அக்கறை என்பது நாம் ஒரு செயலை மேற்கொள்ள மனதில் மேற்கொள்ளும் முயற்சியாகும். இந்த அக்கறை நம் எண்ணத்தை செயலை வளரவைக்கும். வாழ்க்கையில் துன்பங்களிலிருந்து நம்மைக் காக்க உதவும். எண்ணத்தில் வலிமையை ஏற்படுத்தும். தன்னம்பிக்கையே அக்கறையின் தூண்டுகோலாகும் என்பதை,

"பாட்டுப் பாடுவேன். –நான்
பாட்டுப் பாடுவேன்
பலரும் புகழ, இனிய தமிழில்
பாட்டுப் பாடுவேன்."[60]

என்னும் பாடல் வரிகள் புலப்படுத்துகின்றன.

"பாடம் படிப்பாய்
அக்கறையாய்!
படித்ததைப் போல்நட
பக்குவமாய்!"[61]

என்று பாடத்தை அக்கறையுடன் படிக்கக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி வழிகாட்டியுள்ளார்.

"ஆட்டபாட்டம் மறந்துவிட்டு
அக்கறையாய்ப் படிப்பது
வாட்டமாகத் தோன்றினாலும்
வளர்வதுநீ நிச்சயம்!"[62]

என்னும் பாடல் வரிகள் மூலம் கல்வி கற்பது சிரமத்தை ஏற்டுத்தினாலும் அக்கறையோடு படித்தால் வளரமுடியும் என்பதைப் பதிவு செய்துள்ளார்.

### 5.11.2.6.பழக்கங்கள்

இயக்கங்களை எளிதாக்கப் பழக்கவழக்கம் இன்றியமையாததாகிறது. பழக்கப்பட்ட செயலே விரைவில் முடியும். போலச்செய்யும் பழக்கம் குழந்தைக்கு உண்டு. எனவே பெரியோர்களிடம் இருந்து குழந்தை பழக்கவழக்கங்களைக் கற்றுக்கொள்கின்றது. வாழ்க்கையின் முன்னேற்றத்திற்கு நற்பழக்கங்கள் அவசியமாகின்றன. மனிதன் சிறப்பதற்கு நல்ல பழக்கங்கள் தேவை. இதனால் நல்ல ஆர்வமும் ஆற்றலும் உருவாகிறது. அதனால் இந்தப் பழக்கம் பற்றிய சிந்தனைகளைக் கூறுவது இன்றியமையாததாகும்.

"ஒருவரைச் சிறந்த மானிடராக உருவாக்குவதே நல்ல பழக்கவழக்கங்கள்தான்"[63] என உளவியலார் கூறியுள்ளார். அதனால் இவ்விரு கவிஞர்களின் பாடல்களில் கூறப்பட்டுள்ள பழக்கங்கள் பற்றிய சிந்தனைகள் ஆராயப்பட உள்ளன.

"உன்னைப் போல வேக மாக
ஓடு வேனே கன்றுக் குட்டி
என்னைத் துரத்திப் பிடிக்க வருவாய்
எங்கே பார்ப்போம், கன்றுக் குட்டி"[64]

இப்பாடல் வரிகளில் கூறப்பட்டுள்ள கன்றுக்குட்டியின் சுறுசுறுப்பான இப்பழக்கம் குழந்தைகளுக்கு விதையானால் அது அவர்களது கல்விக்கும் ஆற்றலுக்கும் உறுதுணையாகும் என்பதைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா உணர்த்தியுள்ளார்.

"வழுக்கு மரத்தின் உச்சியில்
வளைத்துக் கட்டும் உறியையும்
பழக்க மான மனிதனே
பாய்ந்தே ஏறி நொறுக்குவான்.!"[65]

என்ற பாடல் வரிகள் மூலம் எந்த ஒரு செயலையும் தொடர்ப் பழக்கத்தால் வெற்றியடையச் செய்யலாம் என்பதைப் பாடல்கள் வாயிலாகக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி உணர்த்தியுள்ளார்.

**5.11.2.7 கவனம்**

கற்றலுக்குரிய கூறுகளில் ஒன்று கவனம் ஆகும். இந்தக் கவனம் நாம் ஒரு செயலை இடையூறில்லாமல் செய்து முடிக்கும் எண்ண ஆற்றலாகும். இது ஒரே நேரத்தில் பல செயல்களில் பங்கு பெறும் ஆற்றலைத் தரும். இது புலனுணர்ச்சியுடன் தொடர்புடையதாக அமைகிறது. இக்கவனம் குழந்தைகள் கல்வி கற்கும்போது ஏற்படும் தடைகளை அகற்றும். இதை,

"டக்டக் சத்தம் போடுமாம்
தாவித் தாவி ஓடுமாம்."[66]

என்ற பாடல் வரிகள் மூலம் குதிரையின் சத்தத்தைக் கவனத்தால் அறியலாம் என்பதைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா உணர்த்தியுள்ளார்.

"கழுத்து மணியை ஆட்டி வருது
பார்க்க வாருங்கோ."[67]

இப்பாடல் வரிகள் குதிரைகளின் சத்தத்தை, யானை வரும் ஓசையை நினைவுபடுத்துகின்றன. ஆசிரியர் பாடம் நடத்தும்போது இக்கவனத்தைப் பயன்படுத்தினால் மனதில் நன்றாகப் பதியும் என்பதற்கு இவ்வரிகள் அடித்தளமிட்டுள்ளன.

"தேர்ந்த சிறுவனின் இக்கவனம்
சேர்த்துக் கொள்ளுவாய் உன்செயலில்
சேரும் கவனமுன் படிப்பினிலே
தெரியும் வெற்றிஉன் காலடியில்"[68]

எனவே கவனம் என்பது கல்வி வளர்ச்சிக்கும் சாலை விதிகளைப் பின்பற்றுதலுக்கும் ஏற்றதாகிறது என்று கவனத்திற்கு உரியதான சிந்தனைகளைப் பாடல்களில் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி கூறியுள்ளார்.

இக்கவனத்தின் மூலம் உயிரைப் பொருளைப் பாதுகாக்க முடியும். ஓரிடத்திலிருந்து வேறிடத்திற்குப் பயணம் செய்யவும், தேர்வில் வெற்றி பெறுவதற்கும், வீதிகளில் பாதுகாப்புடன் செல்வதற்கும் இக்கவனம் ஏற்றதாகும்.

### 5.11.2.8. கற்பனை

நடைபெற இயலாத சில நிகழ்வுகளை நடைபெற்றதாகக் கூறுவது கற்பனை. இக்கற்பனை சிந்தனைகளை வளர வைக்கும். நினைவுகளைச் செழிக்கச் செய்யும். குழந்தைகளின் ஆளுமையையும் அறிவையும் வளரச் செய்யும். இது கற்றலைத் தூண்டும் கருவியாக அமைகிறது. இக்கற்பனையை,

"உள்ள ஆற்றலுக்கு உறுதுணையாய் நிற்பது கற்பனையாகும். கற்பனை மனதில் எழும் அளவற்ற எண்ண ஓட்டமாகும். கற்பனைக்கு எல்லையில்லை. வரையறையில்லை"[69] இது உளவியலாரின் சிந்தனையாகும். இதற்கு ஏற்ப பாடல்களில் கற்பனைச் சிந்தனைகள் அமைந்துள்ளன.

"சௌந்தருக்கு வீடு உண்டு
சைதாப் பேட்டையிலே
இவர்கள் வீடு செல்லவே
ஏறுஏறு ரயிலிலே
புகைவி டாத ரயிலிலே
போகலாமே விரைவிலே!"[70]

"பச்சை வண்ணக் காரு
பாய்ந்து செல்லும் பாரு
கொச்சி சேலம் வேலூர்
கோயம் புத்தூர் போகும்.

வண்டி நல்ல வண்டி
வந்து பாரு தம்பி
எண்ணெய் ஏது மின்றி
என்றும் ஓடும் தம்பி

இரண்டு கால்கள் தன்னை
எடுத்து முன்னும் பின்னும்
விரைந்து அசைப்பாய் தம்பி
விரைந்தே ஓடும் வண்டி"[71]

இப்படிக் குழந்தைகள் விளையாடுதலில் அமைந்த இக்கற்பனைச் சிந்தனை பிற்காலத்தில் சொந்தமாக வாகனங்கள் வாங்கி அதில் பயணம் செய்து வாழ்க்கையில் முன்னேறி சாதனையாளர்களாகத் திகழ்வார்கள் என்பதற்கு ஏற்றதாக உள்ளது.

### 5.11.2.9 புலன்காட்சி

புலன்காட்சிச் சிந்தனைகள் இவ்விரு குழந்தைக்கவிஞர்களின் படைப்புகளில் உள்ளன.

“ஒரு செயலுக்கும் அதற்கு முந்தைய செயற்பாட்டுக்கும் உள்ள தொடர்பினை வெளிப்படுத்துவதே புலன்காட்சியின் தன்மையாகும்.”[72] என்ற உளவியலாரின் சிந்தனையின்படி இவ்விரு கவிஞர்களின் பாடல்களிலும் இவ்வுணர்வு வளர்க்கப்பட்டுள்ளன.

“டாண்டாண், டாண்டான்
மணி அடிக்குது.
நம்மையெல்லாம் வருகவருக
என்ற ழைக்குது.
சிறுவரோடு சிறுமியரைச்
சேர்த்த ழைக்குது
அவரவர்கள் இடத்தில்வந்தே
அமரச் சொல்லுது.
ஆசிரியர் வந்ததுமே
நிற்கச் சொல்லுது.
அக்கறையாய்ப் பாடமெல்லாம்
கற்கச் சொல்லுது
படித்தபடி வாழ்க்கையிலே
நடக்கச் சொல்லுது.
பலரும்போற்ற நல்லபெயர்
எடுக்கச் சொல்லுது!.”[73]

இப்பாடல் வரிகளில் கூறப்பட்டுள்ள குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பாவின் சிந்தனைகள் “டாண் டாண்’ என்பது மணியின் ஒலி. இது ஒரு செயல். இச்செயல் பள்ளியில் படிக்கின்றபொழுது ஒரு பாடவேளை தொடங்குவது, முடிவது, இறுதிவகுப்பு முடிவது என்பதைக் கவனத்தில் கொண்டு மணி அடிப்பார்கள் என டாண் டாண் எனப்படும் மணியின் ஒலிக்கு வடிவம் தந்துள்ளது. ஆசிரியர் வந்தவுடன் நிற்க வேண்டும். இது போன்ற செயல்கள் புலன்காட்சிச் சிந்தனைகளை வளர்த்துள்ளன.

“விடியற் காலை
விதவித மான காட்சி!
அடியே பாப்பா நீயும்
அதிகா லையிலே விழிப்பாய்!”[74]

காலை நேரத்தில் சேவல் கூவும் நிகழ்வு, பால்காரன் மணி அடிப்பது போன்ற நிகழ்வுகள் இரவு பகலாகிவிட்டது என்பதை நினைவுபடுத்தி விரைவில் எழுதல் வேண்டும் என்னும் செயலை அறிவுறுத்துவதைக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியின் பாடல் வரிகள் உணர்த்தியுள்ளன.

இவ்வாறு ஒரு செயலுக்கு உள்ள தொடர்பினை இப்புலனுணர்வு சிந்திக்க வைக்கிறது. இச்செயல் அவர்களது சிந்தனைக்கு உரமாகும்.

**5.11.2.10. நினைவாற்றல்**

தன்னம்பிக்கை நினைவின் சக்தியைத் தூண்டுவதாகும். மறதி ஒரு சாதாரண நிகழ்ச்சியாகும். ஆனால் இது சில நேரங்களில் மனத்தைப் பாதிக்கச் செய்கிறது. இம்மன இழப்புகளால் கற்றல் பாதிப்படைகிறது. எனவே கற்றலின் பாதிப்பைப் போக்க நினைவாற்றல் அவசியமானதாகும். இந்த நினைவைத் திரும்பத் திரும்ப நினைவுபடுத்துதல் மூலம் பெற முடியும். நினைவு கொள்ளல், நினைவிற்கழைத்தல், நினைவுகூர்தல் போன்றவை நினைவின் கூட்டுச் செயல்களாகக் கருதப்படுகின்றன. ஆதலால் இந்த நினைவை மேற்கொள்ள இன்றியமையாத பயிற்சியை உளவியலாரின் பின்வரும் சிந்தனைகள் தெளிவுபடுத்தியுள்ளன.

“நினைவு கொள்வதற்குச் சரியான பயிற்சி அவசியமானதாகிறது. எனவே கற்றல் மூலம் நினைவு கொள்ள வேண்டியவற்றை முறையாகப் புரிந்து கொண்டு கற்று நினைவில் கொள்ள வேண்டும்.”[75] என்ற கூற்றிற்கேற்றாற்போல் பாடல்களிலேயே நினைவாற்றலை வளர்த்துள்ளனர்.

“ஏழும் ஏழும் பதினாலாம்
எலியா ருக்கு முழம்வாலாம்

அறைக்குள் எலியார் புகுந்தாராம்
அங்கும் இங்கும் பார்த்தாராம்.

இரண்டு தட்டில் பணியாரம்
இருந்தது கண்டு மகிழ்ந்தாராம்.

கடித்துக் கடித்துத் தின்றாராம்.
கணக்கைக் கூட்டிப் பார்த்தாராம்

ஏழும் ஏழும் பதினாலாம்
எலியார் ஏப்பம் விட்டாராம்!.”[76]

என்ற இவ்வரிகளில் கதைபோல் கூறி நினைவாற்றலை சிறக்கச்செய்துள்ளனர். ஏழினையும் மற்றொரு ஏழினையும் கூட்டப் பதினான்காகும். ஒன்றுடன் ஒன்றினைச் சேர்க்க இரண்டாகும். இரண்டுடன் இரண்டினைச் சேர்க்க நான்காகும். இவ்வாறு பாடல்களில் வந்துள்ள சொற்கள் மீண்டும் மீண்டும் வந்து நினைவுப்பயிற்சியை அளித்துள்ளன.

**5.2.11.11. சிந்தனை**

சிந்தனை நம் மனத்தில் தோன்றும் எண்ணங்கள் இந்த எண்ணங்கள் நல்லதாக அமைந்தால் நற்சிந்தனை ஏற்படும். தீயதாக அமைந்தால் தீய சிந்தனை தோன்றி அழிவிற்கு வழிவகுக்கும். ஆதலால்,

“சிந்தனை ஒரு வகை மனச் செயல்பாடாகும். கற்பனையின் ஊடாகச் சிந்தனை வளம் பெறுகிறது.”[77] மேலும் இச்சிந்தனையால் மூளைக்குப் பலம் ஏற்படுகிறது.

“நம்முடைய அன்றாடச் செயற்பாடுகளில் மூளையைப் பயன்படுத்த வேண்டிய முறைகளைப் பயின்று கொண்டால் மிகச்சிறப்பாகச் சிந்தனை ஆற்றலை வளர்த்துக் கொள்ள

முடியும்.''[78] என்ற உளவியலாரின் சிந்தனைக்கேற்ப குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பாவின் 'வெள்ளைக் கொக்கு' என்னும் பாடலும், குழந்தைக்கவிஞர் செல்லகணபதியின் 'நாரையைப்போல்' என்னும் பாடலும் அமைந்துள்ளன.

இச்சிந்தனைகளுடன் 'எங்கள் பள்ளி' என்னும் பாடல் மூலம் கல்வி கற்பிக்கும் கூடத்தையும் கற்கும் முறைகளையும் குழந்தை உணர்வுடன் கற்பித்துள்ளனர்.

கல்விச் சிந்தனைகள் அறிந்த குழந்தைகளுக்குப் பண்பாட்டையும் அறியச்செய்தல் அவசியமாகும்.

### 5.11.3. பண்பாடு வளர்த்தல்

பண்பாடு ஆளுமையை வளர்க்கும். அதனால் 'பள்ளிக்கூடப்பை' போன்ற பாடல்கள் பண்பாட்டை வளர்த்துள்ளன.

''ஆண்டு தோறும் தேறுவேன்.
அறிஞ னாக மாறுவேன்
அறிஞ னாக மாறுவேன்
அனைவ ருக்கும் உதவுவேன்''[79]

என்ற பாடல் வரிகள் மூலம் கல்வி கற்ற ஒருவன் பிறருக்காக உதவுவான். இவன் கற்ற கல்வி இவனது ஆளுமையை வளர்க்கும் என்ற சிந்தனையைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா உணர்த்தியுள்ளார்.

இன்று குழந்தைகள் காணும் கனவுகளே நாளைய உலகில் ஆளுமையை வளர்க்கும். அதனால் இளம் வயதிலேயே மருத்துவர், ஆசிரியர் போன்றவர்கள் நடந்துகொள்ளும் முறைகளைப் பாடல்களில் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா பதிவு செய்துள்ளார்.

''டாக்ட ராக நானிருந்தால்
நாடி பிடித்துப் பார்த்திடுவேன்
நாக்கை நீட்டு என்றிடுவேன்
நன்றாய் ஊசி போட்டிடுவேன்

வாத்தி யாராய் நானிருந்தால்
வகுப்பில் பாடம் நடத்திடுவேன்.
பார்த்துப் பரீட்சை எழுதுகிற
பைய னுக்குச் சுழித்திடுவேன்.''[80]

என்பதற்கு இப்பாடல் வரிகள் சான்றாகும்.

''இரண்டு கால்கள் தன்னை
எடுத்து முன்னும் பின்னும்
விரைந்து அசைப்பாய் தம்பி
விரைந்தே ஓடும் வண்டி.''[81]

இன்று மருத்துவராகக் கனவு காணும் குழந்தைகள் எதிர்காலத்தில் மருத்துவர் ஆவார்கள். இன்று கால்களாலும் கைகளாலும் வாகனங்கள் ஓட்டி விளையாடும் சிறுவர்களே பிற்காலத்தில் படிப்பு பதவி அனைத்திலும் வெற்றி பெறுவார்கள் என்பதற்கு உதாரண வரிகளாக உள்ளன.

### 5.12. சமூக வளர்ச்சி

சமூகம் வளர்ச்சி பெறுவதற்குரிய சிந்தனைகளை நான்காம் இயலில் அறிந்தோம். இவை உளவியல் பொருத்தப்பாட்டுடன் அமைந்ததை இனிக்காண்போம்.

#### 5.12.1. நாட்டுப்பற்றளித்தல்

தேசம் என்பது நாடு. நம் நாட்டின் மீது பற்றுக்கொள்ளுதல் ஒவ்வொரு மனிதனுக்கும் இன்றியமையாததாகும். இதைக் குழந்தைகள் மனத்தில் பதிய வைக்க,

“பெருமை மிக்க பார தத்தில்
பிறந்த குழந்தைகள் - என்ற
பெருமை யோடு நாமெல் லோரும்
வளர்ந்து வருகிறோம்.
சிறந்த குணங்கள் பெற்று நமது
நாடு செழிக்கவே
செயல்கள் யாவும் திருத்த மாகச்
செய்து மகிழுவோம்.”[82]

குழந்தை உள்ளம் செம்மாந்து நிற்க இவ்வரிகள் உதவும் என்பது உறுதி.

“எடடா உழைப்பெனும் ஆயுதம்
எதையுமே ஆக்கிடும் சாகசம்
நடடா நெஞ்சை நிமிர்த்தியே
நாளைய பாரதம் உயரவே.”[83]

பாரதத்தை உயர்த்துவதற்கு தனிமனிதனின் உழைப்பு அவசியமானது என்பதை இங்கே குறிப்பிட்டுள்ளார்.

#### 5.12.2. சங்கம் அறிதல்

செஞ்சிலுவைச் சங்கத்தைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா அறிமுகப்படுத்தியுள்ளார். சமுதாயச் சிந்தனைகளிலும் இக்கருத்து இடம்பெற்றுள்ளது. உள்ளத்தை உயர்த்தவே சங்கங்கள் என்பதை,

“சீரிய ரான அவர்தம் முயற்சியால்
‘செஞ்சிலுவைச் சங்கம்’ தோன்றியதாம்.
நேரிய வழிகளில் பற்பல தொண்டுகள்.
நித்தம் அச்சங்கமே செய்திடுமாம்.”[84]

என்னும் வரிகளால் உணரலாம்.

### 5.12.3. பொருளின் அருமையுணர்தல்

எந்த ஒரு பொருளையும் பெறத் தேவையானது பணம். எனவே காலச்சிக்கனமும் பொருட்சிக்கனமும் இன்றியமையாதவை.

"நானே ராஜா என்றிடுவேன்
நண்பன் முத்து மந்திரியாம்.
ஆனை வாங்கப் பணம்தேவை.
ஆசை உண்டு; காசில்லையே!"[85]

போன்ற பாடல் வரிகளிலும்,

"கிட்ட உள்ள கடையிலே
ரொட்டி கூட விற்குது
துட்டில் லாமல் கிடைக்குமோ
தட்டி டாமல் தந்திடு."[86]

என்னும் பாடல் வரிகளிலும் பொருட்சிக்கனம் சேமிப்பை வளர்க்கும் என்பதைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா ஆழமாகப் பதிவு செய்துள்ளார்.

"வேர்த்திட உழைத்துச் சேர்த்திடும் பொருளை
வீணில் செலவு செய்யாமல்
பார்த்துப் பதமாய்த் தேவைக்கு மட்டும்
பயன்படுத் திடுவது நலம்சேர்க்கும்"[87]

என்று குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும் சேமிப்பின் அவசியத்தைப் பதிவு செய்துள்ளார்.

### 5.12.4 தொழில் அறிதல்

கிராமப்புற மக்களின் விவசாயத் தொழிலைப் பின்பற்றும் பாடலைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா பாடியுள்ளார்.

"அப்பா வைப்போல் பெரியவனாய்
ஆன வுடனே நானுமே
மாட்டைக் கொண்டு கலப்பை பூட்டி
மண்ணை நன்கு உழுவேனே
நாட்டில் உள்ள பஞ்சம் போக
நானும் உதவி செய்வேனே."[88]

இவ்வாறு விவசாயத் தொழில் செய்யும் அப்பாவின் எண்ணத்தைக் குழந்தைகள் நிறைவேற்றும் வண்ணம் பாடியுள்ளார். உள்ளம் சார்ந்தது உளவியல் எனவே குழந்தைக்கவிஞர்கள் குழந்தைகளின் உள்ளத்தை ஊக்கப்படுத்த உளவியல் உத்திகளை ஒவ்வொரு இடத்திலும் பயன்படுத்தியுள்ளனர்.

**தொகுப்புரை:**

- குழந்தை மனம் மென்மையானது. ஒரு மனிதனின் தொடக்கப்பருவமாக குழந்தைப்பருவம் அமைவதால் எதையும் அவர்களிடம் கூறும்போது குழந்தையின் மனம் அறிந்து கூறுதல் அவசியமானது.

- குழந்தைகளுக்குக் கல்வி கற்பிக்கும் ஆசிரியர் குழந்தையின் மனம் அறிந்து பாடம் நடத்துதல் வேண்டும். குழந்தைக் கவிஞர் அழ.வள்ளியப்பாவும், குழந்தைக்கவிஞர் செல்லகணபதியும் குழந்தை உளவியல் அறிந்து குழந்தைகளுடன் பழகிய உணர்வோடு பாடல்கள் எழுதியுள்ளனர்.

- உளவியலின் விளக்கங்களை அறிகிறோம். அதிலிருந்து குழந்தை உளவியல் பெரியோர் உளவியலிலிருந்து வேறுபடும் தன்மைகள் ஆராயப்பெற்றுள.

- உறவினர்கள் குழந்தைகளிடம் நடந்து கொள்ளும் முறைகளைத் தாங்களே உணர்ந்து கூறுவதாகக் குழந்தைக்கவிஞர்கள் பாடியுள்ளனர். பெற்றோர்கள் அன்பால் தவறு செய்தாலும், அது குழந்தைகளின் மனத்தை வருத்தமடையச் செய்யும் என்பதைப் பதிவு செய்துள்ளனர்.

- உறவினர்களை மதிப்பதற்குரிய பாடல்களை உளவியல் பொருத்தப்பாட்டுடன் எழுதியுள்ளனர்.

- குழந்தைகள் பிற உயிர்கள் மீது அன்பினைப் பதிவு செய்யும் பாங்கை உளவியல் அணுகு முறையோடு கூறியுள்ளனர்.

- இந்த உளவியல் அணுகு முறைகளைப் பாடல்களில் வெளிப்படுத்தியிருப்பதைப் போல் புலப்படுத்தியுள்ளனர்.

- இயற்கை, செயற்கை வேறுபாடுகளை அறிவிப்பதற்கு உளவியல் உத்தியைப் பின்பற்றியுள்ளனர்.

- குழந்தைகளுக்கு மகிழ்ச்சியை விளைவிக்கும் மன எழுச்சிக்குரிய பாடல்களை எழுதியுள்ளனர்.

- பறவைகள், விலங்குகளைப் பார்த்து பயங்கொள்ளுதலைத் தவிரப்பதற்கு வழி கூறியுள்ளனர்.

- தவறுகளை மறைப்பதைவிட வெளிப்படுத்துவது சிறந்தது என்பதைக் கதைமூலம் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா வெளிப்படுத்தியுள்ள தன்மை ஆராயப்பெற்றுள்ளது.

- நற்பழக்கங்களைப் பின்பற்றும் பாடல்களைக் குழந்தைகளே உணர்ந்து பாடுவதுபோல் பாடியுள்ளனர்.

- ஆளுமையை வளர்க்கும் கல்வி வளர்ச்சி, மொழிவளர்ச்சிப் பாடல்கள் உள்ளன.

- உளவியலார் வகைப்படுத்தி ஆய்ந்த அனுபவத்தின் மூலம் கற்றல், தானே கற்றல் போன்ற கற்றல் வகைமைக்குரிய பாடல்கள் இவ்விரு குழந்தைக்கவிஞர்களின் பாடல்களிலும் உள்ளன.

- அக்கறை, பழக்கங்கள், கவனம், கற்பனை, புலன்காட்சி, நினைவாற்றல், சிந்தனை போன்ற குழந்தைகளின் உளவியல் செய்திகளை உளவியலார் கூறிய முறையில் பாடல்கள் ஆராயப்பெற்றுள்ளன.

- பிறருக்கு உதவுதல் பண்பாடாகும் என்பதைப் பதிவு செய்யும் பாடல்கள் உள்ளன.

- சமுதாயத்தில் ஒரு குடிமகன் நாட்டுப்பற்றுடன் விளங்கவேண்டிய தன்மைகளுக்கு அடித்தளமாவது செஞ்சிலுவைச் சங்கம் என்பதை ஒரு பாடல் உணர்த்துகின்றது. பொருட்சிக்கனத்தின் அவசியத்தையும் உணர்த்தியுள்ளது. நமது நாட்டுத் தொழிலான விவசாயத் தொழிலைப் பற்றிய பாடல்களையும் எழுதியுள்ளனர்.

இவற்றின் மூலம் குழந்தை உலகம் செம்மையாக அமைவதற்கான செய்திகள் இரு கவிஞர்களின் பாடல்களிலும் அமைந்துள்ள தன்மை ஆராயப்பெற்றுள.

**இயல்-5**

**அடிக்குறிப்புகள்**

1. இ.பா.வேணுகோபால், கல்வி உளவியல், ப.12.
2. மேலது ப..2.
3. மேலது பக்.7-8.
4. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம்,ப.156.
5. செல்லகணபதி, மணக்கும்பூக்கள், ப.230.
6. மேலது ப.181.
7. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம் (இ.தொ.), ப.111.
8. மேலது ப.35.
9. செல்லகணபதி, மணக்கும்பூக்கள், ப.97.
10. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம் (இ.தொ.), ப.125.
11. செல்லகணபதி, மணக்கும் பூக்கள், ப.132.
12. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.54.
13. செல்லகணபதி, மலரும் மொட்டுகள், ப.111.
14. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், (இ.தொ.), ப.81.
15. மேலது ப.65.
16. செல்லகணபதி, மலரும் மொட்டுகள், ப.37.
17. அழ.வள்ளியப்பா, வேட்டைநாய்,ப.25.
18. அழ.வள்ளியப்பா, நல்ல நண்பர்கள், ப.26.
19. செல்லகணபதி, பூங்குளம் ராஜா, ப.35.
20. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம் (இ.தொ.), ப.67.
21. செல்லகணபதி, மணக்கும் பூக்கள், ப.16.
22. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.90.
23. செல்லகணபதி, மணக்கும் பூக்கள், ப.50.
24. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.8.
25. செல்லகணபதி, வளரும் பூக்கள், ப.9.
26. அழ.வள்ளியப்பா, சிரிக்கும் பூக்கள், ப.24.
27. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.71.
28. அழ.வள்ளியப்பா, சிரிக்கும் பூக்கள், ப.29.
29. மேலது ப.65.
30. செல்லகணபதி, வளரும் பூக்கள், ப.25.
31. மேலது ப.27.
32. மேலது ப.5.
33. மேலது ப.68.
34. மேலது ப.63.
35. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம்,ப.204.

36. செல்லகணபதி, வளரும் பூக்கள், ப.11.
37. செல்லகணபதி, மணக்கும் பூக்கள், ப.183.
38. அழ.வள்ளியப்பா, குதிரைச்சவாரி, ப.27.
39. செல்லகணபதி, அப்பாவின் கோபம்,ப.40.
40. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம் (இ.தொ.), ப.217.
41. செல்லகணபதி, மலரும் மொட்டுகள், ப.91.
42. பாஞ்.இராமலிங்கம், கல்வியும் உளவியலும், ப.57.
43. மேலது ப.59.
44. அழ.வள்ளியப்பா, சிரிக்கும் பூக்கள், ப.52.
45. செல்லகணபதி, மணக்கும் பூக்கள், ப.8.
46. பாஞ்.இராமலிங்கம், மானிட உளவியல், ப.18.
47. பாஞ்.இராமலிங்கம், கல்வியும் உளவியலும், ப.63.
48. செல்லணபதி, மணக்கும்பூக்கள், ப.98.
49. மேலது ப.152.
50. செல்லகணபதி, வளரும் பூக்கள், ப.85.
51. பாஞ்.இராமலிங்கம், கல்வியும் உளவியலும், ப.65.
52. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.107.
53. மேலது ப.112.
54. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம் (இ.தொ), ப.62.
55. மேலது ப.71.
56. பாஞ்.இராமலிங்கம், கல்வியும் உளவியலும், ப.65.
57. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம் (இ.தொ), ப.77.
58. மேலது ப.93.
59. பாஞ்.இராமலிங்கம், கல்வியும் உளவியலும், ப.68.
60. அழ.வள்ளியப்பா, சிரிக்கும் பூக்கள், ப.55.
61. செல்லகணபதி, மலரும் மொட்டுகள், ப.79.
62. செல்லகணபதி, மணக்கும் பூக்கள், ப.88.
63. பாஞ்.இராமலிங்கம், கல்வியும் உளவியலும், ப.69.
64. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம் (இ.தொ.), ப.40.
65. செல்லகணபதி, வளரும் பூக்கள், ப.67.
66. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம் (இ.தொ.), ப.28.
67. மேலது ப.26.
68. செல்லகணபதி, மணக்கும் பூக்கள், ப.177.
69. பாஞ்.இராமலிங்கம், கல்வியும் உளவியலும், ப.71.
70. அழ.வள்ளியப்பா, சிரிக்கும்பூக்கள், ப.42.
71. செல்லகணபதி, வளரும்பூக்கள், ப.15.
72. பாஞ்.இராமலிங்கம், மானிட உளவியல், ப.18.
73. அழ.வள்ளியப்பா, சிரிக்கும்பூக்கள், ப.69.

74. செல்லகணபதி, வளரும் பூக்கள், ப.26.
75. பாஞ்.இராமலிங்கம், மானிடஉளவியல், ப.19.
76. அழ.வள்ளியப்பா, சிரிக்கும் பூக்கள், ப.47.
77. பாஞ்.இராமலிங்கம், கல்வியும் உளவியலும், ப.73.
78. பாஞ்.இராமலிங்கம், மானிட உளவியல் ப.34.
79. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம் (இ.தொ.), ப.55.
80. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம் (இ.தொ.), ப.59.
81. செல்லகணபதி, வளரும் பூக்கள், ப.15.
82. அழ.வள்ளியப்பா, சிரிக்கும் பூக்கள், ப.105.
83. செல்லகணபதி, மணக்கும் பூக்கள், ப.96.
84. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம் (இ.தொ.), ப.136.
85. மேலது ப.43.
86. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.8.
87. செல்லகணபதி, மணக்கும் பூக்கள், ப.113.
88. அழ.வள்ளியப்பா, மலரும் உள்ளம், ப.62.

## முடிவுரை

எதிர்காலச் சமுதாயத்திற்கு நல்ல செய்திகளைக் கூற முனைந்தவர்கள் குழந்தைக்கவிஞர்கள் இவர்களில் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பாவும் செல்லகணபதியும் குழந்தைகளின் தினசரி வாழ்க்கைக்கு அடிப்படையான செய்திகளைத் தங்களது படைப்புகளில் வெளிப்படுத்தியுள்ளனர். அவர்களது படைப்புகளை ஆய்ந்து கண்ட முடிவுகள் இதில் தொகுத்துத் தரப்பட உள்ளன.

தமிழ் நூல்களில் குழந்தைகள் பற்றிய விளக்கங்கள், குழந்தைகளின் அறிவும் ஆளுமையும் விரிவுபடும் தாலாட்டுப்பாடல்கள், விளையாட்டுப் பாடல்களை அறியச் செய்தல், குழந்தைகளுக்கு குழந்தைப்பேற்றின் இன்றியமையாமையை உணரச் செய்தல், குழந்தைகளுடன் விளையாட சக குழந்தைகள் இல்லாத நிலையில் பெயரிவர்களும் அவர்களுடன் சேர்ந்து விளையாடலாம் போன்ற சிந்தனைகள் உள்ளன.

உளவியல் நெறிமுறைகளும், குழந்தை இலக்கியத்தின் இயல்புகளும் அறியப்பெற்றுள்ளன. தமிழ் இலக்கியங்களில் இருபது இருபத்தோராம் நூற்றாண்டுகளில் தோன்றிய இலக்கியங்களை இக்கால இலக்கியங்கள் என்பர். இக்கால இலக்கியத்தில் ஒரு பகுதியாக 'குழந்தை இலக்கியம்' என்ற ஒரு பகுதி அமைந்துள்ளது. இப்பகுதி மது.ச.விமலானந்தம் போன்றோர் எழுதிய இலக்கிய வரலாற்று நூல்களில் இடம்பெற்றுள்ளது என்ற விபரமும் அறியப்பெற்றுள்ளது. குழந்தை இலக்கியங்கள் என்பது குழந்தைகளின் இயல்புகளுக்கு ஏற்றாற்போல் எழுதுதல் ஆகும். என்ற சிந்தனையாளர்களின் கருத்துகளும் அறியப்பட்டுள்ளன. 1901ஆம் ஆண்டில் முதன் முதலில் பெரியோர் இலக்கியங்களுக்குள் குழந்தை இலக்கியங்களைப் படைத்த கவிமணி முதல் இக்கால குழந்தை இலக்கிய எழுத்தாளர்களின் அறிமுக விபரங்களும் அறியப்பெற்றுள்ளன.

தமிழகத்தில் தோன்றிய இவர்களைப் போல் மேலை நாட்டிலும் குழந்தை இலக்கியப் படைப்பாளர்கள் உருவாகி வருகிறார்கள். இவர்கள் ஒரு புத்தகத்தை எழுதுவதற்கு ஒரு வருட காலம் எடுத்துக் கொள்கிறார்கள். இவர்களில் சிலர் பள்ளிகளுக்கும் சென்று கற்பித்துள்ளார்கள். இவர்களில் சிலர் இணையதளத்தில் புத்தகத்தை எழுதி வெளியிட்டுள்ளார்கள் என்பன போன்ற விபரங்களும் அறியப் பெற்றுள்ளன.

தமிழ்நாட்டுக் குழந்தைக்கவிஞர்களுள் அழ.வள்ளியப்பாவும், செல்லகணபதியும் குழந்தை இலக்கிய வளர்ச்சிக்குப் பாடுபட்டவர்கள் ஆவார்கள். கதை படித்தல், பாட்டுப்பாடி மகிழ்தல், நகைச்சுவைப் பாடல்களைப் பாடி மகிழ்தல், போன்ற செயல்பாடுகள் குழந்தைகளுக்குப் பிடித்தவை என்பனவற்றை உணர்ந்து எழுதிய படைப்புகளாக இவர்கள் படைப்புகள் உள்ளன. குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா

குழந்தை இலக்கியப் பாடல்களை எளிதாகப் படிப்பதற்கேற்றாற்போல் இதழ்களில் வெளிவரச் செய்துள்ளார். சங்கங்கள் அமைத்து அதில் நிறையக் குழந்தை இலக்கிய ஆசிரியர்களை அறிமுகப்படுத்தியுள்ளார். குழந்தை இலக்கியப் பணிகளை வெளிநாடுகளிலும் ஆற்றியுள்ளார். இவரது உத்திகளைப் பிற குழந்தைக் கவிஞர்களும் பின்பற்றியுள்ளனர்.

குழந்தைக்கவிஞர் செல்லகணபதி குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பாவைக் குருவாக ஏற்று வயது அடிப்படையில் பாடல்களைப் பிரித்து எழுதியுள்ளார். இவரும் வெளிநாடுகளுக்குச் சென்று குழந்தை இலக்கியத்தை வளர்த்தவர் என்பன போன்ற செய்திகள் அறியப்பட்டுள்ளன.

குழந்தை வாசகர்களுக்கு ஏற்றாற்போல் குழந்தைகளின் கல்வி, வீரம் போன்ற புறச் செயல்களை வளர்க்கும் வண்ணம் படைப்புகளைப் படைத்துள்ளார்கள் என்கின்ற செய்திகளும் ஆராயப்பட்டுள்ளன.

உத்தி (Technic) என்பது வழிமுறையாகும். உத்திக்கு தந்திரம், அறிவு, சேர்தல் எனப் பல பொருள் உண்டு. உத்திக்கு வரையறை இல்லை. கவிஞர்கள் தங்களது உணர்ச்சிகளைக் கருத்துகளாக்கப் பல்வேறு உத்திகளைப் பாடல்களின் மேன்மைக்காகப் பின்பற்றியுள்ளனர். குறிப்பு மொழி, ஒலிநயம், போன்றவை உத்திகளாகும். மேலும் குழந்தை இலக்கிய உத்திகள் பெரியோர் இலக்கிய உத்திகளிலிருந்து வேறுபடுகின்றன என்று அறியப்பட்டுள்ளன.

இவ்விரு கவிஞர்களும் பாடல் உத்தி, கதைப்பாடல் உத்தி, நாடக உத்தி, கதை உத்தி, நாவல் உத்தி, போன்ற உத்திகளைப் பின்பற்றுவதில் ஒன்றுபட்டுள்ளனர். குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா, குழந்தைக் கவிஞர் செல்லகணபதியை விட கதைப்பாடல் உத்தி , விடுகதை உத்தி, கேள்வி நேர உத்தி, உரை உத்தி, போன்ற உத்திகளுக்குரிய நூல்களை அமைத்துக் குழந்தை கவிஞர் செல்லகணபதியிலிருந்து வேறுபடுகிறார். குழந்தைக்கவிஞர் செல்லகணபதி ஒரு கதையில் ஒரு தகவலை மட்டும் அறியும் 'ஒரு கதை ஒரு தகவல்' என்னும் நூலை அமைத்துக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பாவிலிருந்து வேறுபட்டுள்ளார்.

நல்லவனுக்கு இறையருள் கிட்டும் உழைப்பே இறைவன் என்னும் கருத்துக்களை இறைவணக்க உத்திப் பாடலில் இவ்விரு கவிஞர்களும் கூறி ஒன்றுபட்டுள்ளனர்.

அறிவுரைப் பயன்பாட்டு உத்தியில் ஒழுக்கம் பற்றிய சிந்தனைகளைக் கூறுவதில் ஒன்றுபட்டுள்ளனர். காலப்பயன்பாட்டுச் சிந்தனைகளைக் குழந்தைக்கவிஞர் செல்லக்கணபதி மட்டும் கூறியுள்ளார். பெற்றோர் ஆசிரியரை மதிக்கும் செயல்களுக்குரிய பாடல்களை இவ்விரு கவிஞர்களும் எழுதி ஒன்றுபட்டுள்ளனர்.

விருப்பநிலை உத்தியில் சேவல், குருவி போன்ற பறவைகளை உவமைகளாக்கி பண்புகளை வளர்ப்பதில் இவ்விரு கவிஞர்களும் ஒன்றுபட்டுள்ளனர். தியாகம், அன்பைப் பெருக்கி ஈகையை உணர்த்தும் செயல் பற்றிய பாடலையும் குருவி போல் முயற்சி செய்தால் ஊரை வெல்லலாம் என்ற சிந்தனைக்குரிய பாடலையும் குழந்தைக் கவிஞர் செல்லகணபதி எழுதிக் குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பாவிலிருந்து வேறுபடுகிறார்.

மகிழ்வுணர்வை வெளிப்படுத்தும் இயற்கைப் பொருட்களைப்பற்றிப் பாடியதில் ஒன்றுபட்டுள்ளனர்.

கணக்கற்ற அறிவியல் செய்திகளிலும் குழந்தை வாசகர்களுக்கு ஏற்றாற்போல் அறிவியல் செய்திகள் அறிவியல் பயன்பாட்டு உத்தியில் கூறப்பட்டுள்ளன. தாவரங்கள், விலங்குகள் போன்ற இயற்கைப் பொருட்களையும் பெட்ரோல், டீசல் போன்ற செயற்கைப் பொருட்களையும் பாடல்களில் எளிமையாக அறியச் செய்துள்ளனர். குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பாவை விடக் கூடுதலான அறிவியல் செய்திகளைக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி கூறியுள்ளார்.

ஆர்வமூட்டல் உத்தியைப் பின்பற்றுவதில் ஒன்றுபட்டுள்ளனர். நிறங்களும் கிழமைகளும் அறியச் செய்தலுக்குரிய பாடலை இவ்விரு கவிஞர்களும் எழுதியுள்ளனர். திசைகள் அறியும் பாடலைக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி மட்டும் எழுதியுள்ளார். அடிப்படை எழுத்தைக் கற்பிப்பதிலும் ஆசானை அறியச் செய்தலிலும் ஒன்றுபட்டுள்ளார்கள். நூலகத்தின் சிந்தனையைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா மட்டும் கூறி வேறுபடுகிறார். இவ்விரு கவிஞர்களும் வாழ்ந்த காலங்களுக்கு ஏற்றாற்போல் விளையாட்டுச் சிந்தனைகளைக் கூறியுள்ளனர்.

‘எடு’ என்ற சொல்லால் குழந்தைகள் எடுத்தார் என்றும் ‘கொடு’ என்ற சொல்லால் கொடுத்தார் என்றும் தானே சொற்களை அமைத்துக் கொள்ளும் இயல்புடையவர்கள் என்ற மொழி வளர்ச்சிச் சிந்தனைகளைக் கூறுவதில் ஒன்றுபட்டுள்ளார்கள். ஆசியஜோதி இலக்கியத்தில் கூறியுள்ள கொல்லாமைப் பண்பைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா வளர்த்துள்ளார். நண்பனுக்கு செய்யும் உதவி எது? என்பதை விளக்க ‘ஆற்றில் போட்டாலும் அளந்து போட வேண்டும்’. என்ற பழமொழியை உதாரணமாக்கி குழந்தைக்கவிஞர் செல்லகணபதி கூறியுள்ளார். உலகப் பொதுமறையாம் திருக்குறளின் அவசியத்தை உணரச் செய்துள்ளனர். இவ்வாறு இவ்விரு கவிஞர்களும் இலக்கிய முதன்மை உத்தியிலும் குழந்தைகளுக்கு ஏற்ற சிந்தனைகளைப் பதிவு செய்து ஒன்றுபட்டுள்ளனர்.

பெயர்ச் சொல் அறிமுக உத்தியின் மூலம் ‘காலம்’ என்னும் பெயர்ச் சொல்லால் படித்தவன் வெற்றியையும், படிக்காதவன் தோல்வியையும் அடைவான் என்பதை நகைச்சுவை உணர்வுடன் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா

விளக்கியுள்ளார். குழந்தைக்கவிஞர் செல்லகணபதி எடிசன், கஜினி போன்ற பெயர்ச்சொற்களை அறிமுகப்படுத்தி இலக்கண முதன்மை உத்தியைப் பின்பற்றுவதில் ஒன்றுபட்டுள்ளனர். வியப்பு உத்தியால் ஆர்வத்தை வளர்த்துள்ளனர். சிந்தனைகளை விரிவு செய்யும் வினா உத்தியை இவ்விரு கவிஞர்களும் பின்பற்றியுள்ளனர். உரையாடும் திறனை வளர்க்கும் கூற்று உத்தியை இவ்விரு கவிஞர்களும் பின்பற்றி ஒன்றுபட்டுள்ளனர். செய்திகளை நினைவில் கொள்வதற்கேற்ற பயிற்சி உத்தி போன்ற உத்திகளை இவ்விரு கவிஞர்களும் பின்பற்றியுள்ளனர். கடித உத்தியைப் பின்பற்றுவதில் ஒன்றுபட்டுள்ளார்கள். குழந்தைகள் எவ்வாறு ஆசிரியர்களுக்குக் கடிதம் எழுத வேண்டும் என்பதைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா கற்றுக் கொடுத்துள்ளார். உறவினர்களுக்குக் கடிதம் எழுதக் குழந்தைக் கவிஞர் செல்லகணபதி கற்றுக் கொடுத்துள்ளார். பாரதம் செழிக்கத் தகுந்த செயல் உத்தியைப் பின்பற்றுவதில் ஒன்றுபட்டுள்ளனர். பொது அறிவு உத்தியை பின்பற்றுவதில் ஒன்றுபட்டுள்ளனர். அடைமொழிச் சொற்களை அறியும் வண்ணமும் நினைவு கூறும் வண்ணமும் ஒரு சொல் இரண்டு மூன்று முறை அடுக்கி வந்து பொருள் தரும் என்ற நன்னூலாரின் வழிகளுக்கு ஏற்பவும் குழந்தைப் பாடல்களை இவர்கள் படைத்துள்ளனர்.

புதுமை உத்தியை இவ்விரு கவிஞர்களும் பின்பற்றி ஒன்றுபட்டுள்ளனர். இதில் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி நட்பு எப்படிப்பட்டது. மானம் காக்கப் பருத்திப் பூவே சிறந்தது என்று அக்பருக்கு பாபர் கூறிய விடையைப் புதுமை உத்தியால் பெறச் செய்துள்ளார். கணியன் பூங்குன்றனாரின் ‘யாதும் ஊரே யாவரும் கேளிர்’ என்ற சிந்தனையையும் குழந்தைகள் பின்பற்றச் செய்துள்ளார்.

உணர்வு உத்தி இவ்விரு கவிஞர்களின் பாடல்களிலும் உள்ளன. தாயாதல், தந்தையாதல், குழந்தையாதல் போன்ற உத்திகளை இவ்விரு கவிஞர்களும் பின்பற்றிக் குழந்தைகளுக்குக் கருத்துகளைப் பதிவு செய்துள்ளனர். குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா குழந்தையாதல் உத்தி, தம்பியாதல் உத்தி, அண்ணனாதல் உத்தி, வியாபாரியாதல் உத்தி போன்ற உத்திகளைப் பின்பற்றி சமூகநிலைமையைக் குழந்தைகளுக்குக் கூறி வேறுபடுகிறார். குழந்தைக்கவிஞர் செல்லகணபதி அறிவுரையாளர் உத்தியைப் பாடல்களில் அதிக அளவில் பின்பற்றியுள்ளார்.

குழந்தைகள் விலங்குகள் பறவைகளையும் உறவினர்களாகக் கொண்டால் இவ்வுலகில் அன்பு விரிவடையும். அதனால் திணை வேறுபாடின்மை உத்தியை இவ்விரு கவிஞர்களும் பின்பற்றியுள்ளனர்.

கற்பனை உத்தியையும் இவ்விரு கவிஞர்களும் பின்பற்றி ஒன்றுபட்டுள்ளனர். இவ்வாறு பல்வேறு உத்திகளை பின்பற்றிய இவ்விரு கவிஞர்களும் பாடல் கருத்துகளைக் கூறுவதில் சில பாடல்களில் ஒன்றுப்பட்டுள்ளனர். ஒரு சில பாடல்களில் வேறுபட்டுள்ளனர்.

குழந்தைகளுக்குப் புதிய வடிவங்களில் எழுதினாலும் இலக்கண நெறிக்குட்பட்டு எழுதுவதும் கவிஞர்களின் கடமையாகும். என்பதைக் கருத்தில் கொண்டு யாப்பு உத்தி, அணி உத்தி, சொல்நய உத்தி, போன்ற உத்திகளும் பின்பற்றப்பட்டுள்ளன.

இவ்விரு கவிஞர்களும் வார்த்தைகளால் ஓசை தரும் ஒலிநய உத்தியைப் பின்பற்றியுள்ளனர். இரண்டு பாத்திரங்களை அறிமுகப்படுத்தி செய்திகளைக் கூறுகிற நாடக வடிவ உத்தியையும் அமைத்து ஒன்றுபட்டுள்ளனர்.

பாடலையே அதிகமாக விரும்பும் குழந்தைகளுக்குக் கூறும் நற்செய்திகளைக் கதையும் பாடலும் கலந்த கதைப்பாடல்களில் கூறினால் குழந்தைகள் மகிழ்வார்கள் என்பதால் புராணக் செய்திகளைப் பாடுபொருளாக்கிய கதைப்பாடல்களையும் எழுதியுள்ளனர்.

நாவல் உத்தியும் கதை உத்தியும் பாட்டுப்பாடி மகிழும் குழந்தைகள் ஓர் இடத்தில் அமர்ந்து படிக்கும் திறனைப் பெறுவதற்காக இவ்விரு கவிஞர்களும் பின்பற்றி ஒன்றுபட்டுள்ளனர். மேற்கண்ட உத்திகளில் பாடல்கள் அமைத்த இவ்விரு கவிஞர்களும் உரை உத்தியில் சமூகத் தொண்டர்கள், சமூக தொண்டர்களின் செயல்களைக் கட்டுரை வடிவிலும் வெளிப்படுத்தியுள்ளனர்.

பண்பாட்டின் விளக்கமும் அவசியமும் அறியப்பெற்றுள்ளன. மனித இன மாண்புகளான ஈகை, அன்பு, வாய்மை போன்ற பண்பாடுகளை அறிவதற்கேற்ற பாடல்களை இவ்விருவரும் எழுதி ஒன்றுபட்டுள்ளனர். மனித நேயத்தைப் பின்பற்றுதல், உண்மையைக் கடைப்பிடித்தல், உதவி செய்தல் போன்ற அறச் செயல்களைச் செய்யும்போது ஏற்படும் துன்பங்களைப் பொருட்படுத்தக்கூடாது. வறுமையில் வாடியவர்களின் பசித்துயரைப் போக்குவது பண்பாடாகும் என்கின்ற செய்திகள் இவ்விரு கவிஞர்களின் பாடல்களிலும் உள்ளன.

சமுதாயத்தில் தாய், ஆசிரியர், மாணவர், தொழிலாளர் போன்ற ஒவ்வொருவரும் பின்பற்றவேண்டிய உயர்ந்த செயல்கள் பாடல்களில் உணர்த்தப்பட்டுள்ளன.

வாழ்த்துதலும் பாராட்டுதலும் பண்பாடாகும். செய்த நன்றியை மறக்காமல் இருப்பது பண்பாடாகும் என்கின்ற செய்திகள் இவ்விரு கவிஞர்களின் பாடல்களிலும் உள்ளன. ஒருவருக்குத் தேவைப்படும் உதவியைச் செய்தபின் யோசனைகளைக் கூற வேண்டும் என்ற செய்தியைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா கூறியுள்ளார். இறைநம்பிக்கையும் தன்னம்பிக்கையும் பண்பாடாகும். சாலை விதிகளும் சட்டங்களும் பண்பாடாகும். இத்தகைய பண்பாட்டுச் சிந்தனைகள் இவ்விரு கவிஞர்களின் பாடல்களில் பதிவு செய்யப்பட்டுள்ளன. இராமாயணத்தில் நற்செயல்களால் ஆட்சி செய்த இராமனைப் பற்றிய செய்திகள் பாடல்களில் இடம்பெற்றுள்ளன. இயலால்

சொற்பொழிவாற்றி, இசையால் இசைத்து, நாடகத்தால் நடித்துப் பிறரை மகிழ்ச்செய்யும் கலையுணர்வுகளும் பண்பாடாகும். இப்பண்பாட்டுச் சிந்தனைகள் இவ்விரு கவிஞர்களின் பாடல்களாலும் அறியப்பெற்றுள்ளன.

சமுதாயம் பற்றிய விளக்கங்களும், சமூக வகைமைகளும் கூறப்பட்டுள்ளன. கிராமங்களின் இயல்பும் அவசியமும் கூறப்பட்டுள்ளன. நகர்ப்புறச் சமுதாயம் சிக்கலானது. ஆதலால் கவனத்துடன் பயணிக்க வேண்டும் என எச்சரிக்கப்பட்டுள்ளது. சமூகச் சிக்கல்களுக்கு மனிதனின் ஒழுக்கமின்மையே காரணமாவதால் பாடல்களில் காந்தீயச் சிந்தனைகள் பதிவு செய்யப்பட்டுள்ளன. களவினை ஒழிக்க வழி கூறப்பட்டுள்ளது. மீன், ஆட்டோ போன்ற பொருட்களை உவமையாக்கி ஒற்றுமை உணர்வு வளர்க்கப்பட்டுள்ளது. ஆலைக்கழிவுகளால் ஏற்படும் பாதிப்பும் குழந்தைத் தொழிலாளர்களால் ஏற்படும் பாதிப்பும் குண்டால் ஏற்படும் தீய விளைவும் பாடல்கள் மூலம் அறிய வைக்கப்பட்டுள்ளன.

சமூகத்தை ஆன்மீகத்தால் உயர்த்தலாம். மாசகற்ற மரம் வளர்க்க வேண்டும். நாட்டினை வல்லரசாக்க வேண்டும்: பொருளாதாரம் உயர சேமிப்பு அவசியமானவை: மூவண்ணங்களால் ஆன கொடியின் இயல்புகளையும் சுதந்திரத்தின் இயல்புகளையும் உணரவேண்டும். கல்வியால், உழைப்பால், உயர்ந்த குழந்தைகள் வெளிநாட்டுக் கொள்கைகளை ஏற்கவேண்டும். ஆனால் இந்தியாவை விட்டு அயல்நாட்டிற்குச் செல்லக்கூடாது. என்னும் சிந்தனையைக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி உணர்த்தியுள்ளார். இத்தகைய பாதுகாப்புச் சிந்தனைகள் நிறையப் பதிவு செய்யப்பட்டுள்ளன.

சமூதாயத்தை நெறிப்படுத்திய தலைவர்களான நேரு, காந்தி போன்ற அன்றையக்காலத் தலைவர்களைப் பற்றியும் இன்றையக் காலத்தில் நம்முடன் வாழ்ந்து மறைந்த முன்னாள் குடியரசுத் தலைவர் அப்துல்கலாமினைப் பற்றிய செய்திகளும் குழந்தைக்கவிஞர் செல்லகணபதியின் பாடல்களில் கூறப்பட்டுள்ளன. சமூக நிறுவனமான செஞ்சிலுவைச் சங்கத்தையும் நூல்நிலையத்தையும் அறிமுகப்படுத்தும் பாடல்கள் உள்ளன. சமுதாய வளர்ச்சியில் தலைமைப் பொறுப்பின் இன்றியமையாமை உணர்த்தப்பட்டுள்ளது. சமுதாய விழாக்களும் நினைவு கூறப்பட்டுள்ளன. சமுதாயத்தில் பணத்தை விடப் பண்பே அடிப்படையானது. என்பதை உணர்த்துகின்ற கதைகளும் உள்ளன. சமூகச் சிந்தனைகள் கதைகளிலும் நாவல்களிலும் கூறப்பட்டுள்ளன.

குழந்தைகள் மென்மையானவர்கள். அதனால் அவர்களுக்குக் கற்பிக்கும் ஆசிரியர் எப்பொருளையும் அவர்களது மனம் ஏற்றுக் கொள்ளும் வகையில் கூறுதல் சிறந்ததாகும். என்ற உளவியலாரின் கூற்றினை உணர்ந்து எழுதிய பாடல்களாக இவர்கள் பாடல்கள் உள்ளன. உளவியல் விளக்கங்களும், குழந்தை உளவியல் பெரியவர்களின் உளவியலிலிருந்து வேறுபடும் தன்மை உடையது என்று

கூறப்பட்டுள்ளது. உறவினர்கள் குழந்தைகளிடம் நடந்து கொள்ளும் முறைகளைக் குழந்தைகள் தாங்களே உணர்ந்து கூறுவதாகப் பாடல்களில் காட்டப்பட்டுள்ளன.

உறவினர்களை மதிப்பதற்குரிய பாடல்களும் உளவியல் பொருத்தப்பாட்டுடன் அமைந்துள்ளன. குழந்தைகள் பிற உயிர்கள் மீது கொள்ளும் அன்பினைப் பாடல்களில் பதிவு செய்துள்ளனர். இயற்கை, செயற்கை வேறுபாடுகளும் உளவியல் பொருத்தப்பாட்டுடன் புலப்படுத்தப்பட்டுள்ளன.

மனமகிழ்ச்சி தரும் பாடல்களும், விலங்கு, பறவைகளைப் பார்த்துப் பயங்கொள்ளுதலைத் தவிர்க்கும் பாடல்களும் உள்ளன. தவறுகளை மறைப்பதைவிட வெளிப்படுத்துவது சிறந்ததாகும் என்பதைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பாவின் கதைகள் உணர்த்துகின்றன. நற்பழக்கங்களை வளர்க்கும் பாடல்களும் ஆளுமையை வளர்க்கும் கல்வி வளர்ச்சி, மொழி வளர்ச்சிப் பாடல்களும் உள்ளன. உளவியலார் வகைப்படுத்திய தானே கற்றல், அனுபவத்தின் மூலம் கற்றல் போன்ற கற்றல் வகைமைக்குரிய பாடல்களை இவ்விரு கவிஞர்களும் பாடியுள்ளனர். பாடல்களில் அக்கறை, பழக்கவழக்கங்கள் கவனம், கற்பனை, புலன்காட்சி, நினைவாற்றல் போன்ற குழந்தைகளின் உளவியல் செய்திகள் உளவியலில் கூறப்பட்டுள்ள முறை ஆராயப் பெற்றுள்ளன. பிறர்க்கு உதவுதல் பண்பாடாகும். இதனாலேயே சமுதாயம் மேன்மையுறும். இவற்றை உணர்ந்து இவ்விரு கவிஞர்களும் மேற்கூறிய கருத்துகளுக்குரிய பாடல்களை உளவியல் பொருத்தப்பாட்டுடன் அமைத்துள்ளனர்.

சமுதாயத்தில் ஒரு குடிமகன் நாட்டுப்பற்றுடன் விளங்க அடித்தளமானது செஞ்சிலுவைச் சங்கம் என்பதைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா உணர்த்தியுள்ளார். பொருட்சிக்கனத்தின் அவசியத்தைக் குழந்தைக்கவிஞர் செல்லகணபதி கூறியுள்ளார். விவசாயத் தொழிலை மேன்மைப்படுத்தும் வகையில் குழந்தை உணர்விற்குரிய பாடலைக் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா எழுதியுள்ளார்.

இவ்விருகுழந்தைக்கவிஞர்களின் படைப்புகளில் கூறப்பட்டுள்ள கருத்துகள் குழந்தை உலகம் செம்மையாக அமைவதற்குரிய கருத்துகளாக உள்ளன என்று ஆராய்ந்து அறியப்பெற்றுள்ளன. இவர்களது காலத்திலேயே குழந்தை இலக்கியம் முழு வளர்ச்சி அடையத் தொடங்கியது என்பது அறியப்பெற்றுள்ளது.

இவ்வாறு இவ்விரு குழந்தைக்கவிஞர்களும் குழந்தை இலக்கியத்தை வளர்ச்சியடையச் செய்ததால் இவர்களது பாடல்களின் உத்திகளையும் கதைப்பாடல் உத்திகளையும் வெவ்வேறு பாடுபொருட்களில் கடலூர் நா.இராதாகிருஷ்ணன், கே.பத்மநாபன் போன்றோர் பின்பற்றி வருகின்றனர். குழந்தைக்கவிஞர் செல்லகணபதியின் திருக்குறள் உத்தியை ஆசி கண்ணம்பிரத்தினம் பின்பற்றிச் சிறுவர் மணியில் எழுதி வருகிறார்.

இதிகாசங்களை, காப்பியங்களைக் குழந்தைகளுக்கேற்ற முறையில் சுருக்கமாக இன்றையக் குழந்தை எழுத்தாளர்கள் எழுதி வருகிறார்கள். படைக்களப் பாவலர் துரைமூர்த்தி ‘சிறுவர்கட்குப் பெட்டகம்’ என்னும் நூலில் உயிரெழுத்துகளையும், மெய்யெழுத்துகளையும் பாடல்களாலேயே அறியச் செய்துள்ளார். இவர் அறியும் உயிரும் அறிவாய் என்னும் பாடலில் தொல்காப்பியர் மரபியலில் கூறும் தொல்காப்பிய இலக்கணத்தை எளிமைப்படுத்தியுள்ளார். மேலும் ‘ஓரெழுத்தொருமொழி’ என்னும் பாடலையும் எழுதியுள்ளார். இப்படி ஆய்வில் கூறப்படாத எத்தனையோ நூல்கள் குழந்தைகளுக்காகப் படைக்கப்பட்டு வருகின்றன. ஆனால் குழந்தை வாசகர்கள் பின்பற்றுகிறார்களா என்றால் அது கேள்விக்குறியாகவே உள்ளது.

குழந்தைக்கவிஞர் செல்லகணபதி அவர்கள் 07.08.2015 அன்று கம்பன் கழகம் நடத்திய சாகித்திய அகாடமி விருதிற்காகப் பெற்ற பாராட்டுவிழாவில் ‘பாப்பா! பாட்டுப் பாடவா!’ என்னும் நூலைத் தானே பள்ளிகளுக்குச் சென்று விற்கின்றபோது நாற்பது பள்ளிகளில் மட்டுமே வாங்கினார்கள் என்று குறிப்பிட்டுள்ளார். நாற்பது பள்ளிகளில் மட்டும் ஒரே ஒரு குழந்தை இலக்கிய நூல் விற்கப்படுகிறது என்றால் குழந்தைகள் இந்நூல்களை எப்பொழுதுதான் படிப்பார்கள்; பின்பற்றுவார்கள் என்பது சிந்திக்கத் தக்கதாக அமைகிறது. அரசு இந்நிலையை மாற்றுவதற்குத் தகுந்த முயற்சிகளை எடுக்க வேண்டும். அரசே பொறுப்பெடுத்து வாசகப் பலகை போன்றவற்றில் வெளிவரச் செய்து பேருந்துநிலையம், அருங்காட்சியகங்கள், சுற்றுலாத் தலங்கள் போன்ற இடங்களில் வைக்கலாம்.

இவ்வாறு வைக்கும்போது பேருந்திற்காகக் காத்திருக்கும் நேரத்தில் குழந்தைகள் இதைப் படித்து ஆர்வத்தை வளர்ப்பார்கள்.

மேலைநாட்டுக் குழந்தைக்கவிஞர்களைப் போன்று பள்ளிகளுக்குச் சென்றும் கற்பிக்க வேண்டும் குழந்தை இலக்கியப் படைப்பாளர்களும் பெருகவேண்டும். குழந்தை இலக்கியத்தை ஆய்வு செய்யும் ஆய்வாளர்களின் எண்ணிக்கையும் பெருக வேண்டும். குழந்தை இலக்கியப் படைப்பாளர்கள் கணிதம், வரலாறு, அறிவியல், போன்ற எப்பாடத்தையும் குழந்தைக் கவிதைகளாகக் குழந்தைக் கதைகளாக குழந்தை நாவல்களாக வெளிப்படுத்த வேண்டும். இதைப் பாடப்புத்தகமாக வெளிவரச் செய்ய வேண்டும். நம் நாட்டு அரசு குழந்தைகளுக்குரிய நூல் நிலையத்தை அமைத்து அதில் இவ்விலக்கியங்களை இடம் பெறச் செய்யலாம்.

ஒவ்வொரு வீட்டிலும் உள்ள பெரியோர்கள், பெற்றோர்கள் ஆய்வு நூல்களைப் படித்து அதில் குறிப்பிட்டுள்ள செய்திகளைக் குழந்தைகளுக்கு எடுத்துக் கூற வேண்டும். இளம் வயதினராகிய ஆய்வாளர்கள் பள்ளிகளுக்கும், வீடுகளுக்கும் சென்று குழந்தைகளுக்குரிய பாடல்களை கதைகளை, நாடகங்களைப் படிப்பதற்கு

ஊக்கப்படுத்த வேண்டும். பேராசிரியர்கள் குழந்தை இலக்கியங்களின் பல கூறுகளில் ஆய்வு மேற்கொள்ள ஆய்வாளர்களை ஊக்குவிக்கலாம்.

மேற்குறிப்பிட்டபடி அரசாங்கத்தாலும் பொதுமக்களாலும் குழந்தை இலக்கியச் சிந்தனைகள் குழந்தை வாசகர்கள் மனதில் பதியச் செய்யப்பட்டால் இளைய பாரதம் செம்மாந்து நிற்கும்.

எதிர்காலத்தில் இவ்விரு குழந்தைக் கவிஞர்களின் படைப்பில் ''குழந்தை உளவியல்'' என்ற தனித் தலைப்பிலும், ''குழந்தை இலக்கிய எழுத்தாளர்கள்'' என்ற பொதுவான தலைப்பிலும் ''பிற குழந்தை எழுத்தாளர்களின் குழந்தை இலக்கியங்களில் மொழிநடை'' என்ற தலைப்பிலும் ஆய்வு மேற்கொள்ளலாம்.

# துணைநூற்பட்டியல்

**முதன்மைச் சான்றாதாரங்கள்**

**பாடல்கள்**


1) **அழ.வள்ளியப்பா** - **மலரும் உள்ளம்**
நியூ செஞ்சுரி புச் ஹவுஸ் (பி.லிட்),
41Bசிட்கோ இன்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர். சென்னை – 600 098.
முதற்பதிப்பு – அக்டோபர் 2012.

2) ” - **மலரும் உள்ளம் (இ.தொ.),**
குழந்தைப் புத்தக நிலையம்,
சென்னை -40,
ஆறாவது பதிப்பு ஜீலை 2006.

3) ” - **சிரிக்கும் பூக்கள்,**
குழந்தைப் புத்தக நிலையம்
மூன்றாம் பதிப்பு, நவம்பர் 2007.

4) ” - **சுதந்திரம் பிறந்த கதை,**
குழந்தைப் புத்தக நிலையம்,
முதற்பதிப்பு - ஆகஸ்ட் 15 1968.

5) ” - **ஈசாப் கதைப் பாடல்கள்,**
குழந்தைப் புத்தக நிலையம்,
சென்னை -40,
முதற்பதிப்பு ஜனவரி, 1987.

6) செல்லகணபதி - **மலரும் மொட்டுகள்,**
பழனியப்பா பிரதர்ஸ்,
முதற்பதிப்பு - 07.02.2001.

7) ” - **வளரும் பூக்கள்,**
பழனியப்பா பிரதர்ஸ்,
முதற்பதிப்பு - டிசம்பர் 2002.

8) செல்லகணபதி - **மணக்கும் பூக்கள்,**
பழனியப்பா பிரதர்ஸ்,
முதற்பதிப்பு - நவம்பர் 2006.

9) ” - **நேற்று, இன்று நாளை**
பழனியப்பா பிரதர்ஸ்,
முதற்பதிப்பு நவம்பர் 2008.

10) ” - **தேடல் வேட்டை,**
பழனியப்பா பிரதர்ஸ்,
முதற்பதிப்பு 2011.

11) ” - **விரிந்த வானம்**
பழனியப்பா பிரதர்ஸ்,
டிசம்பர் 2006

12) ” - **குருவிக்கூடு,**
பழனியப்பா பிரதர்ஸ்,
முதற்பதிப்பு 14.11.1999

13) ” - **பட்டுச்சிறகு,**
பழனியப்பா பிரதர்ஸ்,
முதற்பதிப்பு 14.11.1995

**கதைகள்:**

1) அழ.வள்ளியப்பா - **வேட்டை நாய்,**
குழந்தைப் புத்தக நிலையம்,
முதற்பதிப்பு - ஜனவரி 1987

.

2) “ - **திரும்பி வந்த மான்குட்டி,**
குழந்தைப் புத்தக நிலையம்,
அண்ணா நகர், சென்னை 600040.
முதற்பதிப்பு - நவம்பர் 2002.

3) ” - **நல்ல நண்பர்கள்,**
பழனியப்பா பிரதர்ஸ்,
பத்தாம் பதிப்பு, நவம்பர் 1996.

4) ” - **குதிரைச் சவாரி,**

பழனியப்பா பிரதர்ஸ்,
சென்னை -14,
பதிப்பு ஏப்ரல் 1978.

5) செல்லகணபதி - **அப்பாவின் கோபம்,**
பழனியப்பா பிரதர்ஸ்,
முதற்பதிப்பு 14.11.2002.

**நாவல்கள்**

1. அழ.வள்ளியப்பா - **பர்மா ரமணி,**
குழந்தைப் புத்தக நிலையம்,
நான்காம் பதிப்பு
பிப்ரவரி 1970.

**2.** ” - **நீலா மாலா,**
குழந்தை புத்தக நிலையம்,
முதற்பதிப்பு - ஆகஸ்ட் 1977.

3. **செல்லகணபதி** - **அண்ணன் அல்ல அப்பா!,**
பழனியப்பா பிரதர்ஸ்,
முதற்பதிப்பு - 14.11.1992.

4. ” - **ஆருயிர்த் தோழி (சிறுவர் நாவல்),**
பழனியப்பா பிரதர்ஸ்,
முதற்பதிப்பு - 29.12.2001

5 ” - **பூங்குளம் ராஜா,**
பழனியப்பா பிரதர்ஸ்,
முதற்பதிப்பு 14.11.1987.

6 ” - **இராமு எங்கே போகிறான்? (சிறுவர் நாவல்)**
பழனியப்பா பிரதர்ஸ்,
முதற்பதிப்பு 14.11.1987.

**பிறநூல்கள்**


1. அழ.வள்ளியப்பா - **எங்கள் கதையைக் கேளுங்கள்,**
குழந்தைப் புத்தக நிலையம்,
மூன்றாம் பதிப்பு - ஜனவரி 1984.

2. ” - **வெளிநாட்டு விடுகதைகள்,**
குழந்தைப் புதத்க நிலையம்,
மூன்றாம் பதிப்பு 1983.

3. ” - **கேள்வி நேரம்,**
குழந்தைப் புத்தக நிலையம்,
முதற்பதிப்பு, - ஏப்ரல் 1988.

4. ” - **பெரியோர் வாழ்விலே (இ.தொ.),**
குழந்தைப் புத்தக நிலையம்,
ஏழாம் பதிப்பு, - ஜனவரி 2001.

5. ” - **நம் நதிகள் (பகுதி 11)**
நேஷனல் புக் டிரஸ்ட், (National Book Trust)
இந்தியா -5 (India-5)
கிரீன் பார்க் (Green Park)
புதுடெல்லி -16 (New Delhi-16)
மறுபதிப்பு – 1987, (1909)

6. ” - **சின்னஞ்சிறு வயதில்,**
குழந்தைப் புத்தக நிலையம்,
பன்னிரண்டாம் பதிப்பு - ஜனவரி 2003

7. செல்லகணபதி - **ஒரு கதை ஒரு தகவல்,**
பழனியப்பா பிரதர்ஸ்,
முதற்பதிப்பு 14.11.2003.

8. செல்லகணபதி - **மிளகாய்ப்பழச் சாமியாரும் வாழைப்பழச் சாமியாரும்,**
பழனியப்பா பிரதர்ஸ், 11.12.1962

**துணைமைச் சான்றாதாரங்கள்**


1.**அடைக்கலசாமி. எம்மார்.** **தமிழ் இலக்கிய வரலாறு**
ராசிப் பதிப்பகம்,
90 கணேஷ் நகர்,
சோலையூர் அஞ்சல்,
சென்னை -73
39ம் பதிப்பு-2007.

2.**அறிவொளி.அ(உ.ஆ)** **கம்பராமாயணம் உரைநடையில் முதல்தொகுதி**,
வர்த்தமானன் பதிப்பகம்,
தொலைபேசி எண் 9941863542.

3.**அன்பானந்தம்.சி** **மறைமலையடிகள் பிள்ளைத்தமிழ்,**
மெய்யம்மைப் பதிப்பகம்,
41,மாசிலாமணி முதலியார் தெரு,
இராயப்பேட்டை.
சென்னை-600 014
முதற்பதிப்பு செப்டம்பர் 1978.

4.**இராமநாதன்.லே.ப.க.ரு.** **திருத்தக்க தேவர்,**
முத்தையா நிலையம்,
ப்ளாட் எண் 48,
வெங்கடேஷ் நகர்,
விருகம்பாக்கம்,
சென்னை 600 092.
மூன்றாம் பதிப்பு டிசம்பர் 1998.

5. **இராமலிங்கம் பாஞ்** **கல்வியும் உளவியலும்,**
ராஜகுமாரி பதிப்பகம்
4/36, முகப்பேர் மேற்கு,
சென்னை – 600058.

6. ” **குழவிப் பருவமும் அறிவு வளர்ச்சியும்,**
**உதயம் பிரசுரம்,**
65, பெரியார் தெரு,
எம்.ஜி.ஆர் நகர்,
சென்னை -78.
முதற்பதிப்பு 2004.

7. **இராமலிங்கம் பாஞ் :** **மானிட உளவியல்,**
சாரதா பதிப்பகம்,
G-4. சாந்தி அடுக்ககம்,
3ஸ்ரீ கிருஷ்னாபுரம் தெரு,
ராயப்பேட்டை,
சென்னை – 600014.
முதற்பதிப்பு 1989

8. **ராமலிங்கம்.மா** **இருபதாம் நூற்றாண்டுத்தமிழ் இலக்கியம்,**
தமிழ்ப் புத்தகாலயம்,
576, பைகிராப்ட்ஸ் ரோடு,
சென்னை-5
முதற்பதிப்பு அக்டோபர் 1973.

9. **இராமையாபிள்ளை.நா.(உ.ஆ).** **சங்க இலக்கியங்கள் தொகுதி-1,**
நற்றிணை,
வர்த்தமானன் பதிப்பகம்,
21,ராமகிருஷ்ணா தெரு,
தியாகராய நகர்,
சென்னை-17.

10.**இளவரசு.சோம.(உ.ஆ).** **நன்னூல் எழுத்ததிகாரம்,**
மணிவாசகர் பதிப்பகம்,
31,சிங்கர் தெரு,
பாரி முனை,
சென்னை-600 108.
இரண்டாம் பதிப்பு ஜூலை 2005.

11. ” **நன்னூல் சொல்லதிகாரம்,**
மணிவாசகர் பதிப்பகம்,
31,சிங்கர்தெரு,
பாரி முனை,
சென்னை-600 108.
ஆறாம் பதிப்பு ஜூலை 2012

12.**எழிலன்.சா** **மழலையர் கல்விக்கு மணியான யோசனைகள்,**
இராமநாதன் பதிப்பகம்,
1481,கார்டன் அவென்யூ,
முகப்பேர்,
சென்னை 600 050.

13.**ஏப்ரகாம்.ஜே.எஸ்** **நேர நிர்வாகமும் சுய முன்னேற்றமும்,**
நர்மதா பதிப்பகம்,
10,நானா தெரு,
(தி.நகர் தலைமை அஞ்சலகத்தைஒட்டிய தெரு.)
பாண்டி பஜார்,
சென்னை 600 017.
பதிப்பு ஆண்டு ஜூன் 2003.

14.**கண்ணம்பிரத்தினம்.ஆசி.(உ_.ஆ)** **திருக்குறள் கருத்துரை,**
தாமரை பப்ளிகேஷன்ஸ்(பி)லிட்,
41,B,சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்துார்,
சென்னை 600 098.
நான்காம் பதிப்பு அக்டோபர் 2014.

15.**கணேசன்.கதி** **குழந்தை இலக்கியத்தில் வள்ளியப்பா ஒரு வழிகாட்டி**,
அருள் சிவம் நூலகம்,
1,தாயகம் வைரவன் அம்பலம் தெரு,
ஐந்து விளக்கு,
காரைக்குடி-623001,
முதற்பதிப்பு நவம்பர் 1981.

16. **கலைமணி.வி** **நல்ல தீர்ப்பு வழங்கிய நீதி அரசர்கள்!**
பாண்டியன் பைந்தமிழ்ப் பதிப்பகம்,
22,கந்தன் தெரு,
மதுரை மீனாட்சி நகர்,
வளசரவாக்கம்,
சென்னை-600 087.

17.**கோவை ஞானி** **தமிழ்,தமிழர்,தமிழ் இயக்கம்,**
மெய்யப்பன் பதிப்பகம்,
53,புதுத் தெரு,
சிதம்பரம்-608001
முதற்பதிப்பு டிசம்பர் 2003.

18.**சரஸ்வதி ராம்நாத்** **இளைஞர் கம்பராமாயணம்,**
கண்ணப்பன் பதிப்பகம்,
16,கம்பர் தெரு,
ஆலந்துார்,
சென்னை 600 016,
முதற்பதிப்பு டிசம்பர் 2007.

19.**சாமி பழனியப்பன்** **குழந்தையின்பம்.**
4(39)தணிகாச்சலம் சாலை,
பிருந்தாவனம் அப்பார்ட்மென்ட்ஸ்,
தி.நகர்,
சென்னை 600 017.
முதற்பதிப்பு டிசம்பர் 2003.

20.**சுப்பிரமணியன்.ச.வே(உ_.ஆ)** **கம்பன் இலக்கிய உத்திகள்,**
மெய்யப்பன் தமிழாய்வகம்,
53,புதுத்தெரு,
சிதம்பரம்,608001.
முதற்பதிப்பு டிசம்பர் 2002.

21. ” **தொல்காப்பியம் தெளிவுரை,**
மணிவாசகர் பதிப்பகம்,
31,சிங்கர் தெரு,

பாரி முனை,
சென்னை 600 108.
ஏழாம்பதிப்பு செப்டம்பர் 2005.

22.**சுப்புரெட்டியார்.ந** **இலக்கிய வகையின் வளர்ச்சியும் இக்கால இலக்கியங்களும்,**
பூங்குழல் பதிப்பகம்,
சென்னை-40.
மறுபதிப்பு-2009.

23.**சுரேந்திரன்.இரா.** **நாட்டுப்புற இலக்கியம் நலந்தரு விளக்கம்,**
தேன் தமிழ்ப்பதிப்பகம்,
85,சுப்பிரமணியம் பிள்ளைத் தெரு,
சேலம் 636001.
இரண்டாம் பதிப்பு ஜுலை 1981.

24.**செயராமன்.ந.வீ** **இலக்கண ஆய்வுக் கோவை,**
இலக்கியப் பதிப்பகம்,
12,அப்பாத்துரையார் தெரு,
தேனாம்பேட்டை,
சென்னை-18.
முதற்பதிப்பு மே-1980.

25.**ஞானமூர்த்தி.தா.ஏ** **இலக்கியத் திறனாய்வியல்,**
ஐந்திணைப் பதிப்பகம்,
279,பாரதிசாலை,
திருவல்லிக்கேணி,
சென்னை-600 005.
மறுபதிப்பு ஜுலை 2002.

26.**தமிழண்ணல்** **யாப்பருங்கலக்காரிகை,**
தமிழ்மொழிப்பயிலகம்,
4/485 சதாசிவநகர்,
முதன்மைச் சாலை
மதுரை 625020.
மூன்றாம் பதிப்பு அக்டோபர் 2011.

27.**தாயம்மாள் அறவாணன்** **கண்ணகி மண்ணில்,**
பச்சைப் பசேல்,
5,முனிரத்தினம் தெரு,
அய்யாவு குடியிருப்பு,
சென்னை 600 029.
பதிப்பு:2006.

28.**தூரன்.பெ.** **குழந்தை உள்ளம்,**
சாரதா பதிப்பகம்,
ஜீ-4-சாந்தி அடுக்ககம்,
ஸ்ரீ கிருஷ்ணாபுரம் தெரு,
ராயப்பேட்டை
சென்னை-14
முதற்பதிப்பு டிசம்பர் 2008.

29.**நடராஜன்** **வட்டநிலா,(சிறுவர் பாடல்கள்)**
செந்தூரன் பதிப்பகம்,
புதிய எண் 13,பழைய எண் 6,
ஜெய் சங்கர் தெரு,
மேற்கு மாம்பலம்,
சென்னை 600 033.
முதற்பதிப்பு நவம்பர் 2006.

30.**நடராஜன்.அ.லெ** **தாயுமானவர் வாழ்வும் வாக்கும்,**
கஸ்தூர்பா காந்திகண்யா குருகுலம்
(வெளியிடுவோர்)வெளியீட்டுப்பகுதி,
முதற்பதிப்பு 24.8.80

31.**நடராஜன். எஸ்** **மழலையர் பள்ளிக் கல்விப்**
**பயிற்றுமுறைகள்**
குழந்தை மனவியல்,
சாந்தா பப்ளிஷர்ஸ்,
முத்துவிழா இல்லம்,
13(5), ஸ்ரீபுரம், 2வது தெரு,
இராயப்பேட்டை,
சென்னை – 600014.
முதற்பதிப்பு ஏப்ரல் 2006.

32.**நீலம்மதுமயன்.** **படிக்காத மேதை காமராசரிடம் படிக்க வேண்டியவை,**
மணிமேகலைப் பிரசுரம்,
தபால் பெட்டி எண் 1447,
7,தணிகாசலம் சாலை,
தியாகராய நகர்,
சென்னை-600 017.
இரண்டாம் பதிப்பு 2004.

33.**பரந்தாமனார்.அ.கி.** **நல்ல தமிழ் எழுத வேண்டுமா?**
பாரி நிலையம்,
184,பிராட்வே,
சென்னை 600 108.
பத்தாம் பதிப்பு 1992.

34.**பழனிச்சாமி.செ.** **புறநானூற்றில் தமிழர் பண்பாடு,**
வாணி பதிப்பகம்,
402,அளகேசன் சாலை,
கோவை 641011.
முதற்பதிப்பு 1989.

35.**பாரதிதாசன்** **பாரதிதாசன் கவிதைகள்,**
கவிதா பப்ளிகேஷன்,
தபால் பெட்டி எண் 6123,
8,மாசிலாமணி தெரு,
பாண்டி பஜார்,
தி.நகர்,
சென்னை-600 017.

முதற்பதிப்பு டிசம்பர் 2008.

36.**பிரேமா.இரா.** **சங்க இலக்கியங்கள் தொகுதி-2,**
குறுந்தொகை,
வாத்தமானன் பதிப்பகம்.

37.**புஷ்பா பிரபாகர்** **தமிழ் விடுகதைகள்**
வாசன் பதிப்பகம்,
ஆனந்த சரோவர் அப்பார்ட்மெண்ட்ஸ்,
பிளாட் எண் 16.(flat No:16)
ப்ளோர் எண் 11(floor No 11)
117,கச்சேரி ரோடு,
லஸ்கார்னர்,
மயிலாப்பூர்,
சென்னை-600 014

38.**பூவண்ணன்** **குழந்தைக் கவிஞர்கள்,**
மணிவாசகர் பதிப்பகம்,
8/7,சிங்கர் தெரு,
பாரி முனை,
சென்னை-600 108.
முதற்பதிப்பு அக்டோபர் 2000.

39.**பூவண்ணன், செல்ல கணபதி (தொ.ஆ)** **பிள்ளைப் பாடல்கள்.**
(சிறுவர் பாடல் தொகுப்பு)
பழனியப்பா பிரதர்ஸ்,
முதற்பதிப்பு 7.2.2001.

40.**மணிசங்கர்(உ.ஆ)** **எளிய உரையில் சிலப்பதிகாரம், பாகம்-2**
மகாலட்சுமி பதிப்பகம்,
50/6,ஜெகந்நாதன் நகர்,
ஆக்ஸிலியம் கல்லூரி மெயின் கேட்,
காட்பாடி,வேலூர்-6
முதற்பதிப்பு டிசம்பர் 2002.

41 ” **பன்னிரு திருமுறைகள் தொகுதி-14**
(திருமந்திரம்)
வர்த்தமானன் பதிப்பகம்.

42. ” **பன்னிரு திருமுறைகள் தொகுதி 21,**
(பெரியபுராணம்)
வர்த்தமானன் பதிப்பகம்.

43. ” **பன்னிரு திருமுறைகள் தொகுதி 22,**
(பெரியபுராணம்)
வர்த்தமானன் பதிப்பகம்.

44. ” **சங்க இலக்கியங்கள் தொகுதி-3**
ஐங்குறுநூறு முதல் பகுதி,
வர்த்தமானன் பதிப்பகம்.

45. ” **சங்க இலக்கியங்கள் தொகுதி-5**
பதிற்றுப்பத்து
வர்த்தமானன் பதிப்பகம்.

46.**மாணிக்கம்.அ.(உ.ஆ.)** **சங்க இலக்கியங்கள் தொகுதி-7**
கலித்தொகை முதல் தொகுதி,
வர்த்தமானன் பதிப்பகம்.

47. ” **சங்க இலக்கியங்கள் தொகுதி-9**
அகநானூறு முதல் பகுதி
வர்த்தமானன் பதிப்பகம்.

48. ” **சங்க இலக்கியங்கள் தொகுதி-12.**
புறநானூறு முதல் பகுதி
வர்த்தமானன் பதிப்பகம்.

49. ” **சங்க இலக்கியங்கள் தொகுதி-13**
புறநானூறு இரண்டாம் பகுதி
வர்த்தமானன் பதிப்பகம்.

50. ” **சங்க இலக்கியங்கள் தொகுதி-14**
பத்துப்பாட்டு முதல் பகுதி
வர்த்தமானன் பதிப்பகம்.

51.**மாணிக்கவாசகன்.ஞா(உ.ஆ)** **சிறுபஞ்சமூலம் (மூலமும் விளக்கவுரையும்)**
உமா பதிப்பகம்,
18,(பழைய எண் 171)
பவளக்காரத் தெரு,
சென்னை-600 001.

52. ” **ஆசாரக்கோவை,**
உமா பதிப்பகம்,
ஏழாம் பதிப்பு ஜீன் 2013.

53. ” **வளையாபதி குண்டலகேசி,**
(மூலமும் உரையும்)
உமா பதிப்பகம்,
இரண்டாம் பதிப்பு ஏப்ரல் 2011.

54. ”. **மாணவர்களுக்கான அறநெறி நூல்கள்,**
நாச்சியப்ப சுவாமிகள் நன்னெறிக்கல்வி அறநிலை.
கோவிலூர் மடாலயம்,
கோவிலூர்-630 307.
முதற்பதிப்பு அக்டோபர் 2014.

55.**மார்க்கபந்து. ம** **மணிமேகலை,**
புவனா பதிப்பகம்,
50/6 ஜெகந்நாதன் நகர்,
ஆக்ஸிலியம் கல்லூரி,
பிரதான சாலை,
காட்பாடி,
வேலூர்-6
முதற்பதிப்பு ஆகஸ்ட் 2002.

56.**முத்துக்குமாரசுவாமி.ப(தொ.ஆ).** **இருபதாம் நூற்றாண்டின் 100 தமிழ்க் கவிஞர்கள்,**
பழனியப்பா பிரதர்ஸ்,
முதற்பதிப்பு 2004.

57.**முருகேசன்.ச** **செவ்வியல் இலக்கியச் செந்நெறி,**
இராச குணா பதிப்பகம்,
எண் 913,சாய்ஸ்டோன் அப்பார்ட்மெண்ட்ஸ், பசார் ரோடு,
ராம் நகர்,
மடிப்பாக்கம்,
சென்னை-600 091,
முதற்பதிப்பு டிசம்பர் 2014.

58.**மூர்த்தி.கே.** **வாழ்வை வசந்தசோலை ஆக்கலாம் வாங்க!**
மணிமேகலைப் பிரசுரம்,
த.பெ.எ 1447,
எண் 7,தணிகாசலம் சாலை,
தியாகராய நகர்,
சென்னை-600017.
முதற்பதிப்பு 2012.

59.**வசந்தாள்.த** **வாணிதாசன் தமிழச்சி கொடிமுல்லை ஓர் ஆய்வு,**
வி.பி.எஸ்.அச்சகம்,
29,திருவல்லிக்கேணி நெடுஞ்சாலை,
சென்னை 600005.
முதற்பதிப்பு ஜுன் 1994.

60. **வரதராசன்.மு** **தமிழ் இலக்கிய வரலாறு**,
சாகித்திய அகாதெமி
தலைமைஅலுவலகம்,
ரவீந்திரபவன்,
35,பெட்ரோஸ்ஷா சாலை,
புதுதில்லி-110001.
பதின் மூன்றாம் பதிப்பு 2000.

61. ” **மொழி வரலாறு,**
கழக வெளியீடு,
அப்பர் அச்சகம்,
சென்னை
600 108.
18வது பதிப்பு 2003.

62.**வாணிதாசன்** **குழந்தை இலக்கியம்,**
வள்ளுவர் பண்ணை,
22,இரண்டாவது முதன்மைச்சாலை,
சி.ஐ.டி.நகர்,
சென்னை 600 035.
இரண்டாம் பதிப்பு ஜூலை 1998.

63.**விசுவநாதன்.சீனி** **பாரதியார் கவிதைகள்:**
பூங்கொடிப் பதிப்பகம்,
14, சித்திரைக்குளம் மேற்கு வீதி,
மயிலாப்பூர்,
சென்னை – 600004.
முதற்பதிப்பு மே 1998.

64.**விமலானந்தன்.மது.ச** **தமிழ் இலக்கிய வரலாற்றுக்**
**களஞ்சியம்,**
ஐந்திணைப் பதிப்பகம்,
282,பாரதிசாலை,
திருவல்லிக்கேணி,
சென்னை 600 005.
முதற்பதிப்பு டிசம்பர் 1987.

65.**வேணுகோபால். இ.பா** : **கல்வி உளவியல்,**
சாரதா பதிப்பகம்,
6/16, தோப்பு வெங்கடாசலம் தெரு,
திருவல்லிக்கேணி,
சென்னை – 600005.
முதற்பதிப்பு ஜீலை 2006.

66.**ராஜன்.எ.மு.(தொ.ஆ).** **கிராமத்துச் சிறுவர் பாடல்கள்,**
வெற்றி அச்சகம்,
91,டாக்டர் பெசண்ட் சாலை,
இராயப்பேட்டை
சென்னை-14.
இரண்டாம் பதிப்பு 1999.

67.**ராஜவேலு.கு** **நாமக்கல் கவிஞரின் தேர்ந்தெடுத்த கவிதைகள்,**
சாகித்திய அகாதெமி,
ரவீந்திரபவன்,
35, பெட்ரோஸ்ஷா சாலை,
புதுடில்லி 110001.
முதற்பதிப்பு 2004.

68.**ஜோதி.வ(உ.ஆ.)** **பரஞ்சோதி முனிவர் அருளிய**
திருவிளையாடற்புராணம்,
மூலமும் தெளிவுரையும்(இ.தொ.),
வர்த்தமானன் பதிப்பகம்.

**அகராதிகள்**

1. **ஓய்வு பெற்ற ஆசிரியர் குழு (Retired Teacher Unit)** **பிரிலியண்ட்ஸ் ஆல் (Briliant's All)**
பிரிலியண்ட்ஸ் க்ரூப் பப்ளிகேஷன்
(Briliant's Group of Publications)
1/73, வக்கீல் நீயூ தெரு,
(1/73 vakkil New Street),
மதுரை 625001.
முதற்பதிப்பு நவம்பர் 2000.

2. **ராஜ்மோகன்.அ(தொ.பா.)** **தம்பியின் தமிழ் அகராதி**
உமா பதிப்பகம்,
1/71, (புதிய எண்.18, பவளக்காரத் தெரு),
மண்ணடி, சென்னை – 600 001.
முதற்பதிப்பு ஜனவரி 2007.

3. **நிலாமணி. மு**
**தாக்கர். கே** **தமிழ் -தமிழ் அகராதி**
வர்த்தமானன் பதிப்பகம்,
21, இராமகிருஷ்ணா தெரு,
தியாகராய நகர்,
சென்னை -17.

4. எ.எஸ்.**ஹார்ன்பை அன்ட் ஈ.சி.பார்ன்வெல்** (A-SOHORNBY AND E.C PARNWELL) **ஏன் இங்கிலிஷ் ரீடர்ஸ் டிக்ஸ்னரி**
(AN ENGLISH – READERS DICTIONARY)
ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகப் பதிப்பு,
(OXFORD UNIVERSITY)
லை ஹவுஸ் (ELY HOUSE)
லண்டன் - டபுல்யூ - 1
LONDOWN -1
நான்காம் பதிப்பு – 1972.

5. **லிப்கோ டிக்ஸ்னரி,**
(THE GREAT LIFCO DICTIONARY)
சென்னை – 600017.
பதின்மூன்றாம் பதிப்பு 2001, 2002, 2003.

**ஆய்வுக்கோவை.**

1. **பாலசுப்பிரமணியம். சிற்பி** — **ஆய்வுக்கோவை**
**டென்னிசன். ஒய்** — இரண்டாம் தொகுதி 2002,
**செல்வராசு. நா** — இந்தியப் பல்கலைக்கழகத்
**சுபாசு சந்திரபோசு. பெ (ப.ஆ)** — தமிழாய்வுத் துறை,
பிஷப் ஹீபர் கல்லூரி,,
திருச்சிராப்பள்ளி – 620017.
முதற்பதிப்பு2002மேத் திங்கள்.

**கலைக்களஞ்சியங்கள்:**

1. **திருநணா - பரீட்சை** — **கலைக்களஞ்சியம் தொகுதி ஆறு,**
தமிழ் வளர்ச்சிக் கழகம்,
சென்னை,
முதற்பதிப்பு 1959

2. **கேட்டோ. கா** — **வாழ்வியற் களஞ்சியம் தொகுதி–ஏழு**
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்,
முதற்பதிப்பு மே 1988.

**இணையம்**

1.**இணையதள எண்** — **http://en.wikipedia.org/wiki/childranspoetry.**

.

.

.

# பேட்டி – I

| | | |
|---|---|---|
| தேதி | : | 14.08.2014 |
| பேட்டி நேரம் | : | 4.30 முதல் 5.30 வரை |
| பேட்டி அளித்தவர் | : | குழந்தைக்கவிஞர் செல்லகணபதி |
| பேட்டி கண்டவர் | : | பழ.ஜானகி |

**வணக்கம் ஐயா!**

1) நீங்கள் குழந்தைப்படைப்புகளை அதிகம் எழுதியதற்கு காரணம் என்ன ஐயா?
தொடக்கத்தில் பெரியோர்களுக்கான மரபுக்கவிதைகளை எழுதி வந்தேன். ஒரு முறை அவர்களைச் சந்தித்த பொழுது பெரியோர்களுக்காக எழுத நிறைய பேர் இருக்கிறார்கள். நீங்கள் ஏன் குழந்தைகளுக்காக எழுதக்கூடாது. நீங்கள் குழந்தைகளுக்காகவே எழுதவேண்டும் என்பது என்னுடைய பேரவா என்று கூறினார். அன்று தொடங்கி இன்று வரை என்னுடைய படைப்புகள் அனைத்தும் குழந்தைகளுக்காக மட்டும் என்று அமைந்தது.

2) குழந்தை இலக்கியங்களைத் தாங்கள் படைத்ததற்குக் காரணமாக இருந்தவர்களைக் குறிப்பிட்டால் அது என் ஆய்விற்கு உறுதுணையாக இருக்கும். அதனால் இந்தக் கேள்விக்குரிய விடைகளைக் கூற வேண்டுமென பணிவுடன் கேட்டுக் கொள்கிறேன் ஐயா?

குழந்தைகளுக்காக எழுதுகின்ற பணியில் என்னை ஈடுபடுத்திய குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா என்னுடைய இணைபிரியா நண்பன் டாக்டர் பூவண்ணன் என்னுடைய பாசத்திற்குரிய நண்பர் டாக்டர் ரேவதி போன்ற நண்பர்களின் படைப்புகளைப் படித்ததினால் ஊக்கம் பெற்றேன். குழந்தைகளுக்கான கதை, பாடல்களை நிறைய எழுதினேன்.

3) 2014ஆம் ஆண்டு கணக்கின்படி எத்தனை குழந்தை இலக்கிய நூல்களை எழுதியுள்ளீர்கள்? இதில் சிறுகதைகள் எத்தனை?

| | | |
|---|---|---|
| குழந்தைப்பாடல்கள் | - | 23 குழந்தைப்பாடல்கள் |
| கதை மற்றும் நெடுங்கதை | - | 8 நூல்கள் |
| கட்டுரை | - | 3 |
| தொகுப்பு போன்ற பிற நூல்கள் | - | 8 |
| | | 42 |

4) தங்களது குருநாதர் அழ.வள்ளியப்பா எனத் தங்களின் குழந்தை இலக்கண நூல்களின் வாயிலாக அறிந்துள்ளேன். தாங்கள் குருநாதராக அழ.வள்ளியப்பாவைப் பின்பற்றியது போல் இன்றைய குழந்தைக் கவிஞர்கள் தங்களைக் குருவாக ஏற்றுக் கொண்டார்களா ஐயா!.

பொதுவாகக் குழந்தைகளுக்கு எழுதுபவர்களின் எண்ணிக்கை மிகவும் குறைந்து போய்விட்டது. என்னைக் குருநாதராகப் பின்பற்றி குழந்தைப்பாடல்களாக எழுதுகிறார்களா என்பது எனக்குத் தெரியவில்லை. இதைக் காலம் தீர்மானிக்கும்.

5) குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா ஈசாப் கதைப்பாடல்கள் எழுதியுள்ளார். அந்த ஈசாப் என்பது உண்மைப்பெயரா அல்லது கற்பனைப் பெயரா என்பதைத் தங்களிடமிருந்து அறிய விரும்புகிறேன் ஐயா?

ஈசாப் கதைகள் என்பது வாய்மொழியாக வந்த மேல்நாட்டு இலக்கியம். அதை எல்லா நாட்டுக் குழந்தை இலக்கியப் படைப்பாளிகள் அவரவர் மொழியில் எழுதியிருக்கிறார்கள். ஒரு சிறந்த இலக்கியம் என்பது இப்படி அச்சுவடிவம் பெற்று மக்கள் மனதில் நிலைபெற்றிருப்பது மிகப்பெரிய சிறப்பாகும்.

6) இலக்கியத்தின் குறிக்கோள் என்பது கவிஞர்கள், எழுத்தாளர்கள் தங்களது குறிக்கோளைப் படைப்புகள் வாயிலாகப் படைப்பது எனப் படித்தறிந்துள்ளேன். அந்த அடிப்படையில் எழுதினீர்களா? இல்லை சிறுவர்களுடன் பழகி உணர்ந்த அனுபவத்தால் எழுதியதா? தங்களது கருத்துக்களைக் குழந்தைகளுக்குத் தங்களது படைப்புகளின் வாயிலாக வெளியிட வேண்டும் என்ற குறிக்கோளுடன் எழுதியதா ஐயா?

சிறுவர்களுக்காக இலக்கியம் படைக்கும் பொழுது சிறுவர் பேச்சுமொழி, சிறுவர் விரும்பும் விளையாட்டுகள், சிறுவர்கள் தேடிப் பெற ஆசைப்படும் பொருட்கள் சிறுவர்தம் கற்பனைகள் இவற்றைக் கொண்டே சிறுவர் இலக்கியம் படைக்கப்பட வேண்டும். அப்படி படைக்கின்ற இலக்கியத்தில் படைப்பாளியின் நல்ல எண்ணங்கள் குறிக்கோள்கள் போன்றவற்றைப் புகுத்தி சிறுவர் மனதில் பதியச் செய்ய வேண்டும்.

சிறுவர்களுடன் பழகிய அனுபவங்களை கதையாக்கிப் பாடலாக்கி எழுதியிருக்கிறேன். என்னுடைய கருத்துகளையும் சிறுவர் நெஞ்சம் உள்வாங்கிக் கொள்ளுமாறு சிறுவர் பாடல்களைப் படைத்திருக்கிறேன்.

உதாரணத்திற்கு என்னுடைய பாடல்,

ஆம்பிக் கிடக்கும் ரொட்டித் துண்டுகள்
சாப்பிட உதவாது
சோம்பிக் கிடக்கும் மனிதர்களாலே
காரியம் நடக்காது

படுத்துக் கிடக்கும் மாடுகள் ஊரின்
பாதை அறியாது
பந்தயக் குதிரையை வண்டியில் பூட்டத்
தூரம் தெரியாது.

போர்த்திக் கொண்டு தூங்குவதாலே
கடுங்குளிர் விலகாது.
வேர்க்க நடந்தால் மார்கழி மாதக்
குளிரும் தெரியாது.

கண்ணிருந் தாலும் மூடிக் கிடந்தால்
காட்சிகள் தெரியாது
எண்ணம் இருந்தும் செயல் செய்யாவிடில்
ஏற்றம் கிடைக்காது

அயர்ந்து படுத்தால் சோறிருந் தாலும்
சாப்பிட முடியாது
முயற்சி தொடர்ந்தால் முடியா தென்பது
உலகில் கிடையாது

பிறக்கும் பிள்ளையில் பெரியவன் சிறியவன்
பேதம் கிடையாது
உறக்கம் குறைந்தவன் உழைப்பில் மிகுந்தவன்
உயர்வது தவறாது.

நீங்களும் தங்களது குருநாதர் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பாவும் சிறுகதைகளை விட பாடல்களையே அதிக அளவில் எழுதியுள்ளீர்கள். அதற்குரிய காரணத்தை தங்களது பேட்டியின் வாயிலாக அறிய விழைகிறேன். ஐயா?

இயல்பான பாடல்கள் எழுதவேண்டும் என்ற வேட்கையும் விருப்பமும் என்னையும் எனது குருநாதர் குழந்தைக்கவிஞர் அவர்களையும் குழந்தைகளுக்காகப்

பாடல்களை நிறைய எழுதத்தூண்டின.

பாரத ஸ்டேட் வங்கி பரிசு பெற்ற எனது வளரும் பூக்கள் என்ற புத்தகத்திற்கு தமிழறிஞர் முனைவர் அ.ச.ஞா. அவர்கள் அணிந்துரை எழுதியிருக்கிறார்கள். அதில் அவர் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா அவர்கள் மிகச்சிறந்த குழந்தைக்கவிஞராக வளர்ந்தார். இப்பொழுது கவிஞர் செல்லகணபதி அந்த முகட்டை நோக்கிச் செல்கிறார். இதில் சிறப்பு என்னவென்றால், திரு. வள்ளியப்பாவும் திரு.செல்லகணபதியும் நகரத்தார் இனத்தைச் சேர்ந்தவர்களாவர். னஎ்று இப்படி பல தமிழறிஞர்களின் பாராட்டுகள் என்னைக் குழந்தைகளுக்கு மட்டுமே எழுதத் தூண்டின.

7) உங்களுடைய படைப்புகளை என்னைப் போன்று ஆய்வு செய்தவர்கள் பெயர் விபரங்களைக் குறிப்பிட வேண்டுகிறேன் ஐயா!

திரு. ரங்கராஜன் - சென்னைப் பல்கலைக்கழகம் ஆய்வியல் நிறைஞர்(M.Phil)

தமிழ்த்துறை,

பழ. ஜானகி - ஆய்வியல் நிறைஞர்(M.Phil)
தொலைதூரக்கல்வி,
அழகப்பா பல்கலைக்கழம்,
காரைக்குடி

தங்களுடைய வேலைப் பளுவிலும் இவ்வளவு நேரம் என்னுடைய ஆய்விற்காகத் நான்கேட்ட கேள்விகளுக்கு விடைகளை அளித்ததற்கு நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன் ஐயா!

# பேட்டி – II

பேட்டி காண்பவர் : பழ. ஜானகி

பேட்டி அளித்தவர் : திரு.அரு.சோமசுந்தரன் (பொற்கிழிக் கவிஞர்)

தேதி : 10.10.2014

ஜானகி : ஐயா! குழந்தை இலக்கிய உத்திகள் என்பது என்ன? அதற்குரிய விபரங்களைத் தங்களிடம் கேட்டு எழுத விரும்புகிறேன்.

அரு. சோமசுந்தரன்: இதற்கு ஒரு நிகழ்வைக் குறிப்பிட விரும்புகிறேன். ராஜாஜி குழந்தைகளுக்கென்று ஒரு குழந்தைக்கவிதை எழுதி 'கண்ணன்' என்ற குழந்தைப் பத்திரிகையில் வெளியிட்டார். வெளிவந்ததும் குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பாவிடம் நன்றாக இருக்கிறதா என்று கேட்டார். அதற்கு அழ.வள்ளியப்பா நன்றாக இருக்கிறது என்று பதில் அளித்தார். அதற்கு மீண்டும் அவர் நன்றாக இருக்கிறது. என்பதை நீங்கள் திருப்தியாகச் சொல்லவில்லை. அப்ப அந்தக் கவிதை நன்றாக இல்லாததுதான் அர்த்தம் என்று ராஜாஜி கேட்டதற்கு, அதற்கு குழந்தைக்கவிஞர் அழ.வள்ளியப்பா குழந்தைக்களுக்குரிய வார்த்தைப் பிரயோகம் புரியாத நடையில் அமைந்ததால் குழந்தைகளால் படிக்க இயலாது என விடையளித்தார். அன்றைய நாளிலிருந்து ராஜாஜி குழந்தைகளுக்குக் கவிதை எழுதுவதை விட்டுவிட்டார்.

பழ. ஜானகி : ஐயா! வேறு ஏதேனும் நிகழ்வுகள் பற்றிய விபரங்களைத் தங்களிடமிருந்து பெற விரும்புகிறேன்.

அரு. சோமசுந்தரம்

மு.வ.வும் நானும் ஒரு நாள் சந்தித்துப் பேசினோம். அன்று மு.வ. நீங்கள் பல துறைகளிலும் எழுதிப் புகழ்பெற்ற எழுத்தாளராக விளங்கியுள்ளீர்கள். ஆனால் நானோ திறனாய்வாளராக விளங்கியுள்ளேன். ஆனால் என்னால் கவிதை எழுதமுடியவில்லை. என்று மு.வ.பதில் அளித்ததற்கு நான் கூறினேன். புரிந்த வார்த்தை, தெரிந்த பொருள், பாடல்கவிதை அளவு (meter) போன்றவைகள் இருந்தால்தான் குழந்தைகளால் படிக்க இயலும் என்று கூறினேன்.

பழ.ஜானகி : தங்களுக்கு தெரிந்த விடைகளைக் கூறியதற்கு நன்றி ஐயா.